# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்

[ தொகுதி 2 ]

களவியல் - கற்பியல் - பொருளியல்

(நச்சிஞர்க்கினியர் உரை)

பதிப்பாசிரியர் :

டாக்டர் கு. சுந்தரமூர்த்தி, எம்.ஏ., பிஎச்.டி.,




அண்ணுமலைப் பல்கலைக்கழகம்

1986

# முன்னுரை

தமிழ்கூறும் நல்லுலகத்திற்குக் கிடைக்கக்கூடிய பழைய இலக்கண நூல்களுள் தொல்காப்பியம் தொன்மையும் சிறப்பும் வாய்ந்தது. இந்நூலின் விளக்கத்திற்கும் பெருமைக்கும் காரணர்களாக விளங்கியவர்கள் நுண்மாண் நுழைபுலமிக்க உரையாசிரியர்கள் எனலாம்; அவ்வுரையாசிரியர்களுள் மிகவும் தனித்தன்மையுடன் குறிப்பிடத்தக்கவர் ''உச்சிமேல் புலவர் கொள் நச்சினார்க்கினியர்'' ஆவார்.

தொல்காப்பியம் பொருளதிகாரம் முழுமைக்கும் நச்சினார்க்கினியர் உரைகண்டவர் எனும் வழக்கு உண்டு; எனினும், இற்றைக்கு அவர் உரைகளாகக் கைக்குக் கிடைப்பவை முன் ஐந்து இயல்களாகிய அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் என்பவையே. இவற்றுள் 'அகத்திணையியல், புறத்திணையியல்' எனும் முதற்றொகுதிநூல் பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி அவர்களின் குறிப்புரையுடன் அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடாக இவ்வாண்டின் தொடக்கத்தில் வெளி வந்துள்ளது. அதன் தொடர்ச்சியாக இப்போது 'களவியல் கற்பியல், பொருளியல்' எனுந் தொகுதி வெளியிடப் பெறு கின்றது. இது தமிழர்கள் வரவேற்க வேண்டிய இனிய செய்தியாகும்.

இலக்கிய இலக்கணப் பெரும்புலமை கொண்ட நச்சினார்க்கினியர் பத்துப்பாட்டு, சீவக சிந்தாமணி, கலித் தொகை, குறுந்தொகையுள் ஒரு பகுதி ஆகிய இலக்கியங் களுக்கும், தொல்காப்பியமாகிய இலக்கணத்திற்கும் சீரிய உரை கண்டமையால் தமிழர்களின் புலமை நெஞ்சத்திலே என்றும் நீங்காத சிறப்பிடங்கொண்டுள்ளார். அவரது உரையில் பன்னூற் புலமை பளிச்சிடுதலைக் காணலாம். தேர்ந்தெடுத்த மேற்கோள் செய்யுளைக் கையாண்டு, கற்போர்க்கு நன்கு விளங்குமாறு உரை வரைவதில் அவர் வல்லவராக விளங்குவதையுங் காணலாம். எனினும் இன்றைய சூழலிலே மாணவருலகம் எதனையும் எளிமைப் படுத்தித் தந்தால்தான் ஏற்கும் நிலையில் உள்ளது. எனவே, தமிழ்ப்புலமைநலஞ்சான்ற பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி,

இந்நூலுக்குக் குறிப்புரையும், விளக்கவுரையும் எழுதிச் சிறப்பித்துள்ளார். இவருடைய இப்பதிப்பு மிகவும் போற்றுதற்குரியது. இந்நூல் இக்கால பி.லிட்., எம்.ஏ. மாணவர்களுக்கும் தமிழறிஞர்களுக்கும் பெரிதும் பயன்படும் என்பது நம் நம்பிக்கை. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் சார்பில் இப்பதிப்பாசிரியருக்கு நம் நன்றி உரியது. அவர் மேலும் மேலும் இவ்வாறாகத் தமிழ்ப்பணி புரிந்து புகழெய்த இறைவனருளை இறைஞ்சுகின்றேன்.

இந்தப் பதிப்புநூல், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து நிதியத்திலிருந்து வெளிவருகின்றது. அந்நிதியம் இலக்கியம், இலக்கணம், சமயம் சார்ந்த நூல்களை மக்கள் பலரும் வாங்கிப் பயன்கொள்ள வேண்டுமென்ற நோக்கத்தில் மலிவாக வெளியிடுதற்குரிய குறிக்கோள்கொண்டது. அதனை அண்ணாமலைப் பல்கலைக் கழகம் பல முறைகளிலும் செவ்வையாக நிறைவேற்றி வருகின்றது; அதற்கு இந்த நேர்த்தியான பதிப்பும் ஒரு சான்று எனலாம்.

இந்நிதியத்தை உளமுவந்து வழங்கிய திருப்பனந்தாள் திருமடத்தின் தலைவராக வீற்றிருக்கும் பெருந்தவத்திரு முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் அவர்களைப் பணிவன்புடன் போற்றுகின்றேன்.

இத்தகைய தமிழ்வெளியீடுகள் தொடர்ந்து நடைபெறப் பல்லாற்றாலும் சிந்தித்துச் செயற்பட்டவர் அமரர் முத்தைய வேள் ஆவார்கள். அவர்களை இந்நேரத்தில் நெஞ்சார நினைந்து வழிபடுவோம். அருமைத் தந்தையார் சென்ற நல் வழியிலேயே அயராமல் சிந்தித்துச் செயல்படுவர் ஆற்றல்மிகு நம் இணைவேந்தர் டாக்டர் மு.அ.மு. இராமசாமி அவர்கள்; அவர்களுக்குத் தமிழுலகம் நன்றிக் கடப்பாடுடையது. செயலாக்கத்திற்குத் துணைநின்று, பதிப்புத்துறை சிறந்து பணியாற்றப் பாடுபடும் நம் துணைவேந்தர் பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு அவர்களுக்கும் நெஞ்சம் நிறைந்த நன்றி உரியதாகும். இப்பதிப்பின் மிகுபயனைத் தமிழர்கள் போற்றிக் கொள்வார்களாக.

அண்ணாமலைநகர்,<br>14—8—1986.

டாக்டர் ஆறு. அழகப்பன்,<br>தமிழ்த்துறைத் தலைவர்.




திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து
இருபத்தொன்ருவது பட்டத்தில் எழுந்தருளியுள்ள அதிபர்
ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

# பதிப்புரை

ஒல்காப் பெருமை தொல்காப்பியம் என்னும் இவ்வுயரிய நூல் தொன்மையும் சிறப்பும் வாய்ந்ததாகும். மிகப் பழைய காலத்தே வளர்ந்து வந்த சமுதாய அமைப்பையும், பேசிவந்த மொழி வழக்கையும் உள்ளவாறு எடுத்துக்காட்டும் தனிச்சிறப்புடைய தாகும். உரைபல வாய்ந்த அருமைப் பாடுடையதாகும்.

எழுத்து; சொல், பொருள் எனும் முப்பெரும் பகுப் புடைய இந்நூற்கு உரைவகுத்தார் பலர். எழுத்ததிகாரத்திற்கு இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும், சொல்லதிகாரத்திற்கு இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடர், பெயர்தெரியாதபுலவர் ஒருவர் ஆகிய அறுவரும் உரை வகுத்துள்ளனர். இவர்களுள் இறுதி நின்ற இருவர் உரைகள் முழுமையாகக் கிடைத்தில. பொருளதிகாரத்திற்கு இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பேராசிரியர் ஆகிய மூவரும் உரைவகுத்து உள்ளனர். இம்மூவருள் இளம்பூரணர் உரை நீங்கலாக எஞ்சிய இருவர் உரைகளுள் நச்சினார்க்கினியர் உரை மெய்ப்பாடு, உவமம், மரபு ஆகிய மூன்று இயல்களுக்கும், பேராசிரியர் உரை அகத்திணை இயல் முதலாகவுள்ள முதல் ஐந்து இயல்களுக்கும் கிடைத்தில.

இவ்வுரைப்பதிப்புக்கள் பல்வேறு அமையங்களில் அவ்வப் பொழுதிருந்த அறிஞர்களாலும் ஆர்வலர்களாலும் தக்கவாறு பதிப்பித்து வெளியிடப் பட்டுள்ளன. அவ்வுரைப்பதிப்புக்கள் பலவும் கிடைத்தற்கரியனவாக இருத்தலினாலும், அவர்களின் பெயர் விவரங்களை வெளியிட்ட காலங்களுடன் அறிதல் நன்றி உணர்விற்கும் ஒருங்கு எண்ணி ஆய்வதற்கும், ஏதுவாக இருத்தலினாலும் அவ்விவரங்களை ஈண்டுக் குறித்தல் தகும்.

| நூற்பெயரும் உரையும் 1 | செப்பம் செய்தவர் 2 | வெளியிட்டோர் பெயர்/நிறுவனம் 3 | வெளிவந்த ஆண்டு 4 |
|---|---|---|---|
| தொல். எழுத்து. இளம்பூரணருரை | | | |
| 1. " | சுப்பராய செட்டியார் | சு. கன்னியப்ப முதலியார் | 1868 |
| 2. " | சி.வை. தாமோதரம் பிள்ளை | சி.வை. தாமோதரம் பிள்ளை | 1891 |
| 3. " | வ.உ. சிதம்பரம் பிள்ளை | வ.உ. சிதம்பரம் பிள்ளை | 1928 |
| 4. " | ஞா. தேவநேயப் பாவாணர் | தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகம் | 1955 |
| 5. " | டாக்டர் கு. சுந்தரமூர்த்தி | டாக்டர் கு. சுந்தரமூர்த்தி | 1969 |
| தொல். எழுத்து. நச்சினார்க்கினியருரை | | | |
| 1. " | மழவை. மகாலிங்க ஐயர் | மழவை. மகாலிங்க ஐயர் | 1849 |
| 2. " | சி.வை. தாமோதரம் பிள்ளை | சி.வை. தாமோதரம் பிள்ளை | 1901 |
| 3. " | வீரபத்திர ஐயர் | வீரபத்திர ஐயர் | 1907 |
| 4. " | த. கனகசுந்தரம்பிள்ளை (குறிப்புரையுடன்) | தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகம் | 1923 |
| 5. " | சுன்னாகம். கணேசையர் (குறிப்புரையுடன்) | நா. பொன்னையா | 1937 |
| 6. " | டாக்டர் கு. சுந்தரமூர்த்தி | டாக்டர் கு. சுந்தரமூர்த்தி | 1965 |

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| தொல். சொல். இளம்பூரணருரை | | | |
| 1. " | க. நமசிவாய முதலியார் | க. நமசிவாய முதலியார் | 1927 |
| 2. " | டாக்டர் கு. சுந்தரமூர்த்தி | தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகம் | 1963 |
| தொல். சொல். சேனவரையருரை | | | |
| 1. " | கோமளபுரம் இராச கோபால்பிள்ளை | பு. கந்தசாமி முதலியார் | 1868 |
| 2. " | ஆறுமுக நாவலர் | சி.வை.தாமோதரம் பிள்ளை | 1886 |
| 3. " | கந்தசாமியார் (குறிப்புரையுடன்) | தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகம் | 1923 |
| 4. " | சி. கணேசய்யர் (குறிப்புரையுடன்) | நா. பொன்னையா | 1938 |
| 5. " | டாக்டர் கு. சுந்தரமூர்த்தி | டாக்டர் கு. சுந்தரமூர்த்தி | 1966 |
| 6. " | டாக்டர் கு. சுந்தரமூர்த்தி | மூன்றும்பதிப்பு அண்ணாமலைப் பல்கலைக்கழகம் | |
| தொல். சொல். நச்சினார்க்கினியருரை | | | |
| 1. " | சி.வை. தாமோதரம் பிள்ளை | சி.வை. தாமோதரம் பிள்ளை | 1880 |
| 2. " | — | பவானந்தர் கழகம் | 1941 |

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| தொல். சொல். நச்சினார்க்கினியருரை | | | |
| 3. 〃 | டாக்டர் கு. சுந்தரமூர்த்தி | தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகம் | 1952 |
| தொல். சொல். தெய்வச்சிலையாருரை | | | |
| 1. 〃 | ஆர். வெங்கடாசலம் பிள்ளை | கரந்தைத் தமிழ்ச் சங்கம் | 1929 |
| 2. 〃 | டாக்டர் கு. சுந்தரமூர்த்தி | தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகம் | 1963 |
| தொல். சொல். கல்லாடருரை | | | |
| 1. 〃 (சொல்லதிகார உரைக்கொத்து இடையியல்வரை) | டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம், ஆப்ரகாம் அருளப்பன் | டாக்டர் வி. ஐ. சுப்ரமணியம், ஆப்ரகாம் அருளப்பன் | |
| 2. 〃 | டாக்டர் கு. சுந்தரமூர்த்தி | தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகம் | 1964 |
| 3 〃 (பழைய உரை—வேற்றுமை மயங்கியல்வரை) | டாக்டர் கு. சுந்தரமூர்த்தி | 〃 | 1964 |
| தொல். பொருள். இளம்பூரணருரை | | | |
| 1. 〃 (அகம், புறம், இயல்கள்) | க. நமசிவாய முதலியார் | க. நமசிவாய முதலியார் | 1920 |

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| தொல்.பொருள். இளம்பூரணருரை | | | |
| 2. ,, (அகம்,புறம் இயல்கள்) | வ.உ. சிதம்பரம் பிள்ளை | வ.உ. சிதம்பரம் பிள்ளை | 1928 |
| 3. ,, (களவு,கற்பு, பொருளியல்) | ,, | ,, | 1933 |
| 4. ,, (பொருளதிகாரம் முழுவதும்) | கழகப்புலவர் | தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகம் | 1953 |
| தொல்.பொருள். நச்சினார்க்கினியருரை | | | |
| 1. ,, (முற்பகுதி-அகம், புறம் மட்டும்) | சி.வை. தாமோதரம் பிள்ளை | சி.வை. தாமோதரம் பிள்ளை | 1885 |
| 2. ,, (முதல் ஐந்து இயல்களும்) | — | ச. பவானந்தம் பிள்ளை | 1916 |
| 3. ,, | மன்னார்குடி மா.நா. சோமசுந்தரம் பிள்ளை | திரிசிரபுரம் கனகசபாபதி பிள்ளை | 1934 |
| 4. ,, | சு. கணேசய்யர் (குறிப்புரையுடன்) | நா. பொன்னையா | 1948 |
| 5. ,, | கழகப்புலவர் | தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகம் | — |

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| தொல்.பொருள். பேராசிரியர் | | | |
| 1. ,, (பின்நான்கியல்கள்) | — | ச. பவானந்தம் பிள்ளை | 1917 |
| 2. ,, | மா. நா. சோம சுந்தரம்பிள்ளை | கனகசபாபதி பிள்ளை | 1935 |
| 3. ,, | சு. கணேசய்யர் (குறிப்புரையுடன்) | நா. பொன்னையா | 1943 |
| 4. ,, | கழகப்புலவர் | தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகம் | 1951 |

இவ்வகையில் காலந்தொறும் இவ்வுரைப் பதிப்புக்களை வெளியிட்டிருக்கும் பெருமக்களுக்குத் தமிழ் உலகம் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறது. இப்பெருமக்களில் சிலர் சிற் சில பகுதிகளை மட்டுமே வெளியிட்டிருப்பதற்குக் காரணம் அவரவர் களுக்கும் அவ்வப்பொழுது ஏற்பட்ட அகப்புறச் சூழல்கள் முழு மையாக உறுதுணையாக அமையாமையேயாகும். ஆகவே அவர் களுக்கிருந்த அத்தகைய சூழல்களுக்கிடையேயும் இதனைப் பதிப் பித்து உதவவேண்டும் எனக்கருதிய பெருந்தகைமை ஆழ நினைதற் குரியதாம். இத்தமிழ்ச்சான்றோர் அனைவர்க்கும் என் நன்றியறிதலை அன்புடன் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இப்பதிப்புக்கள் அனைத்தும் தத்தம் முன்னைய பதிப்புக்களினும் திருத்தம் பெற்றிருப்பினும் மேலும் சில இடங்கள் திருத்தம் பெற வேண்டியிருந்தன. அன்றியும் பயில்வோர்க்கும் பயிற்றுவோர்க்கும் பல இடங்கள் விளக்கம் பெறத்தக்கனவாய் இருந்தன. இவற்றை நினைவு கொண்டு திருந்திய பதிப்பாக, ஆங்காங்கு உரிய விளக்கங் கள் இடம் பெற்றனவாக அமைந்ததொரு பதிப்புத்தேவை எனக் கருதிப் பல்கலைக்கழக மானியக் குழுவிடத்து விண்ணப்பித்துக் கொண்டபோது அவர்களும் மிகப்பரிவுடன் ஏற்று உதவினார்கள்.

பல பதிப்புக்களைப் பல்வேறு இடங்களுக்குச் சென்று பெறவும் ஒப்பு நோக்கவும் அப்பொருள் உதவியே ஏதுவாயது. இத்தகைய திருந்திய பதிப்பு உருவாதற்கும் காரணமாயது. அவர்களுக்கு என் நன்றி என்றும் உரியதாகும்.

இப்பதிப்பில் பொருள் முடிவிற்கேற்பப் பத்திகள் பிரிக்கப் பட்டுள்ளன. உரைவிளங்காத பகுதிகளுக்கு ஓராற்ருன் உரை விளக்கம் தரப்பெற்றுள்ளது. இளம்பூரணர் உரையுடன் ஒப்பிட்டு உண்மை உரை இதுவெனக் காட்டப்பட்டுள்ளது. நச்சினர்க் கினியர் பாடத்தொடு வேறுபடும் இளம்பூரணர் பாடங்கள் ஆங் காங்கு அடிக்குறிப்பில் குறித்துக்காட்டப் பட்டுள்ளன. நூற்பா அமைப்புக்களில் இவர் ஒன்ருகக் கொண்டதை இளம்பூரணர் இரண்டாகவும், அவர் இரண்டாகக் கொண்டதை இவர் ஒன்ருகவும் கொண்ட இடங்கள் சில உள. அவற்றையும் ஆங்காங்கு அடிக் குறிப்பில் காட்டப்பட்டுள்ளன. நச்சினர்க்கினியரின் உரைவழி நின்று உணரத்தகும் பொருள் அமைப்பைக் கட்டுரை வடிவில் அவ்வவ்வியல்கள் தோறும் முற்பகுதியாக இணைக்கப்பட்டுள்ளன. நச்சினர்க்கினியரின் உரைத்திறன் குறித்ததொரு ஆய்வு முன்னுரையும் தரப்பெற்றுள்ளது. இவ்வகையில் இப்பதிப்புப் பயில்வோர் பயிற்றுவோர் ஆகிய இரு சாரார்க்கும் பெரிதும் பயன் படும் என்று கருதுகின்றேன்.

இத்தகைய நூல்கள் வெளியிடுவதற்கென அண்ணுமலைப் பல்கலைக்கழகத்தில் திருப்பனந்தாள் காசித்திருமடத்தின் அறக் கட்டளை ஒன்று உள்ளது. அவ்வறக்கட்டளை வழியே இந்நூல் வெளிவருகின்றது. எளியனின் செய்பணிகளையெல்லாம் தம் திருவுளத்து ஏற்று ஆசிவழங்கியருளும் திருப்பனந்தாள் காசி மடத்து அதிபர் கயிலை மாமுனிவர் ஸ்ரீ-ல-ஸ்ரீகாசிவாசி முத்துக் குமார சுவாமித்தம்பிரான் சுவாமிகள் அவர்கட்கு எழுமை எழு பிறப்பும் வணக்கமும் நன்றியும் செலுத்திக் கொள்ளும் கடப் பாடுடையேன்.

தமிழ் நலம் காத்தலிலும் அதனைப் பேணலிலும் வழிவழி யாகத் தலைசிறந்து விளங்கிவரும் மரபினரும், அண்ணுமலைப்

பல்கலைக்கழகத்தின் இணைவேந்தராக விளங்கி வருபவருமான உயர்திரு டாக்டர் எம். ஏ. எம். இராமசாமிச் செட்டியார் அவர்களுக்கும், துணைவேந்தராக விளங்கி வரும் திரு. டாக்டர் பேராசிரியர் சை.வே. சிட்டிபாபு அவர்கட்கும் என் நன்றி என்றும் உரியதாகும்.

அன்பிற்கும் பாராட்டுதலுக்கும் உரியவரும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராக விளங்கி வருபவருமான டாக்டர் ஆறு. அழகப்பனுருக்கு என் நன்றியும் பாராட்டும் என்றும் உரியவாகும்.

இதனை நன்முறையில் அச்சிட்டு உதவிய மயிலாடுதுறை லெட்சுமி அச்சகத்தார்க்கு என் நன்றி உரியதாகும்.

இங்ஙனம்

கு. சுந்தரமூர்த்தி

முதல்வர்.

திருப்பனந்தாள்
1—7—86

# பொருளடக்கம்

மயங்கிவரக் கோத்தவாறு காண்க' எனக் கூறியிருப்பதும், ஆருவது நூற்பாவில், பிரிந்து மீளும் தலைவன் திறம் எல்லாம் பிரிந்திருந்த கிழத்தி கூறுதலே முல்லைப் பொருளாயும், பிரிந்து போகின்ருன் திறம் கூறுவனவெல்லாம் பாலையாயும் வருமெனக் கூறியிருப்பதும், முல்லை முதலாக நால்வகை நிலம் வகுத்தவாற்றிற்கு முறை வைப்புக்கூறியிருப்பதும், ஐவகைத் திணைக்கும் அவ்வப் பெரும் பொழுதுகளும் சிறு பொழுதுகளும் உரியவாதற்குக் காரணம் கூறி யிருப்பதும், புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என இவ்வுரிப் பொருள்கள் இம்முறையில் வைத்ததற்குரிய காரணம் கூறியிருப்பதும், இருபத்து மூன்ரும் நூற்பாவில் புனங்காவலும், படுபுள் ஒப்புதலும் இழிந்தோர்க்குத் தொழிலாய் உயர்ந்தோர்க்கு விளையாட்டு வகையாய் அமையும் எனக் கூறியிருப்பதும், வெட்சி முதலிய எழுவகைப் புறத்திணைகளும், குறிஞ்சி முதலிய அவ்வவ் வகத்திணைகளுக்குப் புறனுவதை விளக்கியிருப்பதும், ஐம்பத் தேழாவது நூற்பாவில் ஆதந்தோம்பல் எனும் தொடருக்கு விளக்கம் தந்திருப்பதும், குடைநாட்கோள், வாளுள்கோள் எனவும், 'தானை, யானை, குதிரை என்ற நோனர் உட்கும் மூவகை நிலையும்' எனவும் கூறப்பட்டவை அம்முறையில் வைத்தற்குரிய காரணம் கூறியிருப்பதும், காதலி இழந்த என அமையாது தபுதார நிலையும் எனக் கூறி இருப்பதற்கு நயம்பட உரைத்திருப்பதும், உலா, பிள்ளைத்தமிழ் ஆகிய இலக்கியங்கட்கு 'ஊரொடு தோற்றமும்', 'குழவி மருங்கினும்' எனவரும் நூற்பாக்களை இடனுக்கி இருப்பதும், தொண்ணூருவது நூற்பாவில் கொடுப்போரை ஏத்திக் கொடா தாரைப் பழித்தலும் அறமாம் எனக் கூறியிருப்பதும் இவர்தம் புலமை நலத்துக்கு எடுத்துக்காட்டாகும்.

சொற்படு பொருள்களின் சுவை நலன்:

தொல்காப்பிய நூற்பாக்களுக்கு முழுமையாக விளக்கம் தருவதோடு அமையாது ஆங்காங்குள்ள சொற்களுக்கு உரை காண்பதிலும் இவ்வுரை தலைசிறந்து விளங்குகின்றது.

நாட்கொளல் :

இத்தொடர் தொல்காப்பியம் புறத்திணை இயலிலும், இதற்குப் பின்வந்த புறப்பொருள் வெண்பா மாலையிலும் காணப்படுகிறது.

எனினும் நூல் வழியாகவோ இதற்கு முன்னுள்ள உரைகளின் வழியாகவோ, இதன் பொருள் தெளிவாக அறிய இயலாத வகையில் உள்ளது. புறப்பொருள் வெண்பா மாலை உரை யாசிரியரும் புறவீடு விடுவது என்றே இதற்கு விளக்கம் கூறினர். ஆனால் நச்சினார்க்கினியரோ மிக அழகாகவும், தெளிவாகவும் இதனை விளக்குகின்றார். நாளும் ஓரையும் தனக்கு ஏற்பக் கொண்டு செல்வுழி அக்காலத்திற்கு ஒரு இடையூறு தோன்றியவழித் தனக்கு இன்றியமையாதவற்றை அத்திசை நோக்கி அக்காலத்தே முன்னே செலவிடுத்தல் எனக் கண்டிருக்கும் உரை மிகச் சிறப்புடையதாம்.

பெருஞ்சோற்று நிலை :

தொல்காப்பியத்திலும் புறப்பொருள் வெண்பா மாலையிலும் இத்தொடர்வரினும் இதற்குரிய விளக்கத்தை நச்சினார்க்கினியர் உரைகொண்டே மிகத் தெளிவாக அறிய இயலுகின்றது. பெருஞ் சோற்றை எப்பொழுது வழங்குவது? யாருக்கு வழங்குவது? எதற்கு வழங்குவது? என நினைந்து அதற்கு விளக்கம் தருகிறார் நச்சினார்க் கினியர். வேந்தன் போர்தலைக் கொண்ட பிற்றைஞான்று போர் குறித்த படையாளரும், தானும் உடன் உண்பான் போல்வதோர் முகமன் செய்தற்குப் பிண்டித்து வைத்த உண்டியைக் கொடுத்தல் என இவர் காணும் உரை அருமைப்பாடுடையதாம்.

தழிஞ்சி :

மாற்றார்விடு படைக்கலன் முதலியவற்றைத் தம்மாட்டுத் தடுத்து உடன் அழிந்தோர் பேணித் தழுவிக்கோடல் எனப் பொருள் உரைப்பர் இளம்பூரணர். ஆனால் நச்சினார்க்கினியர் இதனை மேலும் விரிவுபடுத்தியும், ஆழப்படுத்தியும் உரை காணுகின்றார். அங்ஙனம் வென்றும், தோற்றும் மீண்ட வேந்தன் தம் படையாளர் முன்பு போர் செய்துழிக் கணையும், வேலும் முதலிய படைகளைத் தம்மிடத்தே தடுத்துக் கொண்டழிந்தவர் களைத் தாம் சென்றும், பொருள் கொடுத்தும், வினவியும், தழுவிக் கோடல் என்பது இவர் உரை ஆகும். இதற்கு இளம்பூரணர் காட்டிய எடுத்துக் காட்டுகள் அத்துணைச் சிறப்பில. நச்சினார்க் கினியர் காட்டிய காட்டுக்களே மிகச்சிறந்தனவாம்.

கற்பு :

மகளிர்க்கு மாந்தர் மாட்டு நிகழும் மன நிகழ்ச்சி என இளம் பூரணர் உரை காண, இவர் தன் கணவனைத் தெய்வம் என்று உணர்வதோர் மேற்கோள் என்று உரை கண்டிருக்கும் திறன் அறிதற்குரியது.

ஏர் X எழில் :

இவ்விரு சொற்களும் ஒரு பொருளன என்று கருதுவதே நம்மியல்பு. ஆனால் தொல்காப்பியர் இவ்விரு சொற்களையும் தனித்தனியே கூறுகின்றார். அதனை உளம் கொண்ட நச்சினார்க் கினியர் ஏராவது எழுச்சி, அஃது எழுகின்ற நிலைமை என நிகழ் காலமே குறித்து நிற்கும்: எழிலாவது அங்ஙனம் வளர்ந்தமைந்த பருவத்தும் இது வளர்ந்து மாறியதன்றி இன்னும் வளரும் என்பது போலக் காட்டுதல் எனஉரை கண்டிருக்கும் திறன் ஆழமுடையது.

சாயலாவது :

ஐம் பொறியால் நுகரும் மென்மை என உரைகண்டிருக்கும் தன்மை ஆழ முடையதாகும்.

இவ்வாறு தொல்காப்பியத்தில் காணும் சொற்களுக்கு ஆழமாக உரை வகுத்தல் அன்றித் தாம் கூறும் சில தொடர்களுக்கும் அருமையாக விளக்கங் கண்டிருக்கும் திறன் அறிதற்குரியது - அறுபத்து ஐந்தாவது நூற்பாவில் முழு அரணாவது இது என்பதையும், சிறப்புடை அரசியலாவன இவை என்பதையும் கூறி இருக்கும் திறன் இவ்வகையில் அறிதற்குரியனவாம்.

இலக்கணக் குறிப்புக்கள் :

இவ்வுரையில் இன்றியமையாது வரும் சில சொற்றொடர் களுக்கு இலக்கணக் குறிப்பு வழங்கப் பட்டுள்ளது.

1. பொருளினது இலக்கணம் உணர்த்தினமையின் இது பொருளதிகாரம் என்னும் பெயர்த்தாயிற்று. இது நாள்மீனின் பெயர் நாளிற்குப் பெயராயினாற் போல்வதோர் ஆகுபெயர்.

2. அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகம் என்பது ஓர் ஆகுபெயராம்.

3. செவியறிவுறுத்தலைச் செவியறிவுறூஉ என்றாற்போல, வைகுறுதலை வைகுறு என்றார். வைகுறு விடியல் என்பது உம்மைத் தொகை.

4. முதல், கரு, உரிப்பொருள் என்னும் மூன்று பாலும் கொண்டு ஓர் திணையாம் என்று கூறினாரேனும், ஒரு பாலினையும் திணை என்று அப்பெயரானே கூறினார்: வந்தான் என்பது உயர் திணை என்றாற் போல.

5. பாலை என்பது ஒன்று பிரிந்து பலவாகிய கூற்றின் மேற்று ஆதலின் ஒற்றுமைப்பட்டு நிகழ்கின்றார் இருவர் பிரிந்து வரலும் பாலையாம் அன்றே? அதனால் அதுவும் குணம் காரணமாய்ச் செம் பால் செம்பாலை ஆயினாற் போல நின்றது.

6. கூற்றாவது, வாழ்நாள் இடையறாது செல்லுங் காலத்தினைப் பொருள்வகையாற் கூறுபடுத்துங் கடவுள்; அதனைத்தான் பேரூர்க் கூற்றம் போலக் கொள்க.

7. 'அந்நிலம் பொழுதொடு' – ஒடு அதனொடு இயைந்த ஒரு வினைக் கிளவி; ஆதலின் உடன் சேறல் பெரும்பான்மை ஆயிற்று; 'வினைசெய் இடத்தின் நிலத்தின் காலத்தின்' என்பதனால் நிலத்தின் பயத்தவாம் எனப் பொழுதினையும் நிலம் என அடக்கினார்.

8. ஈத்தலும் ஈதலும் போலப் பாத்தலும், பாதலும் ஒன்றா தலில் பாதீடாயிற்று.

9. 'மைந்து பொருளாக வந்த வேந்தனை' வந்த – எதிர் சென்று; வரல் செலவாதல் 'செலவினும், வரவினும்' என்பதன் பொது விதியால் கொள்க.

## அருளாளர்களும் ஆன்றோர்களும் இயைபுபடும் திறன்:

நச்சினார்க்கினியர் தம்கால எல்லைவரை தோன்றிய நூல்கள் பலவற்றையும், நன்கு பயின்றவர். ஆதலின் அவ்வவ்விலக்கியங் களில் காணப்படும் அருளாளர்களையும், சான்றோர்களையும் இடங் கண்டுழி எல்லாம் இயைபு பெறச் செய்துள்ளார். அவ்வாறு

இயைபு பட்டிருக்கும் பெருமக்கள்:- கண்ணகி, பேகன், பரணர், முசுகுந்தன், இந்திரன், நக்கண்ணையார், துரோணாச்சாரியார், மாமூலர், பரதன், பார்த்தன், பல்யானைச் செல்கெழுகுட்டுவன், பாலைக் கௌதமனார், இராவணன், வீடணன், பொன் முடியார், அரிசிற்கிழார், அசுவத்தாமன், இரணியன், இறையனார், அகத்தியர் மார்க்கண்டேயர், வான்மீகனார், கௌதமர், ஆட்டனத்தி, ஆதிமந்தி, வெள்ளிவீதியார், சேரமான், பெரும்பாக்கன், அதியமான் என்போ ராவர்.

இவர்களுள் கண்ணகி, பேகன், பரணர், பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார், பல்யானைச் செல்கெழுக்குட்டுவன், பாலைக் கௌதமனார், பொன்முடியார், அரிசில் கிழார், ஆட்டனத்தி, ஆதிமந்தி, வெள்ளிவீதியார், பொன்முடியார், சேரமான் ஆகியோர் அவரவர்கள் பாடியவராக அல்லது பாடப்பெற்றவராக விளங்கிய வகையில் குறிக்கப் பெறுகின்றனர். எடுத்துக் காட்டும் பாடல்கள் எல்லாவற்றிற்கும் அவ்வப் பாடல்களையும் வழங்கியவர் இன்னா ரெனக் குறிக்கப் பெறவில்லை. ஆயினும் இப் பெயர்கள் மட்டும் குறிக்கப் பெறுவதற்குக் காரணம் அவரவர்கள் மாட்டும் உரை யாசிரியருக்கிருந்த நன்மதிப்பை எடுத்துக் காட்டுகின்றது. எஞ்சிய பெருமக்கள் நச்சினார்க்கினியர் தம் கருத்து வகையால் எடுத்தாளப் படுகின்றனர்.

மாமூலர் :

மாமூலனார் என்றொரு புலவரிருப்பினும் யோகியராயும், யோக நிலையில் தம்வழி வந்த மரபினைக் கொண்டவராயும் இருத்தல் திருமூலர்க்கே உரியதாதலின் இவரே இங்குக் குறிக்கப் பெற்றவ ராவர். இவர் திருமந்திரத்தை இயற்றிய திருமூலர் ஆவர். வாகைத் திணையுள் யோகிகளாய், உபாயங்களால் முக்காலமும் உணர்ந்த மாமூலர் முதலியோர் அறிவன் தேயத்து அனைநிலை வகையோர் ஆவர். அவற்கு மாணாக்கராகித் தவம் செய்வோர் தாபதப் பக்கத்தவராவர் எனக் குறிக்கப் பெறுகின்றார். நூற்பா:75.

முசுகுந்தனும், இந்திரனும் :

உழிஞை முதலிய பாடாண்கொற்ற வள்ளை நற்றிணைகளும், கூளிச் சுற்றமும், ஒன்றனை நச்சிப் புகழ்ந்து வாளாதே கூறுதலும்,

ஈண்டுக் கூறுகின்ற கொற்றவள்ளை புலவன் ஒன்றினை நச்சி வெட்சி முதலிய ஏழனும் புகழ்ந்துரைத்தலுமாயிற்றாதலிற் 'படையியங் கரவம்' (58) முதலாக வஞ்சியிற் 'குன்றாச் சிறப்பிற் கொற்றவள்ளை' யீறாகக் கிடந்த பொருட்பகுதியெல்லாம் பாடாண்டிணையாகப் பாடுங்கால் அவை மக்கட்குந் தேவர்க்கும் ஒப்ப உரியவென்ப தூஉங் கூறுதலாயிற்று. என்னை? அரசியலாற் போர்குறித்து நிரை கோடலும் மீட்டலும் மேற்செல்லும் வஞ்சியுந் தேவர்கேலாமை யானும் அவுணரான் முற்றப்பட்ட துறக்கத்தினை அகத்துழிஞை யராக்கி மனுவழித் தோன்றிய முசுகுந்தனோடு இந்திரன் காத்தற் போல்வனவும் பிறவுந் தேவர்க்குக் கூறுதலான் அவரும் மதின் முற்றியவழிப் போர் தோன்றுதலும் ஆண்டு வென்றியெய்துதலும் உடையராதலிற் பாடாண் பொருட்கும் உரியாரென நேர்பட்டது.

துரோணாச்சாரியார் :

இவர் விற் பயிற்றலில் வல்லுனர். ஏகலைவனின் வணக்கத்திற் குரிய குரு ஆவார். அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கம் என்ற தொடருக்கு, விளக்கம் தருங்கால் இனி வேட்பித்தன்றித் தனக்கு ஓத்தினாற் கோடலுங் கொடுப்பித்துக் கோடலுந் தான் வேட்டற்குக் கோடலுந் தாயமின்றி இறந்தோர் பொருள் கோடலும் இழந்தோர் பொருள் கோடலும், அரசு கோடலுந் துரோணாச்சாரியனைப் போல்வார் படைக்கலங் காட்டிக் கோடலும் பிறவுங் கோடற் பகுதியாம் என வரும் இடத்து இவர் குறிக்கப் பெறுகின்றார்.

இறையனார், அகத்தியனார், மார்க்கண்டேயனார், வான்மீகனார், கௌதமனார் :

இவர்கள் செய்த தமிழ்ச் செய்யுட்கள் தலையாய ஓத்து எனப் படும் என்பர்.

பரதனும், பார்த்தனும் :

கட்டில் நீத்த பாலிற்கு இலக்கியமாக இவர்களை நச்சினார்க் கினியர் காட்டுவர். பரதன் தாயுரை கொண்டு தாதை உதவிய தரணிதன்னைத் தீவினையென்ன நீத்தவன். பார்த்தன் இடைக் காலத்தே அவ்வப்போது தனக்குக் கிடைத்த வெற்றிப்பயனைத் தன் தமயன் வழிநின்று ஒழுக வேண்டும் என்னும் திறத்தால்

துறந்தவன். எனவே இவ்விருவரும் ஒரோர் காரணம் பற்றித் துறந்தவர்கள். வாழ்வாங்கு வாழ்ந்ததன் பயனாகத் தோன்றிய மெய்யுணர்வால் தம் உடம்பும் மிகையெனக் கருதும் உவர்ப்புத் தோன்றத் துறப்பது கட்டில்நீத்த பாலாகும்; ஆதலின் இதற்கு இலக்கியமாக இவர்களைக் காட்டுதல் ஏற்புடைத்தன்றாம்.

இராமனும், வீடணனும் :-

பகைவர் நாட்டினைத் தாம் கொள்வதற்கு முன்னேயும் கொண்டான் போல வேண்டியோர்க்குக் கொடுத்தல் 'கொள்ளார் தேஎம் குறித்த கொற்றம்' எனப்படும் என்பது நச்சினார்க்கினியர் கருத்து. இதற்கு இராமன் இலங்கை கொள்வதன்முன் வீடணற்குக் கொடுத்தமையை இலக்கியமாகக் காட்டுகின்றார். 'ஒன்னார் ஆரெயில் அவர் கட்டாகவும் நுமதெனப் பாண்கடன் இறுக்கும் வள்ளன்மை' (புறம் 203)யும் வன்மையும் நம் தமிழகத்திற்கு வழிவழி உரியவாயினும் இங்குக் குறிக்கப்பட்ட தொடர் இப்பொருளை அகப்படுத்துமா என்பது ஆராயத்தக்கது. பகைவரது தேயத்தைக் கொள்ளக் குறித்த கொற்றம் என உரை கண்டு 'ஆனா ஈகை' எனவரும் புறப்பாடலை எடுத்துக்காட்டுவர் இளம்பூரணர்.

அசுவத்தாமன் :

இவன் துரோணரின் மகன். சிறந்த வீரன். துரியோதனிடத்துப் பேரன்பு கொண்டவன். துரியோதனனை வீமன் தொடையில் அடித்து வீழ்த்த அது கண்டு பொறாத அசுவத்தாமன் பாண்டவர் இருந்த ஊரையும் அழித்து அவர்தம் மக்கள் ஐவரையும் கொன்றனன். இதனைச் 'செருவகத்து இறைவன் வீழ்ந்தெனச் சினைஇ ஒருவன் மண்டிய நல்லிசை நிலை' எனவரும் தும்பைத் திணைத் துறைக்கு எடுத்துக் காட்டாகக் காட்டியுள்ளார் (நூற்பா. 72). இத்துறைக்குரிய விளக்கத்தில் பாஞ்சாலரையும் எனும் சொல் உளது. இச் சொல் இருப்பது பிழையாகும். அசுவத்தாமன் இரவு ஊர் எறிந்து பஞ்சவர் மக்கள் ஐவரையும் கொன்றனனே அன்றிப் பாஞ்சாலரைக் (பாண்டவர் ஐவரை) கொன்றிலன் என்பது அறியத்தக்கது.

### இரணியன் :

இவன் தன் வலிமையாலும் அரிய முயற்சியானும் தானே தலைவன் எனக் கூறிக் கொண்டவன். தன் அரிய பண்பானும், செயலானும் அன்றி இவ்வாறு தன் வலிமையால் தலைமை யாளனைகப் பிறர் சொல்லுமாறு செய்வித்தல் வாகை அன்று எனக் கூறுவர் நச்சினார்க்கினியர். (நூற். 74)

### இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் :

தொல்காப்பியத்திற்கு முதன்முதல் உரை எழுதியவர் இளம் பூரணர் ஆவர். இவர் உரையிலும் 'என்பாரும் உளர்' எனும் குறிப்புக் காணக் கிடக்கினும் உரை வடிவாகவும் ஏனைய உரை யாசிரியருக்கு முன்னோடியாகவும் விளங்குவது இவர் உரையே யாம். இவர் உரையையே பெரிதும் நச்சினார்க்கினியர் தழுவிச் செல்கின்றார். எனினும் அவரினும் வேறுபட்டு உரைக்கும் இடங்களும் பலவாம். இளம்பூரணர் கூறிய கருத்துக்களை அடித் தளமாகக் கொண்டு நச்சினார்க்கினியர் விரிந்துரைக்கும் உரை அழகுடைத்தெனினும், அவரை மறுத்த இடங்களும் அவரினும் வேறுபட்டு உரைக்கும் இடங்களும் அத்துணைச் சிறப்பினவல்லவாம்.

### ஆசிரியர் கருத்தில் கொண்ட உறுதிப்பாடு :

பண்டைக்கால உரையாசிரியர்கள் அனைவரும் தாம் உரை வகுக்க நேர்ந்த நூலாசிரியரிடத்துப் பெரும் பற்றும், அவர்கள் கூற்றில் உறுதிப் பாடும் கொண்டவர்கள் ஆவர். தொல்காப்பியர் கூறாத கருத்துக்கள் பல, பிற்கால நூல்களில் காணப்படின் ஒன்று இவை இவ்வெவ் விடங்களில் அடக்கத் தக்கன என்று கூறுவர். அல்லது அக்கருத்துக்கள் ஏற்புடையனவல்ல என்று கூறுவர். இவ்வாறு கூறுவது ஆய்வு நெறிக்குப் புறம்பாகத் தோன்றினும் ஆசிரியர் கூற்றில் கொண்ட உறுதிப்பாட்டிற்கு இலக்காகுமாறு உளது.

தொல்காப்பியப் புறத்திணை இலக்கணத்தை அடுத்துத் தோன்றிய புறத்திணை நூல்கள் பலவேனும் அவற்றுள் செல்வாக்கு உடையதாகத் திகழ்வது புறப்பொருள் வெண்பா மாலையொன்றே யாகும். இந்நூலிலும் இதற்கு முதல் நூலாகக் கூறப்பெறும்

பன்னிரு படலத்திலும் புறத்திணை பன்னிரெண்டென வகுக்கப் பட்டுள்ளது. ஆனால் தொல்காப்பியத்தில் எழுதிணையாகவே கூறப் பட்டுள்ளது. இதனை மிக நுட்பமாகவும், திட்பமாகவும் மறுத் துரைக்கின்றார் நச்சினார்க்கினியர். அகங்கை இரண்டுடையார்க்குப் புறங்கை நான்காகாது இரண்டாயவாறுபோல அகத்திணை ஏழற்கும் புறத்திணை ஏழென்றலே பொருத்தமுடைத்தாம் என்பது இவர் உரையாகும்.

இனித் தேவர்க்கு உரியவாக உழிஞையில் துறைகள் பலவும் கூறுவர் உளரார் எனின், அவை உலகியலாய அரசியலாய் எஞ் ஞான்றும் நிகழ்வின்றி ஒருகால் ஒருவர் வேண்டியவாறு செய்வன வாகலின் தமிழ் கூறும் நல்லுலகத்தன அல்ல என மறுக்க. இனி முரச உழிஞை வேண்டுவார் உளர் எனில் முரசவஞ்சியும் கோடல் வேண்டும் என மறுக்க. (நூற்பா. 67)

புறப்பொருள் வெண்பா மாலை ஆநிரைகளைக் களவின் கண் கொள்ளுதலை வெட்சி என்றும், மீட்டுக் கோடலைக் கரந்தை என்றும் கூறும். ஆனால் தொல்காப்பியத்துள் வெட்சியின் பகுதியாகவே மீட்டுக் கொள்ளுதலும் கூறப்பட்டுள்ளது. ‘ஆதந்து ஓம்பும்’ என்றதனால் களவின்கண் கொண்ட ஆவினை மீட்டுத் தந்தோம்பும் என்றும் பொருள் கூறுமாறு சூத்திரம் செய்தார். ஆகலின் இரு பெருவேந்தர் தண்டத் தலைவரும் அவர் ஏவலால் நிரை கோடற்கும் மீட்டற்கும் உரியராயினர். ஆகவே இருவர்க்கும் கோடல் தொழில் உளதாயிற்றாதலின் அடித்துக் கோடலும், மீட்டுக் கோடலும் வெட்சியாயின. ஆயின் மீட்டல் கரந்தை என்பரால் எனில் அதனையும் இச்சூத்திரத்தானும், வருகின்ற சூத்திரத்தானும் வெட்சி என்றே ஆசிரியர் கொண்டார். மீட்டலை வெட்சிக் கரந்தை என்பாரும் உளர். மீட்டலைக் கரந்தை என்பாருக்கு அது திணையாயின் குறிஞ்சிக்குப் புறனாகாமை உணர்க என்பது அவர் உரையாகும். (நூற். 57)

புறப்பொருள் வெண்பா மாலையில் தானை, யானை, குதிரை, தேர் ஆகிய நான்கிற்கும் மறம் [வீரச்சிறப்பு] கூறப்பட்டுள்ளது. தொல்காப்பியத்துள் தானை, யானை, குதிரை ஆகிய மூன்றன் வீரச் சிறப்பு மட்டுமே கூறப்பட்டுள்ளது. குதிரையான் அன்றித் தேர்

தானே செல்லாமையின் தேர்க்கு மறம் இன்றென்று அது கூறுர் ஆயினுர் எனவரும் நுட்ப உரை இதற்கு அமைதி காணுகின்றது. இனி இவை [தானே, யானே, குதிரை] தாமே கறுவு கொண்டு பொருவுழித்தானே, மறம், யானைமறம், குதிரை மறம் என்று வெவ்வேறு பெயர் பெறும் என்று கொள்க என மேலும் விளக்கம் தந்து இருப்பதும் ஆழமானதாம். (நூற்பா. 72)

பார்ப்பன வாகை, அரசவாகை என்று ஓதினுல் அவற்றின் பகுதி அடங்காமையின் குன்றக் கூறலாம். ஆதலின் இங்ஙனம் கூறினுர். [நூற்பா. 75 உரை]

இவ்வாறு மறுப்பதன்றிப் பின்னுள்ளோர் கூறிய துறைகள் பலவும் தொல்காப்பியர் கூறியுள்ள துறைகளில் அடங்கும் எனக் கூறுவதும் இவர்தம் இயல்பாம்.

இத்திணைக்கும் பல பொருள் ஒருங்குவந்து ஒருதுறைப் படுதலுங் கொள்க. அவை:- கொற்றவை நிலையும், குடை நாட் கோளும், வாளுட் கோளும், படையெழுச்சி கண்டோர் கூறுவ னவும், பகைப்புலத்தார் இகழ்வும், இவை போல்வன பிறவும் இயங்கு படையரவமாய் அடங்கும்.

நிரை கோடற்கு ஏவிய அரசருள் நிரை கொண்டோர்க்கும் நிரை கொள்ளப்பட்டோர்க்கும் விரைந்து ஏக வேண்டுதலிற் குடை நாட்கோளும், வாளுட்கோளும் இன்றியமையாதன அன்மையின், ஈண்டுக் கூறுராயினுர். அவை உழிஞைக்குக் கூறுப: அதற்கு இன்றியமையாமையின்.

இனித் துணைவந்த வேந்தரும் தாமும் பொலிவெய்திய 'பாசறைநிலை' கூறலும், அவர் வேற்றுப் புலத்திருத்தலின் ஆண்டு வாழ்வோர் பூசலிழைத்து இரிந்தோடப் புக்கிருந்த 'நல்லிசை வஞ்சி' முதலியனவும், 'வயங்கலெய்திய பெருமைப்' பாற்படும்.

இனி, மேற்செல்வான் மீண்டுவந்து பரிசில் தருமென்றல் வேத்தியலன்ருகலிற் பரிசிலர்க்குக் கொடுத்தலும் படைக்கல முதலியவற்ருேடு கூறினுர்.

இனிக் கடிமரந்தடிதலும் களிறும், மாவுந் துறைப்படிவன வற்றைக் கோறலும் புறஞ்சேரியைச் சுடுதலும் முதலியனவும் 'அடுத்தூர்ந்தட்ட கொற்ற'த்தின் பாற்படும். அவை கருவூரிடைச் சேரமான் யானையை யெறிந்தாற் போல்வன.

இனிப் புண்பட்டோரை முன்னர்ச் செய்த படைவலங் கூறி அரசராயினும் உழையராயினும் புகழ்வன போல்வனவுந் தழிஞ்சிப் பாற்படும். இதனை 'முதுமொழி வஞ்சி' என்பர். ஆண்டுக் கொடுத்தல் முற்கூறிய கொடையாம். இத்தழிஞ்சியை,

> ''அழியுநர் புறக்கொடை அயில்வா ளோச்சாக்
> கழிதறு கண்மை'' (பு. வெ. வஞ்சி. 20)

எனின், அஃது ஒருவன் ருங்கிய பெருமைப் பாற்படுமென்றுணர்க.

துறையென்றதனுன் அவற்றின் பகுதியாய் வருவனவும் அத் துறைப் பாற்படுத்துக. உழையரை அழைத்து நாட் கொள்க என்றலும், அவர் அரசர்க்கு உரைப்பனவும், குடைச்சிறப்புக் கூறுவனவும், முரசு முதலியன நாட்கோடலும் பிறவும் குடை நாட்கோடலாய் அடங்கும். இது வாளுட் கோடற்கும் ஒக்கும். பொருவார்க்கும் அல்லுழிப் போவார்க்குங் குடை பொதுவாகலின் முற்கூறி மேல் வருகின்ற போர்த் தொழிற்கே சிறத்தலின் வாளினைப்பிற் கூறினர். இவை போர்த்தொழிற்கு ஏதுவாகலின் முற் கூறினுர். எயிலுட் பொருதலும் புட்போல உட்பாய்தலும் ஆண்டுப் பட்டோர் துறக்கம் புகுதலும் பிறவும் பாசி மறத்தின் பாற்படும். ஏறுந் தோட்டியும் கதவும் முதலியன கோடல் அக மிசைக்கு இவர்ந்தோன் பக்கத்தின் பாற்படும். 'துறையென மொழிப' என எல்லாவற்றையுந் துறையென்று கூறுகின்றவர் தொகைநிலை என்னுந்துறையெனத் தொகைநிலையை விதந் தோதினுர், அது பலவாகாது இரண்டு துறைப்பட்டு வேறு வேறு துறையாம் என்றற்கு; அது தும்பைத் தொகைநிலை போல் இரு பெரு வேந்தரும் உடன் வீழ்தலுஞ் சிறு பான்மை உளதாமென் றுணர்க. எதிர் செல்லாதடைத்திருந்தோன் புறப்பட்டுப் படுதல் சிறுபான்மை யாதலின் இதனையும் வேருேர் துறையாக்கிப் பதின் மூன்றென்னுராயினர்.

இனி மகள் மறுத்தோன் மதிலை முற்றுதன் மகட்பாற் காஞ் சிக்கண் அடங்கும். யானையும் குதிரையும் மதிற்போருக்குச் சிறந் தன அன்மையிற் கொள்ளாராயினர்.

இனித் தாயர் கூறுவன மூதின் முல்லையாம். மனைவியர் கூறுவன இல்லாண் முல்லையாம்; கண்டோர் கூறுவன வல்லாண் முல்லையாம்; பாணர் கூறுவன பாண் பாட்டாம் என்க.

இவை கூறி ஏனைக் கூத்தர் முதலியோர் கூறுவன கூறுர்; மன ஞெகிழ்ந்து போவாரு முளர். அவை ஓரோர் துறையாக முதனூற்கண் வழங்காமை யானும் அவற்றிற்கு வரையறை யின்மையானும் இவர் தானை நிலையென அடக்கினர். இச் சிறப் பான் இதனை முற்கூறினர். அத் தானை சூடிய பூக் கூறலும், அதனெழுச்சியும், அரவமும், அதற்கரசன் செய்யும் சிறப்பும், அதனைக் கண்டு இடை நின்ருேர் போரை விலக்கலும், அவர் அதற்குடம்படாமைப் போர்துணிதலும், அத் தானையுள் ஒன்றற் கிரங்கலும், அதற்குத் தலைவரை வகுத்தலும், வேந்தன் சுற்றத் தாரையும் துணைவந்த அரசரையும் ஏத்துவனவும், நும்போர் ஏனை நாட்டென்றலும், இருபெரு வேந்தரும் இன்னவாறு பொருது மென்று கையெறிதலும், போல்வன வெல்லாம் இத்துறைப் பாற்படும்.

அன்றியும் தொகை நூல்களுக்கு இலக்கணம் அகத்தியமும், தொல் காப்பியமும் ஆவதன்றிப் பின்னெழுந்த நூல்கள் இலக்கண மாகா என்பதும் இவர்தம் ஆழ்ந்த கருத்தாகும். புறநானூற்று உரையாசிரியர் புறப்பாடல்கள் பலவற்றிற்குப் புறப்பொருள் வெண்பா மாலையை இலக்கணமாகக் கொண்டு துறை வகுத் துள்ளார். அதனை மறுக்கும் முகமாகவே இவ்வரிய உரை அமைந் துள்ளது. இவ்வகையில் இவரை மறுத்த இடங்கள் :

துணை வேண்டாச் செருவென்றி நாடகவழக்கு; துணை வேண்டுதல் உலகியல்வழக்கு. ''நீயேபுறவின் அல்லல் அன்றியும்'' என்னும் புறப்பாட்டும், ''வள்ளியோர்ப் படர்ந்து'' என்னும் புறப் பாட்டு முதலியனவும் துணை வஞ்சி என்பார்க்கு அவை மேற் செலவின் கண் அடங்காமையின் பாடாண்திணை எனப்படும் என்றுரைக்க. (நூற்: 63 உரை)

தத்தம் புதுநூல் வழிகளால் புறநானூற்றுக்குத் துறை கூறினுரேனும் அகத்தியமும், தொல்காப்பியமுமே தொகைகளுக்கு நூலாதலின் அவர் சூத்திரப் பொருளாகத் துறை கூற வேண்டும் என்று உணர்க. (நூற்: 90 உரை)

### இனம் தெரியாத இலக்கியப் பாடல்கள் :

நச்சினுர்க்கினியர் இலக்கிய மேற்கோள்கள் தந்து விளக்கு வதில் இணையற்றவர். அவ்வாறு அவர்தரும் மேற்கோள் பாடல் களில் பல இன்ன நூலில் உள்ளன என இனந்தெரிகின்றனவும் உள; இன்ன நூலென்று தெரியாதிருப் பனவும் பல உள. அவ்வாறு இனம் தெரியாது காட்டப் பெற்ற பாடல்கள் ஏறத்தாழ 200 க்கும் மேலுள. அவற்றை மட்டுமே எடுத்துப் பொருட் பாகு பாடு செய்து தனிநூலாக வழங்கின் தமிழுக்குச் செய்யும் பெருந் தொண்டாகும். அவ்வாருய உணர்வை ஆய்வுலகத்திற்குத் திருவருள் வழங்கி யருளுமாக.

### ஆசிரியர் கருத்தொடு படாமை :

நச்சினுர்க்கினியர் நுண்ணிய நூல் பல கற்றவர், சொலல்வல்லர். சோர்விலர். அஞ்சார். இவ்வாருய ஒண்மையும், திண்மையும் அவர்பால் இருப்பினும் ஆசிரியர் கருத்தொடு படாதவாறு பல்வேறு இடங்களில் உரை வகுத்துள்ளார். அதற்குக் காரணம் மூன்ருகும். 1. நூற்பாவிலுள்ள தொடர்களையும், சொற்களையும் அதன் பொருள் வழிச் சென்று உரை காணுது, தம் மதிவழிச் சென்று உரைகாண முற்பட்டமை. 2. வேதமே சிறப்புடைத்து: அதன் வழியதே அனைத்து நூல்களும் என எண்ணியது. 3. நால்வகை இனத்தினும் பார்ப்பனரே சிறப்புடையர்: அவர்தம் மரபும், செயலுமே தலை யானவை என எண்ணியமை. இம் மூவகையால் தான் அவர் உரை ஆசிரியர் கருத்தொடு மாறுபடுகிறது. இவ்வகையால் அவர் வேறு பட்டுரைக்கும் இடங்களை உரை விளக்கத்தில் ஆங்காங்குக்காட்டப் பட்டுள்ளன. அவற்றுள் இன்றியமையாதன சில.

1. பாலைக்கு நடுவணது என்னும் பெயர் வந்தது. நூற். 2.
2. இருவகைப் பிரிவு என்பதன் விளக்கம். நூற். 11.
3. கொண்டுதலைக் கழிதலும் பிரிந்தவண் இரங்கலும் வேளாண் வருணத்திற்கே உண்டு என்பது. நூற். 15.

4. கலந்த பொழுதும் காட்சியும் இருவகை வேனிற் கண் நிகழும் என்பது. நூற். 16.

5. ஏவல் மரபில் எனவரும் நூற்பாவிற்கு ஆற்றொழுக் காகவன்றிப் பொருள் காண்பது. நூற். 24.

6. தாமரைக் கண்ணியை (கலி 52) முளிதயிர் பிசைந்த (குறுந். 167) இப்பாடல்கள் பார்ப்பனருக்கு உரித் தென்பது. நூற். 24.

7. ஓதற்பிரிவு அந்தணர் முதலியோர்க்குச் சிறந்தது என்பது. நூற். 26.

8. 1. மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்தே. நூற். 29.
   2. உயர்ந்தோர்க்குரிய ஒத்தினை. நூற். 31.
   3. முந்நீர் வழக்கம் மகடூவோடில்லை. நூற். 34. இந்நூற் பாக்களுக்குக் கண்ட உரைகள்.

9. நாளது சின்மை முதலிய எட்டும் ஒன்று ஒன்றனோடு ஒன்றுது வரும் என்பது. நூற். 41.

10. பூவை நிலை பற்றிய விளக்கம். நூற். 60.

11. தும்பை நெய்தற்குப் புறனாயதற்குரிய காரணம். நூற். 69.

12. 93, 94, 97, 101, 108, 109, 110, 111, 117, 118, 122, 123, 128, 129, 134, 135, 138, 188, 195, 215 ஆகிய நூற்பாக்களுக்குக் காணும் உரைகள்.

13. கற்பெனப் படுவது எனவரும் நூற்பாவில் இனவகையை இயைபு படுத்தி உரைப்பனவும், கரணத்தின் அமைந்து முடிந்த காலை நெஞ்சு தலையவிழ்ந்த புணர்ச்சிக் கண்ணும் என்ற தொடருக்கு விளக்கம் தருவதும் பொருந்தாமை.

நச்சினார்க்கினியர் :

உரையாசிரியர்களில் ஊரும், இனமும் அறியுமாறு இருப்பவர் இவர். மதுரையம்பதினர். பாரத்துவாசி கோத்திரத்தினர். உரை நிறைவு செய்யுங்கால் மதுரை பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்த உரை முற்றிற்று எனக் குறிப்பிடும் மரபு இவர் உரையில் உள்ளது.

நச்சினார்க்கினியன் உமிழ்ந்த எச்சில் நறுந்தமிழ் நுகர்வார் நல்லோர் என வரும் பாராட்டுரையால் இவர் பயிலாத நூல் இல்லை என்பது விளங்குகின்றது. இவ் ஐந்தியல்களில் மட்டும் இவர் எடுத்தாண்டிருக்கும் மேற்கோள்கள் மிகப்பல. அவை வருமாறு:

| நூற் பெயர் | | | எடுத்தாண்ட இடங்கள் |
|---|---|---|---|
| எட்டுத்தொகை : | 1. | நற்றிணை | 110 |
| | 2. | குறுந்தொகை | 184 |
| | 3. | ஐங்குறுநூறு | 62 |
| | 4. | பதிற்றுப் பத்து | 22 |
| | 5. | கலித்தொகை | 103 |
| | 6. | அகநானூறு | 205 |
| | 7. | புறநானூறு | 113 |
| பத்துப்பாட்டு : | 1. | பொருநராற்றுப்படை | 4 |
| | 2. | சிறுபாணாற்றுப்படை | 1 |
| | 3. | முல்லைப்பாட்டு | 1 |
| | 4. | மதுரைக் காஞ்சி | 2 |
| | 5. | நெடுநல் வாடை | 1 |
| | 6. | குறிஞ்சிப் பாட்டு | 4 |
| | 7. | பட்டினப் பாலை | 3 |
| | 8. | மலைபடு கடாம் | 1 |
| பதினெண் கீழ்க்கணக்கு: | | | |
| | 1. | நாலடி | 11 |
| | 2. | களவழி நாற்பது | 1 |
| | 3. | ஐந்திணை எழுபது | 14 |
| | 4. | ஐந்திணை ஐம்பது | 12 |
| | 5. | திணைமாலை நூற்றைம்பது | 34 |
| | 6. | திருக்குறள் | 80 |
| | 7. | திரிகடுகம் | 1 |
| | 8. | பழமொழி | 1 |
| | 9. | திணைமாலை ஐம்பது | 11 |
| | 10. | கைந்நிலை | 2 |

| | |
|---|---|
| சிற்றட்டகம் | 7 |
| முத்தொள்ளாயிரம் | 9 |
| பெரும்பொருள் விளக்கம் | 35 |
| தகடூர் யாத்திரை | 15 |
| இறையனுர் களவியல் | 4 |
| புறப்பொருள் வெண்பா மாலே | 31 |
| சிலம்பு | 9 |
| அறநெறிச்சாரம் | 1 |
| குண நாற்பது | 1 |
| பெருங்கதை | 2 |
| பாரதம் | 10 |
| ஆசிரிய மாலே: புறத்திரட்டு | 2 |
| யாப்பருங்கல விருத்தி | 1 |

"எவன் ஆலவாயிடை வந்து அமுதவாயென இயம்பப் பெற்ருேன்
எவன் பண்டைப் பனுவல்பல இறவாது நிலவ உரை எழுதி
ஈந்தோன்
எவன் பரம உபகாரி எவன் நச்சினுர்க்கினியன் எனும் பேராளன்
அவன் பாதம் இருபோதும் எப்போதும் எனதகத்து
மலர்க மன்னே"

என டாக்டர் உ. வே. சா அவர்கள் மனமுவந்து பாராட்டிய பாராட்டுரை முற்றிலும் பொருந்துவதாம்.

இவையன்றி வேதம், ஆகமம் ஆகியவற்றிலும் நன்கு பயிற்சி யுடையவர்.

உரைகண்ட நூல்கள் :

இவருக்கிருந்த அஃகி அகன்ற அறிவுத்திறத்தால் உரை கண்ட நூல்கள் ஐந்தாம். அவை 1. தொல்காப்பியம், 2. பத்துப்பாட்டு, 3. கலித்தொகை, 4. குறுந்தொகையில் 20 பாடல்கள், 5. சிந்தா மணி என்பன. இவற்றுள் குறுந்தொகை 20 பாடல்களுக்குச் செய்த உரை மட்டும் கிடைத்திலது. தொல்காப்பியத்திலும் மெய்ப்பாடு, உவமம், மரபு ஆகிய மூன்றியல்களுக்கும் இவர் உரை கிடைத்திலது. எனினும் இவர் அவ்வியல்களுக்கும் உரை எழுதி இருக்க வேண்டும் எனத் தெரிகிறது. பொருநராற்றுப்படையில் 141ம் வரிக்குப் பொருள் எழுதுங்கால் 'நாயே, பன்றி' எனவரும் சூத்திரத்து ஆயுங்காலே என்பதனுல் குருளை என்பதும் முடித்தாம் என இவர் எழுதியுள்ள குறிப்பால் இது புலனுகின்றது.

சமயம் :

சிவபெருமானின் திருப்பெயர்களுள் ஒன்று நச்சினார்க்கினியர் என்பது. 'நச்சுவார்க்கினியர் போலும் நாகையீச்சுரவனாரே' எனும் திருநாவுக்கரசர் வாக்காலும், ''நச்சினார்க்கினியாய் போற்றி'' என வரும் காஞ்சிப் புராணத்தாலும் அப்பெயர் இறைவன் பெயராதலை அறிய முடிகின்றது.

'தூய ஞானம் நிறைந்த சிவச்சுடர்
தானே ஆகிய தன்மை யாளன்'

என வரும் உரைச் சிறப்புப் பாயிரத் தொடரால் இவர் சிவ பரம் பொருளை வழிபட்டவர் என்பதை அறியலாம். அன்றியும் தொல்காப்பிய எழுத்ததிகார உரையில் (நூற். 12) ''திருச்சிற்றம்பலம்' 'பெரும் பற்றப் புலியூர்' எனும் தொடர்களை ஆறெழுத்தொரு மொழிக்கும் ஏழெழுத்தொரு மொழிக்கும் எடுத்துக் காட்டுகளாகக் காட்டுகின்றார். திருமுருகாற்றுப் படை உரையில் திருவாசகத்தை இரண்டு இடங்களில் மேற்கோள்களாகக் காட்டுகின்றார். இவ்வாற்றால் இவரைச் சைவர் எனக் கருதலாம். எனினும் சமண நூலாகிய சீவகசிந்தாமணிக்கு இவர் உரை எழுதி இருப்பதும், கண்ணன் எழுத்துக்களில் அகரமாகின்றேன் யானே என்ற பகவத் கீதையின் கருத்தை எடுத்து விளக்கி இருப்பதும், வேண்டிய கல்வி யாண்டு மூன்றிறவாது (188) எனும் நூற்பாவில் துறவறத்தைக் கூறும் வேதாந்தம் முதலிய கல்வி என்றும், மூன்று பதமாவன அதுவென்றும், நீயென்றும், ஆனாய் என்றும் கூறும் பதங்களாம் எனக் கூறியிருப்பதும், இவர் பிற மதக் கோட்பாடுகளையும் நன்கறிந்தவர் என்பதைப் புலப்படுத்துகின்றன.

காலம்:

இவர்தம் உரையில் இளம்பூரணர், சேனாவரையர், பேராசிரியர் முதலிய உரையாசிரியர்களைக் குறிப்பிடுவதால் அவர்களுக்குப் பிற்பட்டவர் இவர் என்பது தெளிவு. சேனாவரையர் காலம் 13-ம் நூற்றாண்டின் இறுதி என்பது ஆராய்ச்சியாளரின் முடிவு. ஆதலால் இவர் அவரை அடுத்து 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராதல் வேண்டும் எனத் தெரிகிறது.

---

உ

கடவுள் துணை

# தொல்காப்பியம்

# பொருளதிகாரம்

நச்சினார்க்கினியம்

---

## 3. களவியல்

### பொருளமைப்பு

களவு - பெயர்க்காரணம் :

தலைவன் தலைவியை அவள் தாய் தந்தையர் கொடுக்கக் கொள்ளாது தானும் அவளுமாய்க் கரந்த உள்ளத்தோடு எதிர்ப் பட்டுப் புணர்ந்த புணர்ச்சி வகையைக் கூறுதலின் இது களவியல் ஆயிற்று. இக்களவு அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றனுள் இன்பம் பற்றியதாகும். இவ்வின்பம் புணர்தல் முதலாக இரங்கல் ஈருக ஐவகை ஒழுக்கம் பற்றியதாகும். தலைவனும் தலைவியும் அன்பொடு புணர்ந்த இவ்வைந்திணை இன்பச் சிறப்பைப் பெறுவர். அவற்றுள் புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாகிய இவ்வின்பப் புணர்ச்சி, மறையோரால் கூறப்பெறும் எண்வகை மணங்களுள் கந்தர்வ வழக்கொடு ஒத்ததாகும். தலைவன் தலைவியைக் களவில் புணர்தற்கு முன் நிகழும் படிநிலை நான்காம்.

காட்சி :

குறிப்பிட்ட ஒரு தலைவனும் தலைவியும் பிறவிதொறும் ஒன்று வித்தலும் அன்றி ஒரு பிறவியில் ஒன்றுவித்துப் பிறிதொரு பிறவியில் வேறுபடுத்துதலும் ஆகிய இருவகை ஊழ்வகைகளுள் பிறவி தொறும் ஒன்றுவித்தலாகிய ஊழ்வகையால், பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, உருவு, அன்பு, நிறை, அருள், உணர்வு, திரு ஆகிய பத்தானும் ஒன்றுபட்டிருக்கும் தலைவனும் தலைவியும்

எதிர்ப்பட்டுக் காண்பது காட்சியாம். இப்பத்துவகைக் குணங்களுள் தலைவியினும் தலைவன் மிக்கவனாயினும் இழுக்கில்லை.

**ஐயம் :**

அவ்வாறு தலைவியைக் கண்ட தலைமகன் அவள் இருக்கும் நிலனும் அவள் பொலிவும் கண்டு அணங்கோ ஆய்மயிலோ என ஐயுறுவது ஐயமாம்.

தெளிவு :

தலைவியின் கூந்தலிலிருக்கும் பூவினுள் வண்டு மொய்த்தல்; அவள் அணிந்திருக்கும் அணிகலன்கள், அவள் மார்பிலும் தோளிலும் காணப்படும் தொய்யில் கொடி, கைக்கொண்டு மோந்து உயிர்க்கும் கழுநீர்ப்பூ, இமைத்து நிற்கும் கண்கள், அச்சத்தால் பிறந்த தடுமாற்றம் முதலியன அவள் மானுடப் பெண்ணே எனத் தெளிவிக்கும்.

குறிப்பறிதல் :

தலைவன் உள்ளக் குறிப்பை உணர்ந்த தலைமகள் தன்னுடைய கண்களால் தனக்கும் உடன்பாடு உண்மையைத் தெரிவிக்க அதனை அவன் உணர்வன். அறிவு, ஆற்றல்; புகழ், கொடை, பண்பு முதலிய குணங்களினாலாய பெருமையும்; தான் உறுதி எனக் கொண்ட கொள்கையைக் கடைப்பிடித்து நிற்கும் உரனும் தலைவனுக்கு உரியவாம். அன்பு காரணத்தால் தோன்றிய அச்சமும்; காமக் குறிப்பு நிகழ்ந்தவழி வருவதோர் உள்ளவொடுக்கமும்; செவிலியர் முதலானோர் உறுதி எனக்கூறப்பட்ட அறவுரைகளை நெகிழ்ச்சியின்றிக் கடைப்பிடித்தலும் ஆகிய குணங்கள் தலைவிக்கு உரியன.

இத்தகைய அருங்குணங்களால் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டத்தின் கண்ணும் தலைவன் தன்னை முன்னிலையாக்கிக் கொண்டு தன் வேட்கை மிகுதியினைத் தன்னிடத்துக் கூறுமாறு போலத் தலைவி தானும் கூறப் பெறாள். தன் வேட்கைக் குறிப்பினைத் தன்னிடத்துத் தோன்றும் குறிப்பினானுதல், சொல்லுதற்குரிய இடத்தினானுதல்; கூறுதலே பெண்மைப் பண்பாகும். தோழியர்க் கூட்டத்து மட்டுமே

நாணும் மடனும் கெட ஒரோவழி கூற்று நிகழ்த்துவள். அவ்வாறு நாணும் மடனும் நீங்கக் கூறுவதும் தோழியிடத்தாதலின் அது பொருந்தும்.

இயற்கைப்புணர்ச்சி :

இக்குறிப்பறிந்த தலைமகன் வண்டு நெஞ்சு முதலியவற்றை முன்னிலையாக்கிக் கொண்டு பேசுவன். உரையாடாத அவற்றை உரையாடுவன போலக் கூறுவன். அவற்றினிடத்துத் தன் பெருவிருப்பைத் தெரிவிப்பன். தான் இவ்வாறு உரையாடுவதன் வாயிலாகத் தலைவிக்கு அகத்து உளதாகும் மகிழ்ச்சி புறத்துத் தோன்ருமல் அடக்குதலை அவன் அறிவன். அதனுல் தனக்குற்ற வருத்தத்தைத் தலைவியிடம் கூறுவன். தான் இவ்வாறு காண்டற்குரியதாகிய தொடர்பு எழுமையும் வருகின்றது எனக் கூறுவன். அதன் பின் நின்னிற் பிரியேன், பிரியின் ஆற்றேன் என அவள் தெளியக் கூறுவன். இவ்வாற்ருன் இருவரும் இயற்கைப் புணர்ச்சி எய்துவர்.

இடந்தலைப்பாடு :

மேற்கூறியவாறு இயற்கைப்புணர்ச்சி பெற்ற தலைமகன் முதல்நாள் தலைவியைக் கண்ட இடத்தே மறுநாளும் அடைவன். தலைவியும் அவ்வழி வருவள். தான் முன்ஞல் நடந்த தகாத நடைமுறையால் பெரிதும் கவன்று பேரச்சம் கொண்டு அவள் நிற்பள். அவ்வழி தலைவன் மெய்யுறத் தீண்டிக் குறிப்பறிவன். ஓதியும், நுதலும் சிதைவின்றேனும் சிதைந்தன போலக் கருதி தலைவன் அவற்றைத் திருத்துவன். இவ்விரண்டனுலும் தலைவியின் நாணத்தைப்போக்கி அவளைத் தழுவுவதற்குரிய இடத்தைக் காண்பான். அதுகண்ட தலைவி தன் நாணம் காரணமாக கண் புதைத்து நிற்பள். அன்றி ஒரு கொடியையோ கொம்பையோ சார்ந்து நிற்பள். புணர்ச்சி நிகழாது நீடும் தலைவியின் நிலையால் தலைவன் வருந்துவன். அதனைக் கண்ட தலைவி அவனது ஆற்ருமை கண்டு புணர்ச்சிக்கு உடம்படுவள். அந் நுகர்ச்சிக்குப் பின் நின்னில் பிரியேன் எனத் தலைவன் சூளுறுவான்.

பாங்கற்கூட்டம்:

இவ்வாறு இருநாட்களாகத் தலைவியைக் கூடிய தலைமகன் அவளைப் பெற்றபோது மகிழ்ச்சியிம், பிரிந்த போது கலக்கமும்

கொள்வன். அக்கலக்கத்தால் உற்றுழியுதவும் பாங்களை நினைவன். அவனும் அவன் மனங்கருதியவாறு வந்து நின்று அவன் கலங்கியதற்குரிய காரணத்தையும் தெரிந்து கொண்டு அவன்பால் நிலைபெற்று நிற்கும் நற்குணங்களையெல்லாம் அவன் நினைவிற்குக் கொண்டுவந்து இத்தகையோனாகிய நீ, இதற்காகக் கலங்குதல் தகாதெனக் கூறி இது நின் தலைமைக்கு ஏற்றதன்று எனக் கடியவும் செய்வன். அதனால் தலைவன் ஆற்றுனாகப் பாங்கன் அதனை மாற்றுதற்கு ஒருப்படுவன். நின்னால் காணப்பட்ட தலைவி எவ்விடத்தள்? எத்தன்மையள்? என வினவுவன். தலைவனும் அது கேட்டு மகிழ்ந்து அவற்றை அறிவுறுப்பான். பாங்கனும் அவ்வழிச்சென்று தலைவியின் நிலையுணர்ந்து தலைவனுக்கு கூறுவன். தலைவனும் அவ்விடத்துச் சென்று தலைவியைக் கூடி மகிழ்வன்.

தோழியற்கூட்டம் :

மேற் கூறியவாறு பாங்கற் கூட்டம் நிகழ்ந்தபின் தலைவன் தோழிவாயிலாகத் தலைவியைக் கூட முயல்வன். முன்பெல்லாம் கூட்டம் நிகழ்ந்த பின் தலைவியை ஆயத்துய்த்த பொழுது, அவள் காதல் தோழி இவளெனக் குறிப்பால் அறிந்திருத்தலின் அத்தோழியின் வாயிலாகத் தலைவியைக் கூட முயல்வன். எனினும் தலைவியொடு கூடுதற்குத் தோழியும் உடன்படும் கருத்தைத் தெரிந்தபின்பே அவளிடத்துத் தலைவன் இரந்து பின்னிற்பன். அவ்வாறு தோழியிடத்து இரந்து வேண்ட நினைந்த தலைவன், தலைவியும் தோழியும் ஒருங்கிருக்கும் பொழுதோ, அன்றித் தோழி தனித்திருக்கும் பொழுதோ புதியவன் போல் புகுவன். நும் பதியும் பெயரும் யாவை? எனவும், யான் இழந்த யானை, புலி இங்கு வந்தவோ? எனவும், வினவுவன். அவ்வாற்றான் அவள் தன்னால் ஆயதோர் குறையுடையவன் இவன் என உணர்வள் தலைவன் வேண்டும் குறையனைத்தையும் தலைவியிடத்ததேயாம் எனத் தோழி உணருவள். இவ்வாறு உணர்ந்த தோழியின் கருத்தைத் தெரிந்து கொண்டு தலைவன் பகற்குறியோ அன்றி இரவுக்குறியோ வேண்டிநிற்பன். கையுறை கொடுத்தும் நிற்பன். தலைவனின் ஆற்றாமை கண்டு அஞ்சி, தோழி அறியாமல் தலைவி தானே கூடுதலும் உண்டு. தலைவன் தன்னிடத்து வேண்டிய குறையைத் தோழி மறைத்து நின்றே கூறுவளாயின், தலைவி

தன்னோடு கூடாமையால் தனக்கு நேரும் தீங்கையும், ஆயினும் அவள் ஆற்றியிருப்பள் என அவளது பெருமையும் கூறுவன். அதனைக் கேட்ட தோழி இவ்விடத்துக் காவலர் வருவர், அவர் கொடியர் எனச் சேட்படுத்துவள். அதனால் வருந்திய தலைவன் மடலேறுவன் எனக்கூறுவன். தோழி இவ்வாறு சேட்படுத்துதலன்றி தலைவியது இளமை முதலியன கூறி அவள் நின் கருத்து வழிக்கு ஏலாள் எனத் தோழி கூறுவதும் உண்டு. அவ்வழி தலைவன் மிகவும் ஆற்றுனுகுவன். தோழி தன் குறையை மறுக்குங்கால் தலைவன்தன் அன்பு தோன்றநகுதலும் செய்வன். இவ்வாறெல்லாம் தோழியோடு பிணங்கியும் இணங்கியும் பேசிய தலைவன் தோழியின் உடன்பாடு பெற்றுத் தலைவியைக் கூடுவன். அதன்பின் தலைவியும் தோழியும் தலைவன் வருவழிக்கு அருமை கூறத் தலைவன் தலைவியொடு கூடும் இன்பச் சிறப்பால் அவை அரியவாகா எனக்கூறுவன்.

பாங்கன் :

பாங்கற் கூட்டம் நிகழ்தற்குப் பாங்கன் காரணமாவதன்றி, பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்னும் எழுவகை மணங்கள் நிகழவும், முல்லை முதலாய ஐவகையொழுக்கம் நிகழவும் இவன் காரணமாவான். இவ்வாற்றான் பாங்கன் நிமித்தம் பன்னிரெண்யென்ப. எண்வகை மணங்களுள் அசுரம் இராக்கதம் பைசாசம் என்பன கைக்கிளைக்குரியவாம். பிரமம் முதலிய நான்கும் பெருந்திணைக்குரியவாம்.

தலைவி கூற்று :

பகற்குறி இரவுக்குறி ஆகிய இரண்டும் தவறிய இடத்தும்; குறிவழிச் செல்லும் தலைவனை இன்றைய அளவில் காண்டல் அரிதென்று கையறுமாறு பொழுது நீட்டிக்குவிடத்தும்; இவ்வாறு நினைந்து தான் குறிதப்பியவிடத்தும், தலைவன் குறிதப்பாது வந்து தான் வந்து சென்றமை தோன்ற ஓர் அடையாளம் வைத்துச் செல்ல அதனை மறுநாள் காலை சென்று கண்டு மயங்குமிடத்தும், உணவருந்தும் காலத்துத் தனது இல்லத்தின்கண் தலைவன் வர அவனை விருந்தாக ஏற்றுக் கொள்ளுமிடத்தும், அவ்வாறு வந்த தலைமகற்குத் தானே உதவ வேண்டுமெனக் குறிப்பால் கூறத் தோழி அவனை விருந்தாய் ஏற்றுக்கொள்ளுமிடத்தும்; தலைவன் வாளாண்மை செய்தற்குப் பிரியுமிடத்தும்,

தலைமகனுடன் உடன் போக்குச் செய்யுமிடத்தும், அவனிடத்து வரைவு கடாவுமிடத்தும், தன் வேட்கை மீதூர நாண் துறந்த விடத்தும், வரைதல் வேண்டித் தோழி தலைவனை இயற்பழித்தவழித் தான் இயற்பட மொழியுமிடத்தும், தன்னைத் தலைவனுக்குத் தமர் கொடுக்க ஒருப்பட்டவிடத்தும், வேற்றுவரைவு நேருங்கால் தன் உயர்வு தோன்ற அதனை மறுத்தவிடத்தும் தலைமகள் கூற்று நிகழ்த்துவள்.

மேலும் அவள் தலைவன் புணர்ந்து நீங்குங்கால் தன் காதல் மிகுதியால் அவன் மறையும் துணையும் நோக்கி நின்று அங்ஙனம் மறைந்தவனைக் காணுமிடத்தும், தன்னை அவன் காணுவகை நாணுல் மறைந்து ஒழுகுமிடத்துத் தன் பொலிவு அழிவினை அவனுக்குக் காட்டுமிடத்தும், தலைவன் பரத்தமையை எதிர்கூற நினைந்தும் தன் காதல் மிகுதியால் கூற்றெழாது தடைப்படுமிடத்தும், வருத்தமிகுதியால் தலைவனை வழிபாடு மறுத்தவிடத்தும், தன்கண் தோன்றிய மகிழ்ச்சியைத் தோழிக்குச் சிறிதே தோற்றுவிக்கும் இடத்தும், தன் குறிப்பின்றித் தலைவன் எதிர்ப்பட்டுத் தன்னை அவன் அகப்படுத்தவிடத்தும், அவ்விடத்துத் தன் நாண் மிகுதியால் தலைவனது புணர்ச்சியை ஏற்றுக்கொள்ளாது தடுத்தவிடத்தும், தலைவன் ஒருவழித்தணந்தவிடத்தும், அவ்வழித்தலைவன் தன்னை அரியனுகச் செய்து கொண்டு தன்னை மறந்தவிடத்தும், அவ்வாறு தணந்த தலைமகன் மீண்டும் வரவும் அவனைப் பெருத பொழுதின்கண் ஏற்பட்ட துன்பமிகுதியால் அதனையும் கனவெனக் கருதுமிடத்தும், தன் மறைத்த ஒழுகலாற்றைத் தோழிக்கு வாய்விட்டுக் கூறி அதனைத் தமர்க்குக் கூருதவிடத்தும், வரைவு நீட்டித்தமையான் தலைவன் உற்ற சூள் அவனை வருத்துமே என மனம் நொந்தவிடத்தும், அதனுல் பெறும் அச்சம் நீட்டித்தவிடத்தும், களவு அலராகாத வண்ணம் தலைவன் பிரிந்தவழித் தான் அதற்குக் கலங்கியவிடத்தும், அவ்வாறு இடையீடுபடுதல் இன்றித் தலைவனை இடையருது வருவதற்கு ஆண்டு நிகழும் ஏதம் பற்றித் தோழி தன்னிடத்துக் கூறியவழி தோழி குறை நயப்பக் கூறத் தான் அதனை மறுத்த விடத்தும், காப்பு மிகுதிக்கண் தன் உணர்வு அழிந்தவழி தன் அருமறையினைத் தோழிக்குக் கூறுமிடத்தும், தன்னிடத்து யாரும் உரையாடாதிருக்கவும் தானே தன் தலைவனுடன் பட்ட சில சொற்களைக் கூறுமிடத்தும், வேற்று வரைவு நேர அதனை மாற்று

மிடத்தும் தலைவனுலாய தன் உடல் வேறுபாட்டைத் தோழியும் செவிலியும் அறியாதவாறு தான் மறைக்குமிடத்தும், இயற்கைப் புணர்ச்சிக் காலத்துத் தலைவன் மெய்தொட்டுப் பயிறல் முதலாக எத்துணை வகையில் இளிவந்தன செய்யவும் தன் நாணும் மடனும் நீங்க எதனையும் செய்திலேன் எனத் தன் பெருமையைத் தோழிக்குக் கூறுமிடத்தும், தலைவன் மடன்மா ஏறுவல் எனக் கூறியவிடத்தும், தான் கையற்று வருந்தும் அமையத்துக் கண்ணீர் வரத் தோழி அதனைத் துடைக்குமிடத்தும், செவிலி வெறியாட்டு எடுத்துழி அதனைக் கண்டு அஞ்சுமிடத்தும், தலைவனின் குறியைத் தான் பிழைத்தவிடத்தும், தலைவன் வரைந்து எய்துவித்தற்குரிய காலம் நேர்ந்த விடத்தும், தான் தலைவனுடன் கொண்ட களவு புறத்தார்க்குப் புலனுகுமிடத்தும், அதனல் தலைவன் தன்னுடன் கூட்டம் பெருது குறிவழி வந்து பெயர அத்தவற்றிற்காகத் தான் வருந்துமிடத்தும், தோழி இயற்பழித்த வழித் தான் இயற்பட மொழிந்த விடத்தும், இரவுக் குறிக்கண் தலைவன் வாராளுக அதற்குரிய காரணத்தைத் தானும் தோழியும் ஆராயுமிடத்தும், தன் காமம் சிறந்து விளங்குமிடத்தும், இடையீடின்றிப் பெற்ற புணர்ச்சி வகை மீதூருமிடத்தும் கூற்று நிகழ்த்துவள்.

வரைவு மாட்சிமைப் பட்டவிடத்தும், பொருள் காரணத்தால் அதற்கிடையீடாகத் தலைவன் தன்னை நீங்கியவிடத்தும், அவ்வாறு வரையாத காலத்து ஒரோவழி தலைவன் தோழியையோ ஆயத்தையோ செவிலியையோ எதிர்பாராது கண்டவிடத்தும்; வேற்றுவரைவு நேர்ந்தவிடத்தும், தலைவி தோழி வினவாமலேயே தான் கூற்று நிகழ்த்துவள்.

உயிரினும் நாண் சிறந்ததாகும். அந்நாணினும் குற்றந்தீர்ந்த கற்பு சிறந்ததாகும்; எனச் சான்ரோர் கூறிய கூற்றினை உளங் கொண்ட தலைவி தலைவன் இருக்குமிடத்திற்குத் தானே செல்லினும், செல்வோமா எனக் கூறினும் தலைவியின் பெண்மைக்கு இழுக்காகாவாம்.

தோழி கூற்று :

தலைவியினிடத்துத் தோன்றும் நாற்றம் தோற்றம் முதலாகிய ஒழுக்க வேறுபாடுகளைக் கண்டு அவளுக்குக் கூட்டமுண்மை

உணர்ந்த தோழி தன்மனத்து நிகழ்ந்தனவற்றை மறைத்து மெய்யாகவும் பொய்யாகவும் சில கூற்றுக்களைத் தம் குற்றேவல் பிழையாதவாறு கூறுமிடத்தும், குறையுறுதற்கு எதிர்ந்த தலைவனிடத்தும் அவ்வொழுக்கலாற்றைத் தான் அறியாதாள் போல அவன் பெருமை கூறி அவனுடைய குறிப்பினை மாற்று மிடத்தும், உலகினர் வரைந்து கொள்வது போல் நீயும் வரைந்து கொள்வாயாக எனக் கூறுமிடத்தும், அவ்வாறு கூறியும் மனம் தளர்தலின்றி மறுநாளும் வந்து குறையுற நேர்ந்த தலைவனிடத்துச் சிறிது நெஞ்சு நெகிழ்ந்தவளாய்த் தலைவி மிகவும் அரியள் ஆதலின் அவளிடத்து நின் குறையைக் கூறுதல் தகாது எனக் கூறுமிடத்தும், நின் குறையை நீயே சொல்லிப் பின் என்னிடம் வருக என்னு மிடத்தும், தலைவி மிக இளையளாதலின் யாதும் அறியாள் எனக் கூறுமிடத்தும், அவ்வாறு கூறக் கேட்ட தலைவன் ஆற்றுனாக நுமக்குள் கூட்டமுண்மையை அறிவன் எனக் கூறுமிடத்தும், தலைவியின் தமர்க்குத் தானும் தலைவியும் அஞ்சுவள் எனக் கூறு மிடத்தும், தலைவனிடத்துத் தலைவியை உய்க்குமிடத்தும், புணர்ந்து வந்த தலைவனிடத்து இனி நாளும் வருதல் தவிராதிருத்தல் வேண்டு மெனக் குறிப்பாகக் கூறுமிடத்தும், தன்னை இதுகாறும் இரந்து பின்னின்ற தலைமகனைத் தான் பணிந்து ஒழுகுமிடத்தும், மறுநாளும் வந்து நிற்குந் தலைவன் குறையினைத் தோழி தலைவியிடத்துக் கூறு மிடத்தும் நாணுல் தலைவி அதற்கு உடன்படாது நிற்கத் தான் பல்லாற்றுனும் இவன் குறையினை எடுத்துக் கூறிக் குறை நயப்பிக்குமிடத்தும், அதனுல் தலைவி இசைந்தமை கண்டு அதனைத் தலைவற்கு எடுத்துத் கூறுமிடத்தும், தலைவன் இவ்வாறு பல்காலும் வந்தொழுகத்தான் ஓரோருகால் அவன் குறையினை அறியாள் போன்று படைத்துக் கூறுமிடத்தும், இரவுக்குறியும் பகற்குறியும் தலைவன் வேண்டுமிடத்தும், தலைவனை விருந்தாக ஏற்குமிடத்தும், தலைவனின் காதற் சிறப்பை உரைக்குமிடத்தும், தலைவனிடத்துத் தலைவியைப் பாதுகாத்துக் கொள்க எனக் கூறு மிடத்தும், தலைவனை இயற்பழித்தவிடத்தும், தலைவியைக் கழறு மிடத்தும், தலைவனது பிரிவால் வருந்தும் தலைவியிடத்துத் தலைவனது அன்பு கூறி அவனை ஆற்றுவிக்குமிடத்தும், தலைவன் வரும் வழிக்கண் உளதாய தீங்கினை அறிந்து கலங்குமிடத்தும், தமரது காப்பின் கடுமை மிகுமிடத்தும், பகற்குறியும் இரவுக்குறியும்

நேருமாற்ருனும் மறுக்குமாற்ருனும் தலைவனிடத்து வரைதல் வேட்கையைப் புலப்படுத்துமிடத்தும், நின் ஒழுக்கத்திற்கும், வாய்மைக்கும், புகழுக்கும் இவ்வாறுவருதல் தக்கதன்று: தலைமகளை வரைந்துகொண்டு வாழ்வதே தக்கது எனக் கூறுமிடத்தும், தலைவியின் மெய்வேறுபாடு கண்டு ஐயப்பட்டு நிற்கும் செவிலி யிடத்து அவ்வையத்தைப் போக்குமாறு சில கூறுமிடத்தும், தலைவனுல் கூட்டத்திற்கு இடையூறு தோன்றுமிடத்தும், தலைவியின் ஒழுகலாற்றில் ஐயங்கொண்ட செவிலி அதனை முழுமையாகத் தெளிதற்கு நிமித்தம் கொள்ளுமிடத்தும், வேற்றுவரைவு நேர அதனைத் தலைவியின் சுற்றத்தார் ஆராயுமிடத்தும், தலைவனின் வரைவினைத் தலைவியின் தமர் மறுப்பினும் தலைவனுக்கும் தலைவிக்கும் நிகழ்ந்த கூட்டம் அறத்தாற்றின் வழிப்பட்டது எனச் செவிலியிடத்தும் நற்ருயிடத்தும் கூறுமிடத்தும், வரைவு நேர்ந்த பின்னும் தலைவனின் பிரிவு நீட்டிக்க இனி இவ்வாறு நீட்டிக்கற் பாலையல்லை எனக் கடுஞ்சொல் கூறி வரைவு கடாவுமிடத்தும், அதனை அவன் ஏற்று வரைவிற்கு முயல அவ்வரைவு முடியுங் காறும் ஆற்றியிருத்தல் வேண்டுமென வற்புறுத்துமிடத்தும் தோழி கூற்று நிகழும்.

செவிலி கூற்று:

களவொழுக்கம் புறத்தார்க்குப் புலனுகி அலர் தூற்றப்படினும், தலைவியிடத்து அவள் கரந்தொழுகும் காமம் மெய்க்கண் வெளிப் படினும், தலைவியிடத்துக் கண் தோள் முதலிய உறுப்புக்கள் புணர்ச்சியால் விளக்கமுற்றுத் தோன்றினும், தலைவியிடத்துத் தலைவன்வரக் காணினும், கட்டினும் கழங்கினுமாக நிமித்தம் பார்க்கு மிடத்தினும், வெறியாட்டு நிகழ்ந்த பின்னும் தலைவியினது வருத்தம் தீராது இருப்பினும், தலைவிக்குக் காதல் கைமிகக் கனவின் அரற்றும் பொழுதினும், தலைவிக்கு இவ்வேறுபாடு எற்றினுலாயிற்று? என வினுவும்பொழுதிலும், தலைவன் தலைவியரிடையே நிகழ்ந்த ஒழுகலாறு உண்மையாகத் தெரிந்தபின் அவ்வொழுக்கம் நன்மை பயப்பதாகுக எனத் தெய்வம் வாழ்த்தினும், உடன்போக்கு அறிந்த பின்னர் செவிலி தோழியோடு மதியுடம்பட்டு நின்று தலைவியது கற்புமிகுதியைப் பாராட்டினும், தலைவி உடன் போயவிடத்து அதற்கு ஒருப்பட்ட தலைவியின் நெஞ்சத்திண்மையைக் கூறினும்,

தலைவன் தலைவியரது குடிச் சிறப்பினைப் பாராட்டினும், செவிலி கூற்று நிகழும். இக்கூற்றுக்களில் செவிலி தானே கூறுவனவும் உள; அவள் கூறியதாகப்பிறர் கொண்டெடுத்து மொழிவனவும் உள.

நற்றாய் கூற்று :

செவிலி போல நற்றாயும் தலைவியின் களவொழுக்கத்தை அறிய நேரின் மேல் செவிலி கூறியவாறு இவளும் கூற்று நிகழ்த்துவள்.

தலைவிக்குரிய அரும்பண்புகள் :

அறிவில்லாத மாக்கள் தமக்குள் காதல் செய்து ஒழுகுங்கால் தத்தம் வேட்கையை வெளிப்படக் கூறுவர். ஆனால் தலைவி தலைவன் முன் தன் வேட்கையை எஞ்ஞான்றும் வெளிப்படக் கூறாள். அவள் வேட்கை புதுமட்கலத்துள் பெய்த நீர் புறத்துக் கசிந்து காட்டுமாறு போல முகத்தினும் கண்ணினும் வெளிப்பட்டு நிற்கும்.

தாமே தூதாகும் இடம் :

இயற்கைப் புணர்ச்சியிலும் இடந்தலைப்பாட்டிலும் தலைவியும் தலைவனும் தம்மைக் கூட்டுவாரின்றித் தாமே கூடுதலின் தத்தம் கருத்தைக் கூறுதற்கண் தாமே ஒருவருக்கொருவர் தூதுவராவர்.

களம் சுட்டுக் கிளவி :

தலைவனின் ஆணைவழி நிற்றல் தலைவிக்குரிய அறம் ஆதலான் கனவுக் காலத்தில் தலைவனை இன்னவிடத்தில் இன்ன பொழுதில் வருக எனத் தலைவி கூறுதலும் பொருந்துவதாகும். காரணம் தலைவி அவ்விடத்தை நன்கு அறிந்திருத்தலினாலாம். இவ்வாறு இடம் சுட்டுதலைத் தோழியும் கூறுதலுண்டு.

பூப்பில் கூட்டம் :

களவுக் காலத்துத் தலைவி பூப்பெய்திய ஞான்றும் தலைவனுடன் கூடி மகிழ்வள்.

அறத்தொடு நிற்றல் :

தோழி தனக்குரிய ஒழுகலாற்றில் கவனம் கொண்டு பல்வேறு வகையில் ஐயுற்றபொழுதும், செவிலி களவு அலராதல் முதலிய காரணங்களால் தன்னிடத்து மிகுதியாகக் கவனம் செலுத்துமிடத்தும், தலைவி தோழியிடத்தும், தோழிவாயிலாகச் செவிலி

யிடத்தும் அறத்தொடு நிற்பக்கருதுவள். செவிலி நற்றுயிடத்து அறத்தொடு நிற்பள். நற்றுய் தந்தை தன்னையர்க்கு அறத்தொடு நிற்பள். தந்தையும் தன்னையரும் அது கண்டு குறிப்பால் உய்த்து உணர்ந்து கொள்வர்.

செவிலியின் சிறப்பு:

வழிவழியாகத் தலைவியரின் தாயாக வரும் சிறப்பு செவிலியர்க்கு உரியதாகலின் களவொழுக்க நிகழ்ச்சிகளை எல்லாம் குறிப்பானன்றி வெளிப்படையாகவும் கூறத்தக்க செவிலி தாயெனக் கருதற் குரியாளாவள்.

தோழி:

இவள் செவிலியின் மகளாவள். தலைவனும் தலைவியும் உசாவு தற்குப் பெருந்துணையாவள். அறத்தொடு நிற்றற்கு உரியளாவள். தலைவன் தலைவியர் இருவரது கருத்தினைக் குறையுற உணர்தல், முன்னுற உணர்தல், இருவரும் உள்வழி அவன்வர உணர்தல் ஆகிய மூவகையானும் ஆராய்ந்து, அவ்விருவர் கருத்தினையும் தன் கருத்தினேடு ஒன்றியுணரும் சிறப்பு இவளுடையதாம். தலைவனின் கருத்தறிந்து தலைவியை அவனெடு கூட்டுதற்கும் இவள் உரியவளாவள்.

குறியிடங்கள்:

பகலில் வருக அன்றி இரவில் வருக எனக் குறித்தலின் பகற்குறி இரவுக் குறி எனப் பெயர் பெற்றன. வெறித்தல் வெறியாயினாற் போல, குறித்தல் குறி ஆயிற்று.

இரவுக் குறி என்றும் பகற் குறி எனறும் குறி இருவகைப் படும். இரவுக் குறி மனையோர் கூறும் கிளவியினைக் கேட்டற் குரியதாய அண்மையிடத்தில் அமையும். பகற்குறி மதில் புறத் தாகும்.

அல்லகுறி:

தலைவன் செய்யும் செயற்கை அடையாளங்களுக்கு ஒப்ப இயற்கை அடையாளங்கள் நிகழுமாயின் அவ்வழிச் சென்று அவ்வடையாளங்கள் தலைவன் செய்தன அல்ல எனக் கருதி தோழி மீளலும் உண்டு. இவ்வாறே தலைவன் அல்லகுறிப்படுதலும் உண்டு.

நாளும் ஓரையும் :

களவுக் காலத்தில் நாளும் ஓரையும் ஆய்ந்து கூட்டம் நிகழுதலில்லை. எனவே எல்லா நாட்களிலும் கூட்டம் நிகழும் என்பதாம்.

தலைவனின் ஆண்மை :

களவுக் காலத்தில் தான் செல்லுதற்குரிய நெறியின் அருமையை நினைதலோ, அதற்காக அழிதலோ, அச்சம் கொள்ளுதலோ, வருகை தவிர்த்தலோ தலைவன்பால் இல்லை. எனவே தலைவியும் தோழியுமே தலைவனின் வழியருமை உணரவும் கூறவும் செய்வர்.

களவு வெளிப்படுதற்குக் காரணமானவன் தலைவனே :

தலைமகளின் களவொழுக்கம் சிலர் அறியச் சொல்லும் அம்பலாலும், பலர் அறியச் சொல்லும் அலரானும் வெளிப்படும். அவ்வாறு வெளிப்படுதற்குக் காரணமானவன் தலைவனே ஆவன்.

வரைவின் வகை :

களவு வெளிப்பட்டபின் வரைதல், வெளிப்படா முன் வரைதல் என வரைவு இருவகைப்படும். களவு வெளிப்பட்ட பின் வரைதல் கற்பினோடு ஒப்பதாகும். ஆயினும் ஆண்டு நிகழும் ஓதற்பிரிவும் பகைவயிற் பிரிவும் தூதிற் பிரிவும் களவுக் காலத்து நிகழ்தல் இல்லை.

---

உ
கடவுள் துணை

# தொல்காப்பியம்

# பொருளதிகாரம்

## களவியல்

### களவொழுக்கத்தின் இயல்பு

92. இன்பமும் பொருளும் அறனும் என்றாங்
கன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கில்
காமக் கூட்டம் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்லியாழ்த் துணைமையோர் இயல்பே.

இவ் வோத்துக் களவு கற்பென்னுங் கைகோள் இரண்டனுள் களவு உணர்த்தினமையிற் களவியலென்னும் பெயர்த்தாயிற்று; பிறர்க்குரித்தென்று இருமுது குரவரால் கொடையெதிர்ந்த தலைவியை அவர் கொடுப்பக் கொள்ளாது இருவருங் கரந்த உள்ளத்தோடு எதிர்ப்பட்டுப் புணர்ந்த களவாதலின் இது பிறர்க் குரிய பொருளை மறையிற்கொள்ளுங் களவன்றாயிற்று. இது வேதத்தை 'மறைநூல்' என்றாற்போலக் கொள்க.

"களவெனப் படுவது யாதென வினவின்
வளைகெழு முன்கை வளங்கெழு கூந்தல்
முளையெயிற்று அமர்நகை மடநல் லாளொடு
தளையவிழ் தண்டார்க் காமன் அன்னோன்
விளையாட்டு இடமென வேறுமலைச் சாரல்
மானினம் குருவியொடு கடிந்து விளையாடும்
ஆயமும் தோழியும் மருவிநன் கறியா
மாயப் புணர்ச்சி என்மனார் புலவர்."

இக்களவைக் 'காமப்புணர்ச்சியும்' (தொல். பொ. செய். 187.) என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்திற் கூறிய நான்கு வகையானும் மேற்கூறுமாறு உணர்க.

இன்பத்திற்குப் பொதுவிலக்கணம் அகத்திணை யியலுட் கூறி அதற்கினமாகிய பொருளும் அறனுங்கூறும் புறத்திணையை, அதன் புறத்து நிகழ்தலிற் புறத்திணை யியலுட்கூறி, யீண்டு அவ் வின்பத்தினை விரித்துச் சிறப்பிலக்கணங் கூறுதலின் இஃது அகத் திணை யியலோடு இயைபுடைத்தாயிற்று. 'வழக்கு... ... நாடி' என்றலின் இஃது உலகிய லெனப்படும்; உலகத்து மன்றலாவது குரவர் கொடுப்பதற்கு முன்னர் ஒருவற்கும் ஒருத்திக்குங் கண்ணும் மனமுந் தம்முள் இயைவதேயென வேதமுங் கூறிற்றுதலின்.

இச்சூத்திரங் களவெனப்பட்ட ஒழுக்கம் உலகத்துப் பொருள் பலவற்றுள்ளும் இன்பம்பற்றித் தோன்றுமெனவும் அஃது இன்னதா மெனவுங் கூறுகின்றது.

இதன் பொருள் : இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு– இன்பமும் பொருளும் அறனுமென்று முற்கூறிய மூவகைப் பொருள்களுள்; அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின் – ஒருவனோடு ஒருத்தியிடைத் தோன்றிய அன்போடுகூடிய இன்பத்தின் பகுதியாகிய புணர்தல் முதலிய ஐவகை ஒழுக்கத் தினுள்; காமக் கூட்டங் காணுங்காலை – புணர்தலும், புணர்தனி மித்தமுமெனப்பட்ட காமப் புணர்ச்சியை ஆராயுங்காலத்து;

மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள் - வேதம் ஓரிடத்துக் கூறிய மணமெட்டனுள்; துறை அமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பு - துறை அமைந்த நல்யாழினையுடைய பிரிவின்மையோரது தன்மை என்றவாறு.

அன்பாவது;

''அடுமரம் துஞ்சுதோள் ஆடவரும் ஆய்ந்த
படுமணிப் பைம்பூண் அவரும் – தடுமாறிக்
கண்ணெதிர் நோக்கொத்த காரிகையில் கைகலந்து
உண்ணெகிழச் சேர்வதாம் அன்பு.''

மன்றல் எட்டாவன: பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்பன.

அவற்றுட் பிரமமாவது: ஒத்த கோத்திரத்தானாய் நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியங் காத்தவனுக்குப் பன்னீராட்டைப் பருவத்தாளாய்ப் பூப்பு எய்தியவளைப் பெயர்த்து இரண்டாம் பூப்பு எய்தாமை அணிகலன் அணிந்து தானமாகக் கொடுப்பது.

''கயலேர் அமருண்கண் கன்னிப்பூப்பு எய்தி
அயல்பேர் அணிகலன்கள் சேர்த்தி—இயலின்
நிரல்ஒத்த அந்தணற்கு நீரில் கொடுத்தல்
பிரமமணம் என்னும் பெயர்த்து.''

பிரசாபத்தியமாவது: மகட்கோடற்கு உரிய கோத்திரத்தார் கொடுத்த பரிசத்து இரட்டித் தம்மகட்கு ஈந்து கொடுப்பது.

''அரிமதர் உண்கண் ஆயிழை எய்துதற்கு
உரியவன் கொடுத்த ஒண்பொருள் இரட்டி
திருவின் தந்தை திண்ணிதிற் சேர்த்தி
அரியதன் கிளையோடு அமைவரக் கொடுத்தல்
பிரிதல் இல்லாப் பிரசா பத்தியம்.''

ஆரிடமாவது: தக்கான் ஒருவற்கு ஆவும் ஆனேறும் பொற் கோட்டுப் பொற்குளம்பினவாகச் செய்து அவற்றிடை நிறீஇப் பொன் அணிந்து நீரும் இவைபோற் பொலிந்து வாழ்வீரென நீரிற்கொடுப்பது.

"தனக்கொத்த ஒண்பொருள் தன்மகளைச் சேர்த்தி
மனைக்கொத்த மாண்புடையாள் பேணி—இனக்கொத்த
ஈரிடத் தாவை நிறீஇயிடை ஈவதே
ஆரிடத்தார் கண்டமண மாம்."

தெய்வமாவது: பெருவேள்வி வேட்பிக்கின்றார் பலருள் ஒருவற்கு அவ்வேள்வித்தீ முன்னர்த் தக்கிணையாகக் கொடுப்பது.

"நீளி நெடுநகர் நெய்பெய்து பாரித்த
வேள்வி விளங்கழன் முன்நிறீஇக்—கேள்வியாற்கு
ஐவைத்தாம் பூணுளைக் காமுற்றாற்கு ஈவதே
தெய்வ மணத்தார் திறம்."

அசுரமாவது: கொல்லேறு கோடல் திரிபன்றியெய்தல் வில்லேற்றுதல் முதலியன செய்து கோடல்.

"முகையவிழ் கோதையை முள்ளெயிற்று அரிவையைத்
தகைநலம் கருதும் தருக்கினிர் உளரெனின்
இவையிவை செய்தாற்கு எளியள்மற்று இவளெனத்
தொகைநிலை உரைத்த பின்றைப் பகைவலித்து
அன்னவை ஆற்றிய அளவையில்
தொல்நிலை அசுரம் துணிந்த வாறே."

இராக்கதமாவது: தலைமக டன்னிலும் தமரிலும் பெறாது வலிதிற் கொள்வது.

"மலிபொற்பைம் பூணுளை மாலுற்ற மைந்தர்
வலிதிற்கொண்டு ஆள்வதே என்ப—வலிதில்
பராக்கதம் செய்துழலும் பாழி நிமிர்தோள்
இராக்கதத்தார் மன்றல் இயல்பு."

பைசாசமாவது: மூத்தோர் களித்தோர் துயின்றோர் புணர்ச்சியும் இழிந்தோளை மணஞ்செய்தலும் ஆடைமாறுதலும் பிறவுமாம்.

"எச்சார்க்கு எளியர் இயைந்த காவலர்
பொச்சாப்பு எய்திய பொழுதுகொள் அமையத்து
மெய்ச்சார்பு எய்திய மிகுபுகழ் நண்பின்
உசாவார்க்கு உதவாக் கேண்மைப்
பிசாசர் பேணிய பெருமைசால் இயல்பே."

"இடைமயக்கம் செய்யா இயல்பினில் நீங்கி
உடைமயக்கி உட்கறுத்தல் என்ப—உடைய
துசாவார்க்கு உதவாத ஊணிலா யாக்கைப்
பிசாசத்தார் கண்டமணப் பேறு."

இனிக் கந்தருவமாவது: கந்தருவ குமாரருங் கன்னியருந் தம்முள் எதிர்ப்பட்டுக் கண்டு இயைந்ததுபோலத் தலைவனுந் தலைவியும் எதிர்ப்பட்டுப் புணர்வது.

"அதிர்ப்பில்லைம் பூணுரும் ஆடவரும் தம்முள்
எதிர்ப்பட்டுக் கண்டியைதல் என்ப—கதிர்ப்பொன்யாழ்
முந்திருவர் கண்ட முனிவறு தண்காட்சிக்
கந்திருவர் கண்ட கலப்பு."

என இவற்றானுணர்க.

களவொழுக்கம் பொதுவாகலின் நான்கு வருணத்தார்க்கும் ஆயர் முதலியோர்க்கும் உரித்து. மாலை சூட்டுதலும் இதன்பாற்படும். வில்லேற்றுதன் முதலியன பெரும்பான்மை அரசர்க்குரித்து. அவற்றுள் ஏறுதழுவுதல் ஆயர்க்கே சிறந்தது. இராக்கதம் அந்தணரொழிந்தோர்க்கு உரித்து; வலிதிற் பற்றிப் புணர்தலின் அரசர்க்கு இது பெருவரவிற்றன்று. பேய் இழிந்தோர்க்கே உரித்து. கந்தருவரின் மக்கள் சிறிது திரிபுடைமையிற் சேட்படை முதலியன உளவா மென்றுணர்க.

அறத்தினாற் பொருளாக்கி அப்பொருளான் இன்பநுகர்தற் சிறப்பானும் அதனான் இல்லறங் கூறலானும் இன்பம் முற்கூறினார். அறனும் இன்பமும் பொருளாற் பெறப்படுதலின் அதனை இடை வைத்தார். போகமும் வீடுமென இரண்டுஞ் சிறத்தலிற் போகம் ஈண்டுக்கூறி வீடுபெறுதற்குக் காரணம் முற்கூறினார். ஒழிந்த மணங் கைக்கிளையும் பெருந்திணையுமாய் அடங்குதலின் இதனை 'அன்பொடு' என்றார். பொருளாற்கொள்ளும் மணமும் இருவர் சுற்றமும் இயைந்துழித் தாமும் இயைதலிற் கந்தருவப்பாற்படும் ஐந்திணைப் புறத்தவாகிய வெட்சி முதலியவற்றிற்கும் அன்பொடு புணர்தலுங் கொள்ளப்படும்.

"அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை" (குறள். 76)

என்றலின்,

கந்தருவர்க்குக் கற்பின்றி அமையவும் பெறும். ஈண்டுக் கற்பின்றி களவே அமையாதென்றற்குத் "துறையமை" என்றார்.

(வி–ரை) கொடையெதிர்ந்த – கொடுத்தற்கு நேர்ந்த; மாயப் புணர்ச்சி – களவுப்புணர்ச்சி; களவின் நான்கு வகையாவன – இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், பாங்கியற் கூட்டம்.

களவியலின் பெயர்க் காரணம் பற்றியும் மேலை ஓத்தினோடு இவ்வோத்திற்குரிய இயைபு பற்றியும் இளம்பூரணர் கூறுவது அறியத்தக்கது.

இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், களவியல் என்னும் பெயர்த்து. களவொழுக்கம் உணர்த்தினமையாற் பெற்றபெயர். அஃதாதல் ஈண்டு உரைக்கின்றதனால் பயன் இன்றாம்; கள வென்பது அறம் அன்மையின் (எனில்) அற்றன்று; களவு என்னும் சொற் கண்டுழியெல்லாம் அறப்பாற்படாதென்றல் அமையாது. களவாவது பிறர்க்குரிய பொருள் மறையிற்கோடல், இன்னதன்றி ஒத்தார்க்கும், மிக்கார்க்கும் பொதுவாகிய கன்னியரைத் தமர் கொடுப்பக் கொள்ளாது கன்னியர்தம் இச்சையினால் தமரை மறைத்துப் புணர்ந்து பின்னும் அறநிலை வழுவாமல் நிற்றலால் இஃது அறமெனப்படும். அன்னதாதல் இச்சூத்திரத்தானும் விளங்கும்.

அஃதற்றாக மேலை ஓத்தினோடு இவ்வோத்திற்கு இயைபு என்னையெனின் மேல் கைக்கிளை முதற் பெருந்திணை இறுவாயாக எழுதிணை ஓதி அவற்றின் புறத்து நிகழும் திணைகளும் ஓதிப் போந்தார். அவ்வெழுதிணையினும் ஒருதலை வேட்கையாகிய கைக் கிளையும் ஒப்பில் கூட்டமாகிய பெருந்திணையும் ஒழித்து இருவரன்பும் ஒத்த நிலைமையவாகிய நடுவண் ஐந்திணைக்கண்ணும் புணர்ப்பும், பிரிதலும், இருத்தலும், இரங்கலும், ஊடலுமாகிய உரிப்பொருள் களவு கற்பு என்றும் இருவகைக் கைகோளினும் நிகழுமாதலின் அவ்விருவகைக் கைகோளினும் களவாகிய கைகோள் இவ்வோத் தினுள் உணர்த்துதலான் அவற்றின்பின் கூறப்பட்டது. இது நடுவணைந்திணைக்கண் நிகழும் பொருட்பாகுபாடாயின் அகத்திணை யியலின்பின் வைக்கற்பாலது எனின், ஆண்டு வைக்கக்கருதின்

"வெட்சிதானே குறிஞ்சியது புறனே" (புறத்திணை - 59)

என்னும் மாட்டேறு பெருதாம். அதனிடைக் களவியலும் கற்பியலும் கிடைத்தலான் என்க.

மறையோர் - அந்தணர் எனப்பொருள் காண்பவர் இவர்.

தடுமாறி - காதல் மீதூர்வினல் தடுமாறி; பரிசம் - பெண் வீட்டார்க்குக் கொடுக்கும் ஆடை அணி முதலியன.

தக்கிணை - செய்த வேள்வியின் பொருட்டுக் கொடுக்கப்படும் பொருள். தட்சிணை என்பதும் இது.

ஐவைத்தாம் பூணுளை - வியத்தற்குரித்தாகிய அணிகலன் அணிந்தாளை:

பராக்கதம் - விளையாட்டாகக் கொலைசெய்தல். (1)

## களவிற்குரிய தலைமக்கள்

93. ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப
மிக்கோ னுயினுங் கடிவரை யின்றே.

இது, முற்கூறிய காமக்கூட்டத்திற்கு உரிய கிழவனுங் கிழத்தியும் எதிர்ப்படும் நிலனும் அவ்வெதிர்ப்பாட்டிற்குக் காரணமும் அங்ஙனம் எதிர்ப்படுதற்கு உரியோர் பெற்றியுங் கூறுகின்றது.

(இ - ள்) ஒன்றே வேறே என்று இருபால்வயின் இருவர்க்கும் ஓரிடமும் வேற்றிடமும் என்று கூறப்பட்ட இருவகை நிலத்தின்கண்ணும்; ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின் - உம்மைக் காலத்து எல்லாப் பிறப்பிலும் இன்றியமையாது உயிரொன்றி ஒருகாலைக்கொருகால் அன்பு முதலியன சிறத்தற்கு ஏதுவாகிய பால்வரை தெய்வத்தின் ஆணையாலே; ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப - பிறப்பு முதலியன பத்தும் ஒத்த தலைவனுந் தலைவியும் எதிர்ப்படுப; மிக்கோன் ஆயினும் கடிவரை இன்றே - அங்ஙனம் எவ்வாற்ருனும் ஒவ்வாது தலைவன் உயர்ந்தோனுயினுங் கடியப்படா (எ - று).

'என்றிருபால்வயிற் காண்ப' எனப் பால் வன்பால் மென்பால் போல நின்றது. உயர்ந்த பாலை "நோய் தீர்ந்த மருந்து" போற் கொள்க. ஒரு நிலம் ஆதலை முற்கூறினர், இவ்வொழுக்கத்திற்கு ஓதியது குறிஞ்சி நிலமொன்றுமே ஆதற்சிறப்பு நோக்கி. வேறு நிலம் ஆதலைப் பிற்கூறினர். குறிஞ்சி தன்னுள்ளும் இருவர்க்கும் மலையும் ஊரும் வேருதலுமன்றித் திணை மயக்கத்தான் மருதம் நெய்தலென்னும் நிலப் பகுதியுள் ஒருத்தி அரிதின் நீங்கிவந்து எதிர்ப்படுதல் உளவாதலுமென வேறுபட்ட பகுதி பலவும் உடன் கோடற்கு. ஒரு நிலத்துக் காமப் புணர்ச்சிப் பருவத்தாளாயினளை ஆயத்தின் நீங்கித் தனித்து ஓரிடத்து எளிதிற் காண்டல் அறிதென்றற்கும் 'பாலதாணையிற் கண்ப' என்றார். எனவே, வேற்று நிலத்திற்காயின் வேட்டைமேலிட்டுத் திரிவான். அங்ஙனந் தனித்துக் காணுங் காட்சி அருமையாற் பாலதாணை வேண்டுமாயிற்று.

"இவனிவள் ஐம்பால் பற்றவும் இவள் இவன்
புன்தலை ஓரி வாங்குநள் பரியவும்
காதல்செவிலியர் தவிர்ப்பவும் தவிராது
ஏதில் சிறுசெரு உறுப மன்னோ
நல்லைமன்று அம்மபாலே மெல்லியல்
துணைமலர்ப் பிணையல் அன்னவியர்
மணமகிழ் இயற்கை காட்டி யோயே." (குறுந். 229)

இஃது ஒரூர் என்றதாம்.

"காமஞ் செப்பாது கண்டது மொழிமோ" (குறுந். 2)

என்றது என் நிலத்து வண்டாதலின் எனக்காகக் கூருதே சொல் என்றலிற் குறிஞ்சிநிலம் ஒன்ருயிற்று.

"இலங்கும் அருவித்து இலங்கும் அருவித்தே
வானின் இலங்கும் அருவித்தே தானுற்ற
சூள்பேணன் பொய்த்தான் மலை" (கலி. 41)

என்புழிப் பொய்த்தவன் மலையும் இலங்கும் அருவித்தென வியந்து கூறித் தமது மலைக்கு நன்றி இயல்பென்றலிற் குறிஞ்சியுள்ளும் மலை வேருயிற்று.

"செவ்விரல் சிவப்பூரச் சேட்சென்றாய் என்றவன்
பௌவநீர்ச் சாய்க்கொழுதிப் பாவைதந்து அனைத்தற்கோ
கௌவைநோய் உற்றவர் காணாது கடுத்தசொல்
ஒவ்வாளென்று உணராய்நீ ஒருநிலையே உரைத்ததை"

(கலி. 76)

இது, மருதத்துத் தலைவி களவொழுக்கங் கூறுவாள் பௌவ நீர்ச் சாய்ப்பாவை தந்தான் ஒருவனென நெய்தனிலத்து எதிர்ப் பட்டமை கூறியது. ஆணை-விதி : கைகோளின் முதற்கட் கூறு தலிற் கற்பின்காறும் ஒன்றும் வேறுஞ் செல்லும் பாலது ஆணையும் அவ்வாறும்.

மிகுதலாவது : குலங் கல்வி பிராயம் முதலியவற்றான் மிகுதல். எனவே, அந்தணர், அரசர் முதலிய வருணத்துப் பெண்கோடற்கண் உயர்தலும், அரசர் முதலியோரும் அம்முறை உயர்தலுங் கொள்க. இதனானே அந்தணர் முதலியோர் அங்ஙனம் பெண்கோடற்கட் பிறந்தோர்க்கும் இவ்வொழுக்கம் உரித்தென்று கொள்க. கடி, மிகுதி. அவர் அங்ஙனங் கோடற்கண் ஒத்த மகளிர் பெற்ற புதல் வரோடு ஒழிந்த மகளிர் பெற்ற புதல்வர் ஒவ்வாரென்பது உணர்த் தற்குப் பெரிதும் வரையப் படாதென்றார். பதினாறு தொடங்கி இருபத்து நான்கு ஈறாகக் கிடந்த யாண்டொன்பதும் ஒரு பெண் கோடற்கு மூன்றுயாண்டாக அந்தணன் உயருங் கந்தருவமணத் திற்கு; ஒழிந்தோராயின் அத்துணை உயரார். இருபத்து நான்கிரட்டி நாற்பத் தெட்டாதல் பிரம முதலியவற்றான் உணர்க. வல்லெழுத்து மிகுதல் என்றாற் போல மிகுதலைக் கொள்ளவே பிராயம் இரட்டி யாயிற்று. கிழத்தி மிகுதல் அறக்கழிவாம். 'கிழவன் கிழத்தி' எனவே பல பிறப்பினும் ஒருவர்க்கு ஒருவர் உரிமை எய்திற்று. இங்ஙனம் ஒருமை கூறிற்றேனும் 'ஒருபாற்கிளவி' (தொல். பொ. 222) என்னுஞ் சூத்திரத்தான் நால்வகை நிலத்து நான்கு வருணத் தோர் கண்ணும் ஆயர் வேட்டுவர் முதலியோர் கண்ணுங் கொள்க. இச்சூத்திரம் 'முன்னைய நான்கும்' (தொல்.பொ.52) எனக் கூறிய காட்சிக்கு இலக்கணங் கூறிற்றென்றுணர்க.

உ-ம். "கருந்தடங்கண் வண்டாகச் செவ்வாய் தளிரா
அரும்பிவர் மென்முலை தொத்தாப்—பெரும்பணைத்தோள்
பெண்டகைப் பொலிந்த பூங்கொடி
கண்டேம் காண்டலும் களித்தஎம் கண்ணே."
(புற.வெ.மாலை.கைக்.1.)

இக்காட்சிக்கண் தலைவனைப்போல் தலைவி வியந்து கூறுதல் புலனெறிவழக்கன்மை உணர்க.

(வி-ரை) உட்கு – அச்சம்.

சேட்படை—தலைவனைத் தோழி சேட்படுத்தல். வீடுபெறுதற்குக் காரணம் முற்கூறினர் என்றது புறத்திணையியலுள் காஞ்சி, வாகை ஆகிய துறைகளைக் கருதியதாம். கற்பின்றி – மணம் புணர்ந்து வாழ்தலின்றி.

இருபால் – இரண்டுஇடம். ஒருவனும், ஒருத்தியுமாகக் கூடி இல்லறம் செய்துழி அவ்விருவரையும் மறுபிறப்பின் கண்ணும் ஒன்றுவித்தலும் வேருக்குதலுமாகிய இருவகை ஊழினும் என இதற்கு இளம்பூரணர் உரை காண்பர். அதுவே பொருத்தம் உடைத்தாம்.

புண்தலை ஒரி – புள்ளிய தலைமயிர்; வாங்குநள் – வளைத்திழுத்து; பறியவும் – ஓடவும், சிறுசெரு – சிறிய பூசல். துணைமலர்ப் பிணையல் – மலரால் பிணைக்கப்பட்ட இரட்டை மாலை.

இலங்கும் – ஒலிக்கும்.

மிக்கோனுயினும் – கல்வி, செல்வம் முதலியவற்றான் மிக்கோனுயினும் என உரைகாண்டலே பொருத்தமாம். புலனெறி வழக்கு – செய்யுள் நெறி வழக்கு. (2)

### ஐயம் நிகழுமிடம்.

94. சிறந்துழி ஐயஞ் சிறந்த தென்ப
இழிந்துழி யிழிபே சுட்ட லான.

இஃது எய்தாத தெய்துவித்து எய்தியது விலக்கிற்று, 'முன்னைய நான்கும்' (தொல்.பொ.52) என்றதனுற் கூறிய ஐயந் தலைவன்

கண்ணதே எனவுந் தலைவிக்கு நிகழுமோ என்னும் ஐயத்தை விலக்குதலுங் கூறலின்.

(இ - ள்) சிறந்துழி ஐயம் சிறந்தது என்ப - அங்ஙனம் எதிர்ப் பாட்டின் இருவருள்ளுஞ் சிறந்த தலைவன் கண்ணே ஐயம் நிகழ்தல் சிறந்ததென்று கூறுவார் ஆசிரியர்; இழிந்துழி இழிபே சுட்டலான- அத் தலைவனின் இழிந்த தலைவிக்கண் ஐயம் நிகழுமாயின் இன்பத்திற்கு இழிவே அவள் கருதும் ஆதலான் (எ - று).

தலைவற்குத் தெய்வமோ அல்லளோவென நிகழ்ந்த ஐயம், நூன் முதலியவற்றால் நீக்கித் தெய்வமன்மை உணர்தற்கு அறிவு டையனாதலுந், தலைவிக்கு, முருகனோ இயக்கனோ மகனோவென ஐயம் நிகழின் அதனை நீக்கி உணர்தற்குக் கருவியிலள் ஆகலானும் இங்ஙனங் கூறினார். தலைவிக்கு, ஐயம் நிகழின் அச்சமேயன்றிக் காமக்குறிப்பு நிகழாதாம். மகடூஉவின் ஆடூஉச் சிறத்தல்பற்றிச் 'சிறந்துழி' என்றார்.

உ - ம்: "அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலும்என் நெஞ்சு" (குறள்-1081)

எனவரும்.

(வி – ரை) இந்நூற்பாவிற்குச் செல்வத்தானும், குலத்தானும், வடிவானும் உயர்ந்த தலைமகனும், தலைமகளும் ஆகியோர் மாட்டே ஐயம் நிகழ்வது, அல்லாதார் மாட்டு இவ்வையம் நிகழா என இளம்பூரணர் கருதும் கருத்தே பொருத்தமுடைத்தாம். சிறந்துழி- செல்வம், குலம், கல்வி, வடிவு முதலியவற்றான் தலைமகனும், தலைமகளும் சிறந்த விடத்து என்பது இவர் கருத்தாகும். நச்சினார்க்கினியர் தலைவியினும் தலைவன் சிறந்த வழி என உரை கண்டு தலைவிக்கு ஐயம் நிகழின் அதனை நீக்கி உணர்தற்குக் கருவி இலளாம் எனக் கூறுவது சிறிதும் பொருத்தமின்றாம். தலைமகள் ஐயுறுதல் இல்லை என இளம்பூரணரும் கூறுவர். சிந்தாமணி, பெரியபுராணம், இறையனார் களவியலுரை ஆகிய வற்றான் தலைமகளும் ஐயுற்றுத் தெளியுமாறு கூறப்பட்டிருத்தல் காண்க. (3)

## ஐயம் களைதற்குரிய கருவிகள்.

95. வண்டே இழையே வள்ளி பூவே
கண்ணே அலமரல் இமைப்பே அச்சமென்(று)
அன்னவை பிறவும், [1]ஆங்கவண் நிகழ
நின்றவை களையுங் கருவி யென்ப.

இஃது ஐயுற்றுத் தெளியுங்கால் இடையது ஆராய்ச்சி யாதலின் ஆராயும் கருவி கூறுகின்றது. வண்டு முதலியன வானகத்தனவன்றி மண்ணகத்தனவாதல் நூற்கேள்வியானும் உய்த்துணர்ச்சியானும் தலைமக்கள் உணர்ப.

(இ - ள்) வண்டே - பயின்றதன்மே லல்லது செல்லாத தாது ஊதும் வண்டு; இழையே - ஒருவரால் இழைக்கப்பட்ட அணி கலன்கள்; வள்ளி-முலையினு ந் தோளினும் எழுதுந் தொய்யிற்கொடி; பூவே - கைக்கொண்டு மோந்து உயிர்க்கும் கழுநீர்ப்பூ; கண்ணே - வான் கண்ணல்லாத ஊன் கண்; அலமரல் - கண்டறியாத வடிவு கண்ட அச்சத்தாற் பிறந்த தடுமாற்றம்; இமைப்பே-அக் கண்ணின் இதழ் இமைத்தல்; அச்சம் - ஆண்மகனைக் கண்டுழி மனத்திற் பிறக்கும் அச்சம்; என்று அன்னவை பிறவும் - என்று அவ்வெண் வகைப் பொருளும் அவைபோல்வன பிறவும்; அவண் நிகழ நின்றவை - அவ்வெதிர்ப் பாட்டின்கண் முன்பு கண்ட வரையர மகள் முதலிய பிழம்புகளாய் ஈண்டுத் தன் மனத்து நிகழ நின்ற அப் பிழம்புகளை; ஆங்குக்களையும் கருவி என்ப - முந்து நூற்கண்ணே அவ் வையம் நீக்குங் கருவியாமென்று கூறுவர் ஆசிரியர் (எ - று)

எனவே, எனக்கும் அது கருத்தென்றார். இவையெல்லாம் மக்கட்குரியனவாய் நிகழவே தெய்வப் பகுதிமேற் சென்ற ஐயம் நீங்கித் துணியும் உள்ளம் பிறத்தலின் துணிவும் உடன் கூறிற்றே யாயிற்று.

இனி, 'அன்னபிற' ஆவன கால் நிலந்தோய்தலும் நிழலீடும் வியர்த்தலும் முதலியன.

---

[1] ஆங்கண்நிகழ எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

"திருநுதல் வேரரும்பும் தேங்கோதை வாடும்
இருநிலம் சேவடியும் தோயும் — அரிபரந்த
போகிதழ் உண்கணுந் இமைக்கும்
ஆகு மற்றிவள் அகலிடத்து அணங்கே"

(புற.வெ.மாலை.கைக்.3)

என வரும்.

இக் காட்சி முதலிய நான்கும் அகனைந்திணைக்குச் சிறப்புடைமையும் இவை கைக்கிளையாமாறும் 'முன்னைய நான்கும்' (தொல்.பொ.52) என்புழிக் கூறினும். இங்ஙனம் ஐயந்தீர்ந்துழித் தலைவியை வியந்து கூறுதலுங் கொள்க.

(வி-ரை) பிழம்புகள் – வடிவுகள்.

போகு இதழ் உண்கண் – நீண்ட இமையை உடைய மையுண்ட கண். (4)

குறிப்பறிதற்குரிய கருவி.

96. நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்.

இஃது அங்ஙனம் மக்களுள்ளாளெனத் துணிந்து நின்ற தலைவன் பின்னர்ப் புணர்ச்சி வேட்கை நிகழ்ந்துழித் தலைவியைக் கூடற்குக் கருதி உரை நிகழ்த்துங்காற் கூற்று மொழியான் அன்றிக் கண்ணான் உரை நிகழ்த்துமென்பதூஉம் அது கண்டு தலைவியும் அக்கண்ணானே தனது வேட்கை புலப்படுத்திக் கூறுமென்பதூஉங் கூறுகின்றது; எனவே இது புணர்ச்சி நிமித்தமாகிய வழிநிலைக்காட்சி கூறுகின்றதாயிற்று.

(இ - ள்) அறிவு - தலைவன் அங்ஙனம் மக்களுள்ளாளென்று அறிந்த அறிவானே; உடம்படுத்தற்கு - தலைவியைக் கூட்டத்திற்கு உடம்படுத்தற்கு; நாட்டம் இரண்டும் கூட்டி உரைக்கும் - தன்னுடைய நோக்கம் இரண்டானுங் கூட்டி வார்த்தை சொல்லும் குறிப்புரை நாட்டம் இரண்டும் ஆகும் - அவ்வேட்கை கண்டு தலைவி தனது வேட்கை புலப்படுத்திக் கூறுங் கூற்றுந் தன்னுடைய நோக்கம் இரண்டானுமாம் (எ - று)

நாட்டம் இரண்டிடத்துங் கூட்டுக. உம்மை விரிக்க. இங்ஙனம் இதற்குப் பொருள்கூறல் ஆசிரியர்க்குக் கருத்தாதல் 'புகுமுகம் புரிதல்' (தொல். பொ. 261) என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்தானுணர்க; அதற்குப் பேராசிரியர் கூறிய உரையானு முணர்க. ஒன்று ஒன்றை ஊன்றி நோக்குதலின் நாட்டமென்றார். நாட்டுதலும் நாட்டமும் ஒக்கும்.

உ - ம்: "நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து" (குறள். 1082)

என வரும்.

இது புகுமுகம் புரிதல் என்னும் மெய்ப்பாடு கூறியது.

(வி-ரை.) தாக்கணங்கு – தானே தாக்கி வருத்துகின்ற தெய்வம் (5)

குறிப்புணர்ந்தபின் நிகழும் மெய்ப்பாடுகள்

97. குறிப்பே குறித்தது கொள்ளு மாயின்
ஆங்கவை நிகழும் என்மனார் புலவர்.

இது புணர்ச்சியமைதி கூறுகின்றது.

(இ - ள்.) குறித்தது - தலைவன் குறித்த புணர்ச்சி வேட்கை யையே; குறிப்புக்கொள்ளுமாயின் - தலைவி கருத்துத் திரிவுபடாமற் கொள்ளவற்றாயின்; ஆங்கு - அக் குறிப்பைக் கொண்டகாலத்து; அவை நிகழும் என்மனார் புலவர் - புகுமுகம் புரிதன் முதலாய் இருகையுமெடுத்தல் ஈறாகக் கிடந்த மெய்ப்பாடு பன்னிரண்டனுட் (162-263) பொறிநுதல் வியர்த்தல் முதலிய பதினொன்றும் முறையே நிகழுமென்று கூறுவர் புலவர் (எ-று.)

'அங்கவை'யும் பாடம். பன்னிரண்டாம் மெய்ப்பாடாகிய இருகையுமெடுத்தல் கூறவே முயக்கமும் உய்த்துணரக் கூறியவாறு காண்க. அம்மெய்ப்பாட்டியலுட் (13, 14, 15) கூறிய மூன்று சூத்திரத்தையும் ஈண்டுக் கூறியுணர்க.

உ-ம்: "கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல." (குறள். 1100)

"கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தில்
செம்பாகம் அன்று பெரிது." (குறள். 1092)

இதனை நான்கு வருணம் ஒழிந்தோர்க்குங் கொள்க.

உ.-ம் : "பானலம் தண்கழிப் பாடறிந்து தன்ஐமார்
நூனலம் நுண்வலையான் நொண்டெடுத்த—கானல்
படுபுலால் காப்பாள் படைநெடுங்கண் நோக்கம்
கடிபொல்லா என்னையே காப்பு." (திணை. நூற். 32)

இனி முயங்கி மகிழ்ந்து கூறுவன :

"கோடல் எதிர்முகைப் பசுவீ முல்லை
நாறிதழ்க் குவளையோடு இடைப்பட விரைஇ
ஐதுதொடை மாண்ட கோதை போல
நறிய நல்லோள் மேனி
முறியினும் வாயது முயங்கற்கும் இனிதே." (குறுந். 62)

"தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு." (குறள். 1107)

உரையிற் கோடலான் மொழிகேட்க விரும்புதலுங் கூட்டிய தெய்வத்தை வியந்து கூறுதலும் வந்துழிக் காண்க.

(வி-ரை) தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் கண்டு இருவர்க்கும் வேட்கை ஏற்பட்டவிடத்தே இக்குறிப்பு நிகழும். அல்லாத விடத்து நிகழாது என்பது கருத்தாம்.

பானல் - நெய்தல், நொண்டெடுத்த - முகந்தெடுத்த; கடிபு ஒல்லா - காக்கமாட்டா.

கோடல் - காந்தள், ஐது - அழகிதாக, முறியினும் வாயது - தளிரினும் சிறந்தது.

பாத்து - பகுத்து. (6)

## தலைவனின் இயல்பு

98. பெருமையும் உரனும் ஆடூஉ மேன.

இத்துணையும் மெய்யுறு புணர்ச்சிக்கு உரியனவே கூறி, இனி உள்ளப் புணர்ச்சியே நிகழ்ந்துவிடும் பக்கமும் உண்டென்பதூஉம்

இவ்விருவகைப் புணர்ச்சிப் பின்னர்க் களவின்றி வரைந்து கோடல் கடிதில் நிகழ்தலுண்டென்பதூஉம் உணர்த்துகின்றது.

(இ-ள்.) பெருமையும்-அறிவும் ஆற்றலும் புகழுங்கொடையும் ஆராய்தலும் பண்பும் நண்பும் பழிபாவம் அஞ்சுதலும் முதலியனவாய் மேற்படும் பெருமைப் பகுதியும்; உரனும்-கடைப்பிடியும் நிறையுங் கலங்காது துணிதலும் முதலிய வலியின் பகுதியும்; ஆடூஉ மேன – தலைவன் கண்ண (எ – று.)

இதனானே உள்ளப் புணர்ச்சியே நிகழ்ந்து வரைந்து கொள்ளும் உலக வழக்கும் மெய்யுறுபுணர்ச்சி நிகழ்ந்துழியுங் களவு நீட்டியாது வரைந்துகோடலும் உள்ளஞ் சென்றுழியெல்லாம் நெகிழ்ந் தோடாது ஆராய்ந்து ஒன்று செய்தலும் மெலிந்த உள்ளத்தானுயுந் தோன்றாமல் மறைத்தலுந் தீவினையாற்றிய பகுதியிற்சென்ற உள்ளம் மீட்டலுந் தலைவற்கு உரியவென்று கொள்க.

"சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு" (குறள். 422)

என வரும்.

பெருமை நிமித்தமாக உரன் பிறக்கும்; அவ்வுரனுன் மெய்யுறு புணர்ச்சி இலனுதலும் உரியனென இதுவும் ஓர் விதி கூறிற்று. தலைவிக்கு மெய்யுறு புணர்ச்சி நடக்கும் வேட்கை நிகழாமைக்கும் காரணம் மேற் (99) கூறும்.

இனி இயற்கைப் புணர்ச்சி இடையீடு பட்டுழி இடந்தலைப் பாட்டின்கண் வேட்கை தணியாது நின்று கூடுபவென்றும் ஆண்டு இடையீடு பட்டுழிப் பாங்கனுற் கூடுபவென்றும், உரைப்போரும் உளர்; அவர் அறியாராயினர்; என்னை? அவ்விரண்டிடத்தும் இயற்கைப் புணர்ச்சிக்கு உரிய மெய்ப்பாடுகள் நிகழ்ந்தே கூட வேண்டுதலின் அவற்றையும் இயற்கைப் புணர்ச்சி யெனப் பெயர் கூறலன்றிக் காமப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் பாங்கொடு தழாஅலும் என ஆசிரியர் வேறு வேறு பெயர் கூருரென்றுணர்க.

(வி-ரை) கடைப்பிடி - உறுதியாகக் கடைப்பிடித்தல். தீவினை ஆற்றிய பகுதி - களவுக் காலத்துப் பகலிரவு என்னாது தலைவியொடு கூடிய கூட்டம். (7)

## தலைவியின் இயல்பு

99. அச்சமும் நாணும் மடனு[1]முந் துறுத்த
நிச்சமும் பெண்பாற் குரிய என்ப.

இது, மேலதே போல்வதோர் விதியை உள்ளப்புணர்ச்சி பற்றித் தலைவிக்குக் கூறுகின்றது.

(இ-ள்.) அச்சமும் – அன்பு காரணத்திற்றோன்றிய உட்கும்; நாணும் - காமக்குறிப்பு நிகழ்ந்தவழிப்படுவதோர் உள்ளவொடுக்கமும்; மடனும் – செவிலியர் கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமையும்; முந்துறுத்த – இம்மூன்றும் முதலியன; நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப – எஞ்ஞான்றும் பெண்பாலார்க்கு உரியவென்று கூறுவர் ஆசிரியர் (எ - று)

'முந்துறுத்த' என்றதனாற் கண்டறியாதன கண்டுழி மனங்கொள்ளாத பயிர்ப்பும், செயத்தகுவது அறியாத பேதைமையும், நிறுப்பதற்கு நெஞ்சுண்டாம் நிறையுங் கொள்க. மடன் குடிப்பிறந்தோர் செய்கையாதலின் அச்சமும் நாணும்போல மெய்யுறு புணர்ச்சியை விலக்குவதாம். தலைவி உடையளெனவே தலைவன் பெருமையும் உரனும் உடையனாய் வேட்கைமீதூரவும் பெறுமாயிற்று. இவை இவட்கு என்றும் உரியவாயின் இயற்கைப் புணர்ச்சிக்கு உரியளல்லளாமாயினும் இவ்விலக்கணத்தில் திரியாது நின்றேயும் புணர்ச்சிக்கு உரியளாமென்றற்குப் பன்னிரண்டு மெய்ப்பாடுங் கூறினார். இவற்றானே, புணர்ச்சி பின்னர்ப் பெறுதுமெனத் தலைவனைப்போல ஆற்றுவாளாயிற்று. இருவர் கண்ணுற்றுக் காதல் கூர்ந்த வழியெல்லாங் கந்தருவமென்பது வேத முடிபாதலின் இவ்வுள்ளப்புணர்ச்சியுங் கந்தருவமாம். ஆதலான் அதற்கு ஏதுவாகிய பெருமையும் உரனும் அச்சமும் நாணும் போல்வன கூறினார். இச்சூத்திரம் இரண்டும் நாடக வழக்கன்றிப் பெரும்பான்மை உலகியல் வழக்கே கூறலின் இக் கந்தருவம் இக்

---

1. முந்துறுதல்' எனப் பாடம் கொள்வர் இளம்பூரணர்.

களவியற்குச் சிறப்பின்று. இனிக் கூறுவன மெய்யுறுபுணர்ச்சி பற்றிய களவொழுக்கமாதலின். (8)

## களவு வெளிப்படும்வரை தலைமக்களிடத்து நிகழும் நிகழ்ச்சிகள்.

100. வேட்கை, யொருதலை உள்ளுதல், மெலிதல்
ஆக்கஞ் செப்பல், நாணுவரை இறத்தல்
நோக்குவ எல்லாம் அவையே போறல்,
மறத்தல், மயக்கஞ், சாக்காடு, [1]என்றச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப.

இது முதலாகக் களவிலக்கணங் கூறுவார் இதனுன் இயற்கைப் புணர்ச்சிமுதற் களவு வெளிப்படுந்துணையும் இருவர்க்கும் உளவாம் இலக்கணம் இவ்வொன்பதுமெனப் பொதுவிலக்கணங் கூறுகின்ருர்.

(இ - ள்.) ஒருதலைவேட்கை - புணராத முன்னும் புணர்ந்த பின்னும் இருவர்க்கும் இடைவிட்டு நிகழாது ஒரு தன்மைத்தாகி நிலைபெறும் வேட்கை; ஒருதலை உள்ளுதல் - இடைவிடாது ஒருவர் ஒருவரைச் சிந்தியாநிற்றல்; மெலிதல் - அங்ஙனம் உள்ளுதல் காரணத்தான் உடம்பு வாடுதல்; ஆக்கஞ் செப்பல் - யாதானும் ஓர் இடையூறு கேட்டவழி அதனை ஆக்கமாக நெஞ்சிற்குக் கூறிக் கோடல்; நாணுவரையிறத்தல் - ஆற்றுந் துணையும் நாணி அல்லாதவழி அதன்வரையிறத்தல்; நோக்குவ எல்லாம் அவையே போறல் - பிறர் தம்மை நோக்கிய நோக் கெல்லாந் தம் மனத்துக் கரந்து ஒழுகுகின்றவற்றை அறிந்து நோக்குகின்ருரெனத் திரியக் கோடல்; மறத்தல் - விளையாட்டு முதலியவற்றை மறத்தல்; மயக்கம் - செய்திறன் அறியாது கையற்றுப் புள்ளும் மாவும் முதலியவற்ருேடு கூறல்; சாக்காடு - மடலேறுதலும் வரைபாய்தலும்போல்வன கூறல்; என்று அச்சிறப்பு உடை மரபினவை களவு என மொழிப - என்று சொல்லப்பட்ட அந்தச் சிறப்புடைத் தான முறைமையினையுடைய ஒன்பதுங் களவொழுக்கமென்று கூறுப. (எ - று.)

---

1. 'என்றிச்' எனப் பாடம்கொள்வர் இளம்பூரணர்.

இயற்கைப் புணர்ச்சிக்கு இயைபுடைமையின் வேட்கை முற்கூறினர்.

சேட்படுத்தவழித் தலைவன் அதனை அன்பென்று கோடலும், இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்கியவழித் தலைவி அதனை அன்பென்று கோடலும் போல்வன ஆக்கஞ்செப்பல். தலைவன் பாங்கற்குந் தோழிக்கும் உரைத்தலுந், தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றலும் போல்வன நாணுவரைபிறத்தல். களவதிகாரமாதலின் அவையென்னுஞ் சுட்டுக் களவை உணர்த்தும். கையுறை புனைதலும் வேட்டைமேலிட்டுக் காட்டுத்திரிதலுந் தலைவற்கு மறத்தல்; கிளியும் பந்தும் முதலியனகொண்டு விளையாடுதலைத் தவிர்ந்தது தலைவிக்கு மறத்தல். சாக்காடாவன:

"அணிற்பல் அன்ன கொங்குமுதிர் முண்டகத்து
மணிக்கேழ் அன்ன மாநீர்ச் சேர்ப்ப
இம்மை மாறி மறுமை ஆயினும்
நீயா கியர்எம் கணவனை
யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே". (குறுந். 49)

"நிறைந்தோர்த் தேரும் நெஞ்சமொடு குறைந்தோர்
பயன்இன் மையின் பற்றுவிட் டொரூஉம்
நயனின் மாக்கள் போல வண்டினம்
சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர
மையின் மானினம் மருளப் பையென
வெந்தாறு பொன்னின் அந்தி பூப்ப
ஐயறிவு அகற்றும் கையறு படரோடு
அகலிரு வானம் அம்மஞ் சீனப்
பகலாற்றுப் படுத்த பழங்கண் மாலை
காதலர்ப் பிரிந்த புலம்பின் நோதக
ஆரஞர் உறுநர் அருநிறம் சுட்டிக்
கூர்எஃகு அறிஞரின் அலைத்தல் ஆனாது
எள்ளற இயற்றிய நிழல்காண் மண்டிலத்து
உள்ளூது ஆவியில் பைப்பய நுணுகி
மதுகை மாய்தல் வேண்டும் பெரிதழிந்து
இதுகொல் வாழி தோழி என்னுயிர்
விலங்குவெங் கடுவளி எடுப்பத்
துளங்குமரப் புள்ளில் துறக்கும் பொழுதே" (அகம். 71)

இவை தலைவி சாக்காடாயின. மடலேறுவலெனக் கூறுதல் மாத்திரையே தலைவற்குச் சாக்காடு. இவை சிறப்புடைய வெனவே களவு சிறப்புடைத்தாம். இவை கற்பிற்கு ஆகா. இருவர்க்கும் இவை தடுமாறி வருதலின் மரபினவையெனப் பன்மை கூறினர்.

(வி-ரை) கொங்கு - தாது, முண்டகம் - முள்ளிச்செடி, மணி - நீலமணி, ஐயறிவு - வியக்கத்தக்க அறிவு, பழங்கண் - துன்பம், பைப்பய - சிறிது சிறிதாக, விலங்குவெம் கடுவளி - சூறுவளி. (9)

## இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் தலைவனிடத்தில் நிகழும் இயல்புகள்.

101. முன்னிலை யாக்கல் சொல்வழிப் படுத்தல்
நன்னயம் உரைத்தல் நகைநனியுறூஅ
தந்நிலை யறிதன் மெலிவுவிளக் குறுத்தல்
[1]தந்நிலை யுரைத்தல் தெளிவகப் படுத்தலென்
றின்னவை நிகழும் என்மனார் புலவர்.

இஃது இன்பமும் இன்பநிலையின்மையுமாகிய புணர்தல் பிரிதல் கூறிய முறையானே இயற்கைப்புணர்ச்சி முற்கூறி அதன் பின்னர்ப் பிரிதலும் பிரிதனிமித்தமுமாய் அத்துறைப் படுவன வெல்லாந் தொகுத்துத் தலைவற்கு உரியவென்கின்றது.

(இ-ள்) முன்னிலையாக்கல் – முன்னிலையாகாத வண்டு நெஞ்சு முதலியவற்றை முன்னிலையாக்கிக் கோடல்; சொல்வழிப் படுத்தல்– அச் சொல்லாதவற்றைச் சொல்லுவனபோலக் கூறுதல்; நன்னயம் உரைத்தல் – அவை சொல்லுவனவாக அவற்றிற்குத் தன் கழிபெருங்காதல் கூறுவானாய்த் தன்னயப்புணர்த்துதல்; நகைநனி உறூஅது அந்நிலை அறிதல் – தலைவி மகிழ்ச்சி மிகவும் எய்தாமற் புணர்ச்சிக்கினமாகிய பிரிவுநிலைகூறி அவள் ஆற்றுந்தன்மை அறிதல்; மெலிவு விளக்குறுத்தல் – இப்பிரிவால் தனக்குள்ள வருத் தத்தைத் தலைவி மனங்கொள்ளக் கூறுதலுந் தலைவி வருத்தங் குறிப்பான் உணர்ந்து அதுதீரக் கூறுதலும்; தம் நிலை உரைத்தல்– நின்னொடு பட்ட தொடர்ச்சி எழுமையும் வருகின்றதெனத் தமது

1. தன்னிலை எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

நிலை உரைத்தல்; தெளிவு அகப்படுதல் – நின்னிற்பிரியேன், பிரியின் ஆற்றேன், பிரியின் அறனல்லது செய்கேனுவலெனத் தலைவி மனத்துத் தேற்றம்படக் கூறுதல்; என்று இன்னவை நிகழும் என்மனுர் புலவர் – என்று இக்கூறிய ஏழும் பயின்றுவரும் இயற்கைப் புணர்ச்சிப்பின் தலைவற்கு (எ – று.)

முற்கூறிய மூன்றும் நயப்பின்கூறு. இஃது அறிவழிந்து கூருது தலைவி கேட்பது காரியமாக வண்டு முதலியவற்றிற்கு உவகைபற்றிக் கூறுவது. 'நன்னயம்' எனவே எவரினுந் தான் காதலனுக உணர்த்தும். இதன்பயன் புணர்ச்சியெய்தி நின்ருட்கு இவன் எவ்விடத்தான் கொல்லோ இன்னும் இது கூடுங்கொல்லோ இவன் அன்புடையன் கொல்லோ என நிகழும் ஐயநீங்குதல். இது பிரிதனிமித்தம். இவன் பிரியாவிடின் இவ்வொழுக்கம் புறத்தார்க்குப் புலனும்; ஆண்டு யாம் இறந்துபடுதலின் இவனும் இறந்து படுவனெனக் கருதப், பிரிவென்பதும் ஒன்று உண்டெனத் தலைவன் கூறுதல் அவட்கு மகிழ்ச்சியின் றென்பது தோன்ற 'நகை நணியுரு' தென்ருர். 'புணர்தல் பிரிதல்' (தொல். பொ. 14) எனக் கூறிய சூத்திரத்திற் புணர்தலை முற்கூறி ஏனைப் பிரிவை அந்நிலையென்று ஈண்டுச் சுட்டிக் கூறினுர். இதனுல் தலைவிக்குப் பிரிவச்சங் கூறினுர். தண்ணீர் வேட்டு அதனை உண்டு உயிர்பெற்ருன் இதனுன் உயிர் பெற்றேமெனக் கருதி அதன்மாட்டு வேட்கை நீங்காதவாறுபோலத், தலைவிமாட்டு வேட்கையெய்தி அவளை அரிதிற்கூடி உயிர்பெற்ரு ஞதலின், இவளான் உயிர்பெற்றே மென்றுணர்ந்து, அவண்மேல் நிகழ்கின்ற அன்புடனே பிரியுமாதலின் தலைவர்க்கும் பிரிவச்சம் உளதாயிற்று. இங்ஙனம் அன்பு நிகழவும் பிறர் அறியாமற் பிரிகின்றேனென்பதனைத் தலைவிக்கு மனங்கொள்ளக் கூறு மென்றற்கு 'விளக்குறுத்த' லென்ருர். இதனுனே வற்புறுத்தல் பெற்ரும். அஃது அணித்து எம்மிடமென்றும் பிறவாற்ருனும் வற்புறுத்தலாம். மேலனவும் பிரிதனிமித்தம்.

உ - ம்: "கொங்குதேர் வாழ்க்கை அம்சிறைத் தும்பி
காமம் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியல்
செறியெயிற்று அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீஅறியும் பூவே." (குறுந். 2.)

இதனுள் 'தும்பி' என்றது முன்னிலையாக்கல்; 'கண்டது மொழிமோ' என்றது சொல்வழிப்படுத்தல்; 'கூந்தலின் நறியவும் உளவோ' என்றது நன்னயமுரைத்தல்; 'காமஞ் செப்பாது' என்றது என்னிலத்து வண்டாதலின் எனக்காகக் கூறுது மெய்கூறெனத் தன் இடம் அதுவாகக் கூறலின் இடமணித்தென்றது; 'பயிலியது நட்பு' என்றது தந்நிலை யுரைத்தல்.

"பூவிடைப் படினும் யாண்டு கழிந்தன்ன
நீருறை மகன்றில் புணர்ச்சி போலப்
பிரிவுஅரி தாகிய தண்டாக் காமமோடு
உடனுயிர் போகுக தில்ல கடனறிந்து
இருவேம் ஆகிய உலகத்து
ஒருவேம் ஆகிய புன்மைநாம் உயற்கே." (குறுந். 57)

முற்பிறப்பில் இருவேமாய்க் கூடிப் போந்தனம், இவ்வுலகிலே இப்புணர்ச்சிக்கு முன்னர் யாம் வெவ்வேருயுற்ற துன்பத்து இன்று நாமே நீங்குதற்கெய்திய பிரிவரிதாகிய காமத்துடனே இருவர்க்கும் உயிர்போவதாக, இஃதெனக்கு விருப்பமென்றுன்; என்பதனல் தந்நிலையுரைத்தலும் பிரிவச்சமுங் கூறிற்று.

"குவளை நாறும் குவையிரும் கூந்தல்
ஆம்பல் நாறும் தேம்பொதி துவர்வாய்க்
குண்டுநீர்த் தாமரைக் கொங்கின் அன்ன
நுண்பஃ றுத்தி மாஅ யோயே
நீயே, அஞ்சல் என்றவன் சொல்லஞ் சலையே
யானே, குறுங்கால் அன்னம் குவவுமணல் சேக்கும்
கடல்சூழ் மண்டிலம் பெறினும்
விடல்சூ ழிலன்யான் நின்னுடை நட்பே". (குறுந். 300)

இது நயப்பும் பிரிவச்சமும் வன்புறையுங் கூறிற்று.

"யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக்கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம்கலந்த னவே". (குறுந். 40)

இது பிரிவரெனக் கருதிய தலைவி குறிப்புணர்ந்து தலைவன் கூறியது.

"மெல்லியல் அரிவைநின் நல்லகம் புலம்ப
நிற்றுறந்து அமைகுவ னாயின் எற்றுறந்து
இரவலர் வாரா வைகல்
பலவா குகயான் செலவுறு தகவே. (குறுந். 137)

"அறத்தாறு, அன்றெ௳ மொழிந்த கொன்றுபடுகிளவி
அன்ன வாக என்னுநள் போல." (அகம். 5)

இவை தெளிவகப்படுத்தல்.

"அம்மெல் ஓதி விம்முற்று அழுங்கல்
எம்மலை வாழ்நர் இரும்புனம் படுக்கிய
அரந்தின் நவியறுத்து உறுத்த சாந்தனும்
பரந்தேந்து அல்குல் திருந்துதழை உதவும்
பண்பிற்று என்ப வண்மை அதனால்
பல்கால் வந்துநம் பருவரல் தீர
அல்கலும் பொருந்துவம் ஆகலின்
ஒல்கா வாழ்க்கைத் தாகும்என் உயிரே."

இதுவும் அணித்து எம்மிடமென ஆற்றுவித்தது. பயின்றெனவே, பயிலாதுவரும் ஆயத்துய்த்தலும், யான்போவலெனக் கூறுதலும், மறைந்து அவட்காண்டலுங், கண்டு நின்று அவணிலை கூறுவனவும், அவளருமை யறிந்து கூறுவனவும் போல்வன பிறவுங் கொள்க. "யான்றற் காண்டொறும்" என்னுஞ் செய்யுளுள்,

"நீயறிந் திலையால் நெஞ்சே
யானறிந் தேனஅது வாய் ஆகுதலே"

என மறைந்து அவட்கண்டுநின்று தலைவன் அவளொடு நிகழ்ந்தது நினைஇ நெஞ்சிற்குக் கூறியது.

"காணு மரபிற்று உயிரென மொழிவோர்
நாணிலர் மன்ற பொய்ம்மொழிந் தனரே
யாஅம் காண்டும்எம் அரும்பெறல் உயிரே
சொல்லும் ஆடும் மென்மெல வியலும்
கணைக்கால் நுணுகிய நுசுப்பின்
மழைக்கண் மாதர் பணைப்பெரும் தோட்டே."

ஆயத்தொடு போகின்றாளைக் கண்டு கூறியது. இதன்கண் ஆயத்துய்த்தமையும் பெற்றாம்.

இனி 'வேட்கை யொருதலை' (தொல். பொ. 100) என்னுஞ் சூத்திரத்திற் கூறியவற்றை மெய்யுறுபுணர்ச்சிமேல் நிகழ்த்துதற்கு அவத்தை கூறினாரென்றும் இச்சூத்திரத்தைத் தலைவியை நோக்கி முன்னிலையாக்கல் முதலியன கூறிப் பின்னர் இயற்கைப் புணர்ச்சி புணருமென்றுங் கூறுவாரும் உளர். அவர் அறியார்; என்னை? ஈண்டு அவத்தை கூறிப் பின்னர்ப் புணர்ச்சி நிகழுமெனின் ஆண்டுக் கூறிய மெய்ப்பாடு பன்னிரண்டும் வேண்டாவாம். அன்றியும், ஆறாம் அவதி கடந்து வருவன அகமன்மை மெய்ப்பாட்டியலிற் கூறலிற் பத்தாம் அவத்தையாகிய சாக்காடெய்தி மெய்யுறு புணர்ச்சி நடத்தல் பொருந்தாமையுணர்க. இனித் தலைவியை முன்னிலையாக்கன் முதலியன கூறிப் பின்னர்ப் புணருமெனின் முன்னர்க் 'கூட்டி யுரைக்குங் குறிப்புரையாகும்' (தொல். பொ. 96) எனக் கண்ணுற் கூறிக் கூடுமென்றலும் 'இருகையுமெடுத்தல்' (தொல்-பொ-263) எனப் பின்பு கூறுதலும் பொருந்தாதாம். அன்றியும், நயப்பும் பிரிவச்சமும் வன்புறையும் கூறிப் பிரிய வேண்டுதலானும் அது பொருந்தாதாம்.

(வி-ரை) முன்னிலையாக்கல் - தலைவியை முன்னிலைப் படுத்திச் சில கூறுதல், சொல் வழிப்படுத்தல் - தாம்சொல்லுகின்ற சொல் வழி அவள் நிற்குமாறு கூறுதல், நன்னய முரைத்தல் - தலைமகளது நலத்தை உரைத்தல், நகை நனியுறாஅ அந்நிலையறிதல்-தலைமகன் நன்னயம் உரைத்த வழி கேட்ட தலைவிக்கு இயல்பாக அகத்துள வாகும் மகிழ்வால் புறந்தோன்றும் முறுவல் குறிப்பு மிக்குத் தோன்ற அந்நிலையைத் தலைவன் அறிதல். தன்னிலை யுரைத்தல் - தலைவன் தன் வேட்கை மீதூர்வினைத் தலைவியிடம் கூறுதல். (தன்னிலையுரைத்தல் என்பது இவர் பாடம்) தெளிவகப்படுத்தல்- தலைவன் முன்னிலையாக்கல் முதலியன கூறிப்பின்னர் இயற்கைப் புணர்ச்சியினை விழைந்து நின்றானாக அப்புணர்ச்சியினைக் கூறுவார் முன்னம் ஒத்த பண்புடைமை உள்ளத்து இருவர் மாட்டும் வேண்டு தலின் தலைமகள் பண்பினைத் தலைவன் அறிந்து அத் தெளிவைத் தன்னகப்படுத்தித் தேர்தல் என இத் தொடர்களுக்கு விளக்கம் காண்பர் இளம்பூரணர்.

தண்டாக் காமம் - குறையாத காமம். இப்பாடலைத் தலைவி கூற்றாகக் கூறுதலினும், தலைவன் கூற்றாகக் கூறும் நச்சினார்க்கினியர் கருத்து சிறப்புடைத்தென்பர் கணேசய்யர். காரணம் தலைவன் உயிரைத் தலைவி கூட்டிக் கூறுதல் அறம் அன்றாம் ஆதலின்.

குவை - தொகுதி, தேம் - தேன், துத்தி - தேமல், புள்ளி; குவவுமணல் - குவிந்திருக்கும் மணல். செம்புலப் பெயல்நீர் - செம்மண் நிலத்தில் பெய்த நீர்.

நின்னைத் துறந்தமைகுவன் ஆயின் இரவலர் என்னைத் துறந்து வாராத நாள் பல வாகுக என்றது - தலைவனின் இன்பச் சிறப்பே யன்றிக் கொடைச் சிறப்பும் உணர நின்றது.

தோட்டு - தோலினையுடையது.

இம் மறுப்பு இளம் பூரணர் கருத்தை மறுப்பதாகும். மெய்ப்பாட்டியலில் புணர்ச்சிக்கு முன்னும் பின்னும் நிகழ்வனவாகக் கூறும் மெய்ப்பாடுகள் உடல் வேறுபாட்டைக் காட்டுவனவாம். இங்குக் கூறும் அவத்தைகள் இருவர்க்கும் உரிய உள்ளத்தகைமையைக் காட்டுவனவாம். ஆதலின் இளம்பூரணர் கருத்தே பொருத்தமுடைத்தாம். பின் வந்த கோவை இலக்கியங்களும், நம்பி அகப் பொருளும் இளம்பூரணர் கருத்தையே தழுவியுள்ளன. (10)

இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், தோழியற் கூட்டம் ஆகிய மூவிடத்தும் நிகழும் தலைவனின் கூற்றுக்கள்.

102. மெய்தொட்டுப் பயிறல் பொய்பா ராட்டல்
இடம்பெற்றுத் தழாஅல் இடையூறு கிளத்தல்
நீடுநினைந் திரங்கல் கூடுத லுறுதல்
சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழித்
தீராத் தேற்றம் உளப்படத் தொகைஇப்
பேராச் சிறப்பின் இருநான்கு கிளவியும்
பெற்றவழி மகிழ்ச்சியும் பிரிந்தவழிக் கலங்கலும்
நிற்பவை நினைஇ நிகழ்பவை யுரைப்பினுங்
குற்றங் காட்டிய வாயில் பெட்பினும்

பெட்ட வாயில்பெற் றிரவுவலி யுறுப்பினும்
ஊரும் பேரும் கெடுதியும் பிறவும்
நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறித்
தோழியைக் குறையுறும் பகுதியுந் தோழி
குறையவட் சார்த்தி மெய்யுறக் கூறலும்
தண்டாது இரப்பினும் மற்றைய வழியுஞ்
சொல்லவட் சார்த்தலிற் புல்லிய வகையினும்
அறிந்தோ ளயர்ப்பின் அவ்வழி மருங்கில்
கேடும் பீடும் கூறலுந் தோழி
நீக்கலி ஞகிய நிலைமையும் நோக்கி
மடன்மா கூறும் இடனுமா ருண்டே.

இது மேல் இயற்கைப்புணர்ச்சிப் பகுதியெல்லாங் கூறி அதன் வழித் தோன்றும் இடந்தலைப்பாடும் அதன்வழித் தோன்றும் பாங் கற்கூட்டமும் அவற்றுவழித் தோன்றுந் தோழியிற்கூட்டமும் நிகழுமிடத்துத் தலைவன் கூற்று நிகழ்த்துமாறும் ஆற்ருமை கையிகந்து கலங்கியவழி அவன் மடன்மா கூறுமாறுங் கூறுகின்றது. இதனுள் 'இருநான்கு கிளவியும்' என்னுந் துணையும் இடந்தலைப் பாடும், 'வாயில் பெட்பினும்' என்னுந் துணையும் பாங்கற்கூட்டமும் ஒழிந்தன தோழியிற் கூட்டமுமாம்.

(இ - ள்.) மெய்தொட்டுப்பயிறல் - தலைவன் தலைவியை மெய் யைத்தீண்டிப் பயிலாநிற்கு நிலைமை :

என்ருல், இயற்கைப்புணர்ச்சிப் பின்னர்ப் பெருநாணினளாகிய தலைமகள் எதிர்நிற்குமோவெனின் தான் பிறந்த குடிக்குச் சிறந்த வொழுக்கத்திற்குத் தகாதது செய்தாளாதலின், 'மறையிற் றப்பா மறையோ ெருவனைக் கண்ட மறையிற் றப்பிய மறையோன்' போலவும் 'வேட்கைமிகுதியான் வெய்துண்டு புண் கூர்ந்தார்' போலவும் நெஞ்சும் நிறையுந் தடுமாறி இனிச் செயற்பாலதியா தென்றும், ஆயத்துள்ளே வருவான்கொல் என்னும் அச்சங்கூரவும் வாரான்கொல் என்னும் காதல் கூரவும், புலையன் றீம்பால்போன் மனங்கொள்ளா அனந்தருள்ளம் உடையளாய், நாணு மறந்து காதலீர்ப்பச் செல்லும்; சென்று நின்ருளைத் தலைவன் இவ்

வொழுக்கம் புறத்தார் இகழப் புலனாய் வேறுபட்டாள் கொல்லோ எனவும், அங்ஙனம் மறைபுலப்படுதலின் இதனினூங்கு வரைந்து கொள்ளினன்றி இம்மறைக்கு உடம்படாளோவெனவுங் கருதுமாறு முன்புபோல் நின்ற தலைவியை மெய்யுறத் தீண்டி நின்று குறிப் பறியுமென்றற்குத் தொடுமென்னாது பயிறலென்றார்.

பொய் பாராட்டல் - அங்ஙனந் தீண்டிநின்றுழித் தலைவி குறிப் பறிந்து அவளை ஓதியும் நுதலும் நீவிப் பொய்செய்யா நின்று புனைந்துரைத்தல்:

சிதைவின்றேனுஞ் சிதைந்தனபோல் திருத்தலிற் பொய் யென்றார்.

இடம்பெற்றுத் தழாஅல் - அவ்விரண்டானுந் தலைவியை முகம்பெற்றவன் அவள் நோக்கிய நோக்கினைத் தன்னிடத்திலே சேர்த்துக்கொண்டு கூறல்:

இடையூறு கிளத்தல் - அவள் பெருநாணினளாதலின் இங்ஙனங் கூறக் கேட்டுக் கூட்டத்திற்கு இடையூறாகச் சில நிகழ்த்தியவற்றைத் தலைவன் கூறல்:

அவை கண்புதைத்தலுங் கொம்பானுங் கொடியானுஞ் சார் தலுமாம்:

நீடுநினைந்திரங்கல் - புணர்ச்சி நிகழாது, பொழுது நீண்டதற்கு இரங்கி இரக்கந்தோன்றக் கூறல்:

கூடுதல் உறுதல் - நீடித்ததென்று இரங்கினனென்பது அறிந் தோள் இவன் ஆற்றானாகி இறந்துபடுவனெனப் பெரு நாணுக் கடிது நீங்குதல்;

சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழி - தலைவன் தான் முற் கூறிய நுகர்ச்சியை விரையப் பெற்றவழி:

பெற்றவழி என்பதனைப் பெறுதலெனப் பெயர்ப்படுத்தல் அக்கருத்தாற் பெறுதும் :

தீராத் தேற்றம் உளப்படத் தொகைஇ - என்றுமொன்றும் பிரியா மைக்குக் காரணமாகிய சூளுறுதல் அகப்படத் தொகுத்து:

புணர்ச்சி நிகழ்ந்துழியல்லது தேற்றங்கூறல் ஆகாதென் றற்கு ‘வல்லே பெற்றுழித் தீராத் தேற்ற’ மென்ருர். முன் தெளிவகப்படுத்தபின் (களவு 10ஆவது நூற்பாவுரை காண்க) நிகழ்ந்த ஆற்ருமை தீர்தற்குத் தெய்வத்தொடுசார்த்திச் சூளுறு தலின் இத்தேற்றமும் வேண்டிற்று.

பேராச் சிறப்பின் இருநான்கு கிளவியும் – குறையாச் சிறப் பினவாகிய இவ்வெட்டும்.

தாமே கூடும் இடந்தலைப்பாடும் பாங்கனுற் குறிதலைப் பெய்யும் இடந்தலைப்பாடும் ஒத்த சிறப்பின வாதற்குப் ‘பேராச் சிறப்பி’ னென்ருர்.

எனவே இடந்தலைப்பாடு இரண்டாயிற்று. தோழியிற் கூட்டம் போலப் பாங்கன் உரையாடி இடைநின்று கூட்டாமையிற் பாங்கற் கூட்டம் என்றதனைத் தலைமகன் பாங்கனைக் கூடுங் கூட்டமென்று கொள்க.

உ-ம்: “உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு
அமிழ்தி ன்இயன்றன தோள்.” (குறள். 1106)

இஃது என் கை சென்றுறுந்தோறும் இன்னுயிர் தளிர்க்கும்படி யான் தீண்டப்படுதலினெனப் பொருள்கூறவே மெய்தீண்ட லாயிற்று.

“தீண்டலும் இயைவது கொல்லோ மாண்ட
வில்லுடை வீளையர் கல்லிடுபு எடுத்த
நனந்தலைக் கானத்து இனந்தலைப் பிரிந்த
புன்கண் மடமான் நேர்படத் தன்னையர்
சிலைமாண் கடுவிசைக் கலைசிறத்து அழுத்திக்
குருதியொடு பறித்த செங்கோல் வாளி
மாறுகொண் டன்ன உண்கண்
நாறிரும் கூந்தல் கொடிச்சி தோளே.” (குறுந். 272)

கழறிய பாங்கற்குக் கூறுந் தலைவன் இவனுன் இக்குறை முடியாது; நெருநல் இடந்தலைப்பாட்டிற் கூடியாங்குக் கூடுவல், அது கூடுங்கொலென்று கூறுவான் அற்றைஞான்று மெய் தொட்டுப்பயின்றதே கூறினுன்.

"சொல்லில் சொல்லெதிர் கொள்ளாய் யாழநின்
திருமுகம் இறைஞ்சி நாணுதி கதுமெனக்
காமம் கைம்மிகில் தாங்குதல் எளிதோ
கொடுங்கேழ் இரும்புறம் நடுங்கக் குத்திப்
புலிவிளை யாடிய புலவுநாறு வேழத்தின்
தலைமருப்பு ஏய்ப்பக் கடைமணி சிவந்தநின்
கண்ணே கதவ அல்ல நண்ணார்
அரண்தலை மதிலர் ஆகவு முரசுகொண்டு
ஓம்பரண் கடந்த அடுபோர்ச் செழியன்
பெரும்பெயர்க் கூடல் அன்னநின்
கரும்புடைத் தோளும் உடையவால் அணங்கே."
(நற்றிணை. 39)

இஃது, அங்ஙனம் மெய்தீண்டி நின்றவன் யான் தழீஇக் கொண்டு கூறில் அதனை ஏற்றுக்கொள்ளாயாய் இறைஞ்சி நின்று நாணத்தாற் கண்ணைப் புதைத்தியென 'இடையூறு கிளத்தல்' கூறிக் காமங் கைம்மிகிற் றாங்குத லெளிதோவென 'நீடுநினைந்திரங்கல்' கூறிப் புலியிடைத் தோய்ந்து சிவந்த கோடு போல என்னிடைத் தோய்ந்து காமக்குறிப்பினாற் சிவந்த கண்ணெனக் கூடுதலுங் கூறிற்று.

இனித் தனியே வந்தன :

"கடல்புக்கு உயிர்கொன்று வாழ்வர்நின் ஐயர்
உடல்புக்கு உயிர்கொன்று வாழ்வைமன் நீயும்
மிடல்புக்கு அடங்காத வெம்முலையோ பாரம்
இடர்புக்கு இடுகு மிடைஇழவல் கண்டாய்."
(சிலப். கானல்வரி. 17)

இது பொய் பாராட்டல்.

"கொல்யானை வெண்மருப்பும் கோள்வல் புலியதளும்
நல்யாணர் நின்னையர் கூட்டுண்டு—செல்வார்தாம்
ஓரம்பி னன்எய்து போக்குவர்யான் போகாமை
ஈரம்பி னல்எய்தாய் இன்று." (திணை. நூற். 22)

இஃது இடம்பெற்றுத் தழாஅல்

"இலங்குவளை தெளிர்ப்ப வலவன் ஆட்டி
முகம்புதை கதுப்பினள் இறைஞ்சிநின் றோளே
புலம்புகொண் மாலை மறைய
நலம்கே ழாக நல்குவள்எனக்கே." (ஐங்குறு. 197)

இது கூடுதலுறுதல்.

"வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள்." (குறள். 1105)

இது நுகர்ச்சிபெற்றது.

"எம்மணங் கினவே மகிழ்ந முன்றில்
நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்
வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும்
செந்நெல் வான்பொரி சிதறி அன்ன
எக்கர் நண்ணிய வெம்மூர் வியன்துறை
நேரிறை முன்கை பற்றிச்
சூரர மகளிரொடு உற்ற சூளே." (குறுந். 53)

இதனுள் தீராத்தேற்றத்தைப் பின்னொருகால் தலைவி தேர்ந்து தெளிவொழித்துக் கூறியவாறு காண்க.

இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவி கருத்தெல்லாம் உணர்ந் தாளாயினுங் காவன்மிகுதியானுங் கரவுள்ளத்தானும் இரண் டாங்கூட்டத்தினும் அவள்நிலை தெளியாது ஐயுறுதலுங் கூறி, மூன்றாவதாய் மேல்நிகழும் பாங்கற்கூட்டத்தின் பின் நிகழும் இடந் தலைப்பாட்டினும் ஐயுறவு உரித்தென்று மெய் தொட்டுப் பயிறன் முதலியன அதற்குங் கூறினார். அன்றியும் மக்களெல்லாம் முதல் இடை கடை யென மூவகைப்படுதலின் அவர்க்கெல்லாம் இது பொதுவிதியாகலானும் அமையும்.

"எண்ணியது இயையா தாம்கொல் கண்ணி
அவ்வுறு மரபின் நுகர்ச்சி பெறுகென
வரிவண் டார்க்கும் வாய்புகு கடாஅத்த
அண்ணல் யானை எண்ணரும் சோலை

விண்ணுயர் வெற்பினெம் அருளி நின்னின்
அகலின் அகலுமென் உயிரெனத் தவலி
வருந்துயர் அவலமொடு அணித்துஎம் மிடம்எனப்
பிரிந்துறை அமைந்தவெம் புலம்புநனி நோக்கிக்
கவர்வுறு நெஞ்சமொடு கவலும் கொல்லோ
ஆய நாப்பண் வருகுவன் கொல்லென
உயவுமென் உள்ளத்து அயர்வுமிக லானே.''

இது வருவான்கொ லென்னும் அச்சமும் வாரான்கொ லென்னும் காதலுங் கூர்ந்து தலைவி கூறியது.

இனிச் 'சொல்லிய' வென்றதனானே இன்னும் இப்புணர்ச்சி கூடுங்கொலெனக் கூறுவனவும், இன்னுந் தெய்வந் தருமெனக் கூறுவனவுந், தலைவியை எதிர்ப்பட்ட இடங்கண்டுழி அவளாகக் கூறுவனவுங்; காட்சிக்கு நிமித்தமாகிய கிள்ளையை வாழ்த்து வனவுந், தலைவி தனித்த நிலைமை கண்டு வியப்பனவும், முன்னர்த் தான் நீங்கிய வழிப் பிறந்த வருத்தங் கூறுவனவும், அணி யணிந்து விடுத்தலும், இவைபோல்வன பிறவும் இடந்தலைப் பாட்டிற்குக் கொள்க.

உ-ம் : ''வெள்ள வரம்பின் ஊழி போகியும்
கிள்ளை வாழிய பலவே ஒள்ளிழை
இரும்பல் கூந்தல் கொடிச்சி
பெருந்தோட் காவல் காட்டி அவ்வே.'' (ஐங்குறு. 281)

இது கிள்ளை வாழ்த்து.

''நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள்.'' (குறள். 1104)

இது நீங்கியவழிப் பிறந்த வருத்தங் கூறியது.

''அல்குபடர் உழந்த வரிமதர் மழைக்கண்
பல்பூம் பகைத்தழை நுடங்கும் அல்குல்
திருமணி புரையு மேனி மடவோள்
யார்மகள் கொல்இவள் தந்தை வாழியர்
துயர முறீஇயினள் எம்மே அகல்வயல்
அரிவனர் அரிந்தும் தருவனர் பெற்றும்

தண்சேறு தாஅய் மதனுடை நோன்தாள்
கண்போன் நெய்தல் போர்வில் பூக்கும்
திண்தேர்ப் பொறையன் தொண்டி
தன்திறம் பெருகஇவள் ஈன்ற தாயே'' (நற்றிணை. 8)

என்பதும் அது. ஏனையவற்றிற்குச் சான்றோர் செய்யுட்கள் வருவன உளவேற் காண்க.

பெற்றவழி மகிழ்ச்சியும் - சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழி அவன் மனம் மகிழும் மகிழ்ச்சியும்: பேராச் சிறப்பினென்றதனாற் பாங்கனால் நிகழும் இடந்தலைப்பாட்டிற்கும் இது கொள்க.

உ-ம்: ''ஒடுங்கீர் ஓதி ஒண்ணுதல் குறுமகள்
நறுந்தண்ணீரன் ஆரணங் கினளே
இனையள் என்றவள் புனையளவு அறியேன்
சிலமெல் லியவே கிளவி
அணைமெல் லியள்யான் முயங்குங் காலே'' (குறுந். 70)

என வரும்.

பிரிந்தவழிக் கலங்கலும் - அங்ஙனம் புணர்ந்து பிரிந்துழி அன்புமிகுதியால் தான் மறைந்து அவட் காணுங்கால் ஆயத் திடையுஞ் சீறூரிடையுங் கண்டு இனிக் கூடுதல் அரிதென இரங்கலும்.

உ-ம்: ''குணகடல் திரையது பறைதபு நாரை
திண்தேர்ப் பொறையன் தொண்டி முன்துறை
அயிரை ஆரிரைக்கு அணவந் தாஅங்குச்
சேயள் அரியோள் படர்தி
நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே'' (குறுந். 128)

''இல்லோன் இன்பம் காஅமுற் றாஅங்கு
அரிதுவேட் டனையால் நெஞ்சே காதலி
நல்ல ளாகுதல் அறிந்தாங்கு
அரிய ளாகுதல் அறியா தோயே'' (குறுந். 120)

என வரும்.

'வழி' யென்றதனாற் பிரியலுறுவான் கூறுவனவுங் கொள்க.

"வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை சாதல்
அதற்கன்னள் நீங்கும் இடத்து." (குறள். 1124)

இது மூன்றுங் கூட்டத்தினையுங் கருதலின் ஈண்டுவைத்தார். இது முதலாகப் பாங்கற்கூட்டமாம். கலங்கலுமெனவே அக் கலக்கத்தான் நிகழ்வனவெல்லாங் கொள்க. அவை தலைவன் பாங்கனை நினைத்தலும் அக் கலக்கங் கண்டு பாங்கன் வினவுவனவும் அதுவே பற்றுக்கோடாக உற்றதுரைத்தலும் பிறவுமாம்.

உ-ம் : "பண்டையை யல்லைநீ யின்று பரிவொன்று
கொண்ட மனத்தை எனவுணர்வல்—கண்டாயான்
நின்னுற்ற தெல்லாம் அறிய வுரைத்தியால்
பின்னுற்ற நண்பினாய் பேர்த்து"

எனவும்,

"வஞ்சமே யென்னும் வகைத்தாலோர் மாலினாய்த்
தஞ்சந் தமியனாய்ச் சென்றேனென் நெஞ்சை
நலங்கொண்டார் பூங்குழலாள் நன்றாயத்து அன்றென்
வலங்கொண்டாள் கொண்டாள்இடம்" (திணை. நூற். 9)

எனவும்,

"எலுவ சிறாஅர் ஏமுறா நண்ப
புலவர் தோழ கேளாய் அத்தை
மாக்கடல் நடுவண் எண்ணாட் பக்கத்துப்
பசுவெண் திங்கள் தோன்றி ஆங்குக்
கதுப்பயல் விளங்கும் சிறுநுதல்
புதுக்கோள் யானையில் பிணித்தற்றால் எம்மே"
(குறுந். 129)

எனவும் வரும்.

நிற்பவை நினைஇ நிகழ்பவை உரைப்பினும் - நிற்பவை நினைஇ உரைப்பினும் நிகழ்பவை உரைப்பினும் என உரைப்பி னென்பதனை முன்னுங் கூட்டுக;

அது கேட்ட பாங்கன் உலகத்து நிலைநிற்கின்ற நற்குணங்களை அவனை நினைப்பித்துக் கழறிக் கூறினும், அக் கழறியவற்றை மறுத்துத் தன் நெஞ்சின் நிகழும் வருத்தங்களை அவற்குக் கூறினும்;

உ-ம் : "குன்ற முருளில் கொடித்தேரோய் குன்றியுள்
ஒன்றும் ஒழிவது உளதாமோ—நன்றறிந்து
தாமுறையே செய்வார் தகவிலவே செய்தக்கால்
யார்முறை செய்யவோ மற்று"

எனவும்,

"தேரோன் தெறுகதிர் மழுங்கினும் திங்கள்
தீரா வெம்மையொடு திசைநடுக்கு உறுப்பினும்
பெயராப் பெற்றியில் திரியாச் சீர்சால்
குலத்தில் திரியாக் கொள்கையும் கொள்கையொடு
நலத்தில் திரியா நாட்டமும் உடையோய்
கண்டதன் அளவையில் கலங்குதி எனின்இம்
மண்திணி கிடக்கை மாநிலம்
உண்டெனக் கருதி உணரலன் யானே"

எனவும் இவை நிற்பவை நினைஇக் கழறின.

"காமங் காமம் என்ப காமம்
அணங்கும் பிணியும் அன்றே நினைப்பின்
முதைச்சுவற் கலித்த முற்று விளம்புல்
மூதா தைவந் தாங்கு
விருந்தே காமம் பெருந்தோ ளோயே." (குறுந். 204)

இதுவும் அது.

"நயனும் நண்பும் நாணுநன்கு உடைமையும்
பயனும் பண்பும் பாடறிந்து ஒழுகலும்
நும்மினும் உடையேன் மன்னே கம்மென
எதிர்த்த தித்தி ஏரிள வனமுலை
விதிர்த்துவிட் டன்ன அந்நுண் சுணங்கின்
ஐம்பால் வகுத்த கூந்தல் செம்பொன்
திருநுதல் பொலிந்த தேம்பாய் ஓதி
முதுநீர் இலஞ்சி பூத்த குவளை
எதிர்மலர்ப் பிணையல் அன்ன இவள்
அரிமதர் மழைக்கண் காணா ஊங்கே." (நற்றிணை. 160)

"இடிக்கும் கேளிர் நுங்குறை யாக
நிறுக்கல் ஆற்றினோ நன்றுமன் தில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்
கையில் ஊமன் கண்ணில் காக்கும்
வெண்ணெய் உணங்கல் போலப்
பரந்தன்று இந்நோய் நோன்றுகொளற்கு அரிதே."
(குறுந். 58)

இவை நிகழ்பவை உரைத்தன.

இப் பன்மையான் வேறுபட வருவனவெல்லாங் கொள்க.

குற்றங் காட்டிய வாயில் பெட்பினும் - அங்ஙனந் தலைவற்கு நிகழுங் குற்றங்களை வெளிப்படக் காட்டிய பாங்கன் அவன் ஆற்றாமை மிகுதி கண்டு அதனை நீக்குதற்கு விரும்பினும்:

அது நின்னாற் காணப்பட்ட உரு எவ்விடத்து எத்தன்மைத்து என வினவும்.

உ-ம்: "பங்கயமோ துங்கப் பனிதுங்கு மால்வரையோ
அங்கண் விசும்போ அலைகடலோ — வெங்கோவிச்
செவ்வண்ண மால்வரையே போலும் திருமேனி
இவ்வண்ணம் செய்தார்க் குஇடம்."

என வரும்.

அதுகேட்டுத் தலைவன் கழியுவகை மீதூர்ந்து இன்ன விடத்து இத்தன்மைத்து என்னும்.

உ-ம்: "கழைபாடு இரங்கப் பல்லியம் கறங்க
ஆடுமகள் நடந்த கொடும்புரி நோன்கயிற்று
அதவத் தீங்கனி அன்ன செம்முகத்
துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்கக்
கழைக்கண் இரும்பொறை ஏறி விசைத்தெழுந்து
குறக்குறு மாக்கள் தாளம் கொட்டும் அக்
குன்றகத் ததுவே குழுமிளைச் சீறூர்
சீறூ ரோளே நாறுமயிர்க் கொடிச்சி
கொடிச்சி கையகத்து அதுவேபிறர்
விடுத்தற்கு ஆகாது பிணித்தஎன் நெஞ்சே." (நற்றிணை.95)

இஃது இடங்கூறிற்று.

''கேளிர் வாழியோ கேளிர் நாளும்என்
நெஞ்சு பிணிக்கொண்ட அஞ்சில் ஓதி
பெருநாண் அணிந்த சிறுமெல் லாகம்
ஒருநாள் புணரப் புணரின்
அரைநாள் வாழ்க்கையும் வேண்டலன் யானே.''
(குறுந்-280)

இது தன்மை கூறிற்று.

மீட்டுங் 'குற்றங் காட்டிய' என்றதனுனே இக்கூட்டத்திற்குரிய கூற்ருகிச் சான்ருேர் செய்யுட்கண் வேறுபட வருவன வெல்லாங் கொள்க.

''காயா ஈன்ற கணவீ நாற்றம்
மாயா முன்றில் வருவளி துரக்கும்
ஆகோள் வாழ்நர் சிறுகுடி யாட்டி
வேயேர் மென்ருேள் விலக்குநர்
யாரோ வாழிநீ அவ்வயின் செலினே.''

இது பாங்கனை நீ ஆண்டுச் செல்லவேண்டு மென்றது.

''என்னுறுநோய் தீர்த்தற்கு இருபிறப்பி ன்நான்மறையோ
தன்னுறுநோய் போலத் தளர்கின்ருன் — இன்னினிய
சுற்றத்தில் தீர்ந்த சுடரிழையைச் செவ்வியால்
தெற்றெனக் கண்ணுறுங்கொல் இன்று.'' (பாரதம்)

இது குறிவழிச்சென்ற பாங்கன் அவ்விடத்துக் காணுங் கொலென்று ஐயுற்றது.

''அளிதோ தானே அருண்மிக உடைத்தே
களிவாய் வண்டினம் கவர்ந்துண் டாடும்
ஒளிதார் மார்பின் ஓங்கெழிற் குரிசிலைப்
பிரியாத் துயரமொடு பேதுறாத்து அகன்ற
கிளியேர் மழலைக் கேழ்கிளர் மாதர்
ஆர்ந்த சுற்றமொடு தமரின் நீக்கத்
தானே தமியள் காட்டிய
வானேர் தெய்வம் வணங்குவல் யானே.''

இது குறிவழிச் சென்ற பாங்கன் தலைவியை எளிதிற் காட்டிய தெய்வத்தை வணங்கியது.

"கண்ணென மலரும் குவளையும் அடியெனத்
தண்ணெனும் தடமலர் தயங்குதா மரையும்
முலையென முரணிய கோங்கமும் வகையெழின்
மின்னென நுடங்கு மருங்குலும் மணியென
வயின்வயின் இமைக்கும் பாங்குபல் உருவில்
காண்டகு கமழ்கொடி போலும்என்
ஆண்டகை அண்ணலை அறியுதொலைத் ததுவே."

இஃது இவள்போலும் இறைவனை வருத்தினாளெனப் பாங்கன் ஐயுற்றது.

"கண்ணே, கண்ணயல் பிறந்த கவுளழி கடாஅத்த
அண்ணல் யானை யாரியர்ப் பணித்த
விறற்போர் வானவன் கொல்லி மீமிசை
அறைக்கான் மாச்சுனை அவிழ்ந்த நீலம்
பல்லே, பல்லரண் கடந்த பசும்பூண் பாண்டியன்
மல்குநீர் வரைப்பில் கொற்கை முன்துறை
ஊதை ஈட்டிய உயர்மணல் அடைகரை
ஓத வெண்டிரை உதைத்த முத்தம்
நிறனே, திறல்விளங்கு அவுணர் தூங்கெயில் எறிந்த
விறன்மிகு முரசின் வெல்போர்ச் சோழன்
நலனணி அரங்கில் போகிய மாவின்
உருவ நீள்சினை ஒழுகிய தளிரே
என்றவை பயந்தமை அறியார் நன்று
மடவர் மன்றஇக் குறவர் மக்கள்
தேம்பொழி கிளவி இவளை
யாம்பயந் தேம்எம் மகள்என் போரே,"

இது தலைவியை வியந்தது.

"பண்ணுது பண்மேல்தேன் பாடும் கழிக்கானல்
எண்ணுது கண்டாருக்கு ஏரணங்காம்—எண்ணுது
சாவார்சான் றாண்மை திரிந்திலார் மற்றிவளைக்
காவார் கயிறுரீஇ விட்டார்."      (திணைமாலை. நூற். 47)

பாங்கன் தலைவனை வியந்தது.

"பூந்த ண்இரும்புனத்துப் பூசல் புரியாது பூழி யாடிக்
காந்தள் கமழ்குலேயால் காதன் மடப்பிடிதன் கவுள்வண் டுஒச்ச
வேந்தன்போல் நின்ற விறற்களிற்றை வில்லினுல் கடிவார் தங்கை
ஏந்தெழில் ஆகம் இயையாது இயைந்தநோய் இயையும் போலும்."

இது தலேவற்கு வருத்தந் தகுமென அவனே வியந்தது.

"வெம்முறு துயரமொடு" என்னுஞ் செய்யுளுங் கொள்க.

இனிப் பாங்கன் தலேவி தன்மை தலேவற்குக் கூறுவனவும் இடங் காட்டுவனவுஞ் சான்ருேர் செய்யுளுள் வரும்வழிக் காண்க. ஆண்டுச் சென்ற தலேவன் இடந்தலேப்பாட்டிற் கூறியவாற்ருனே கூடுதல் கொள்க. அங்ஙனம் கூடிநின்று அவன் மகிழ்ந்து கூறு வனவும் பிறவுங்கொள்க.

"வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினுள் தோள்." (குறள். 1105)

"எமக்குநயந்து அருளினே யாயின் பணைத்தோள்
ஒண்ணுதல் அரிவையொடு மென்மெல இயலி
வந்திசின் வாழியோ மடந்தை
தொண்டி அன்னநின் பண்புபல கொண்டே."
(ஐங்குறு. 175)

இது பாங்கற்கூட்டங்கூடி நீங்குந் தலேவன் நீ வருமிடத்து நின் தோழியோடும் வரல்வேண்டுமெனத் தலேவிக்குக் கூறியது.

"நெய்வளர் ஐம்பால் நேரிழை மாதரை
மெய்ந்நிலே திரியா மேதகு சுற்றமொடு
எய்துதல் அரிதென்று இன்னணம் இரங்கிக்
கையறு நெஞ்சமொடு கவன்றுநனி பெயர்ந்தஎன்
பைதல் உள்ளம் பரிவு நீக்கித்
தெய்வத் தன்ன தெரியிழை மென்தோள்
எய்தத் தந்த ஏந்தலொடு என்னிடை
நற்பால் கேண்மை நாடொறும் எய்த
அப்பால் பிறப்பினும் பெறுகமற்று எமக்கே"

அங்ஙனங் கூடிநின்று தலைவன் பாங்கனை உண்மகிழ்ந்து உரைத்தது.

இவன் பெரும்பான்மை பார்ப்பானும்.

இத்துணையும் பாங்கற் கூட்டம்.

பெட்டவாயில் பெற்று இரவு வலியுறுப்பினும் - அங்ஙனம் அவனைப் புணைபெற்றுநின்ற தலைவன் தலைவிக்கு வாயிலாதற்கு உரியாரை யாராய்ந்து பலருள்ளுந் தலைவியாற் பேணப்பட்டாள் தனக்கு வாயிலாந் தன்மையையுடைய தோழியை அவள் குறிப்பினான் வாயிலாகப்பெற்று இவளை இரந்துபின்னிற்பலென வலிப்பினும் :

மறைந்து தலைவியைக் கண்டு நின்றான் அவட்கு அவள் இன்றியமையாமை கண்டு அவளை வாயிலெனத் துணியும்.

உ - ம்: "தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்
கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்
புணைகை விட்டுப் புனலோடு ஒழுகின்
ஆண்டும் வருகுவள் போலும் மாண்ட
மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகைச்
செவ்வெரிந் உறழும் கொழுங்கடை மழைக்கண்
துளிதலைத் தலைஇய தளிரன் னோளே."

இது தலைவி அவட்கு இனையளென்று கருதி அவளை வாயிலாகத் துணிந்தது. அன்றித் தோழி கூற்றெனில் தலைவியை அருமை கூறினன்றி இக்குறை முடிப்பலென ஏற்றுக் கொள்ளாள் தனக்கு ஏதமாமென்று அஞ்சி; அன்றியுந் தானே குறையுறுகின்றாற்கு இது கூறிப் பயந்ததூஉமின்று.

"மருந்தில் தீராது மணியின் ஆகாது
அருந்தவ முயற்சியின் அகறலும் அரிதே
தான்செய் நோய்க்குத் தான்மருந் தாகிய
தேனிமிர் நறவின் தேறல் போல
நீதர வந்த நிறையழி துயரநின்
ஆடுகொடி மருங்குல்நின் அருளின் அல்லது
பிறிதில் தீராது என்பது பின்நின்று

அறியக் கூறுகம் எழுமோ நெஞ்சே
நாடுவிளங்கு ஒண்புகழ் நடுதல் வேண்டித்தன்
ஆடுமழைத் தடக்கை அறுத்துமுறை நிறுத்த
பொற்கை நறுந்தார்ப் புனைதேர்ப் பாண்டியன்
கொற்கையம் பெருந்துறை குனிதிரை தொகுத்து
விளங்குமுத் துறைக்கும் வெண்பல்
பன்மாண் சாயல் பரதவர் மகட்கே.''

என்னுஞ் செய்யுள் இரவு வலியுற்றது.

ஊரும் பெயரும் கெடுதியும் பிறவும் நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறித் தோழியைக் குறையுறும் பகுதியும் - தோழியை இரந்து பின்னிற்றலை வலித்த தலைவன், தலைவீயுந் தோழியும் ஒருங்கு தலைப்பெய்த செவ்வி பார்த்தாயினுந் தோழி தனித்துழியாயினும், நும்பதியும் பெயரும் யாவை யெனவும் ஈண்டு யான் கெடுத்தவை காட்டுமினெனவும், அனையன பிறவற்றையும் அகத்தெழுந்ததோர் இன்னீர்மை தோன்றும் இக்கூற்று வேறோர் கருத்து உடைத்தென அவள் கருதுமாற்றானும் அமையச் சொல்லித், தோழியைத் தன் குறையறிவிக்குங் கூறுபாடும்:

வினவுவான் ஏதிலர்போல ஊரினை முன் வினாய்ச் சிறிது உறவு தோன்றப் பெயரினைப் பின்வினாய் அவ்விரண்டினும் மாற்றம் பெறாதான் ஒன்று கெடுத்தானாகவும் அதனை அவர் கண்டார் போலவும் கூறினான். இவன் என்னினையதோர் குறையுடைய னென்று அவள் கருதக் கூறுமென்பார் 'நிரம்ப' வென்றார். கெடுதி யாவன, யானை புலி முதலியனவும் நெஞ்சும் உணர்வும் இழந்தேன், அவை கண்டீரோ வெனவும் வினவுவன பலவுமாம்.

'பிறவு' மென்றதனால் வழிவினாதலுந் தன்னொடு அவரிடை உறவு தோன்றற்பாலனவிங் கூறுதலுங் கொள்க.

உ-ம் ''அருவி ஆர்க்கும் பெருவரை நண்ணிக்
கன்றுகால் யாத்த மன்றப் பலவின்
வேர்க்கொண்டு தூங்கும் கொழுஞ்சுளைப் பெரும்பழம்
குழவிச் சேதா மாந்தி அயலது
வேய்பயில் இறும்பின் ஆம்ஊறல் பருகும்
பெருங்கல் வேலிச் சிறுகுடி யாதெனச்

சொல்லவும் சொல்லீ ராயின் கல்லெனக்
கருவி மாமழை வீழ்ந்தென எழுந்த
செங்கே ழாடிய செழுங்குரல் சிறுதினைக்
கொய்புனம் காவலும் நுமதோ
கோடேந்து அல்குல் நீள்தோ ளீரே.'' (நற்றிணை. 213)

இஃது ஊரும் பிறவும் வினயது.

''கல்லுற்ற நோய்வருத்தக் காலு நடைஅற்றேன்
எல்லுற் றுயானும் வருந்தினேன்—வில்லுற்ற
பூங்கண் இமைக்கும் புருவ மதிமுகத்தீர்
ஈங்கிதுவோ நும்முடைய ஊர்.''

இஃது ஊர் வினயது.

''செறிகுரல் ஏனற் சிறுகிளி காப்பீர்
அறிகுவேன் உம்மை வினஅய்—அறிபறவை
அன்ன நிகர்க்கும்சீர் ஆடமை மென்றோளிர்
என்ன பெயரிரோ நீர்.''

இது பெயர் வினயது.

''நறைபரந்த சாந்தம் அறவெறிந்து நாளால்
உறைஎதிர்த்து வித்தியவூழ் ஏனற்—பிறைஎதிர்ந்த
தாமரைபோல் வாண்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ
ஏமரை போந்தன ஈண்டு.'' (திணை. நூற். 1)

''தம்குறிப்பி னேரும் தலைச்சென்று கண்டக்கால்
எங்குறிப்பி னேம்என்று இகழ்ந்திரார்—நும்குறிப்பின்
வென்றி படர்நெடுங்கண் வேய்த்தோளீர் கூறிரோ
வன்றி படர்ந்த வழி.''

வன்றி - பன்றி.

''தண்டு புரைகதிர்த் தாழ்குரல் செந்தினை
மண்டுபு கவரு மாண்டகிளி மாற்றும்
ஒண்தொடிப் பணைத்தோள் ஒண்ணுதல் உளையீர்
கண்டனி ராயின் கரவாது உரைமின்

கொண்டன குழுவி ன்நீங்கி மண்டிய
உள்ளழி பகழியோடு உயங்கியோர்
புள்ளி மான்கலை போகிய நெறியே.''

இவை கெடுதிவினுயின.

''மெல்லிலைப் பரப்பின் விருந்துண் டியானும்இக்
கல்லென் சிறுகுடித் தங்கின்மற்று எவனோ'' (அகம். 110)

எனவும்;

''இல்லுடைக் கிழமை எம்மொடு புணரில்
தீதும் உண்டோ மாதரீரே''

எனவும் வருவன, 'பிறவு' மென்றதனுற் கொள்க.

குறையுறூஉம் பகுதி, குறையுறுபகுதி எனவுமாம்; எனவே குறையுறுவார் சொல்லுமாற்ருனே கண்ணி முதலிய கையுறை யோடு சேறலுங் கொள்க. பகுதியென வரையாது கூறலில் தனித் துழிப் பகுதி முதலியனவும் இருவரு முள்வழி இவன் தலைப்பெய்தி யுடையன் எனத் தோழி உணருமாறும் வினவுதல் கொள்க. இவை குறையுறவுணர்தலும் இருவருமுள்வழி அவன் வரவுணர்தலுமாம். முன்னுறவுணர்தல் 'நாற்றமுந் தோற்றமும்' (தொல்.பொ.114) என்புழிக் கூறுப. மதியுடம்பாடு மூவகையவென மேற்கூறுப.

தோழி குறை அவட் சார்த்தி மெய்யுறக்கூறலும் - தோழி இவன் கூறுகின்ற குறை தலைவியிடத்தேயாய் இருந்ததென்று அவள்மேலே சேர்த்தி அதனை உண்மையென்று உணரத் தலைவன் கூறுதலும் :

உ - ம்: ''கருங்கடல் உள்கலங்க நுண்வலை வீசி
ஒருங்குடன் தன்னைமார் தந்த கொழுமீன்
உணங்கல்புள் ளோப்பும் ஒளியிழை மாதர்
அணங்காகும் ஆற்ற எமக்கு.''

''பண்பும் பாயலும் கொண்டனள் தொண்டித்
தண்கமழ் புதுமலர் நாறும் ஒண்டொடி
ஐதமர்ந் துஅகன்ற அல்குல்
கொய்தளிர் மேனி கூறுமதி தவறே.'' (ஐங்குறு. 176)

இவை வெளிப்பட்டன. இவற்றின் வேறுபாடு உணர்க.

"குன்ற நாடன் குன்றத்துக் கவாஅன்
பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் குவளையும்
அஞ்சிலோதி அசையியல் கொடிச்சி
கண்போன் மலர்தலும் அரிதிவள்
தன்போல் சாயன் மஞ்ஞைக்கும் அரிதே." (ஐங்குறு. 299)

இஃது இருவரும் உள்வழி வந்த தலைவன் தலைவிதன்மை கூறவே இவள்கண்ணது இவன் வேட்கையென்று தோழி குறிப்பான் உணரக் கூறியது.

குன்றநாடன், முருகன்; அவள் தந்தையுமாம்.

"உள்ளிக் காண்பென் போல்வன் முள்ளெயிற்று
அமிழ்தம் ஊறும் செவ்வாய்க் கமழகில்
ஆர நாறும் அறல்போல் கூந்தல்
பேரமர் மழைக்கண் கொடிச்சி
மூரன் முறுவலொடு மதைஇய நோக்கே." (குறுந். 286)

இதுவும் அது.

இது முதலியவற்றைத் தலைவன் கூற்றாகவே கூறுது தோழி கூறினாளாகக்கூறி அவ்விடத்துத் தலைவன்மடன்மா கூறுமென்று பொருள் கூறின், 'நாற்றமுந் தோற்றமும்' (தொல். பொ. 114) என்னுஞ் சூத்திரத்துத் தோழி இவற்றையே கூறினளென்றல் வேண்டாவாம், அது கூறியது கூறலாமாகலின்.

தண்டாது இரப்பினும் - இடந்தலைப்பாடு முதலிய கூட்டங்களான் அமையாது பின்னும் பகற்குறியையும் இரவுக்குறியையும் வேண்டினும் :

உ - ம்: "கொண்டன் மாமழை குடக்கேர்பு குழைத்த
சிறுகோல் இணர பெருந்தண் சாந்தம்
வகைசேர் ஐம்பால் தகைபெற வாரிப்
புலர்விடத்து உதிர்த்த துகள்படு கூழைப்
பெருங்கண் ஆயம் உவப்பத் தந்தை
நெடுந்தேர் வழங்கும் நிலவுமணன் முற்றத்துப்
பந்தொடு பெயரும் பரிவில் லாட்டி
அருளினும் அருளாள் ஆயினும் பெரிதழிந்து

பின்னிலை முனியன்மா நெஞ்சே என்னதூஉம்
அருந்துயர் அவலம் தீர்க்கும்
மருந்துபிறி தில்லை யானுற்ற நோய்க்கே.''
(நற்றிணை. 140)

இதில் பிரிவிலாட்டியையென இரண்டாவது விரிக்க.

''கடுந்தேர் எறியும் காலில் சென்றும்
கொடுங்கழி மருங்கின் அடும்புமலர் கொய்தும்
கைதை தூக்கியும் நெய்தல் குற்றும்
புணர்ந்தாம் போல உணர்ந்த நெஞ்சமொடு
வைகலும் இனைய ம்ஆகவும் செய்தார்ப்
பசும்பூண் வேந்தர் அழிந்த பாசறை
ஒளிறுவேல் அழுவத்துக் களிறுபடப் பொருத
பெரும்புண் உறுநர்க்குப் பேஎய் போலப்
பின்னிலை முனியா நம்வயின்
என்னென நினையுங்கொல் பரதவர் மகளே.''
(நற்றிணை. 349)

தோழி நம்வயிற் பரதவர்மகளை யென்னென நினையுங்கொலென்க.

''பாலொத்த வெள்ளருவி பாய்ந்தாடிப் பல்பூப்பெய்
தால்ஒத்த ஐவனம் காப்பாள்கண்—வேலொத்தென்
நெஞ்சம்வாய்ப் புக்கொழிவு காண்பார் எவன்கொலோ
அஞ்சாயற் கேநோவல் யான்.'' (திணை. நூற். 19)

இவை பகற்குறி இரந்தன.

''எல்லும் எல்லின்று அசைவுபெரி துஉடையன்
மெல்லிலைப் பரப்பின் விருந்துண ஒருவன்''
(அகம். 110: 11-2)

எனத் தலைவன் இரவுக்குறி வேண்டியதனைத் தோழி கூறியவாறு காண்க. இன்னும் 'இரட்டுறமொழிதல்' என்பதனால், 'தண்டாது' என்பதற்குத் தவிராது இரப்பினு மெனப் பொருள் கூறிக், கையுறை கொண்டுவந்து கூறுவனவும், நீரேவுவன யான் செய்வேனெனக் கூறுவனவுந், தோழி நின்னாற் கருதப்படுவாளை

அறியேனென்றுழி அவன் அறியக் கூறுவனவும், பிறவும் வேறு பட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக.

உ-ம்: ''கவளக் களியியன்மால் யானைசிற் ருளி
தவழத்தான் நில்லாததுபோல்—பவளக்
கடிகை இடைமுத்தம் காண்டொறு நில்லாது
தொடிகை இடைமுத்தம் தொக்கு.'' (திணை நூற். 42)

நின் வாயிதழையும் எயிற்றையும் காணுந்தோறும் நில்லா என் கையிடத்தில் இருக்கின்ற பவளக்கொடியும் முத்தும் என்க.

''நறவுக்கமழ் அலரி நாற வாய்விரிந்து
நிறந்திகழ் கமழும் இணைவாய் நெய்தல்
கண்ணித் தலையர் கருங்கைப் பரதவர்
நின்னையர் அல்லரோ நெறிதாழ் ஓதி
ஒண்சுணங்கு இளமுலை ஒருஞான்று புணரின்
நுண்கயிற் றுவலை நுமரொடு வாங்கிக்
கைதை வேலி இவ்வூர்ச்
செய்தூட் டேனோ செறிதொடி யானே''

''அறிகவளை ஐய விடைமடவாய் ஆயச்
சிறிதவள்செல் லாள்இறுமென்று அஞ்சிச்—சிறிதவ
ணல்கும்வாய் காணது நைந்துருகி என்னெஞ்சம்
ஒல்கும்வா யொல்கல் உறும்'' (திணை. நூற். 17)

என வரும்.

மற்றைய வழியும் - குறியெதிர்ப்பட்டுங் கையுறை மறுக்கப் பட்டுங் கொடுக்கப்பெற்றும் இரந்து பின்னின்றுன் அங்ஙனங் குறியெதிர்ப்பாடின்றி ஆற்ருனுய் இரந்து பின்னிற்றலை மாறுமவ் விடத்தும்:

உ-ம்: ''நினவாய் செத்து நீபல உள்ளிப்
பெரும்புன் பைதலை வருந்தல் அன்றியும்
மலைமிசைத் தொடுத்த மலிந்துசெலல் நீத்தம்
தலைநாண் மாமலர் தண்துறைத் தயங்கக்
கடல்கரை மெலிக்கும் காவிரிப் பேரியாற்று
அறல்வார் நெடுங்கயத்து அருநிலை கலங்க

மாலிருள் நடுநாட் போகித் தன்னையர்
காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்
கவ்வாங் குந்தி அஞ்சொற் பாண்மகள்
நெடுங்கொடி நுடங்கு நறவுமலி மறுகில்
பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்
கழங்குறழ் முத்தமொடு நன்கலம் பெறூஉம்
பயங்கெழு வைப்பிற் பல்வே லெவ்வி
நயம்புரி நன்மொழி அடக்கவும் அடங்கான்
பொன்னிணர் நறுமலர்ப் புன்னை வெஃகித்
திதியனொடு பொருத அன்னி போல
விளிகுவை கொல்லோ நீயே கிளியெனச்
சிறிய மிழற்றுஞ் செவ்வாய்ப் பெரிய
கயலென அமர்த்த உண்கண் புயல்எனப்
புறந்தாழ்பு இருளிய பிறங்குகுரல் ஐம்பால்
மின்னேர் மருங்குல் குறுமகள்
பின்னிலை விடாஅ மடங்கெழு நெஞ்சே" (அகம். 126)

எனவும்,

"மாய்கதில் வாழிய நெஞ்சே நாளும்
மெல்லியல் குறுமகள் நல்லக நசைஇ
அரவிரை தேரும் அஞ்சுவரு சிறுநெறி
இரவுஎன நீயும் பெரூஅய் அருள்வரப்
புல்லென் கண்ணை புலம்புகொண் டுலகத்து
உள்ளவர்க்கு எல்லாம் பெருநகை யாகக்
காமம் கைம்மிக உறுதர
ஆனா வரும்படர் தலைத்தந் தோயே" (அகம். 258:8 - 15)

எனவும் வருவன, தன்னெஞ்சினை இரவு விலக்கியன.

சொல்லவற் சார்த்தலிற் புல்லிய வகையினும் - தான் வருந்திக் கூறுகின்ற கூற்றினைத் தலைவியைச் சார்த்தித் தலைவன் கூறலின் இவ்வாறு ஆற்றுனாய் இங்ஙனங் கூறினனென்று அஞ்சித் தோழி உணராமல் தலைவிதானே கூடிய பகுதியினும்:

'களஞ்சுட்டுக் கிளவி கிழவிய தாகும்' (தொல். பொ. கள. 29)

என்பதனுல் தலைவியாற் குறிபெற்றுந் தோழியை இரக்கும்.

உ-ம்: "அயத்துவளர் பைஞ்சாய் முருந்தின் அன்ன
நகைப்பொலிந்து இலங்கும் எயிறுகெழு துவர்வாய்
ஆகத்து அரும்பிய முலையள் பணைத்தோள்
மாத்தாள் குவளை மலர்பிணைத்து அன்ன
மாயிதழ் மழைக்கண் மாஅ யோளொடு
பேயும் அறியா மறையமை புணர்ச்சி
பூசல் துடியில் புணர்புபிரிந்து இசைப்பக்
கரந்த கரப்பொடு நாஞ்செலற்கு அருமையின்
கடும்புனன் மலிந்த காவிரிப் பேர்யாற்று
நெடுஞ்சுழி நீத்தம் மண்ணுநள் போல
நடுங்களுர் தீர முயங்கி நெருநல்
ஆகம் அடைதந் தோளே வென்வேல்
களிறுகெழு தானைப் பொறையன் கொல்லி
ஒளிறுநீர் அடுக்கத்து வியலகம் பொற்பக்
கடவுள் எழுதிய பாவையின்
மடவது மாண்ட மாஅயோளே" (அகம். 62)

"அணங்குடைப் பனித்துறைத் தொண்டி அன்ன
மணங்கமழ் பொழில்குறி நல்கினள் நுணங்கிழைப்
பொங்கரி பரந்த உண்கண்
அங்கலிழ் மேனி அசைஇய எமக்கே" (ஐங்குறு. 174)

என வரும்.

'வகை' யென்றதனானே இதனின் வேறுபட வருவனவுங் கொள்க.

"தளிர்சேர் தண்தழை தைஇ நுந்தை
குளிர்வாய் வியன்புனத்து எற்பட வருகோ
குறுஞ்சுனைக் குவளை அடைச்சிநாம் புணரிய
நறுந்தண் சாரல் ஆடுகம் வருகோ
இன்சொன் மேவலைப் பட்டஎன் நெஞ்சுணக்
கூறினி மடந்தையின் கூரெயிறு உண்கென
யான்றன் மொழிதலின் மொழிஎதிர் வந்து
தான்செய் குறிநிலை இனிய கூறி
ஏறுபிரி மடப்பிணை கடுப்ப வேறுபட்டு

உறுகழை நிவப்பில் சிறுகுடிப் பெயரும்
கொடிச்சி செல்புறம் நோக்கி
விடுத்த நெஞ்சம் விடல்ஒல் லாதே'' (நற்றிணை. 204)

''இரண்டறி கள்விநம் காத லோளே
முரண்கொ டுப்பில் செவ்வேன் மலையன்
முள்ளூர்க் கான நாற வந்து
நள்ளென் கங்குல் நம்மோர் அன்னள்
கூந்தல் வேய்ந்த விரவுமலர் உதிர்த்துச்
சாந்துளர் நறுங்கதுப்பு எண்ணெய் நீவி
அமரா முகத்த ளாகித்
தமரோர் அன்னள் வைகறை யானே'' (குறுந். 312)

என வரும்.

அறிந்தோள் அயர்ப்பின் அவ்வழி மருங்கிற் கேடும் பீடுங் கூறலும் – மதியுடம்பட்ட தோழி நீர் கூறிய குறையை யான் மறந்தேனெனக் கூறுமாயின், அவ்விடத்துத் தன்னொடு கூடாமை யால் தலைவிமருங்கிற் பிறந்த கேட்டையும், அவள் அதனை ஆற்றி யிருந்த பெருமையையுங் கூறுதலும்:

''ஒள்ளிழை மகளிரோடு ஓரையும் ஆடாய்
வள்ளிதழ் நெய்தல் தொடலையும் புனையாய்
விரிபூங் கானல் ஒருசிறை நின்றோய்
யாரை யோநிற் தொழுதனம் வினவுதும்
கண்டோர் தண்டா நலத்தை தெண்திரைப்
பெருங்கடல் பரப்பின் அமர்ந்துறை அணங்கோ
இருங்கழி மருங்கு நிலைபெற் றனையோ
சொல்லினி மடந்தை என்றனென் அதன்எதிர்
முள்ளெயிற்று முறுவலும் திறந்தன
பல்லிதழ் உண்கணும் பரந்தவால் பனியே'' (நற்றிணை. 155)

''தண்தழை செரீஇயும் தண்ணென உயிர்த்தும்
கண்கலுழ் முத்தம் கதிர்முலை உறைத்தும்
மாற்றினள் என்பது கேட்டன மாற்று
என்னினும் அவளினும் இகந்த
இன்னா மாக்கட்டின் நன்னர் ஊரே''

"தோளும் கூந்தலும் பலபா ராட்டி
வாழ்தல் ஒல்லுமோ மற்றே செங்கோல்
குட்டுவன் தொண்டி அன்ன
வெற்கண்டு நயந்துநீ நல்காக் காலே" (ஐங்குறு. 178)

எனவரும். அயர்த்தது அவள் அருமை தோன்றுதற்கு.

தோழி நீக்கலி ஞகிய நிலைமையும் நோக்கி – தோழி இவ் விடத்துக் காவலர் கடியரெனக் கூறிச் சேட்பட நிறுத்தலிற் றனக்கு உண்டாகிய வருத்தத்தையும் பார்த்து ;

உம்மை, சிறப்பு. இதுவே மடன்மா கூறுதற்கு ஏது வாயிற்று.

"நல்லுரை இகந்து புல்லுரைத் தாஅய்ப்
பெயல்நீர்க் கேற்ற பசுங்கலம் போல
உள்ளம் தாங்கா வெள்ளம் நீந்தி
அரிதயர்வு உற்றனை நெஞ்சே என்றும்
பெரிதால் அம்மநின் பூசல் உயர்கோட்டு
மகவுடை மந்தி போல
அகனுறத் தழீஇக் கேட்குநர்ப் பெறினே" (குறுந். 29)

"பணைத்தோள் குறுமகள் பாவை தைஇயும்
பஞ்சாய்ப் பள்ளம் சூழ்ந்து மற்றிவள்
உருத்தெழு வனமுலை ஒளிபெற எழுதிய
தொய்யில் காப்போர் அறிதலும் அறியார்
முறையுடை அரசன் செங்கோல் வையத்து
யான் தன்கடவின் யாங்கா வதுகொல்
பெரிதும் பேதை மன்ற
அளிதோ தானேஇவ் வழுங்கல் ஊரே" (குறுந். 276)

"உரைத்திசின் தோழியது புரைத்தோ அன்றே
துருக்கம் கமழும் மென்றோள்
துறப்ப வென்றி இறீஇயர்என் னுயிரே" (சிற்றெட்டகம்)

என வரும்.

மடன்மாகூறும் இடனுமாருண்டே – அச்சேட்படையான் மடலேறுவலெனக் கூறும் இடனும் உண்டு என்றவாறு.

நோக்கி மடன்மா கூறுமென்க. உம்மையான் வரைபாய்வ லெனக் கூறும் இடனும் உண்டென்றவாறு.

உ-ம். "விழுத்தலைப் பெண்ணை விளையன் மாமடன்
மணியணி பெருந்தார் மார்பில் பூட்டி
வெள்ளென் பணிந்துபிறர் எள்ளத் தோன்றி
ஒருநாண் மருங்கில் பெருநாண் நீக்கித்
தெருவின் இயலவும் தருவது கொல்லோ
கலிழ்ந்தவிர் அசைநடைப் பேதை
மெலிந்தில ளும்விடற்கு அமைந்த தூதே." (குறுந். 182)

இது நெஞ்சொடு கிளத்தல்.

"நாணுக நாறு நனைகுழலாள் நல்கித்தன்
பூணுக நேர்வளவும் போகாது—பூணுக
மென்றேன் இரண்டாவது உண்டோ மடன்மாமேல்
நின்றேன் மறுகிடையே நேர்ந்து." (திணை, நூற். 16)

இது தோழிக்குக் கூறியது.

இவை சாக்காடு குறித்தன.

"மாவென மடலும் ஊர்ப பூவெனக்
குவிமுகிழ் எருக்கம் கண்ணியும் சூடுப
மறுகின் ஆர்க்கவும் படுப
பிறிதும் ஆகுப காமங்காழ்க் கொளினே." (குறுந். 17)

இதனுட் 'பிறிதுமாகுப' என்றது வரைபாய்தலை.

'இட'னென்றதனால் தோழி பெரியோர்க்குத் தகா தென்றவழித் தலைவன் மறுத்துக் கூறுவனவும், பிறவும் வேறுபட வருவனவும் கொள்க.

"நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன்
காமுற்றார் ஏறு மடல்" (குறள். 1133)

என வரும்.

இனி 'இடனும்' என்ற உம்மையைப் பிரித்து நிறீஇ இரு நான்கு கிளவியும் மகிழ்ச்சியுங் கலங்கலுங் கூறும் இடனும் உண்டு,

உரைப்பினும் பெட்பினு முவப்பினு மிரப்பினும் வகையினும் கூறும் இடனும் உண்டு, பகுதிக்கண்ணும் மற்றைய வழிக்கண்ணுங் கூறும் இடனும் உண்டு, மெய்யுறக் கூறலும் பீடுங்கூறலும் உண்டென முடிக்க.

(வி-ரை) பயிலாநிற்கும்–பயிலும், மறையில் தப்பா–வேத ஒழுக்கத்தினின்றும் வழுவாத, வேட்கை மிகுதியால் - காம மிகுதியால், வெய்துண்டு - வெப்பம் அடைந்து, புண் கூர்ந்தார் - துன்பமுற்றோர், வேத ஒழுக்கத்தினின்றும் தவருத மறையோன் ஒருவனை அவ்வொழுக்கத்தினின்றும் தப்பிய மறையோன் கண்ட விடத்து நெஞ்சு நடுக்குறுதல் போலவும், காம வேட்கையால் அலமருதல் உற்றோர் பிறரைக் கண்டவிடத்து நெஞ்சு நடுக்குறுதல் போலவும், தலைவனைக் கண்ட தலைவி நடுக்குறுவள். இவ்வாறு ஒரு மருங்கு நடுக்குறினும் பிறிதொரு மருங்கு தலைவன் பால் அன்பு மீதூர்ந்தும் நிற்பள். அனந்தர் - மயக்கம், புலையன் என்பதால் அருவருப்பும், தீம்பால் என்பதால் விருப்பும் ஏற்பட்டு அதனைக் கொள்வேமோ, விடுப்பேமோ என்னும் தடுமாற்றம் ஏற்படுவது போல, தலைவியும் களவொழுக்கம் என்பதால் அருவருப்பும், அன்புணர்ச்சி என்பதால் விருப்பும் கொண்டு மயங்கி நிற்பள். புனல் ஓடும் வழிப்புல் சாய்ந்து புறங்கிடப்பது போலக் காதல் மீதூர்வினல் நாணம் ஒரு புறம் அடங்கி நிற்பத் தலைவன் காண்டற்கு இயலுமாறும் அவன் தீண்டற்கு இயலுமாறும் நிற்பள்.

பொய் செய்யா நின்று - பொய் செய்து. ஓதியும் நுதலும் சிதைவின்ருயினும் சிதைந்தன போலக் கூறித் திருத்துதலின் அது பொய்யாயிற்று.

அவ்விரண்டனுலும் - மேற் கூறிய மெய் தொட்டுப் பயிறலும் பொய் பாராட்டலுமாகிய இரண்டனுலும், முகம் பெற்றவன் - குறிப்பறிதலைப் பெற்றவன்.

குறிதலைப் பெய்தல் - தலைவி இருக்குமிடத்திற்குச் சென்று சேர்தல்.

வீளையர் - சீழ்க்கை ஒலியை உடையர், எடுத்த - எழுப்பிய, நனந்தலை - அகன்ற இடம், கருவிசை - மிக்க வேகம், கலை - ஆண்மான். வாளி - அம்பு, கொடிச்சி - தலைவி.

கதுமென - விரைவாக, நண்ணார் - பகைவர், கூடல்-மதுரை.

ஐயர் - முத்தோர், மிடல்புக்கு - பலியிலே புகுந்து, இடுகும் - மெலியும், இழவல் - இழந்து விடாதே.

கோள்வல் - கொல்லும் வலிமை, நின் ஐயர் - நின் தமையன் மார், கூட்டு உண்டு - திறையாக உண்டு, ஈர்அம்பு - கண்ணாகிய இரண்டு அம்புகளால்.

தெளிர்ப்ப - ஒலிக்க, அலவன் - நண்டு, கதுப்பு - கூந்தல், புலம்பு கொள் மாலை - தனிமையான மாலைக் காலம்.

வேட்டபொழுதின் அவையவை போலுமே - மிக இனியவாய பொருள்களைப் பெருது அவற்றின் மேல் விருப்பம் கூர்ந்த பொழுதின்கண் அவையவை தாமே வந்து இன்பம் செய்யுமாறு போல், தோடார் கதுப்பு - மலரணிந்த கூந்தல்.

எம் அணங்கின - எம்மைத் துன்புறுத்தின, நனைமுதிர் - அரும்பு முதிர்ந்த, புனைந்த - அமைக்கப்பட்ட, வெறியயர் களம்-வெறியாட்டு நிகழ்கின்ற களம், வான்பொறி - வெள்ளிய பொறி, வியன் துறை - அகன்ற துறை, சூரரமகளிர் - தெய்வ மகளிர், சூள் எம் அணங் கினவே என முடிக்க.

மக்களுள் தலையாய அறிவினர் ஒரு கால் ஐயுற்றுத் தெளிவர். ஏனைய இடையும் கடையும் ஆய அறிவினர் இருகாலும் பல்காலும் ஆக ஐயுற்றுத் தெளிவர். ஆதலின் ஐயுறுதலை ஆசிரியர் மீண்டும் மீண்டும் கூறினர். இக்கருத்து அத்துணைச் சிறப்பன்று. தீராத் தேற்றம் – இயற்கைப் புணர்ச்சியுடன் முடியாத தெளிவு என்பர் இளம் பூரணர்.

தவல் – மனமழிந்து கூறி.

வெள்ளம் – ஒரு பேரெண், இரும்பல் கூந்தல் – பெரிய பல வாகிய கூந்தல்.

தெறூஉம் – அடாநிற்கும், குறுகுங்கால் – அணுகுமிடத்து, தண்ணென்னும்–குளிரா நிற்கும், யாண்டுப் பெற்ருள்-எவ்விடத்துப் பெற்ருள்.

அல்குபடர் – மிக்க துன்பம், அரிமதர் மழைக்கண் – செவ்வரி படர்ந்த மதர்த்த குளிர்ச்சியையுடைய கண், நுடங்கும் - அசையும்,

திருமணி - நிலமணி, உறீஇயனள் – செய்தனள், தொண்டி – தொண்டி நகரம்.

வல்லே – விரைந்து.

ஒடுங்கீர் ஓதி – ஒடுங்கிய நெய்ப்பை உடைய கூந்தல், நறுந்தண் நீரள் – மணத்தையும் குளிர்ச்சியையும் உடைய தன்மையள், அணங்கினள் – வருத்தத்தைத் தருபவள், புனை அளவு – புனைந்துரைக்கும் எல்லை.

பறைதபு நாரை – முதுமையால் சிறகுகள் இழந்த நாரை, பொறையன் - சேரன், அயிரை - மீனில் ஒருவகை, அணவந்தாங்கு - தலையை மேலே எடுத்தாற் போல, படர்தி – பெறுவதற்கு நினைந்தாய், பாலோய் – ஊழ்வினையை யுடையாய்.

இல்லோன் - பொருளில்லாத வறிஞன், வேட்டனை - விரும்பினை

உயிர்க்கு வாழ்தல் அன்னள் – உயிர்க்கு உடம்போடு கூடி வாழ்தல் போலும்.

பேர்த்து - மனத்தினின்றும் பெயர்த்து, மாவிணை - விலங்கு போந்ததோ என வினவிக் கொண்டு, பலம் - வெற்றி.

எலுவ - எம் நண்ப, ஏமுறுதல் - இன்புறுதல், புலவ - அறிவுடையாய், எண்ணாள் பக்கத்துப் பசுவெண் திங்கள் - எட்டாம் திதிக்குரிய இளைய வெள்ளிய திங்கள், கதுப்பு - கூந்தல், புதுக் கோள் - புதிதாகப் பிடிக்கப்பட்ட.

குன்றம் உருளல் - மலை உருண்டவிடத்து, குன்றியுள் - குன்றி மணியுள், மலை உருண்டவிடத்துக் குன்றி மணி அழிவதல்லது எதிர்த்து நில்லாது, அது போலத் தக்கார் தகவில செய்தக்கால் எஞ்சியோர் தடுத்தல் இயலுமோ எனப் பாங்கன் தலைவனிடத்துக் கூறுவதாக அமைந்துள்ளது.

தேரோன் - கதிரவன், கண்டதன் அளவையில் - தலைவியைக் கண்ட அளவிலேயே.

முதைச்சுவல் - பழைய கொல்லையிலுள்ள மேட்டு நிலம், கலித்த - தழைத்த, விருந்து - புதியது.

நயன் - கலந்த உறவு, பாடறிந்து ஒழுகல் - உலக ஒழுக்க மறிந்து ஒழுகுதல், எதிர்ந்த - மேன் மேல் தோன்றிய, விதிர்த்தல் - அள்ளித் தெளித்தல், தேன்பாய் - தேன் பரவிய, இலஞ்சி - பொய்கை.

கேளிர் - நண்பர், குறையாக - செயலாக, வெவ்வறை - வெம்மையான அறை, ஊமன் - ஊமையன், உணங்கிய - உருகிய, நோன்று கொளற்கு அரிது - பொறுத்தற்கரிது.

துங்கப்பனி - வெள்ளிய பனி.

கழை – குழல், பாடு – பக்கம், இரங்க – ஒலிக்க, கொடும்புரி – முறுக்குண்டபுரி, அதவக்கனி – அத்திப்பழம், துய்த்தலை – பஞ்சு போன்ற தலை, வன்பறழ் – வலிய குட்டி, குறுமாக்கள் – இளம் பிள்ளைகள்.

கேளிர் – நண்பர்; பிணி கொண்ட – பிணித்துக் கொண்ட, அம்சில் – அழகிய சிலவாகிய.

காயா - காயாமலர், கணவி – தொகுதியான மலர், வேய்லுர் – மூங்கிலை ஒத்த.

இரு பிறப்பின், நான் மறையோன் – அந்தணன் (பிரமன்) செவ்வியால் – பார்த்தற்குரிய காலத்தால்.

பேதுறுத்து – மயங்கச் செய்து, கேழ்கிளர் – நிறம்மிகுந்த.

வயின்வயின் – இடந்தொறும்.

கண் நீலம் பயந்தது, பல் முத்தம் பயந்தது, நிறம் தளிர் பயந்தது, அங்ஙனமாக இம்மகளை யாம் பயந்தேம் என்னும் குறவர் மடவர் ஆவர், என இயைத்துப் பொருள் காண்க. ஊதை - காற்று, தூங்கு எயில் – தொங்குகின்ற மதில்.

பண்ணாது – இசைக்காது, தேன் – வண்டுகள்; கயிறுரீஇ விட்டார் – கயிற்றினால் கட்டி வையாது கழற்றி விட்டார் என்றது, இவளை இல்லத்திலேயே வையாது புறம் போக விட்டார் என்பதாம். சான்றூர் மற்று இவளைக் காவாது இவ்வாறு கழற்றி விட்டார்.

பூழி – புழுதி, இயையாது – புணராது, இயையும் - (இவ்வாறு வருந்துவது) பொருந்தும்.

பனைத்தோள் – பெருத்ததோள், இயல – நடந்து, ஐம்பால் – ஐந்து பகுப்புக்களைக் கொண்ட கூந்தல், கையறு – செயலற்ற, பைதல் – வருந்திய.

பெட்டவாயில் – தலைவியால் விரும்பப்பட்டவளாகிய தோழி, தலைப்புணை – தெப்பத்தின் தலைப்பு, ஒழுகின் – சென்றால், பித்திகம் - பச்சிமலர், வெரிந் – புறம்.

தோழி கூற்றாகக் கூறுவார் இறையனார் களவியல் உரை யாசிரியர். அவரையே நச்சினார்க்கினியர் இவ்வாறு குறிப்பாக மறுத்துள்ளார்.

மணி – நோயை நீக்குதற்குரிய மணி, தேன் – வண்டு.

வலித்த தலைவன் – துணிந்த தலைவன், கெடுத்தலை – இழந் தவை.

நண்ணி – அடைந்து, வேர்க்கொண்டு தூங்கும் – வேரிலே காய்த்துத் தொங்கும், சேதா – சிவந்தபசு, இறும்பின் – சிறுமலை யின்கண்.

எல்லுற்று – இரவுநேரம் வர.

சாந்தம் – சந்தனமரம், அறஎறிந்து – கெடும்படி வெட்டி, ஊழ் – முதிர்ந்த.

இல்லுடைக்கிழமை – வாழ்க்கைத்துணை நலம் ஆதற்குரிய உரிமை.

ஆற்ற அணங்காகும் – மிகுதியும் வருத்தும் தெய்வமாகும்.

பாயல் – உறக்கம், 'என் பண்பும், பாயலும் கொண்டமைக்கு யான் செய்த தவறு யாது? கூறுதி; என இயைத்துப் பொருள் காண்க, வெளிப்பட்டன – களவு வெளிப்படக் கூறியன.

கவான் – சாரல்.

இவற்றைத்தோழி கூற்றாகக்கூறுவார் இளம்பூரணர், அதனையே இவ்வாறு மறுக்கின்றார் நச்சினார்க்கினியர்.

தண்டாது – அமையாது.

கொண்டல் – மேகம், குழைத்த – தழைத்த, தகை – அழகு, கூழை – கூந்தல், பரிவிலாட்டி – அன்பிலாத இளமகள், முனியல்– வெறுக்காதே.

கைதை – தாழம்பூ, குற்றும் – கொய்து கொடுக்கும், இனையம் – இத்தன்மையேமாய், செய்தார் – புனைந்தமாலை, வேல் அழுவம் – படைக்கடல்.

ஐவனம் - மலைநெல் விளையும் புனம், நெஞ்சம்வாய் - நெஞ்சிடத்து.

கவளம் - உணவுத்திரள், இயல் - தன்மை மிக்க, சிற்ருளி - சிங்கக் குட்டி, கடிகை - வாய் இதழ்.

மடவாய் - இளமை மிக்க தோழி, ஆய - வருந்தும் படியாக, வாய் - நெறி, நைந்து - தவிர்ந்து, ஒல்கல் - தளர்தல், வாய் - உண்மை, பைதல் - வருத்தம், நீத்தம் - வெள்ளம், தலைநாள் - முதல் நாள். வார் - ஒழுகும், அருநிலை - நிலைகொள்ளாத, மால் - கரிய, தன் ஐயர் - தன் தமையன்மார், வாங்கு உந்தி - வளைந்த கொப்பூழ், முகவை - முகந்து, வைப்பு - ஓர் ஊர், நயம்புரி - நீதியை உட்கொண்ட, வெஃகி - விரும்பி, அன்னி - ஒரு குறுநிலத்தலைவன், விளிகுவை - இறந்துபடுவை.

நசைஇ - விரும்பி, அரவு - பாம்பு, புலம்புகொண்டு - தனிமை மேவி, கைம்மிகல் - அளவுகடத்தல், நளந்தலை - அகன்ற இடம்.

அயத்து - நீரில், பைஞ்சாய் - பைஞ்சாய்க்கோரை, முருந்து - குருத்து, மாத்தாள் - கரியதண்டு, மையிதழ் - கரியஇமை, துடியில் - துடியினைப் போல, கரந்த - மறைத்த, நீத்தம் - வெள்ளம், நடுங்கஞர் – நடுங்கும் துன்பம், வியலகம் – அகன்ற இடம்.

அணங்கு உடை – தெய்வம் தங்குதலுடைய, நுணங்கிழை – நுண்ணிய அணி, அங்கலுழ்மேனி – அழகு ஒழுகும் மேனி.

தழைதைஇய - தழை உடுத்த, அடைச்சி - சூடி, மேவலைப் பட்ட - விரும்பப்பட்ட, ஏறுபிரி - ஆண்மானைப் பிரிந்த, உறுகழை - பெரியமூங்கில், நிவப்பன் - உயர்தல்.

இரண்டறிகள்வி – இருவேறுபட்ட ஒழுகலாற்றை நம்மோடு அறிந்த கள்ளத்தன்மையுடையள், துப்பில் – வலிமையுடைய, நம்மோரன்னள் - ஒத்தவளாயினுள், வேய்ந்த - அணிந்த, அமரா – பொருந்தாத.

ஓரை - விளையாட்டு, தொடலை - மாலை, ஒருசிறை - ஒருபக்கம். அமர்ந்து - விரும்பி.

இன்னா மாக்கட்டு - கொடிய மாக்களை உடையது.

இகந்து - நீங்கி, புல்லுரை - பயனற்றசொல், தாஅய் - பரவப் பெற்று, பசுகலம் - சுடப்படாத மண்கலம், மகவுடை - குட்டியை யுடைய.

பணைத்தோள் - மூங்கில்போன்ற தோள், தைஇயும் - பண்ணி ஈந்தும், பஞ்சாய் - பஞ்சாய்க்கோரை; உருத்து - தோற்றம் செய்து, கடவின் - வினவினால், அழுங்கல் - வருத்தம்.

புரைத்தோ அன்றே - உயர்ந்ததன்றே.

விழுத்தலை - சிறந்த உச்சி, விளையல் - முதிர்தல்; ஒருநாள் மருங்கில் - ஒருநாளில், நாம் விடற்கு அமைந்த தூது தெருவின் இயலவும் தருவது கொல் எனக்கூட்டுக.

நாள் நாகம் - அன்றுபூ அவர்க்கு சுரபுன்னை மலர், நேர்வளவும் - புணரும் வரையிலும், பூணுகம் போகாது என்றேன் - எலும்பினால் அணியப் பட்ட அணி என் மார்பினின்றும் நீங்காது என்றேன்.

மா என - குதிரை என, குவிமுகிழ் - குவிந்த அரும்பு, பிறிதும் - சாதலும், காழ்கொளின் - முதிர்வு உறின். (11)

### இரந்து பின் நின்ற விடத்துத் தலைமகனிடத்து நிகழும் கூற்றுக்கள்.

103. பண்பிற் பெயர்ப்பினும் பரிவுற்று மெலியினும்
அன்புற்று நகினும் அவட்பெற்று மலியினும்
ஆற்றிடை யுறுதலும் அவ்வினைக் கியல்பே.

இதுவும் இரந்து பின்னிற்புழித் தலைவன் கூற்று நிகழுமாறு கூறுகின்றது.

(இ - ள்.) பண்பிற் பெயர்ப்பினும் - தோழி தலைவியது இளமை முதலிய பண்புகூறி அவ்வேட்கையை மீட்பினும் :

உ - ம். "குன்றக் குறவன் காதன் மடமகள்
வண்டுபடு கூந்தல் தண்டழைக் கொடிச்சி
வளையண் முளைவாள் எயிற்றள்
இளையள் ஆயினும் ஆரணங் கினளே." (ஐங்குறு. 256)

இஃது இளையளெனப் பெயர்த்துழித் தலைவன் கூறியது.

பரிவுற்று மெலியினும் - இருவகைக் குறியிடத்துந் தலைவியை எதிர்ப்படும் ஞான்றும் எதிர்ப்பட்ட ஞான்றும் எதிர்ப்படாநின்ற ஞான்றும் பலவாயவழி அவன் பரிந்த உள்ளத்தனாய் மெலியினும் :

உ - ம். "ஆறு நோயோடு அழிபடர் கலங்கிக்
காமம் கைம்மிகக் கையறு துயரம்
காணவு நல்கா யாயின் பாணர்
பரிசில் பெற்ற விரியுளை நன்மான்
கவிகுளம்பு பொருத கன்மிசைச் சிறுநெறி
இரவலர் மெலியா தேறும் பொறையன்
உரைசால் உயர்வரைக் கொல்லிக் குடவயின்
அகலிலைக் காந்தள் அலங்குலைப் பாய்ந்து
பறவை இழைத்த பல்கண் இறாஅல்
தேனுடை நெடுவரைத் தெய்வம் எழுதிய
வினைமாண் பாவை அன்னோள்
கொலைசூழ்ந் தனளாள் நோகோ யானே." (நற்றிணை,185)

இது பகற்குறியிற் பரிவுற்றது.

"ஓதமும் ஒலியோ இன்றே ஊதையும்
தாதுளர் கானல் அவ்வென் றன்றே
மணன்மலி மூதூர் அகனெடும் தெருவில்
கூகைச் சேவல் குராலோடு ஏறி
ஆரிரும் சதுக்கத்து அஞ்சுவரக் குழறும்
அணங்குகால் கிளரு மயங்கிருள் நடுநாள்
பாவை அன்ன பலராய் வனப்பின்

தடமென் பணைத்தோள் மடமிகு குறுமகள்
சுணங்கணி வனமுலை முயங்கல் உள்ளி
மீன்கண் துஞ்சும் பொழுதும்
யான்கண் துஞ்சேன் யாதுகொல்நி லையே.''
(நற்றிணை. 319)

இஃது இரவுக்குறியிற் பரிவுற்றது.

''மழைவரவு அறியா மஞ்ஞை யாலும்
அடுக்க னல்லூர் அசைநடைக் கொடிச்சி
தானெம் மருளாள் ஆயினும்
யாந்தன் உள்ளுபு மறந்துஅறி யேமே'' (ஐங்குறு. 298)

எனவும்,

''களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்
வெளிப்படும் தோறும் இனிது'' (குறள். 1145)

எனவும் வரும்.

இன்னும் 'பரிவுற்று மெலியினும்' என்றதனானே புணர்ந்து நீங்குந் தலைவன் ஆற்றாது கூறுவனவும், வறும்புனங்கண்டு கூறு வனவும், இற்செறிப்பறிவுறுப்ப ஆற்றானாய்க் கூறுவனவுந், தோழி இற்புணர்ச்சிக்கண் தன்னிலைக் கொளீஇக் கூறுவனவும், இரவுக் குறிக்கண் வருகின்றான் தலைவியை ஐயுற்றுப் பாங்கற்குக் கூறு வனவும், பிறவும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அமைக்க.

''என்றும் இனியள் ஆயினும் பிரிதல்
ஒன்றும் இன்னாள் அன்றே நெஞ்சம்
பனிமருந்து விளைக்கும் பரூஉக்கண் இளமுலைப்
படுசாந்து சிதைய முயங்கும்
சிறுகுடிக் கானவன் பெருமட மகளே''

''கோடாப் புகழ்மாறன் கூடல் அனையாளை
ஆடா அடகினும் காணேன்போர்—வாடாக்
கருங்கொல்வேன் மன்னர் கலம்புக்க கொல்லோ
மருங்குல்கொம்பு அன்னாள் மயிர்'' (திணை. நூற். 4)

"பெறுவது இயையாது ஆயினும் உறுவதொன்று
உண்டுமன் வாழிய நெஞ்சே திண்டேர்க்
கைவளர் ஓரி கானம் தீண்டி
எறிவளி கமழு நெறிபடு கூந்தல்
மையீ ரோதி மாஅ யோள்வயின்
இன்றை அன்ன நட்பில் இந்நோய்
இறுமுறை எனஒன் றின்றி
மறுமை உலகத்து மன்னுதல் பெறினே" (குறுந். 199)

"நோயு நெகிழ்ச்சியும் வீடச் சிறந்த
வேய்வனப் புற்ற தோளை நீயே
என்னுள் வருதியோ எழில்நடைக் கொடிச்சி
முருகுபுணர்ந்து இயன்ற வள்ளி போலநின்
உருவுகண் டெறிப்ப நோக்கலாற் றலனே
போகிய நாகப் போக்கரும் கவலைச்
சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்
சேருடு இரும்புற நீறுடு சிவண
வெள்வசிப் படீஇயர் மொய்த்த வள்பழீஇக்
கோள்நாய் கொண்ட கொள்ளைக்
கானவர் பெயர்க்கும் சிறுகுடி யானே" (நற்றிணை. 82)

"மயில்கொல் மடவாள்கொல் மாநீர்த் திரையுள்
பயில்வதோர் தெய்வங்கொல் கேளீர்—குயில்பயிலும்
கண்ணி இளஞாழல் பூம்பொழில் நோக்கிய
கண்ணின் வருந்துமென் நெஞ்சு" (திணை, ஐம். 49)

என வரும்.

அன்பு உற்று நகினும் - தோழி குறைமறுப்புழி அன்பு தோன்ற நகினும்:

உ–ம்: "நயன்இன் மையின் பயனிது என்னாது
பூம்பொறிப் பொலிந்த அழலுமிழ் அகன்பைப்
பாம்புயிர் அணங்கி ஆங்கும் ஈங்கிது
தகாஅது வாழியோ குறுமகள் நகாஅது
உரைமதி உடையும் என் உள்ளம் சாரல்

கொடுவில் கானவன் கோட்டுமா தொலைச்சிப்
பச்சூன் பெய்த பகழி போலச்
சேயரி பரந்த ஆயிழை மழைக்கண்
உரூஉ நோக்கம் உற்றஎன்
பைதல் நெஞ்சம் உய்யு மாறே.'' (நற்றிணை, 75)

இஃது அன்புற்று நக்குழித் தலைவன் கூறியது.

அவட் பெற்று மலியினும் - தோழி உடம்பாடுபெற்று மனம் மகிழினும்:

உ-ம்: ''எமக்குநயந்து அருளினை யாயின் பணைத்தோள்
ஒண்ணுதல் அரிவையொடு மென்மெல இயலி
வந்திசின் வாழியோ மடந்தை
தொண்டி அன்னநின் பண்புபல கொண்டே.''
(ஐங்குறு. 175)

இஃது அவட்பெற்று மலிந்து தலைவன் கூறியது.

இன்னும் 'அவட்பெற்று மலியினும்' என்றதற்கு, இரட்டுற மொழிதலென்றதனால், தலைவியைப் பகற்குறியினும் இரவுக் குறியினும் பெற்று மகிழினும் என்று பொருளுரைக்க.

''நன்றே செய்தஉதவி நன்றுதெரிந்து
யாம்எவன் செய்குவ நெஞ்சே காமர்
மெல்லியல் கொடிச்சி காப்பப்
பல்குரல் ஏனல் பாத்தரும் கிளியே.'' (ஐங்குறு. 288)

இது பகற்குறிக்கண் கிளி புனத்தின்கட் படிகின்றதென்று தலைவியைக் காக்க ஏவியதனை அறிந்த தலைவன், அவளைப் பெற்றெ மென மகிழ்ந்து கூறியது.

''காணின் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்
மாணிழை கண்ஒவ்வேம் என்று.'' (குறள். 1144)

இஃது இரவுக்குறிக்கண் அவட்பெற்று மலிந்தது.

''கூறுவம் கொல்லோ கூறலம் கொல்லெனக்
கரந்த காமம் கைந்நிறுக்கு அல்லாது
நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி

அரைநாள் யாமத்து விழுமழை கரந்து
கார்விரை கமழும் கூந்தல் தூவினை
நுண்ணூல் ஆகம் பொருந்தினள் வெற்பில்
இளமழை சூழ்ந்த மடமயில் போல
வண்டுவழிப் படரத் தண்மலர் வேய்ந்து
வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சூல்
அஞ்சிலம்பு ஒடுக்கி அஞ்சினள் வந்து
துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்
ஆன்ற கற்பில் சான்ற பெரிய
அம்மா அரிவையோ அல்லள் தெனாஅது
ஆஅய் நன்னாட்டு அணங்குடைச் சிலம்பில்
கவிரம் பெயரிய உருகெழு கவாஅன்
நேர்மலர் நிறைச்சுனை உறையும்
சூர்மகள் மாதோ என்னும்என் நெஞ்சே'' (அகம். 198)

என வரும்.

''விண்ணகம் விளக்கல் வேண்டி நம்மில்
பிரியினும் பிரியுமோ பெருந்தோள் கொடிச்சி
வானம் சூடிய திலகம் போல
ஓங்கிரு விசும்பினுங் காண்டும்
ஈங்கும் காண்டும் இவள்சிறு நுதலே.''

இதுவும் அது.

ஆற்றிடை உறுதலும் - தலைவன் செல்லும் நெறிக்கண் இடையூறு தோன்றின இடத்தும் :

என்றது, தலைவியுந் தோழியும் வருவழியருமை கூறிய வழித் தலைவன் கூற்று நிகழுமென்றவாறு.

உ - ம்: ''குருதி வேட்கை உருகெழு வயமான்
வலமிகு முன்பின் மழகளிறு பார்க்கும்
மரம்பயல் சோலை மலியப் பூழியர்
உருவத் துருவின் நாண்மேய லாரும்
மாரி எண்கின் மலைச்சுர நீளிடை
நீநயந்து வருதல் எவனெனப் பலபுலந்து
அழுதனை உறையும் அம்மா அரிவை

பயங்கெழு பலவின் கொல்லிக் குடவரைப்
பூதம் புணர்த்த புதிதியல் பாவை
விரிகதிர் இளவெயில் தோன்றி அன்னநின்
ஆய்நலம் உள்ளி வரின்எமக்கு
ஏம மாகும் மலைமுத லாறே'' (நற்றிணை. 192)

எனத் தலைவி ஆற்றினதருமை கூறியதற்குத் தலைவன் கூறியது.

இரட்டுறமொழித லென்பதனால், 'ஆற்றிடையுறுதற்'கு வரை விடைவைத்துப் பிரிந்தான் ஆற்றிடை வருத்தமுற்றுக் கூறுவனவுங் கொள்க. அது போகின்றான் கூறுவனவும் மீண்டவன் பாங்கற்குக் கூறுவனவுமாம்.

''ஓம்புமதி வாழியோ வாடை பாம்பின்
தூங்குதோல் கடுக்கும் தூவெள் அருவிக்
கல்லுயர் நண்ணி அதுவே நெல்லி
மரையின மாரு முன்றில்
புல்வேய் குரம்பை நல்லோள் ஊரே'' (குறுந். 235)

''கவலை கெண்டிய கல்வாய்ச் சிறுகுழி
கொன்றை ஒள்வீ தாஅய்ச் செல்வர்
பொன்செய் பேழை மூய்திறந் தன்ன
காரெதிர் புறவின் அதுவே உயர்ந்தோர்க்கு
நீரொடு சொரிந்த மிச்சில் யாவர்க்கும்
வரைகோள் அறியாச் சொன்றி
நிரைகோல் குறுந்தொடி தந்தை ஊரே.'' (குறுந். 233)

அவ்வினைக்கு இயல்பே - அத்தோழியிற் கூட்டத்திடத்துத் தலைவன் கூற்று நிகழ்வதாகிய இலக்கணமாம் என்றவாறு.

(வி - ரை) கொடிச்சி - குறத்தி, அணங்கினள் - பிறரை வருத்தும் தன்மையள்.

எதிர்ப்படா நின்ற ஞான்றும் - எதிர்ப் படுகின்ற பொழுதும், பிரிந்த - வருந்திய.

ஆறு - அடங்காத, அழிபடர் - அழிந்து படுதற்குரிய துன்பம், விரிவுளே - விரிந்த புறமயிர், அலங்கு - அசையும், பறவை - வண்டு, இருஅல்-தேனடை, சூழ்ந்தனள் - ஆராய்ந்தனள், நோகு—நோவேன்.

ஓதம் - கடல், ஓவின்று - அடங்கியது, ஊதை - ஊதைக்காற்று, தவ்வென்றன்று - பொலிவு இழந்தது, குரால் - பெண் பறவை, சதுக்கம் - நாற்சந்தி, கால்கிளரும் - உலவாநிற்கும்,

அறியா - அறிந்து, ஆளும் - மகிழும், உள்ளுபு - நினேந்து.

வேட்டற்ருற்ருல் - இனிதாமாறு போல, காமம் வெளிப்படுந் தோறும் - காமம் அவாவுந்தோறும்.

வறும்புனம் - தலேவியில்லாத இடம்.

பருஉக்கண் - பருத்தகண், படுசாந்து - பொருந்திய சந்தனம்.

கோடா - செங்கோன்மையினின்றும் மாருத, ஆடாஅடகு - அடுதற்குரித்தல்லாத அடகு என்னும் பெயருடைய விளேயாட்டு, அடாஅடகு - என்பது நீண்டது; விளே எதிர் மறுத்துப் பொருள் புலப்படுத்தவாறு, மயிர் கலம் புக்க கொல்லோ - மயிர் முடிக்கப் பெற்ருளோ; என்றது பருவம் வாய்ந்தமை கருதி இற்செறிக்கப் பட்டாளோ என்றவாறு.

கைவளர்ஓரி - கைவண்மையையுடையஓரி, வள்ளல், மாயோள்- மாமையை உடையோள்; இறுமுறை - அழியும் முறை.

நெகிழ்ச்சி - மெய்யின் தளர்ச்சி, முருகு - முருகன், நாகம் - நாகமரம், ஒருத்தல் - ஆண்பன்றி, வெள்வசி - வெறும்பிளப்பு, வள்பு - வார்.

கண்ணி இளஞாழல் - முதன் முதலாகப் பூத்திருக்கும் இளமை யான கோங்கமரம், கண்ணின் - கண்ணேப்போல.

பூப்பொறி - பொலிவுபெற்ற புள்ளிகள், அகன்பை - அகன்ற பாம்பின்படம், கோட்டுமா - பன்றி, உருஅ நோக்கம் - பொருந்தாத பார்வை, பைதல் - வருந்தும், நெஞ்சம் உய்யுமாறு நகாஅது உரை மதி என இயைக்க.

அவட்பெற்று மலியினும் என்பதற்குக் கூறப்பெற்ற உரை இளம்பூரணர் உரையை முழுமையாகத் தழுவியதாம்.

தூவினை - தூயதொழில், நுண்ணூல் - நுண்ணிய நூலாகிய ஆடை, குடச்சூள் - சூளுற்றதுபோல் புடைபட்டிருக்கும் சிலம்பு.

வயமான் - வலிமை பொருந்திய புலி, துருவின் - ஆட்டைப் போல, எண்கு - கரடி.

தூங்கு தோல் - தொங்குகின்ற தோல்.

கவலை - கவலைக்கிழங்கு, கெண்டிய - அகழ்ந்தெடுத்த, மூய் - மூடி, புறவினது - முல்லை நிலத்தின் கண்ணது, வரைகோள் - தடை செய்தல். (12)

## பாங்கன் நிமித்தம்.

104. [1]பாங்கன் நிமித்தம் பன்னிரண் டென்ப.

இது மேற் பாங்கிநிமித்தங் கூறிய அதிகாரத்தானே பாங்கன் நிமித்தங் கூறுகின்றார். 'வாயில் பெட்பினும்' (தொல்-பொ-கள-11) என்ற பாங்கனிமித்தம் போலாது இது வேறுபடக் கூறலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது. என்னை? பாங்கன் தலைவியை எதிர்ப்பட்டு வந்து தலைவற்கு உரைத்தலன்றிக், காளையரொடு கன்னியரை உலகியலாற் புணர்க்குமாறு புணர்க்குந் துணையேயாகலின்.

(இ - ள்.) அகனைந்திணையும் அல்லாதவழிப் பாங்கன் கண்ண வாகிய நிமித்தம் பன்னிரு பகுதியவாம் (எ - று).

எண்வகை மணத்தினும் இடைநின்று புணர்க்கும் பார்ப்பான் இருவகைக் கோத்திரம் முதலியனவுந் தானறிந்து இடை நின்று புணர்த்தல் வன்மை அவர் புணர்தற்கு நிமித்தமாதலின் அவை அவன்கண்ண வெனப்படும். இவனைப் பிரசாபதியென்ப. நிமித்தமுங் காரணமும் ஒன்று. காரணம் பன்னிரண்டெனவே காரியமும் பன்னிரண்டாம்: அவை எண்வகை மணனுமாதலின் அவற்றைக் கைக்கிளை முதலிய ஏழுதிணைக்கும் இன்னவாறு உரியவென

1. 'பாங்கர்' எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

வருகின்ற சூத்திரங்களாற் பன்னிருபகுதியும் அடங்கக் கூறுப. அவ்வாற்ருனே பிரமம் பிரசாபத்தியம் ஆரிடந் தெய்வம் எனவும், முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் எனவும், அசுரம், இராக்கதம், பேய் எனவும் பன்னிரண்டாம்.

பிரமம் முதலிய நான்கற்கும் பாங்கன் ஏதுவாகலின் இவ்வாறு பிரமசரியங் காத்தானெனவும், இவன் இன்ன கோத்திரத்தான் ஆகலின் இவட்கு உரியனெனவும், இவனை இன்னவாற்ருற் கொடுக்கத் தகுமெனவும், இன்னுனை ஆசாரியனைக்கொண்டு வேள்வி செய்து மற்றிக் கன்னியைக் கொடுக்கத் தகுமெனவுஞ் சொல்லிப் புணர்க்கு மென்பது.

இனி, யாழோர் கூட்டத்துள் ஐந்திணையுமாயிற் பாடலுட் பயின்றவகையானே முதல் கரு உரிப்பொருள் வரையறைபற்றி முறை சிறந்து வருதலும் பெயர்கொளப் பெருமையும் உடைய வன்றே, அவ்வாறன்றி ஈண்டுக் கொள்கின்ற யாழோர் கூட்டத்து ஐந்திணையுமாயின் அவ்வந்நிலத்தியல்பானும் பிறபாடை யொழுக் கத்தானும் வேறுபட்ட வேறுபாடு பற்றியுஞ் சுட்டி யொருவர்ப் பெயர் கொடுத்தும் வழங்குகின்ற உலகியலான் எல்லாரையும் இடைநின்று புணர்ப்பாருள்வழி அவ்வந்நிமித்தங்களும் வேறு வேருகி வரும் பாங்கன் நிமித்தங்களையுடைய எனப்பட்டன.

இங்ஙனம் ஐந்திணைப் பகுதியும் பாங்கனிமித்தமாங்கால் வேறு படுமெனவே, புலனெறி வழக்கிற்பட்ட இருவகைக் கை கோளும் போலா இவை யென்பதூஉம், அவ்வந்நிலத்தின் மக்கட்குத் தக்க மன்றலும் வேருகலின் அவர்க்கும் பாங்கர் உளரென்பதூஉம், இவ்வாற்ருன் எண்வகை மணனும் உடனேதவே இவையும் ஒழிந்த எழுவகை மணனும்போல அகப்புறமெனப்படுமென்பதூஉங் கொள்க.

இனி, அசுரத் தன்மையாளைக் குரவர் இன்னவாறு கொடுப்பர் நீயுஞ் சேறியென்று ஒருவன் பாங்குபடக் கூறலும், இவனை அவட்குக் காட்டி இவன் இன்னனென்று ஒருவன் இடைநின்று கூறலும் உண்மையின், அதுவும் பாங்கனிமித்தமுடைத்து. இராக் கதத்திற்கும் இத்தன்மையாள் இன்னுழி இருந்தாளென்று பாங்கா யினர் கூறக்கேட்டு ஒருவன் வலிதிற் பற்றிக் கோடலின் இதுவும்

பாங்கனிமித்தமுடைத்து. பேய்க்கும் பொருந்துவது அறியாதான் இடைநின்று புணர்ப்பின் அதற்கும் அது நிமித்தமாம். இப் பன்னிரண்டுந் தொன்மையுந் தோலு (550-1) மென்ற வனப் பினுள் வருவன.

(வி—ரை) வாயில் பெட்பினும் என்றவிடத்துக் கூறப் பெற்ற பாங்கன் நிமித்தம் புலனெறி வழக்கிற்குரியது. தலைவனால் காணப் பட்ட தலைவியைத்தான் எதிர்ப்பட்டு வந்து அவளது நிலை கூறி அவனொடு கூட்டுவிப்பது. ஈண்டுக் கூறும் பாங்கன் நிமித்தம் உலகியல் வழக்கிற்குரியது. பாங்கன் இடைநின்று திருமணத்தை முடித்து வைப்பது.

அவர் புணர்தற்கு - தலைவன் தலைவியர் புணர்தற்கு, பன்னி ரண்டு என்பதற்கு இளம்பூரணர் பிரமம் முதலிய நான்கும், கந்திருவப் பகுதியாகிய களவும், உடன் போக்கும் அதன்கண் கற்பின் பகுதியாகிய இற்கிழத்தியும், காமக்கிழத்தியும், காதற் பரத்தையும், அசுரம் முதலாகிய மூன்றுமென விளக்கம் காண்பர். (13)

## கைக்கிளை பெருந்திணைக்குரிய மணங்கள்

105. [1]முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே
பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே.

மேற் பன்னிரண்டெனப்பட்ட எண்வகை மணத்தினுள் ஏழனை எழுதிணையுள் இன்னதிணைப்பாற்படும் என்கின்றது.

(இ—ள்) முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே - இதற்கு முன் நின்ற அசுரமும் இராக்கதமும் பைசாசமுங் கைக்கிளை யென் றற்குச் சிறந்திலவேனுங் கைக்கிளையெனச் சுட்டப் படும்; பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே - பின்னர் நின்ற பிரமம் பிரசா பத்தியம் ஆரிடந் தெய்வமென்னும் நான்கினையும் பெருந்திணை தனக்கு இயல்பாகவே பெறுமெனவுங் கூறப்படும் (எ—று)

மன்றல் எட்டு என்ற வரலாற்று முறையானே 'வாளாது பன்னிரண்டென்றார்' என்பதே பற்றி, ஈண்டும் அம்முறையானே இடவகையான் 'முன்னைய மூன்றும்' 'பின்னர் நான்கு' மென்றார்.

1. இந்நூற்பாவை இரண்டாகக் காண்பர் இளம்பூரணர்.

எனவே, இனிக் கூறும் 'யாழோர் மேன' (தொல்-பொ-106) ஐந்தும் ஒன்ருக அவ்விரண்டற்கும் இடையதெனப் படுவதாயிற்று.

வில்லேற்றியாயினுங் கொல்லேறு தழீஇயாயினுங் கொள்வ லென்னும் உள்ளத்தனுவான் தலைவனேயாதலின், அதனை முற்படப் பிறந்த அன்பு முறைபற்றி ஒருதலைக் காமமாகிய 'கைக்கிளை' யென்ருர். இராக்கதம் வலிதின் மணஞ் செய்தலாதலின் அதுவும் அப்பாற்படும்; பேயும் அப்பாற்படும். இவை முன்னைய மூன்றுங் கைக்கிளையாயவாறு. 'காமஞ்சாலா இளமையோள்வயிற்' (தொல்-பொ-50) கைக்கிளை சிறப்புடைத் தென்றற்குப் 'புல்லித்தோன்றும்' (தொல்-பொ-50) எனக் கூறி, இதனை வாளாது 'குறிப்' பென்ருர். ஆண்டுப் பிற்காலத்தன்றிக் காட்சிக்கண் மணம் அதற்கின்மை யின் ஈண்டு மணங் கூறும்வழிக் கூருது அகத்திணையியலுட் கூறினர்.

'ஏறிய மடன்மா' முதலியவற்றைப் 'பெருந்திணைக் குறிப்பே' (தொல்-பொ-51) எனக் கூறி, ஈண்டுப் 'பெருந்திணை பெறுமே' யென்ருர், அவை சிறப்பில இவை சிறப்புடைய வென்றற்கு.

இந் நான்கும் ஒருதலைக் காமம்பற்றி நிகழாமையானும் ஒரு வனே டொருத்தியை எதிர்நிறீஇ அவருடம்பாட்டோடு புணர்க்குங் கந்தருவமன்மையானும் அவற்றின் வேருகிய பெருந்திணையாம்.

(வி-ரை) மன்றல் எட்டு என்பது வரலாற்று முறையால் அறிந்த ஒன்ருதலின் முன்னைய மூன்றும் என்றும், பின்னர்நான்கும் என்றும் கூறினர். இவ்வாறு கூறவே பின்னர்க்கூற இருக்கும் யாழோர் கூட்டம் இடையது என்ருயிற்று.

அகத்திணையில் கூறப்பட்ட கைக்கிளை காட்சி மட்டோடு அமைவதன்றிப் பின் வரைந்து கோடற்குரியதன்று. ஈண்டுக்கூறும் கைக்கிளை உடன் மணந்து கோடற்குரியதாதலின் ஈண்டுக்கூறினர். பெருந்திணைக் கண்ணும், இங்குக் கூறப்படும் பெருந்திணை மணந்து கொண்டு வாழும் சிறப்புடையதாதலின் அகத்திணையுள் கூருது ஈண்டுக் கூறினர். (14)

## கந்தருவத்திற்குரிய நிலம்

106. முதலொடு புணர்ந்த யாழோர் மேன
தவலருஞ் சிறப்பின் ஐந்நிலம் பெறுமே.

இஃது அப் பன்னிரண்டனுள் இடையதாய் ஒழிந்த ஐந்துங் கூறுகின்றது.

(இ–ள்.) முதலொடு புணர்ந்த யாழோர் மேன - மேற்கூறிய நடுவணைந்திணையுந் தமக்கு முதலாக அவற்றோடு பொருந்திவருங் கந்தருவமார்க்கம் ஐந்தும்; தவலருஞ் சிறப்பின் ஐந்நிலம் பெறுமே - கெடலருஞ் சிறப்பொடு பொருந்திய ஐவகை நிலனும் பெறுதலின் அவை ஐந்தெனப்படும் (எ–று.)

எனவே, முதற்கந்தருவம் ஐந்துமேயன்றி அவற்றோடு பொருத்த முடைய கந்தருவம் இவ்வைந்துமென வேறுபடுத்தினர். இவை அப் பன்னிரண்டனுட் கூறுநின்ற ஐந்தும், முதலொடு புணர்ந்த வென்றே ஒழியாது பின்னும் 'யாழோர் மேன' வென்றார் இவையுங் கந்தருவமே என்றற்கு. இவையும் ஒருவன் ஒருத்தி யெதிர்நின்று உடம்படுத்த லொப்புமையுடைய, 'கெடலருஞ் சிறப்'பெனவே முதல் கரு உரிப்பொருளானுங் களவென்னுங் கைகோளானும் பாங்கி புணர்த்தலின்மையானும் இலக்கணங் குறைப்பட்டதேனுஞ், சுட்டி யொருவர்ப் பெயர்கொள்ளப்பட்டுக் கற்பியலாகிய இல்வாழ்க் கையும் பெற்றுவருதற் சிறப்புடைய இவையும், ஐந்நிலம் பெறுத லேயன்றி, யென்றுணும். இது புலநெறியன்றி உலகியலாகலின், உலகியலாற் பாலைநிலனும் ஆண்டு வாழ்வார்க்கு மன்றலும் உளதாகலிற் பாலையுங் கூறினர். எனவே, ஐம்புலத்து வாழ்வார் மணமுஞ் செய்யுளுட் பாடியக்கால் இழுக்கின்றென்றார்.

(வி–ரை) முதல்கந்தருவம் - புனைந்துரைவகையால் கூறப் படுவது. ஈண்டுக் கூறப்படும் கந்தருவம் உலகியலால் கூறப்படுவ தாகும். ஐந்நிலம் - குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்பன. ஐந்நிலம் என்பதற்குக் களவும், உடன்போக்கும், இற் கிழத்தியும், காமக்கிழத்தியும், காதற்பரத்தையும் எனச் சொல்லப் பட்ட ஐவகைக் கூட்டம் என உரை காண்பர் இளம்பூரணர். இச் சொல்லப்பட்ட பன்னிருவகைக் கூட்டத்திற்கும் பாங்கராயினார்

நிமித்தமாக வேண்டுதலின், அவற்றுள் தலைவற்கும், தலைவிக்கும் ஒத்த காதலுள்வழிப் பாங்கராயினரால் நிகழும் நிகழ்ச்சி கந்தருவப் பகுதியாகவும் ஒருதலை வேட்கையாகியாய் இவரால் வரும் நிகழ்ச்சி கைக்கிளையாகவும், ஒப்பில் கூட்டமாகிய வழிப் பெருந்திணையாக வும் கொள்க. ஐந்நிலம் என்பதனை முல்லை, குறிஞ்சி முதலாயின வென்றார் உளராலெனின் 'முதலொடு புணர்ந்த' என்பதனால் நிலம் பெறுமாதலான் நிலம் என்பதற்கு வேறுபொருள் உரைத்தல் வேண்டுமென்க. அஃது அற்றாக, இற்கிழத்தி, காமக்கிழத்தி, என்பார் உள்ளப்புணர்ச்சியானுதல் மெய்யுறு புணர்ச்சியானுதல் வரையப்பட்டாராகப் பொருட் பெண்டிராகிய காதற் பரத்தையர் கூட்டம் ஒத்த காமமாகியவா றென்னையெனின், அரும் பொருளா னுதல், அச்சத்தானுதல் அன்றி அன்பிற் கூடுதலின் அதுவும் கந்திருவப்பாற்படும், அவ்வாறன்றி அவரைப் பிறிது நெறியாற் கூடுவராயின் இவன் மாட்டுத் தலைமை இன்றாமென்பது உணர்ந்து கொள்க. என விளக்கமும் காண்பர். (15)

### தலைவிக்குரிய கூற்றுக்கள்

107. இருவகைக் குறிபிழைப் பாகிய விடத்தும்
காணா வகையிற் பொழுதுநனி யிகப்பினும்
தானகம் புகாஅன் பெயர்த லின்மையின்
காட்சி யாசையிற் களம்புக்குக் கலங்கி
வேட்கையின் [1]மயங்கிய கையறு பொழுதினும்
புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்
பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்
வேளா ணெதிரும் [2]விருந்தின் கண்ணும்
[3]வாளா ணெதிரும் பிரிவி னானும்
நாணுநெஞ் சலைப்ப விடுத்தற் கண்ணும்
வரைதல் வேண்டித் தோழி செப்பிய
புரைதீர் கிளவி புல்லிய வெதிரும்
வரைவுடன் படுதலும் ஆங்கதன் [4]புறத்துப்
புரைபட வந்த மறுத்தலொடு தொகைஇக்
கிழவோண் மேன வென்மனார் புலவர்.

1. மயங்கிக் 2. விருப்பின் 3. தாளாண் 4. புறத்தும் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

இது மேற் றலைவற்குரிய கிளவிகூறிப், பாங்கனிமித்தம் அவன்கண் நிகழும் பகுதியுங் கூறி, அம் முறையானே தலைவிக் குரிய கிளவி கூறுகின்றது.

(இ-ள்) இருவகைக்குறி பிழைப்பு ஆகிய இடத்தும் - இரவுக் குறியும் பகற்குறியும் பிழைத்தவிடத்தும்:

உ-ம்.: "முழவுமுதல் அரைய தடவுநிலைப் பெண்ணைக்
கொழுமடல் இழைத்த சிறுகோல் குடம்பைக்
கருங்கால் அன்றில் காமர் கடுஞ்சூல்
வயவுப்பெடை அகவும் பானாட் கங்குல்
மன்றம் போழும் இனமணி நெடுந்தேர்
வாரா தாயினும் வருவது போலச்
செவிமுதல் இசைக்கும் அரவமொடு
துயில்துறந் தனவால் தோழிஎன் கண்ணே" (குறுந். 301)

"கொன்னூர் துஞ்சினும் யாம்துஞ் சலமே
யெம்மில் அயலது ஏழில் உம்பர்
மயிலடி இலைய மாக்குரல் நொச்சி
அணிமிகு மென்கொம் பூழ்த்த
மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே" (குறுந். 138)

"ஏறிரங் கிருளிடை யிரவினிற் பதம்பெறுஅன்
மாறினென் எனக்கூறி மனங்கொள்ளும் தான்என்ப
கூடுதல் வேட்கையால் குறிபார்த்துக் குரல்நொச்சிப்
பாடோர்க்கும் செவியோடு பைதலேன் யானாக" (கலி. 46)

என வரும்.

"இருள்வீ நெய்தல் இதழகம் பொருந்திக்
கழுதுகண் படுக்கும் பானாட் கங்குல்
எம்மினும் உயவுதி செந்தலை அன்றில்
கானலம் சேர்ப்பன் போல நின்பூ
நெற்றிச் சேவலும் பொய்த்தன்றோ குறியே."

இது தன்னுட் கையாறெய்திடு கிளவி.

"புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோல்
துன்பம் உழவாய் துயிலப் பெறுதியால்
இன்கள்வாய் நெய்தால் நீயெய்தும் கனவினுள்
வன்கணார் கானல் வரக்கண்டு அறிதியோ"
(சிலப். கானல்வரி, 33)

எனவும் இவை குறிபிழைத்துழித் தன்வயி னுரிமையும் அவன் வயிற் பரத்தைமையும் படக் கூறியனவாம்.

குறிபிழைத்தலாவது புனலொலிப்படுத்தலும் புள்ளெடுப்புதலும் முதலியன குறியெனக் குறித்தவழி, அவனையன்றி அவை வேறோர் காரணத்தான் நிகழ்ந்துழி, அதனைக் குறியென நினைந்து சென்று அவை அவன் குறி யன்மையின் அகன்று மாறுதலாம்.

பகற்குறிக்கு உதாரணம் வந்துழிக் காண்க.

காணா வகையிற் பொழுது நனி இகப்பினும் - குறிவழிச் செல்லுந் தலைவனை இற்றைஞான்றிற் காண்டல் அரிதென்று கையறுவதோராற்றாற் பொழுது சேட்கழியினும்:

என்றது, தாய்துஞ்சாமை, ஊர்துஞ்சாமை, காவலர் கடுகுதல், நிலவுவெளிப்படுதல், நாய்துஞ்சாமை போல்வனவற்றால் தலைவன் குறியின்கண் தலைவி வரப்பெறாமல் நீட்டித்தலாம்.

உ-ம்: "இரும்பிழி மாரி அழுங்கன் மூதூர்
விழவின்று ஆயினும் துஞ்சா தாகும்
மல்லல் ஆவண மறுகுடன் மடியின்
வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்
பிணிகோள் அருஞ்சிறை அன்னை துஞ்சின்
துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்
இலங்குவேல் இளையர் துஞ்சின் வையெயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும்
அரவவாய் ஞமலி மகிழாது மடியின்
பகலுரு உறழ நிலவுக்கான்று விசும்பின்
அகல்வாய் மண்டிலம் நின்றுவிரி யும்மே
திங்கள் கல்சேர்பு கனையிருள் மடியின்

இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங் கியாமத்து அழிதகக் குழறும்
வளைக்கண் சேவல் வாளாது மடியின்
மனைச்செறி கோழி மாண்குரல் இயம்பும்
எல்லாம் மடிந்த காலை ஒருநாள்
நில்லா நெஞ்சத்து அவர்வா ரலரே
அதனால், அரிபெய் புட்டில் ஆர்ப்பப் பரிசிறந்து
ஆதி போகிய பாய்பரி நன்மா
நொச்சி வேலித் தித்தன் உறந்தைக்
கன்முதிர் புறங்காட்டு அன்ன
பன்முட் டின்றால் தோழிநம் களவே" (அகம். 122)

"கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
இரும்புலிக் குருளையில் தோன்றும் காட்டிடை
எல்லி வருநர் களவிற்கு
நல்லை அல்லை நெடுவெண் ணிலவே" (குறுந். 47)

"வாள்வரி வேங்கை வழங்கும் சிறுநெறிஎம்
கேள்வரும் போழ்தில் எழால்வாழி வெண்டிங்காள்
கேள்வரும் போழ்தில் எழாதாய்க் குருஅலியரோ
நீள்வரி நாகத்து எயிறே வாழி வெண்டிங்காள்."
(யா. வி. சூ. 87. மேற்கோள்)

இதுவும் அது.

தானகம் புகாஅன் பெயர்தலின்மையிற் காட்சி ஆசையிற் களம்புக்குக் கலங்கி வேட்கையின் மயங்கிய கையறு பொழுதினும் - அங்ஙனங் காணுவகையிற் பொழுது நனியிகந்து தலைவி குறிதப் பியக்காலுந் தலைவன் குறியிடம் புகுந்தல்லது பெயரானென்பது தான் அறியுமாதலின், ஆண்டுப் புகுந்தவன் தான் வந்து நீங்கினமை அறிதற்கு ஓர் குறி செய்தன்றி வாளாது பெயரா னன்றே? அக் குறிகாணுங் காட்சி விருப்பினாற் றலைவி பிற்றை ஞான்று விடியலிற்சென்று ஆண்டைக் குறிகண்டு கலங்கி, அவனை எதிர்ப்படுதல் வேட்கையளாகிச் செய்வதறியாது மயக்கத்தோடு கையறவு எய்தும்பொழுதின் கண்ணும்:

'தான்' என்றது தலைவனை. இரவுக்குறியினை 'அக'மென்றார், இரவுக்குறி எயிலகத்தது என்பதனால். குறியிற்சென்று நீங்குவனெனவே காட்சி அவன்மேற்றன்றிக் குறிமேற்றாம். குறி; மோதிரம் மாலை முத்தம் முதலியன கோட்டினுங் கொடியினும் இட்டுவைத்தனவாம்; இவை வருத்தத்திற்கு ஏதுவாம். இது விடியல் நிகழுமென்றற்குப் பொழுதென்றான்; எனவே காண்பன விடியலிற் காணுமென்றார். 'மயங்கும்' என்றதனால் தோழியும் உடன்மயங்கும். அது,

"இக்காந்தண் மென்முகைமேல் வண்டடன்று அஃது இம்முகையில்
கைக்காந்தண் மெல்விரலாய் காணிதோ—புக்குச்
செறிந்ததுபோல் தோன்றும் தொடுபொறி ஆம்பண்டு
அறிந்ததொன்று அன்ன துடைத்து."

புகா அக் காலைப் புக்கு எதிர்ப்பட்டுழிப் பகாஅ விருந்தின் பகுதிக்கண்ணும் - உண்டிக்காலத்துத் தலைவியில்லத்துத் தலைவன் புக்கெதிர்ப்பட்டவழி நீக்கி நிறுத்தாத விருந்து ஏற்றுக்கொள்ளும் பகுதிக்கண்ணும் :

எனவே, மனையகம் புகுதற்கு ஒவ்வாத மிக்க தலைவன் புகுந்தால் இஃதொன்றுடைத்தெனத் தேராது தாய் அவனை விருந்தேற்று நீக்கி நிறுத்தற் பகுதியுந் தழீஇயினவாறுயிற்று.

புகாக்காலமாதலிற் பகாவிருந்தென்றான். விடியற்காலமாயிற் றலைவன் புகானெனவும், புகாக்காலத்துப் புக்கனானாயின் அவர் விருந்தேற்றுக்கோடல் ஒருதலையென்று புகும் என்றுங் கொள்க. தலைவி காட்சியாசையிற் கலங்கியதற்கேற்பத் தலைவர்க்குங் காட்சியாசை கூறிற்று. அது,

"சுடர்த்தொடீஇ கேளாய் தெருவில்நாம் ஆடும்
மணற்சிற்றில் காலிற் சிதையா அடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யும் சிறுபட்டி மேலோர்நாள்
அன்னையும் யானும் இருந்தேமா இல்லிரே
உண்ணுநீர் வேட்டேன் எனவந்தாற்கு அன்னை
அடர்பொன் சிரகத்தால் வாக்கிச் சுடரிழாய்

உண்ணுநீர் ஊட்டிவா என்றாள் எனயானும்
தன்னை அறியாது சென்றேன்மற்று என்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்டு
அன்னாய் இவனொருவன் செய்ததுகாண் என்றேனா
அன்னை அலறிப் படர்தரத் தன்னையான்
உண்ணுநீர் விக்கினான் என்றேனா அன்னையும்
தன்னைப் புறம்பழித்து நீவமற்று என்னைக்
கடைக்கணால் கொல்வான்போல் நோக்கி நகைக்கூட்டம்
செய்தான்அக் கள்வன் மகன்." (கலி. 51)

இது புகாக்காலத்துப் புக்கானை விருந்தேற்றுக் கொண்டமை இன்னொருகாலத்துத் தலைவி தோழிக்குக் கூறியவாறு காண்க.

"அன்னை வாழ்க பலவே தெண்ணீர்
இருங்கடல் வேட்டம் எந்தை புக்கெனத்
தார்மணி நெடுந்தேர் நீவி யானும்ஓர்
எல்லமை விருந்தினன் என்ற
மெல்லம் புலம்பனைத் தங்குஎன் றேனே."

இது தோழிகூற்றுமாம்.

ஒன்றிய தோழி யென்றதனால் தோழிகூற்று வந்துழிக்காண்க.

"மண்ணிய சென்ற ஒண்ணுதல் அரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு
ஒன்பதிற்று ஒன்பது களிற்றோடு அவணிறை
பொன்செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரயத்துச் செலீஇயரோ அன்னை
ஒருநாள், நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக ஊரில் துஞ்சலோ இலளே." (குறுந். 292)

இது புகாக்காலத்துத் தலைமைமிக்க தலைவன் புக்கதற்கு விருந்தேலாது செவிலி இரவுந் துயிலாதாளைத் தலைவி முனிந்து கூறியது.

வேளாண் எதிரும் விருந்தின் கண்ணும் - அங்ஙனம் விருந்தாத லேயன்றித் தலைவி வேளாண்மைசெய்ய எதிர்கொள்ளக் கருதுதல் காரணத்தால் தோழி அவனை விருந்தேற்றுக் கோடற் கண்ணும் :

என்றது, தலைவி அவற்கு உபகாரஞ்செய்யக் கருதி அதனைக் குறிப்பாற் கூறத், தோழி அவனை விருந்தாய்த் தங்கென்னும்.

உ - ம்: "நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்
நுணங்குமணல் ஆங்கண் உணங்கப் பெய்ம்மார்
பறிகொள் கொள்ளையர் மறுக உக்க
மீனார் குருகின் கானலம் பெருந்துறை
எல்லை தண்பொழில் சென்றெனச் செலீஇயர்
தேர்பூட்டு அயர வேளய் வார்கோல்
செறிதொடி திருத்திப் பாறுமயிர் நீவிச்
செல்லினி மடந்தைநின் தோழியோடு மனைஎனச்
சொல்லிய அளவை தான்பெரிது கலுழ்ந்து
தீங்கா யினள்இவ ளாயின் தாங்காது
நொதுமலர் போலப் பிரியில் கதுமெனப்
பிறிதொன்று ஆகலும் அஞ்சுவல் அதனால்
சேணின் வருநர் போலப் பேணாய்
இருங்கலி யாணர்எம் சிறுகுடித் தோன்றின்
வல்லெதிர் கொண்டு மெல்லிதின் விளைஇத்
துறையும் மான்றின்று பொழுதே சுறவும்
ஓதம் மல்கலின் மாறா யினவே
எல்லின்று தோன்றல் செல்லா தீம்என
எமர்குறை கூறத் தங்கி ஏமுற
இளையரும் புரவியும் இன்புற நீயும்
இல்லுறை நல்விருந்து ஆகுதல்
ஒல்லுதும் பெருமநீ நல்குதல் பெறினே." (அகம். 300)

இதனுள், 'தான் பெரிது கலுழ்ந்து தீங்காயின' ளெனவே, அக்குறிப்புத் தலைவன் போகாமற் றடுப்பக் கூறியதென்று உணர்ந்து தோழி கூறினாள்.

வாளாண் எதிரும் பிரிவினானும் - வாளாண்மை செய்தற்கு ஒத்த பிரிவு தோன்றியவழியும்:

ஆண்டுத் தலைவிமேற்றுக் கிளவி. மூவகைப் பிரிவினும் பகை வயிற்பிரிவை விதந்தோதி ஓதலும் தூதும் வரைவிடை வைத்துப் பிரிவிற்கும் சிறந்தில என்றுரும். அதிகாரப்பட்டு வருகின்ற களவினுள் அவை நிகழப்பெரு; இதுவாயின் வரைவிடை வைத்துப் பிரியவும் பெறும் அரசர்க்கு இன்றியமையாத பிரிவாகலின் என்பது கருத்து. இப்பிரிவு அரசர்க்கு உரித்தென்பது 'தானே சேறலும்' (தொல்-பொ-27) என்னும் சூத்திரத்தாற் பெறுதும். வாளாண்மைக்கு ஏற்ற பிரிவெனவே, முடியுடை வேந்தரேவலிற் பிரியும் அரசர்கண்ணது இப்பிரிவென்க. சிறுபான்மை அவ்வேந்தற்கு உரித்து, 'வெளிப்படை தானே' (தொல்-பொ-141) என்பதனுள் இப் பிரிவில்லை என்பராதலின். அது,

"பகைவென்று திறைகொண்ட பாய்திண்தேர் மிசையவர்
வகைகொண்ட செம்மலும் வனப்பார விடுவதோ
புகைஎனப் புதல்சூழ்ந்து பூவங்கட் பொதிசெய்யா
முகைவெண்பன் நுதிபொரா முற்றிய கடும்பனி."
(கலி. 31)

இதனுட் பனி யெதிர் பருவங் (அகம் - எ) குறிஞ்சியாகலிற் களவிற் பிரிந்தான் வாளாணெதிரும் வென்றி தோழிக்குத் தலைவி கூறியவாறு. இஃது அவன்வயிற் பரத்தைமை கருதாதது.

நாணு நெஞ்சு அலைப்ப விடுத்தற்கண்ணும் - தலைவிக்கு இன்றியமையாத நாணுத்தான் அவள் நெஞ்சினை அலைத்தலின் அவள் அந் நாணினைக் கைவிடுதற்கண்ணும்; அஃது உடன் போக்கினும் வரைவுகடாவும் வழியும் வேட்கைமீதூர்ந்து நாண் துறந்துரைத்தல் போல்வன.

"அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீடு உழந்தன்று மன்னே இனியே
வான்பூங் கரும்பின் ஓங்குமணல் சிறுசிறை
தீம்புனல் எரிதர வீந்துக் காஅங்குத்
தாங்கும் அளவைத் தாங்கிக்
காம நெரிதரக் கைந்நில் லாதே." (குறுந். 149)

இஃது உடன் போக்கு வலித்தமையின் நாண் துறந்து கூறியது.

வரைதல் வேண்டித் தோழி செப்பிய புரைதீர் கிளவி புல்லிய எதிரும்-வரைதல் விருப்பினுல் தோழி தலைவற்கு! வரைவு கடாய்க் கூறிய புரைதீர் கிளவியைத் தலைவி பொருந்தி நின்றே இயற் பழித்தற்கு மறுத்தாள்போல் நிற்கும் எதிர் மறையையும்:

புரைதீர் கிளவி தலைவனுயர்பிற்கு ஏலாது இயற்பழித்து உரைக்குங் கிளவி. அது, "பாடுகம் வாவாழி தோழி" என்னுங் குறிஞ்சிக் கலியுள்,

"இலங்கும் அருவித்து இலங்கும் அருவித்து
வானின் இலங்கும் அருவித்தே தானுற்ற
சூள்பேணுன் பொய்த்தான் மலை" (கலி. 41)

எனத் தோழி இயற்பழித்த வாய்பாட்டான் வரைவு கடாவ அதனை உடம்பட்டுப் பழித்தற்கு உடம்படாதாள்,

"பொய்த்தற்கு உரியனே பொய்த்தற்கு உரியனே
அஞ்சலோம்ப என்றுரைப் பொய்த்தற்கு உரியனே
குன்றகல் நன்னுடன் வாய்மையில் பொய்தோன்றின்
திங்களுள் தீத்தோன்றி யற்று" (கலி. 41)

எனத் தலைவி இயற்பட மொழிந்து எதிர்மறுத்தவாறு காண்க.

"அருவி வேங்கைப் பெருவரை நாடற்கு
யானெவன் செய்கோ வென்றி யான்அது
நகையென உணரேன் ஆயின்
என்னு குவைகொல் நன்னுதல் நீயே." (குறுந். 96)

இதுவும் இயற்பழித்த தோழிக்குத் தலைவி இயற்பட மொழிந்தது.

வரைவு உடன்படுதலும்- தலைவற்குத் தலைவி தமர்வரைவுடம் பட்டதனைத் தலைவி விரும்புதலையும்:

உ-ம்: "இலையமர் தண்குளவி வேய்ந்த பொதும்பில்
குலையுடைக் காந்தள் இனவண்டு இமிரும்
மலையக நாடனும் வந்தான்மற் றன்னை
அலையு மலைபோயிற் றின்று" (ஐந்திணை, எழு. 3)

"ஒறுப்ப வோவலர் மறுப்பத் தேறலர்
தமியர் உறங்கும் கௌவை இன்றாய்
இனியது கேட்டுஇன் புறுகஇவ் வூரே
முனாஅ, தியானையம் குருகின் கானலம் பெருந்தோடு
அட்ட மள்ளர் ஆர்ப்பிசை வெரூஉம்
குட்டுவன் மாந்தை அன்னஎம்
குழைவிளங் காய்நுதல் கிழவனும் அவனே." (குறுந்.34)

தமரான் ஒறுக்கப்பட்டு ஓவாராய்த் துயருழத்தல் ஆகாதென ஆற்றுவிக்குஞ் சொற்களான் மறுத்துரைப்பவுந் தேறாராய்த் தனித்து இருப்பார் உறக்கம் காரணமாக எழுந்த கௌவை கேளாது வரைந்தெய்திய மாற்றங் கேட்டு இவ்வூரும் இன்புறுக என்பதாம்.

ஆங்கதன் புறத்துப் புரைபட வந்த மறுத்தலொடு தொகைஇ-அவன் வரைவு வேண்டினவிடத்து அவ்வரைவு புறத்ததாகியவழித் தலைவி தன்னுயர்பு உண்டாகத் தோன்றியது மறுத்தலோடே முற் கூறியவற்றைத் தொகுத்து:

'அதன்புறம்' எனவே அதற்கு அயலாகிய நொதுமலர் வரை வாயிற்று. தலைவி தன் குடிப்பிறப்புங் கற்பும் முதலிய உயர்ச் சிக்கு ஏற்ப அதனை மறுத்துத் தலைவன் வரையுமாறு நீ கூறெனத் தோழிக்குக் கூறுமென்றற்குப், 'புரைபட வந்த மறுத்தல்' என்றார்.

"வாரி நெறிப்பட்டு இரும்புறந் தாஅழ்ந்த
வோரிப் புதல்வன் அழுதனன் என்பவோ
புதுவ மலர்தைஇ எமர்என் பெயரால்
வதுவை அயர்வாரைக் கண்டு மதியறியா
வேழையை என்றகல நக்குவந்து ஈயாய்நீ
தோழி அவனுழைச் சென்று;
சென்றியான் அறிவேன் கூறுக மற்றினி;
சொல்லறியாப் பேதை மடவைமற்று எல்லா
நினக்கொரூஉ மற்றென்று அகலகலு நீடின்று
நினக்கு வருவதாக் காண்பாய் அனைத்தாகச்
சொல்லிய சொல்லும் வியங்கொளக் கூறு;
தருமணல் தாழப்பெய் தில்பூவல் ஊட்டி

எருமைப் பெடையோடு எமரீங்கு அயரும்
பெருமணம் எல்லாம் தனித்தே ஒழிய
வரிமணன் முன்றுறைச் சிற்றில் புனைந்த
திருநுதல் ஆயத்தார் தம்முள் புணர்ந்த
ஒருமணம் தோன்றிய மாயின் எனைத்தும்
தெருமரல் கைவிட்டு இருக்கோ வலர்ந்த
விரிநீர் உடுக்கை உலகம் பெறினும்
அருநெறி ஆயர் மகளிர்க்கு
இருமணம் கூடுதல் இல்லியல்பு அன்றே'' (கலி. 114)

என வரும்.

''மள்ளர் குழீஇய விழவி னானும்'' (குறுந். 31)

என்பதுமாம்.

இச்சூத்திரத்து உருபும் எச்சமுமாயவற்றைக் 'கிழவோண் மேன' என்பதனோடு முடித்து, முற்றிற்குக் கிளவியென ஒரு பெயர் வெளிப்படுத்து முடிக்க. புல்லிய எதிரையும் உடன்படுதலையும் மறுத்தலுடன் தொகுத்தது.

கிழவோள் மேன என்மனார் புலவர் - தலைவியிடத்தன கிளவி யென்று கூறுவர் புலவர் என்றவாறு.

(வி - ரை) பிழைத்தவிடத்தும் - தவறிய விடத்தும்,

முழவு முதல் அரைய - முழவு போன்ற பெருத்த அடியை உடைய, சிறு கோல் குடம்பை - சிறிய சுள்ளிகளாகிய கூடு.

கொன்ஊர் - பெருமை பொருந்திய ஊர்.

ஊழ்த்த - உதிர்த்த, பாடு - ஓசை.

ஏறுஇரங்கு - இடிஇடிக்கின்ற, பதம் - காலம்.

இருள்வீ - கருமை பொருந்திய மலர், கழுது - பேய், உயவுதி - வருந்துதி.

புன் கண் கூர் - துன்பம் மிகுதி.

சேட் கழிதல் - நீட்டித்தல்.

பிழி - கள், மல்லல் - வளப்பம், பிணிகோள் - பிணித்தலைக் கொண்ட, சுரித் தோகை - சுருண்டவால், புட்டில் - சதங்கை, முட்டின்று - தடையை உடையது.

எம் கேள் - எம் தலைவன், எழால் - தோன்றாதிருப்பாயாக, அவ்வாறு தோன்றாதிருக்கும் உனக்குப் பாம்பின் பல் பொருந்தா தாகுக. திங்களைப் பாம்பு கொள்ளும் என்னும் வழக்குண்மையால் இவ்வாறு கூறினார்.

கோட்டிலும் - மரக்கொம்பிலும், தொடு செறி - மோதிரம் கை போன்ற காந்தளில் தொடுசெறி தோன்றும் என இயைக்க.

புகாஅ - உணவு, பகா - நீக்கி நிறுத்தாத; நீக்கப்படாத

சிதையா - சிதைத்து, அடைச்சிய - கூந்தலில் அணிந்த, பரிந்து - அறுத்து, பட்டி - நெறியல்லா நெறிக்கண் ஒழுகுவன், இல்லிரே - இல்லத்தில் இருப்பவர்களே, பொன் அடர் சிரகத்தால் - பொற் தகடு அமைந்த பாத்திரத்தரல், வாக்கி - வார்த்து, தெருமந்திட்டு- மனக்கவர்ச்சியுற்று, புறம்பழித்துநீவ - முதுகைப் பலகால் அழித்துத் தடவ,

கடல் வேட்டம் - மீன் பிடித்தல், எல்லமை விருந்தினன் - பகற் கண் வந்த விருந்தினன்.

மண்ணிய - நீராடும் பொருட்டு, பசுங்காய் - பசிய காய், ஒன்பதிற் றொன்பது - எண்பத் தொன்று, வரையா நிரையம் - நீக்குதலில்லாத நரகம், பகை முகம் - போர்க் களம்.

நாள் – விடியற்காலத்தே, ஏஎய் – பாகனை வினவி, பாறு மயிர் – சிதறிய கூந்தல், பிறி தொன்றுதல் – இறந்து படுதல், சேணின் வருநர் போல – தொலைவிலிருந்து வருபவர் போல, வல்லெதிர் கொண்டு - விரைந்து எதிர்கொண்டு, மெல்லிதின் வினை - மென்மையான் இன்சொல் கூறி, மான்றின்று - இரவினால் அறியப் படாதுள்ளது.

புதல் - சிறு தூறு,

சிறு சிறை - சிறிய கரை.

பொருந்தி நின்றே - உடன் பட்டே,

வானின் - மழை பெய்தலால், இலங்கும் - விளங்கும்,

தண் குளவி - குளிர்ந்த காட்டு மல்லிகை, அலையும் அலை - அலைத்தலால் வரும் துன்பம்.

ஒறுப்ப - தமர் ஒறுப்ப, ஓவலர் - நீங்கலர், தேறலர் - தெரியார் யானையம் குருகு - யானையைப் போல் பிளிறும் ஒரு வகைப் பறவை, தோடு - கூட்டம்.

அவ் வரைவு புறத்ததாகிய வழி - தலைவன் விரும்பிய வரைவு வேற்று வரைவு ஆகிய விடத்து.

வாரி - கோதி, ஓதி - கூந்தல், மதியறியா - தான் வரைந்து கொள்ளும் தன்மையை அறியா, நினக்கு ஒரூஉம் - நினக்கு உரித் தன்றி அகலும், வியங்கொள - செய்தற்குரிய வினையென்று கொள்ள. (16)

**நாணமும் மடனும் காமப் புணர்ச்சிக்கு உரியவாமாறு.**

108. காமத் திணையிற் கண்ணின்று வரூஉம்
நாணும் மடனும் பெண்மைய [1]வாதலின்
குறிப்பினும் இடத்தினு மல்லது வேட்கை
நெறிப்பட வாரா அவள்வயி னான.

இஃது உள்ளப்புணர்ச்சிக்கு உரியவாறு மெய்யுறு புணர்ச்சிக் கண்ணும் நிகழுமென்ற நாணும் மடனுங் குறிப்பினும் இடத்தினும் வருமெனக் கூறுதலின், 'அச்சமு நாணும்' (தொல்-பொ-99) என்பதற்குப் புறநடையாயிற்று.

இதனை ஈண்டுக் கூறினான், இடத்தின்கண் வரும் நாணும் மடனுந் தந்தன்மை திரிந்தும் வருமென்பதூஉம், அது கூற்றின் கண் வருமென்பதூஉங் கூற்றுநிகழ்கின்ற இவ்விடத்தே கூற வேண்டுதலின். எனவே, இதுமுதலிய சூத்திரம் மூன்றும் முன்னர்த் தலைவிக்குக் கூற்று நிகழு மென்றற்குக், கூற்றுநிகழுங்கால் நாணும் மடனும் நீங்கக் கூறும் என்று அக்கூற்றிற்கு இலக்கணங் கூறினவேயாயிற்று.

---

1 'ஆகலின்' எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

(இ - ள்) அவள்வயின் ஆன நாணும் மடனும் பெண்மைய ஆதலின் - தலைவியிடத்து உளவாகிய நாணும் மடனும் பெண்மைப் பருவத்தே தேன்றுதலையுடையவாதலின்; காமத்திணையிற் கண்ணின்று குறிப்பினும் வரூஉம் - அப்பருவத்தே தோன்றிய காமவொழுக்கங் காரணமாக அவை கண்ணின்கணின்று குறிப்பினும் வரும்; வேட்கை நெறிப்பட இடத்தினும் வரூஉம்-அன்றி வேட்கை தன்றன்மை திரியாது வழிப்படுதலாலே கருமநிகழ்ச்சிக் கண்ணும் வரும்; அல்லது வாரா - அவ்வீரிடத்துமல்லது அவை வாரா (எ - று)

இயற்கைப்புணர்ச்சிக்கண் உரியவாகக் கூறும் பன்னிரண்டு மெய்ப்பாட்டானுங் குறிப்பின்கண் நாணும் மடனும் நிகழ்ந்தவாறுணர்க.

"ஒருநெறிப் பட்டாங்கு ஓரியன் முடியும்
கரும நிகழ்ச்சி இடமென மொழிப" (தொ.பொ.செய். 198)

என்னுஞ் செய்யுளிற் சூத்திரத்தான் இடமென்றதனைக் கரும நிகழ்ச்சி என்றுணர்க.

அஃதாவது இடந்தலைப்பாடும் பாங்கொடுதழாஅலுந் தோழியிற் புணர்வுமாம் இவற்றின்கண்ணும் நாணும் மடனும் நிகழுமென்றான். இனித் தோழியிற் புணர்வின்கண் வரும் நாணும் மடனுந் தந்தன்மை திரிந்துவருமென மேலிற் சூத்திரத்தாற் கூறுகின்றான்.

(வி - ரை) இடத்தின்கண் - கரும நிகழ்ச்சிக் கண். அச்சமும் நாணும் மடனும் முன்னர் உள்ளப் புணர்ச்சிக்கு உரியவாமாறு கூறினார். ஈண்டு அவை மெய்யுறு புணர்ச்சிக் கண்ணும் உள எனவும், குறிப்பினும் இடத்தினும் தந்தன்மை திரிந்து வருமெனவும் ஈண்டும் கூறுகின்றார். நாணும் மடனும் இயற்கைப் புணர்ச்சிக்கண் குறிப்பினால் வெளிப்படும். இடந்தலைப் பாட்டின் கண்ணும், பாங்கர்க்கூட்டத்தின் கண்ணும் கூற்றினால் வெளிப்படும். தோழியர் கூட்டத்தின் கண் அவை தந்தன்மை திரிந்து வரும் என்பது நச்சினார்க்கினியர் கருத்தாகும். தலைவன் எதிர்ப்பட்டு முன்னிலையாக்கல் முதலாகக் கூறுமாறு போல, தலைவி மாட்டும் நிகழாவோ

எனின் அவள் மாட்டுக் குறிப்பினானதல் சொல்லுதற்குத்தக்க இடத்தினானதல் தோற்றுவதல்லது புலப்பட்டு நிகழா என இளம் பூரணர் உரை காண்பர். (17)

நாணும் மடனும் திரிந்து வருமாறு.

109. காமஞ் சொல்லா நாட்ட மின்மையின்
ஏமுற விரண்டும் உளவென மொழிப.

இது கருமநிகழ்ச்சிக்கண் வரும் நாணும் மடனுந் தந்தன்மை திரிந்துவரு மென்கின்றது.

(இ - ள்) சொல்லாக் காமம் இன்மையின் - கரும நிகழ்ச்சி யிடத்துக் கூற்று நிகழாத காமம் புலனெறி வழக்கின்கணின் மையின்; இரண்டும் ஏமுற நாட்டம் உளவென மொழிப - முற்கூறிய நாணும் மடனுந் தந்தன்மை திரிந்துவர நாட்டுதல் உளவென்று கூறுவர் புலவர் (எ - று).

என்றது, தோழியிற் கூட்டத்துத் தலைவி கூற்று நிகழ்த்துவ ளென்பதூஉம், நிகழுங்கால் நாணும் மடனும் பெரும் பான்மை கெட்டு அக்கூற்று நிகழுமென்பதூஉம், அங்ஙனங் கெடுதலையும் முந்துநூற்கண் ஆசிரியர் நாட்டுதல் உளவென்பதூஉங் கூறிய வாறாயிற்று.

''தேர்ஏ முற்றன்று நின்னினும் பெரிதே'' (கலி. 74)

''பேரேமுற் றாய்போல முன்னின்று விலக்குவாய்'' (கலி. 113)

என்றாற்போல்வன மயக்கம் உணர்த்தின.

இனி நாணும் மடனுங்கெட்ட கூற்றுத் தோழியை நோக்கிக் கூறுமென மேற்கூறுகின்றான்.

(வி - ரை) தேர் ஏமுற்றன்று - தேர் மயங்கியது, ஈண்டுத்தேர் என்பது ஆகு பெயரால் பாகனை உணர்த்திற்று. பேர் ஏமுற்றாய் போல - பெரிதும் பித்தேறினாற் போல. இவ்வாறு தலைவி கூறலின் மயக்கம் உணர்த்தின என்றார். மயக்கம் - நாணும், மடனும், கெட்டுக் கூறுதல்.

வேட்கையுரையாத கண் உலகத்தின்மையால் தலைவன் ஏமுறற் பொருட்டு நாணும் மடனும் உளவாம் என்றவாறு.

இதனாற் சொல்லியது மேல் தலைவிக்கு இயல்பாய்க் கூறப் பட்ட அச்சமும் நாணும் மடனும் என்பனவற்றுள் வேட்கையால் அச்சம் நீங்கின வழி நாணும் மடனும் நீங்காவோ என்றையுற்றார்க்கு அவை தலைமகற்கு ஏமமாதற் பொருட்டு நீங்காவாம் என்பதூஉம், வேட்கைக் குறிப்புக் கண்ணினான் அறியலா மென்பதூஉம் உணர்த்தியவாறு. என்னை ? நாணும் மடனும் இல்லாதாரைத் தலைமக்கள் அவமதிப்பாராதலால் என விளக்கம் காண்பர் இளம் பூரணர். (18)

நாணமும் மடனும் நிகழாத கூற்றுப் பெரும்பாலும்
தலைவிக்கும் தோழிக்கும் உரித்தாதல்.

110. சொல்லெதிர் மொழிதல் அருமைத்தாகலின்
அல்ல கூற்றுமொழி அவள்வயி னான.

இது நாணும் மடனும் பெரும்பான்மை நிகழாத கூற்றுத் தோழிக்குத் தலைவி கூறுமென்கின்றது.

(இ - ள்) எதிர் சொல் - அங்ஙனம் நாணும் மடனும் நீங்கிய சொல்லை; அவள் வயின் மொழிதல் அருமைத்து அல்ல ஆகலின் - தோழியிடத்துக் கூறுதல் அருமையுடைத்தல்ல வாகையினாலே; கூற்றுமொழி ஆன் - குறிப்பானன்றிக் கூற்றாற் கூறும் மொழி தலைவிக்குப் பொருந்தின. (எ - று).

எதிர்தல் தன்றன்மை மாறுபடுதல், 'ஒன்றிய தோழியொடு' (தொ-பொ-41) என அகத்திணையிற் கூறுதலானும், 'தாயத்தி னடையா' (தொல்-பொ-221) எனப் பொருளியலிற் கூறுதலானும், அவள் வயின் நாணும் மடனும் நீங்கிய சொல்லைக் கூறுதலும் பொருந்து மென்றான்: அவை முற்காட்டிய உதாரணங்களுட் ''கூடுதல் வேட்கையாற் குறிபார்த்து'' எனவும், ''வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்டு'' எனவும், ''காமநெறிதரக் கைந்நில் லாதே'' எனவுங் கூறியவாற்றானும், மேற்கூறுகின்ற உதாரணங் களானும், நாணும் மடனும் நீங்கிக் கூற்று நிகழ்ந்தவாறுணர்க.

'சூத்திரத்துட்பொரு ளன்றியும்...........படுமே' (தொல்-பொ-மர-103) என்பதனுல், இவ்விலக்கணம் பெறுதற்கு, இம்மூன்று சூத்திரத்திற்கும் மாட்டுறுப்புப்படப் பொருள் கூறினும்.

இனிக் கூற்று நிகழுங்கால், நாணும் மடனும் பெண்மைய வாதலிற், குறிப்பினும் இடத்தினுமன்றி வேட்கை நெறிப்பட வாராவென்று பொருள்கூறிற், காட்டிய உதாரணங்கட்கு மாறு பாடாகலானுஞ், சான்ருேர் செய்யுட்களெல்லாங் குறிப்பும் இடனு மன்றிப் பெரும்பான்மை கூற்ருய் வருதலானும், ஆசிரியர் தலைவன் கூற்றுந் தலைவிகூற்றுந் தோழிகூற்றுஞ் செவிலிகூற்றுமெனக் கூற்றுஞ் சேர்த்து நூல்செய்தலானும் அது பொருளன்மையுணர்க.

(வி - ரை) மேற் கூறியவாறு தலைவி நாணும் மடனும் கெடக் கூறுதல் தோழியிடத்தாம் என்பது நச்சினர்க்கினியர் கருத்து. காரணம் தோழியும் தானும் வேறல்லள் ஆதலின். இந்நூற்பாவில் பிறருரையாகக் கூறி மறுப்பது இளம்பூரணர் உரையேயாம். அவ் வுரைதாமும் மேலைய நூற்பாவிற்கு அவர் கூறியதாம். இளம் பூரணர் இந்நூற்பாவிற்குத் தலைவன் இயற்கைப் புணர்ச்சி கருதிக் கூறும் சொல்லெதிர் தான் வேட்கைக் குறிப்பினளாயினும் அதற் குடம் பட்ட நெறியைக் கூறுதல் அருமையுடைத்தாதலான் அதற்கு உடம்பாடல்லாத கூற்று மொழி தலைவியிடத்தன என்றவாறு, என்றது இசைவில்லாதாரைப் போலக் கூறுதல் என விளக்கம் காண்பர். (19)

### தலைவி கூற்றுக்கள்

111. மறைந்தவற் காண்டல் தற்காட் டுறுதல்
நிறைந்த காதலிற் சொல்லெதிர் மழுங்கல்
வழிபாடு மறுத்தன் மறுத்தெதிர் கோடல்
பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல்
கைபட்டுக் கலங்கினு நாணுமிக வரினும்
இட்டுப்பிரி விரங்கினும் அருமைசெய் தயர்ப்பினும்
வந்தவழி யெள்ளினும் விட்டுயிர்த் தழுங்கினும்
நொந்துதெளி வொழிப்பினும் அச்சம் நீடினும்
பிரிந்தவழிக் கலங்கினும் பெற்றவழி மலியினும்

வருந்தொழிற் கருமை வாயில் கூறினும்
கூறிய வாயில் கொள்ளாக் காலையும்
மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழித் தோழிக்கு
நினைத்தல் சான்ற அருமறை யுயிர்த்தலும்
உயிராக் காலத் துயிர்த்தலும் உயிர்செல
வேற்றுவரைவு வரினது மாற்றுதற் கண்ணும்
நெறிபடு நாட்டத்து நிகழ்ந்தவை மறைப்பினும்
பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கி
ஒருமைக் கேண்மையி னுறுகுறை தெளிந்தோள்
அருமை சான்ற நாலிரண்டு வகையில்
பெருமை சான்ற வியல்பின் கண்ணும்
பொய்தலை யடுத்த மடலின் கண்ணும்
கையறு தோழி கண்ணீர் துடைப்பினும்
வெறியாட் டிடத்து வெருவின் கண்ணும்
குறியி னொப்புமை மருடற் கண்ணும்
வரைவுதலை வரினும் களவறி வுறினும்
தமர்தற் காத்த காரண மருங்கினும்
தன்குறி தள்ளிய தெருளாக் காலை
[1]வந்தனன் பெயர்ந்த வறுங்கள நோக்கித்
தன்பிழைப் பாகத் தழீஇத் தேறலும்
வழுவின்று நிலைஇய வியற்படு பொருளினும்
பொழுது மாறும் புரைவ தன்மையின்
அழிவுதலை வந்த சிந்தைக் கண்ணும்
காமஞ் சிறப்பினும் அவனளி சிறப்பினும்
ஏமஞ் சான்ற [2]உவகைக் கண்ணும்
தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தையும்
அன்னவு முளவே யோரிடத் தான.

இதனுள் தலைவிகூற்று நிகழ்த்துமாறு கூறுகின்றான். சில கூற்றுக்களுள் தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தைமையும்

---

1. வத்தவன், 2. உவகைத் - எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

பட நிகழ்த்தவும் பெறுமென்கின்ருன். 'அவன்வயின்' எனவே 'தன்'னென்றது தலைவியையாம்; உரிமை களவிலே கற்புக்கடம் பூண்டொழுகல்; எனவே, புலவியுள்ளத்தாளாகவும் பெறுங் களவி னென்பது கருதிப் பரத்தையுமுள என்ருன்; ஊடலும் உணர்த் தலும் வெளிப்பட நிகழாமையின் இவை புலவிப் போலி. பரத்தை, அயன்மை. அவன்கட் பரத்தைமையின்றேனும் காதன்மிகுதியான் அங்ஙனங் கருதுதல் பெண்தன்மை. உம்மை எதிர்மறையாகலின் இவ்விரண்டும் இலவாதலே பெரும் பான்மை.

(இ – ள்) மறைந்து அவற் காண்டல் - தலைவன் புணர்ந்து நீங்குங்கால் தன் காதன்மிகுதியால் அவன் மறையுந்துணையும் நோக்கிநின்று அங்ஙனம் மறைந்தவனைக் காண்டற்கண்ணுந் தோழிக்குக் கூற்ருற் கூறுதலுள:

உ–ம்: "கழிப்பூக் குற்றும் கானல் அல்கியும்
வண்டல் பாவை வரிமணல் அயர்ந்தும்
இன்புறப் புணர்ந்தும் இளிவரப் பணிந்தும்
தன்துயர் வெளிப்படத் தவறில் நம்துயர்
அறியா மையின் அயர்ந்த நெஞ்சமொடு
செல்லும் அன்னே மெல்லம் புலம்பன்
செல்வோன் பெயர்புறத்து இரங்கி முன்னின்று
தகைஇய சென்றஎன் நிறையின் நெஞ்சம்
எய்தின்று கொல்லோ தானே எய்தியும்
காமம் செப்ப நாணின்று கொல்லோ
உதுவ காணவர் ஊர்ந்த தேரே
குப்பை வெண்மணல் குவவுமிசை யானும்
எக்கர்த் தாழை மடல்வயி னானும்
ஆய்கொடிப் பாசடும் பரியவூர் பிழிபு
சிறுகுடிப் பரதவர் பெருங்கடன் மடுத்த
கடுஞ்செலற் கொடுந்திமில் போல
நிவந்துபடு தோற்றமொடு இகந்துமா யும்மே."
(அகம். 330)

'அறியாமையின் அயர்ந்த நெஞ்சமொடு' என்பது தன் வயினுரிமை; 'இக்ந்து மாயும்' என்பது அவன்வயிற் பரத்தைமை.

தற்காட்டுறுதல் - தன்னை அவன் காறைவகை நாணன் மறைந்து ஒழுகினுந் தன் பொலிவழிவினை அவற்குக் காட்டல் வேண்டுதற்கண்ணும் : அது,

"இன்னள் ஆயினள் நன்னுதல் என்றவர்த்
துன்னச் சென்று செப்புநர்ப் பெறினே
நன்றுமன் வாழி தோழிநம் படப்பை
நீர்வார் பைம்புதல் கலித்த
மாரிப் பீரத் தலர்சில கொண்டே." (குறுந். 98)

'இன்னளாயின' ளென்றது தற்காட்டுறுதல். 'செப்புநர்ப் பெறினே' யென்பதனுற் களவாயிற்று; கற்பிற்கு வாயில்கள் செப்புவார் உளராதலின், இதற்கு இரண்டும் உள.

நிறைந்த காதலிற் சொல் எதிர்மழுங்கல் - தலைவி காதன் மிகுதியால் தலைவன் பரத்தைமையை எதிர்கூற நினைந்து கூற்றெய் தாது குறைபடுதற்கண்ணும்:

உ - ம்: "பிறைவனப் பிறந்த நுதலும் யாழநின்
இறைவரை நில்லா வளையு மறையாது
ஊரலர் தூற்றும் கௌவையு நாணிட்டு
உரையவற்கு உரையாம் ஆயினும் இரைவேட்டுக்
கடுஞ்சூல் வயவொடு கானல்எய் தாது
கழனி ஒழிந்த கொடுவாய்ப் பேடைக்கு
முடமுதிர் நாரை கடல்மீன் ஒய்யும்
எல்லம் புலம்பல் கண்டுநிலை செல்லாக்
கரப்பவும் காப்பவும் கைம்மிக்கு
உரைத்த தோழி உண்க ணீரே." (நற்றிணை, 263)

இஃது 'யாம் உரையாமாயினுங் கண் உரைத்தன' என்றலின் இரண்டுங் கூறினள்.

வழிபாடு மறுத்தல் - வருத்தமிகுதியால் தலைவனை வழிபடுதலை மறுத்துக் கூறுமிடத்தும் :

உ - ம்: "என்ன ராயினும் இனிநினைவு ஒழிக
அன்ன வாக உரையல் தோழியாம்
இன்ன மாகநத் துறந்தோர் நட்பெவன்

மரஞர் உடுக்கை மலையுறை குறவர்
அறியாது அறுத்த சிறியிலைச் சாந்தம்
வறனுற்ரூர முருக்கிப் பையென
மரம்வறி தாகச் சோர்ந்துக் காங்குஎன்
அறிவும் உள்ளமும் அவர்வயிற் சென்றென
வறிதா லிகுளேஎன் யாக்கை இனியவர்
வரினு நோய்மருந்து அல்லர் வாராது
அவண ராகுக காதலர் இவணம்
காமம் படரட வருந்திய
நோய்மலி வருத்தம் காணன்மார் எமரே'' (நற்றிணை,64)

''உள்ளின் உள்ளம் வேமே உள்ளாது
இருப்பினெம் அளவைத் தன்றே வருத்தி
வான்ரூேய் வற்றே காமம்
சான்ரூேர் அல்லர்யா மரீஇ யோரே'' (குறுந். 102)

என வரும்.

''நீஉடம் படுதலின் யான்றர வந்து
குறிநின் றனனே குன்ற நாடன்
இன்றை அளவை சென்றைக் களன்றி
கையும் காலும் ஒய்வன ஒழுகத்
தீயுறு தளிரின் நடுங்கி
யாவதும் இல்லையான் செயற்குரி யதுவே.'' (குறுந்.383)

இத் தோழி கூற்றே 'சென்றைக்க' வென்றதனுல் தலைவி மறுத்தமை பெற்றும்.

மறுத்து எதிர்கோடல் - அங்ஙனம் வழிபாடு மறுத்த தலைவியே அவனை ஏற்றுக்கோடலை விரும்பியக்கண்ணும் : அது;

''களவை யஞ்சில் காமம் எய்க்கும்
எள்ளற விடினே உள்ளது நாணே
பெருங்களிறு வாங்க முறிந்துநிலம் படாஅ
நாருடை ஒசிய லற்றே
கண்டிசின் தோழிஅவ ருண்டஎன் நலனே.'' (குறுந். 112)

இது 'நாணேயுள்ளது கற்புப்போம்' என்றலின் மறுத்தெதிர் கோடலாம்.

பழி தீர் முறுவல் சிறிதே தோற்றல் - தன் கற்பிற்கு வரும்பழி தீர்ந்த தன்மையால் தன்கண் தோன்றிய மகிழ்ச்சியைச் சிறிதே தோழிக்குத் தோற்று வித்தற்கண்ணும் :

தலைவனால் தோன்றிய நோயும் பசலையும் முருகனால் தீர்ந்த தென்று அவன் கேட்பிற் கற்பிற்குப் பழியாமாதலிற் 'பழி' யென்றார்

உ - ம்: "அணங்குடை நெடுவரை உச்சியின் இழிதரும்
கணங்கொள் அருவிக் கான்கெழு நாடன்
மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்லல்
இதுவென அறியாள் மறுவரல் பொழுதில்
படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடுவேள் பேணத் தணிகுவள் இவள்என
முதுவாய்ப் பெண்டிர் அதுவாய் கூறக்
களன்நன் கிழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்து
உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்
ஆர நார வருவிடர்த் ததைந்த
சாரல் பல்பூ வண்டுபடச் சூடிக்
களிற்றிரை தெரீஇய பார்வல் ஒதுக்கின்
ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல
நன்மனை நெடுநகர்க் காவலர் அறியாமைத்
தன்னசை உள்ளத்து நன்னசை வாய்ப்ப
இன்னுயிர் குழைய முயங்குதொறு மெய்ம்மலிந்து
நக்கனென் அல்லனோ யானே எய்த்த
நோய்தணி காதலர் வரஈண்டு
ஏதில் வேலற்கு உலந்தமை கண்டே." (அகம். 22)

இதனுட் பழிதீர அவன் வந்து உயிர்தளிர்ப்ப முயங்கி நக்க நிலையைத் தோழிக்குத் தலைவி கூறியவாறு காண்க:

கைப்பட்டுக் கலங்கினும் - தலைவி குறிப்பினன்றி எதிர்ப் பட்ட தலைவன் ஒருவழி அவளை அகப்படுத்தவழிக் காட்சி விருப்பினளா யினும் அப்பொழுது அவள் கலங்கினும்:

எனவே, காட்சி விருப்பினை மீதூர்ந்து கலக்கம் புலப்பட்டது தலைவன்வயிற் பரத்தைமை கருதி.

"கொடியவும் கோட்டவு நீரின்றி நிறம்பெறப்
பொடியழல் புறந்தந்த பூவாப்பூம் பொலங்கோதைத்
தொடிசெறி யாப்பமைஅறி (கலி. 54)

என்னுங் குறிஞ்சிக்கலியுள் "அதனு லல்லல் களைந்தனன் றோழி" எனக் கைப்பட்டுக் கலங்கிய வருத்தத்தைக் 'களைந்தன'னெனத் தலைவியுரையெனத் தோழிக்கு உரைத்தற்கட் கூறியவாறு காண்க. இவ்வுதாரணம் ஆண்டுக் காட்டுதும்.

"உறுகழி மருங்கி லோதமொடு மலர்ந்த" (அகம். 230)

என்னும் பாட்டுத் தலைவன் இதனைக் கூறியது.

நாணு மிக வரினும் - தலைவனை எதிர்ப்பட்ட தலைவி தன் பெரு நாணுடைமை கூறித் தலைவனை ஏற்றுக்கொள்ளாது நிற்பினும்:

உ-ம்: "விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி
மறந்தனம் துறந்த காழ்முளை யகைய
நெய்பெய் தீம்பால் பெய்தினிது வளர்ப்ப
நும்மினும் சிறந்தது நுவ்வை ஆகுமென்று
அன்னை கூறினள் புன்னையது சிறப்பே
அம்ம நாணுது நும்மொடு நகையே
விருந்தில் பாணர் விளரிசை கடுப்ப
வலம்புரி வான்கோடு நரலும் இலங்குநீர்த்
துறைகெழு கொண்கநீ நல்கின்
நிறைபடு நீழல் பிறவுமார் உளவே." (நற்றிணை, 172)

இதனுள் 'அம்ம நாணுதும்' எனப் புதிதுவந்ததோர் நாணு மிகுதி தோன்ற மறுத்துரைத்தலின், தன்வயி னுரிமையும் அவன் வயிற் பரத்தைமையுங் கூறினுள்.

இட்டுப் பிரிவு இரங்கினும் - சேணிடையின்றி இட்டிதாகப் பிரிந்துழித் தலைவி இரங்கினும்:

கற்பினுட் சொல்லாத பிரிதலையும் இட்டுப் பிரிவென்ப, களவு போல நிகழ்பொருள் உணர்த்திப் பிரிதலருமையின்.

உ-ம்: "யானே ஈண்டை யேனேஎன் நலனே
ஆனு நோயொடு கானல் அஃதே
துறைவன் தம்மூ ரானே
மறையல ராகி மன்றத்து அஃதே." (குறுந். 97)

'தம்மூரான்' என்றலின் ஓதன் முதலிய பிரிவின்றி அணித்தாய வழிப் பிரிந்தானென அவ்விரண்டும் பயப்பக் கூறியவாறு காண்க.

"சிறுவெண் காக்கைச் செவ்வாய்ப் பைந்தோடு
எறிதிரைத் திவலை ஈர்ம்புற நனைப்பப்
பனிபுலந்து உறையும் பல்பூங் கானல்
விரிநீர்ச் சேர்ப்பன் நீப்பின் ஒருநம்
இன்னுயிர் அல்லது பிறிதொன்று
எவனோ தோழி நாம்இழப் பதுவே." (குறுந். 334)

இதுவும் அது.

இவை களவினுட் புலவிப்போலியாம்.

அருமை செய்து அயர்ப்பினும் - முற்கூறிய இட்டுப் பிரிவே யன்றித் தலைவன் தன்னை அரியனாகச் செய்துகொண்டு தன்னை மறப்பினும்:

அது தண்டாதிரத்தலை (தொல்-பொ-102) முனிந்த மற்றைய வழித் தலைவன் தானும் அரியனாய் மறந்தான் போன்று காட்டினும் அவ்விரண்டுங் கூறுதலாம்.

உ-ம்: "தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்
தாமறிந்து உணர்க என்ப மாதோ
வழுவப் பிண்ட நாப்பண் ஏமுற்று
இருவெதிர் ஈன்ற வெற்றிலைக் கொழுமுளை
சூன்முதிர் மடப்பிடி நாண்மேய லாரும்
மலைகெழு நாடன் கேண்மை பலவின்
மாச்சினை துறந்த கோண்முதிர் பெரும்பழம்
விடரளை வீழ்ந்துக் காங்குத் தொடர்பறச்
சேணும் சென்றுக் கன்றே அறியா
தேகல் அடுக்கத்து இருண்முகை இருந்த
குறிஞ்சி நல்லூர்ப் பெண்டிர்
இன்னும் ஓவார் என்றிறத் தலரே." (நற்றிணை, 116)

தீங்கு செய்தாரையும் பொறுக்கிற்பார் நம்மைத் துறத்தலின் நாம் அரியேமாகியது பற்றித் தாமும் அரியராயினர் போலுமென அவ்விரண்டுங் கூறினாள்.

"நெய்தல் படப்பையின் நிறைகழித் தண்சேர்ப்பன்
கைதைசூழ் கானலில் கண்ட நாள் போலானல்
செய்த குறியும்பொய் யாயினவால் சேயிழாய்
ஐயகொல் ஆன்ருர் தொடர்பு." (திணை.ஐம்.41)

இதுவும் அது.

வந்தவழி எள்ளினும் - பெரிதாகிய இடையீட்டினுள் அரிதாகத் தலைவன் வந்தஞான்றும் பெருதஞான்றைத் துன்பமிகுதியாற் பெற்றதனையுங் கனவுபோன்றுகொண்டு இகழ்ந்திருப்பினும் :

உ - ம்: "மானடி அன்ன கவட்டிலை அடம்பின்
தார்மணி அன்ன வொண்பூக் கொழுதி
ஒண்டொடி மகளிர் வண்டல் அயரும்
புள்ளிமிழ் பெருங்கடல் சேர்ப்பனை
உள்ளேன் தோழி படீஇயர்என் கண்ணே" (குறுந்.243)

"வாராக்கால் துஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞர் உற்றன கண்" (குறள். 1179)

"இன்கண் உடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்கண் உடைத்தால் புணர்வு." (குறள். 1152)

'வரிற்றுஞ்சா' வெனவும் 'புன்கணுடைத்து' எனவும் வரவும் பிரிவும் அஞ்சி இரண்டும் நிகழக்கூறினாள். இது முன்னிலைப் புறமொழி,

"கண்டிரண் முத்தம் பயக்கும் இருமுந்நீர்ப்
பண்டங்கொள் நாவாய் வழங்கும் துறைவனை
முண்டகக் கானலுள் கண்டேன் எனத்தெளிந்தேன்
நின்ற உணர்விலா தேன்." (ஐந். எழு. 61)

இது முன்பு இன்பந் தருவனென உணர்ந்துநின்ற உணர்வு ஈண்டில்லாத யான் புணர்ச்சி வருத்தந்தருமென்று தெளிந்தேனென்ருளென்க.

விட்டு உயிர்த்து அழுங்கினும் - கரந்த மறையினைத் தலைவி தமர்க்கு உரைத்தற்குத் தோழிக்கு வாய்விட்டுக்கூறி, அக்கூறிய தனையே தமர்கேட்பக் கூருது தவிரினும்.

உயிர்த்தல் - கூறுதல்.

உ - ம்: ''வலந்த வள்ளி மரன்ஓங்கு சாரல்
கிளர்ந்த வேங்கைச் சேணெடும் பொங்கர்ப்
பொன்னேர் புதுமலர் வேண்டிய குறமகள்
இன்னா இசைய பூசல் பயிற்றலின்
ஏகல் அடுக்கத்து இருளளைச் சிலம்பின்
ஆகொள் வயப்புலி ஆகுமஃது எனத்தம்
மலைகெழு சீறூர் சிலம்பக் கல்லெனச்
சிலையுடை இடத்தர் போதரு நாடன்
நெஞ்சமர் வியன்மார் புடைத்தென அன்னைக்
கறிவிப் பேங்கோல் அறிவியேம் கொல்என
இருபாற் பட்ட சூழ்ச்சி ஒருபால்
சேர்ந்தன்று வாழி தோழி யாக்கை
இன்னுயிர் கழிவ தாயினு நின்மகள்
ஆய்மலர் உண்கண் பசலை
காம நோய்எனச் செப்பா தீமே.'' (அகம், 52)

இது சிறைப்புறம்.

நொந்து தெளிவு ஒழிப்பினும் - வரைவு நீட்டித்துத் தலைவன் சூளுற்றவழி அதற்கு நொந்து தெளிவிடை விலங்கினும் :

உ - ம்: ''மன்றத்து உறுகல் கருங்கண் முசுவுகளும்
குன்றக நாடன் தெளித்த தெளிவினை
நன்றென்று தேறித் தெளிந்தேன் தலையளி
ஒன்றுமற்று ஒன்றும் அனைத்து'' (ஐந்திணை, எழு. 9)

என வரும்.

''எம்மணங்கினவே.'' (குறுந்தொகை. 53) என்பது தலைவி கூறக் கேட்டுத் தோழி கூறியது. அதுவும் இதனுற் கொள்க.

அச்சம் நீடினும் - தெய்வம் அச் சூளுறவிற்கு அவனை வருத்து மென்றுந் தந்தை தன்னையர் அறிகின்ருரோ வென்றுங் கூட்ட

முண்மை உணர்ந்த தோழிக்கும் உண்மை கூறுதற்கும் அஞ்சிய அச்சம் நீட்டிப்பினும்:

உ - ம்: ''மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள்
கொடியோர்த் தெறூஉம் என்ப யாவதும்
கொடியர் அல்லர்எம் குன்றுகெழு நாடர்
பசைஇப் பசந்தன்று நுதலே
ஞெகிழ ஞெகிழ்ந்தன்று தடமென் தோளே'' (குறுந். 87)

''மென்றினை மேய்ந்த சிறுகண் பன்றி
வன்கல் அடுக்கத்துத் துஞ்சு நாடன்
எந்தை யறிதல் அஞ்சிகொல்
அதுவே தெய்ய வாரா மையே'' (ஐங்குறு. 261)

''புனையிழை நோக்கியும் புனலாடப் புறஞ்சூழ்ந்து
மணிவரி தைஇயுநம் இல்வந்து வணங்கியும்
நினையுபு வருந்துமின் நெடுந்தகை திறத்திவ்வூர்
இனையள் என்று எடுத்தோதற்கு அனையையோ நீயென
வினவுதி யாயின் விளங்கிழாய் கேளினி;
செவ்விரல் சிவப்பூரச் சேட்சென்றாய் என்றவன்
பௌவநீர்ச் சாய்க்கொழுதிப் பாவைதந் தனைத்தற்கோ
கௌவைநோய் உற்றவர் காணாது கடுத்தசொல்
ஒவ்வாவென்று உணராய்நீ ஒருநிலையே உரைத்ததை;
ஒடுங்கியாம் புகலொல்லேம் பெயர்தர அவன்கண்டு
நெடுங்கய மலர்வாங்கி நெறித்துத்தந்து அனைத்தற்கோ
விடுந்தவர் விரகின்ற எடுத்தசொல் பொய்யாகக்
கடிந்ததும் இலையாய்நீ கழறிய வந்ததை;
வரிதேற்றாய் நீயென வணங்கிறை அவன்பற்றித்
தெரிவேய்த்தோள் கரும்பெழுதித் தொய்யில்செய்து
அனைத்தற்கோ
புரிபுநம் மாயத்தார் பொய்யாக எடுத்தசொல்
உரிதென உணராய்நீ உலமந்தாய் போன்றதை;
என வாங்கு
அரிதினி ஆயிழாய் அதுதேற்றல் புரிபொருங்கு
அன்றுநும் வதுவையுள் அமர்செய்வது இன்றீங்கே
தானயந்து இருந்ததுஇவ் வூராயின் எவன்கொலோ
நாம்செயற் பால தினி.'' (கலி. 76)

என வரும்.

பிரிந்தவழிக் கலங்கினும் - களவு அலராகாமல் யான் பிரிந்துழித் தலைவி கலங்குவளென்று அஞ்சித் தலைவன் பிரியாது உறைதலிற் பிரிவைக் கருதப்பெருத தலைவி அவ்வாறன்றிப் பிரிந்துழிக் கலங்கினும்

உ-ம்: "மின்னுச்செய் கருவிய பெயன்மழை தூங்க
விசும்பாடு அன்னம் பறைநிவந் தாங்குப்
பொலம்படைப் பொலிந்த வெண்தேர் ஏறிக்
கலங்குகடல் துவலை ஆழி நனைப்ப
இனிச்சென் றனனே இடுமணல் சேர்ப்பன்
யாங்கறிந் தன்றுகொல் தோழிஎன்
தேங்கமழ் திருநுதல் ஊர்தரும் பசப்பே" (குறுந். 205)

"குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ
வண்டுதரு நாற்றம் வளிகலந் தீயக்
கண்களி பெறூஉம் கவின்பெறு காலை
எல்வளை ஞெகிழ்த்தோர்க்கு அல்லல் உறீஇயர்
சென்ற நெஞ்சம் செய்வினைக்கு உசாவாய்
ஒருங்குவரன் அசையொடு வருந்தும் கொல்லோ
அருளான் ஆதலின் அழிந்திவண் வந்து
தொன்னலன் இழந்தஎன் பொன்னிற நோக்கி
ஏதி லாட்டி இவளெனப்
போயின்று கொல்லோ நோய்தலை மணந்தே"
(நற்றிணை. 56)

"வருவது கொல்லோ தானே வாராது
அவணுறை மேவலின் அமைவது கொல்லோ
புனவர் கொள்ளியில் புகல்வரு மஞ்ஞை
இருவி இருந்த குருவி வெருவுறப்
பந்தாடு மகளிரில் படர்தரும்
குன்றுகெழு நாடனொடு சென்றஎன் நெஞ்சே"
(ஐங்குறு. 295)

"பொரிப்புறப் பல்லிச் சினைஈன்ற புன்னை
வரிப்புற வார்மணன்மேல் ஏறித்—தெரிப்புறத்
தாழ்கடல் தண்சேர்ப்பன் தார்அகல நல்குமேல்
ஆழியாற் காணுமோ யாம்" (ஐந்திணை.ஐம்.43)

என வரும்.

பெற்றவழி மலியினும் - தலைவி இடையீடின்றித் தலைவனை எதிர்ப்படப் பெற்றஞான்று புதுவது மலியினும்:

வரைவு நீட்டித்த காலத்துப் பெற்றவழி மலிவை வெளிப் படக் கூறுதலும், வரைவு நீட்டியாதவழிப் பெற்றவழி மலிவை வெளிப்படுத்தாமையும் உணர்க.

உ-ம்: "இன்னிசை உருமொடு கனைதுளி தலைஇ
மன்னுயிர் மடிந்த பானாள் கங்குல்
காடுதேர் வேட்டத்து விளிவிடம் பெறுஅது
வரியதள் படுத்த சேக்கைத் தெரியிழைத்
தேனாறு கதுப்பின் கொடிச்சியர் தந்தை
கூதிரில் செறியும் குன்ற நாட
வனைந்துவரல் இளமுலை ஞெமுங்கப் பல்லூழ்
விளங்குகொடி முன்கை வளைந்துபுறம் சுற்ற
நின்மார்பு அடைதலின் இனிதா கின்றே
நும்மில் புலம்பினும் உள்ளுதொறு நலியும்
தண்வரல் அசைஇய பண்பில் வாடை
பதம்பெறு கல்லா இடம்பார்த்து நீடிய
மனைமரம் ஒசிய ஒற்றிப்
பலர்மடி கங்குல் நெடும்புற நிலையே." (அகம்.58)

முயக்கம் இனிதென மகிழ்ந்து கூறுவாள் நும்மில் புலம்பால் வாடைக்கு வருந்தினே மென்றலின் இரண்டுங் கூறினாள்.

"அம்ம வாழி தோழி நலமிக
நல்ல வாயின அளியமென் தோள்கள்
மல்லல் இருங்கழி மல்கும்
மெல்லம் புலம்பன் வந்த மாறே" (ஐங்குறு. 120)

"அம்ம வாழி தோழி பன்மாண்
நுண்மணல் அடைகரை நம்மோடு ஆடிய
தண்ணம் துறைவன் மரீஇ
அன்னை அருங்கடி வந்துநின் றோனே" (ஐங்குறு. 115)

எனவரும்.

இவை தோழிக்குக் கூறியன. 'பெற்றவழி மலியினும்' எனப் பெறுபொருள் இன்னதெனவும் இன்னார்க்குக் கூறுவ தெனவும் வரையாது கூறவே, பிற பெற்று மலிந்து பிறர்க்குக் கூறுவனவுங் கொள்க.

"அம்ம வாழி தோழி அன்னைக்கு
உயர்நிலை உலகமும் சிறிதால் அவர்மலை
மாலைப் பெய்த மணங்கமழ் உந்தி
வேர்குலை நிவந்த முழுமுதல் காந்தள்
மெல்லிலை குழைய முயங்கலும்
இல்லுய்த்து நடுதலும் கடியா தோட்கே." (குறுந். 361)

இது பெற்றவழி மகிழ்ந்து தோழிக்கு உரைத்தது. இதற்கும் இரண்டுங் கூறினாள்.

வரும் தொழிற்கு அருமை வாயில் கூறினும் - தலைவன் இடை விடாது வருதற்கு, ஆண்டு நிகழும் ஏதம் பலவாற்றானும் உளதாம் அருமையை, வாயிலாகிய தோழி கூறினுந், தலைவிக்குக் கூற்று நிகழ்தலுள;

அது,

"நள்ளென்று அன்றே யாமம் சொல்லவிந்து
இனிதடங் கினரே மாக்கண் முனிவின்று
நனந்தலை உலகமும் துஞ்சும்
ஓர்யான் மன்ற துஞ்சா தேனே." (குறுந். 6)

இதனுட் பொழுது சென்றதில்லை யென்றும், மாக்கள் இன்னுந் துயின்றிலரென்றும் அருமையை வாயில் கூறியவழித் தலைவி யாம மும் நள்ளென்றும் மாக்களுந் துயின்றும் வந்திலரென வருந்திக் கூறியவாறு காண்க.

நாம் ஏவிய தொழில் ஏற்றுக்கொண்டு வருகின்றவன், ஒரு காரணத்தானன்றி வாராதொழியுமோ வென்று தலைவி கொள்ளு மாறு கூறுமென்றற்குத் தொழிலென்றார்.

கூறிய வாயில் கொள்ளாக் காலையும் - தலைவற்குக் குறை நேர்ந்து வாயிலாகிக் குறைநயப்பக் கூறியவழியும் பிறவழியுந்,

தோழி கூற்றினைத் தலைவி ஏற்றுக்கொள்ளாத காலத்துக்கண்ணும்: வாயில் – தோழி.

உ - ம்: ''தெருவின்கண் காரணம் இன்றிக் கலங்குவார்க் கண்டுநீ
வாரண வாசிப் பதம்பெயர்த்தல் ஏதில
நீநின்மேல் கொள்வது எவன்'' (கலி. 60)

எனத் தோழிகூற்றினை மறுத்தது.

''தோளே தொடிநெகிழ்ந் தனவே கண்ணே
வாளீர் வடியின் வடிவிழந் தனவே
நுதலும் பசலை பாயின்று திதலைச்
சில்பொறி அணிந்த பல்காழ் அல்குல்
மணியேர் ஐம்பான் மாயோட்கு என்று
வெவ்வாய்ப் பெண்டிர் கவ்வை தூற்ற
நாமுறு துயரம் செய்யலர் என்னும்
காமுறு தோழி காதலம் கிளவி
இரும்புசெய் கொல்லன் வெவ்வுலைத் தெளித்த
தோய்மடல் சின்னீர் போல
நோய்மலி நெஞ்சிற்கு ஏமமாம் சிறிதே.'' (நற்றிணை, 133)

இது தோழிகூற்றினை நன்கு மதியாது கூறினாள்.

மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழித் தோழிக்கு நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தலும் - காப்பு மிகுதிக்கண் மனையகப் பட்டுக் கலங்கி உணர்வு அழிந்தவழித், தலைவி ஆராய்ச்சியுடைத் தாகிய அருமறையினைத் தோழிக்குக் கூறுதலும் உள:

உ - ம்: ''கேளாய் எல்ல தோழி அல்கல்
வேணவா நலிய வெய்ய உயிரா
வேமான் பிணையின் வருந்தினென் ஆகத்து
உயர்மருங்கு அறிந்தனள் போல அன்னை
துஞ்சாயோஎன் குறுமகள் என்றலின்
சொல்வெளிப் படாமை மெல்லவென் நெஞ்சில்
படுமழை பொழிந்த பாறை மருங்கில்
சிரல்வாய் உற்ற தளவில் பரலவல்
கான்கெழு நாடற் படர்ந் தோர்க்குக்
கண்ணும் படுமோ என்றிசின் யானே.'' (நற்றிணை, 61)

இதனுள் துஞ்சாயோவெனத் தாய் கூறியவழி, மனைப்பட்டுக் கலங்கியவாறும், படர்ந்தோர்க்கென மறையுயிர்த்த வாறுங், கண் படாக் கொடுமை செய்தானெனப் பரத்தைமை கூறியவாறுங் காண்க.

''பொழுதும் எல்லின்று பெயலும் ஓவாது
கழுதுகண் பனிப்ப வீசும் அதன்றலைப்
புலிப்பற் றாலிப் புதல்வற் புல்லி
அன்னாய் என்னும் அன்னையு மன்னோ
என்மலைந் தனன்கொல் தானே தன்மலை
ஆர நாறு மார்பினன்
மாரி யானையின் வந்துநின் றனனே'' (குறுந். 161)

''பலவின் பழம்பெற்ற பைங்கண் கடுவன்
எலவென்று இணைபயிரும் ஏகல்சூழ் வெற்பன்
புலவுங்கொல் தோழி புணர்வறிந்து அன்னை
செலவும் கடிந்தாள் புனத்து.'' (திணை. ஐம். 10)

இவையும் அது. இன்னும் 'மனைப்பட்டுக் கலங்கி' யென்றதனாற் காப்புச் சிறைமிக்க கையறுகிளவிகளுங் கொள்க.

''சிறுவெள்ளாம் குருகே சிறுவெள்ளாம் குருகே
துறைபோ கறுவைத் தூமடி யன்ன
நிறங்கிளர் தூவிச் சிறுவெள்ளாம் குருகே
எம்மூர் வந்தெம் ஒண்துறைத் துழைஇச்
சினைக்கெளிற் றார்கையை அவரூர்ப் பெயர்தி
அனையவன் பினையோ பெருமற வியையோ
ஆங்கண் தீம்புனல் ஈங்கண் பரக்கும்
கழனி நல்லூர் மகிழ்நர்க்கென்
இழைநெகிழ் பருவரல் செப்பா தோயே'' (நற்றிணை. 70)

''கூர்வாய்ச் சிறுகுருகே குண்டுநீ ருள்கிடந்த
ஆரல் இரைகருதி நித்தலு நிற்றியால்
நேரிணர்ப் புன்னைக்கீழ்க் கொண்கன் வருமெனப்
பேருண்கண் நீர்மல்க நின்றுண்மற்று என்னையோ''

"ஒண்டுவி நாராய்நின் சேவலு நீயுமாய்
வண்டூது பூங்கானல் வைகலும் சேறிரால்
பெண்டூது வந்தேம் எனஉரைத்துஎம் காதலரைக்
கண்டீர் கழறியக்கால் கானல் கடிபவோ."

இவை காப்புச் சிறைமிக்க கையறுகிளவி.

உயிராக் காலத்து உயிர்த்தலும் - தலைவனோடு தன்றிறத்து ஒருவரும் ஒன்று உரையாதவழித், தனதாற்றாமையால் தன்னோடும் அவனோடும் பட்டன சில மாற்றந் தலைவி தானே கூறுதலும் உள:

தோழி மறைவெளிப்படுத்துக் கோடற்கு வாளாது இருந்துழித், தலைவன் தன்மேல் தவறிழைத்தவழி, இரண்டும்படக் கேட்போரின்றியுங் கூறுதலாம்.

உ-ம்: "உறைபதி அன்றித் துறைகெழு சிறுகுடிக்
கானலம் சேர்ப்பன் கொடுமை எற்றி
ஆனாத் துயரமொடு வருந்திப் பானாள்
துஞ்சா துறைநரொ டுசாவாத்
துயிற்கண் மாக்களொடு நெட்டிரா உடைத்தே"
(குறுந். 145)

"தழையணி அல்குல் தாங்கல் செல்லா
நுழைசிறு நுசுப்பிற்கு எவ்வ மாக
அம்மெல் லாக நிறைய வீங்கிக்
கொம்மை வரிமுலை செப்புடன் எதிரின்
யாங்கா குவள்கொல் பூங்குழை என்னும்
அவல நெஞ்சமோடு உசாவாக்
கவலை மாக்கட்டிப் பேதை ஊரே" (குறுந். 159)

என வரும்.

உயிராதாள் தோழியாயினள்; அவள் தலைவி கூறுவன கேட்டற்குப் பொய்த்துயில் கொள்ளும்.

உயிர்த்தலுமெனப் பொதுப்படக் கூறியவதனால் தோழிக்குக் கூறுவனவுங் கொள்க.

"பேணுப பேணூர் பெரியோர் என்பது
நாணுத்தக்கு அன்றது காணும் காலை
உயிரோர் அன்ன செயிர்தீர் நட்பின்
நினக்கியான் மறைத்தல் யாவது மிகப்பெரிது
அழிதக் கன்றால்தானே கொண்கன்
யான்யாய் அஞ்சுவல் எனினும் தானே
பிரிதல் சூழான் மன்னே இனியே
கான லாய மறியினும் ஆனா
தலர்வது அன்றுகொல் என்னும் அதனால்
புலர்வது கொல்லவன் நட்பெனா
அஞ்சுவல் தோழிஎன் நெஞ்சத் தானே" (நற்றிணை. 72)

என வரும்.

உயிர்செல வேற்று வரைவு வரின் அது மாற்றுதற் கண்ணும்- இறந்துபாடு பயக்குமாற்றால் தன்றிறத்து நொதுமலர் வரையக் கருதியஞான்று அதனை மாற்றுதற்கண்ணும்:

உ-ம்: "அன்னை வாழிவேண்டு அன்னை புன்னைப்
பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவனை
என்னை என்றும் யாமே இவ்வூர்
பிறிதொன் றாகக் கூறும்
ஆங்கும் ஆக்குமோ வாழிய பாலே" (ஐங்குறு. 110)

"பலவில் சேர்ந்த பழமார் இனக்கலை
சிலைவில் கானவன் செந்தொடை வெரீஇச்
செருவுறு குதிரையில் பொங்கிச் சாரல்
இருவெதிர் நீடமை தயங்கப் பாயும்
பெருவரை அடுக்கத்துக் கிழவோன் என்று
மன்றை அன்ன நட்பினன்
புதுவோர்த் தம்மஇவ் வழுங்கல் ஊரே" (குறுந். 385)

என வரும்.

நெறிபடு நாட்டத்து நிகழ்ந்தவை மறைப்பினும் - தோழி கூட்டமுண்மை வழக்கியலால் நாடுகின்ற காலத்துக், கண் சிவப்பும் நுதல் வேறுபாடும் முதலிய மெய்வேறுபாடு நிகழ்ந்துழி, அவற்றைத்

தோழி அறியாமலுஞ் செவிலி அறியாமலுந் தலைவி தான் மறைப் பினும்:

உ - ம்: "கண்ணும் தோளும் தண்ணறும் கதும்பும்
ஒண்டொடி மகளிர் தண்தழை அல்குலும்
காண்டொறும் கவினை என்றி அதுமற்று
ஈண்டு மறந்தனையால் பெரிதே வேண்டாய்
நீஎவன் மயங்கினை தோழி
யாயினும் சிறந்தன்று நோய்பெரிது உழந்தே."

காதன் மிகுதியாற் கவினையெனற் பாலாய், வேறுபட்டனை யென்று எற்றுக்கு மயங்கினையெனத் தலைவி தன் வருத்தம் மறைத்தாள்.

"துறைவன் துறந்துஎனத் துறையிருந்து அழுதஎன்
மம்மர் வாண்முகம் நோக்கி அன்னைநின்
அவலம் உரையென் றனளே கடல்என்
பைஞ்சாய்ப் பாவை கொண்டு
வண்டலம் சிறுமனை சிதைத்ததுஎன் றேனே."

இது செவிலிக்கு மறைத்தது.

ஒருமைக் கேண்மையின் உறுகுறை தெளிந்தோள் - தான் அவளென்னும் வேற்றுமையில்லாத நட்பினாலே தோழி தனக்கு வந்து கூறிய குறையை; பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கித் தெளிந்தோள் - முன்னர்த் தெய்வப்புணர்ச்சி நிகழ்ந்தமை நோக்கி அது காரணத்தான் முடிப்பதாகத் தெளிந்த தலைவி; அருமை சான்ற நால் இரண்டுவகையில் - தான் முன் அருமை அமைந்துநின்ற நிலையால் தலைவன் தன்கண் நிகழ்த்திய மெய்தொட்டுப் பயிறன் முதலிய எட்டினாலே; பெருமை சான்ற இயல்பின்கண்ணும் - தனக்கு உளதாம் பெருமை கூறுதற்கு அமைந்ததோர் இயல்பின்கண்ணும்:

என்றது, தலைவன் இத்துணை இளிவந்தன செய்யவும் யான் நாணும் மடனும் நீங்கிற்றிலேனென்று தன் பெருமை தோழிக்குக் கூறுதலாம்.

உ - ம்: "மின்னொளிர் அவிரறல் இடைபோழும் பெயலேபோல்
பொன்னகை தகைவகிர் வகைநெறி வயங்கிட்டுப்
போழிடை இட்ட கமழ்நறும் பூங்கோதை

இன்னகை இலங்கெயிற்றுத் தேமொழித் துவர்ச்செவ்வாய்
நன்னுதால் நினக்கொன்று கூறுவாம் கேளினி;
நில்லென நிறுத்தான் நிறுத்தே வந்து
நுதலும் முகனும் தோளும் கண்ணும்
இயலும் சொல்லும் நோக்குப நினைஇ
ஐதேய்ந் தன்று பிறையும் அன்று
மைதீர்ந்து அன்று மதியும் அன்று
வேயமன் றன்று மலையும் அன்று
பூவம்அன் றன்று சுனையும் அன்று
மெல்ல இயலு மயிலும் அன்று
சொல்லத் தளரும் கிளியும் அன்று;
எனவாங்கு
அனையன பலபா ராட்டிப் பையென
வலையர் போலச் சோர்பதன் ஒற்றிஎன்
நெஞ்சு நெகிழ்ந்த செவ்வி காணூஉப்
புலையர் போலப் புன்கண் நோக்கித்
தொழலும் தொழுதான் தொடலும் தொட்டான்
காழ்வரை கல்லாக் கடுங்களிறு அன்னோன்
தொழூஉம் தொடூஉம்அவன் தன்மை
ஏழைத் தன்மையோ இல்லை தோழி.'' (கலி. 55)

இதனுட் 'பாராட்டி' யெனப் பொய்பாராட்டலுஞ்; 'சோர்பத னொற்றி'யென நெஞ்சு நெகிழ்ந்த செவ்வி கூறுதலிற் கூடுதலுறு தலும், 'புலையர்போல நோக்கி'யென நீடு நினைந்திரங்கலும், 'தொழலுந் தொழுதா' னென இடம்பெற்றுத் தழாஅலுந், 'தொடலுந் தொட்டா'னென மெய்தொட்டுப் பயிறலும், அவனிகழ்த் தியவாறுங் கூறி, மதத்தாற் பரிக்கோலெல்லையில் நில்லாத களிறு போல, வேட்கை மிகுதியான் அறிவினெல்லையில் நில்லாதவனெனத் தீராத் தோற்றமும் ஒருவாற்றாற் கூறித், தனக்குப் பெருமைசான்ற இயல்பைப் பின்னொருகால் தோழிக்குக் கூறியவாறு காண்க.

இனித் தலைவர்க்குப் பெருமை அமைந்தன எட்டுக்குண மென்று கூறி, அவற்றை,

''இளமையும் வனப்பும் இல்லொடு வரவும்
வளமையும் தறுகணும் வரம்பில் கல்வியும்
தேசத்து அமைதியும் மாசில்சூழ்ச்சியும்''
(பெருங். 1: 36-89-91)

எனப் பொருள் கூறின், 'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்' (தொல்-பொ-75) என்னுஞ் சூத்திரத்திற் கூறிய எண்கள் அவை கூறிய வடநூல்களில் வேறே எண்ணுதற்கு உரியன சில இல்லாமல் எண்ணினுற்போல, ஈண்டும் இளமை முதலிய எட்டும் ஒழிய வேறெண்ணுதற்கு உரியன எட்டுந் தலைவற்கின்ருகக் கூறல் வேண்டும்; ஈண்டு அவ்வாறின்றித் தலைவற்கு உரியனவாகப் பல வகைகளான் எவ்வெட்டுளவாகக் கூறக்கிடந்தமையின் அங்ஙனம் ஆசிரியர் இலக்கணங் கூருரென மறுக்க. அன்றியும் எட்டும் எடுத்து ஓதுபவென்றும் உதாரண மின்றென்றும் மறுக்க.

இனி 'முட்டுவயிற்கழறன், முனிவு மெய்ந்நிறுத்தல், அச்சத் தினகறல், அவன் புணர்வு மறுத்தல், தூது முனிவின்மை, துஞ்சிச் சேர்தல், காதல் கைம்மிகல், கட்டுரையின்மை' என்பன எட்டுமென்று (தொல்-பொ-271) அவற்றை ஈண்டுக்கொணர்ந்து பொருள் கூறிற், கூற்றுக் கூறுகின்றவிடத்து மெய்ப்பாடு கூறின் ஏனைமெய்ப்பாடு களுங் கூற்றுக் கூறுகின்றவிடத்தே கொணர்ந்து கூற்றினுள் அடங்கக் கூறல்வேண்டுமென்று மறுக்க.

பொய்தலை அடுத்த மடலின்கண்ணும் - பொய்யினைத் தலைக் கீடாகவுடைய மடலின் கண்ணும் :

அது மடன்மா கூறியவழி அம்மடலினை மெய்யெனக் கொண்டாள் அதனைப் பொய்யெனக் கோடலாம்.

உ - ம்: "வெள்ளாம் குருகின் பிள்ளையும் பலவே
அவையினும் பலவே சிறுகரும் காக்கை
அவையினும் அவையினும் பலவே குவிமடல்
ஓங்கிரும் பெண்ணை மீமிசைத் தொடுத்த
தூங்கணங்கு உரீஇக் கூட்டுள சினையே."

இது மடன்மா கொள்ளக் குறித்தோனைப் பறவைக்குழாந் தம்மை மடலூர விடாவென விளையாட்டுவகையாற் பொய்யென்று இகழ்ந்தது.

கையறு தோழி கண்ணீர் துடைப்பினும் - தலைவியை ஆற்று வித்துக் கையற்ற தோழி தலைவிகண்ணீரைத் துடைப்பினும் :

உ - ம்: "யாமெங் காமம் தாங்கவும் தாம்தம்
கெழுதகை மையின் அழுதன தோழி
கன்ருற்றுப் படுத்த புன்றலைச் சிருஅர்
மன்ற வேங்கை மலர்பத நோக்கி
ஏருது இட்ட ஏமப் பூசல்
விண்டோய் விடரகத்து இயம்பும்
குன்ற நாடன் கண்ட எம் கண்ணே." (குறுந். 241)

இது தன் ஆற்ருமைக்கு ஆற்ருத தோழியை ஆற்றுவிக்கின்ருள் அவ்விரண்டுங் கூறியது.

வெறியாட்டிடத்து வெருவின்கண்ணும் - தலைவி வேறுபாடு எற்றினுயிற்றென்று வேலனை வினய் வெறியாட்டு எடுத்துழித், தலைவி அஞ்சும் அச்சத்தின்கண்ணும் :

அது பண்டேயுந் தன்பரத்தைமையான் நெகிழ்ந்தொழுகுவான், இன்று நம் ஆற்ருமைக்கு மருந்து பிறிது முண்டென் றறியின், வரைவு நீடுமென்று அஞ்சுதல்.

உ - ம்: "பனிவரை நிவந்த பயங்கெழு கவாஅன்
துனியில் கொள்கையொடு அவர்நமக் குவந்த
இனிய உள்ளம் இன்ஞ வாக
முனிதக நிறுத்த நல்கல் எவ்வம்
சூருறை வெற்பன் மார்புறத் தணிதல்
அறிந்தனள் அல்லள் அன்னை வார்கோல்
செறிந்திலங்கு எல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்
கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்
பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ
முருகன் ஆரணங்கு என்றலின் அதுசெத்து
ஓவத் தன்ன வினைபுனை நல்லில்
பாவை அன்ன பலராய் மாண்கவின்
பண்டையில் சிறக்களன் மகட்குஎனப் பரைஇக்
கூடுகொள் இன்னியம் கறங்கக் களன்இழைத்து
ஆடணி அயர்ந்த அகன்பெரும் பந்தர்
வெண்போழ் கடம்பொடு சூடி யின்சீர்
ஐதமை பாணி இரீஇக் கைபெயராச்

செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்
வெறியயர் வெங்களம் பொற்ப வல்லோன்
பொறியமை பாவையின் தூங்கல் வேண்டின்
என்னுங் கொல்லோ தோழி மயங்கிய
மையல் பெண்டிர்க்கு நொவ்வ லாக
ஆடிய பின்னும் வாடிய மேனி
பண்டையில் சிறவா தாயின் இம்மறை
அலரா காமையோ அரிதே அஃதாஅன்று
அறிவர் உறுவிய அல்லல்கண் டருவி
வெறிகமழ் நெடுவேள் நல்குவன் எனினே
செறிதொடி உற்ற செல்லலும் பிறிதெனக்
கான்கெழு நாடன் கேட்பின்
யான்உயிர் வாழ்தல் அதனினும் அரிதே.'' (அகம். 98)

'இன்னுவாக்கி நிறுத்த எவ்வ' மென்பது அவன்வயிற் பரத்தைமை. 'உயிர்வாழ்தல் அரிது' என்பது தன்வயினுரிமை. அவை வெறியஞ்சியவழி நிகழ்ந்தன.

குறியின் ஒப்புமை மருடற் கண்ணும் - இரவுக்குறி வருந் தலைவன் செய்யுங்குறி பிறிதொன்றனுன் நிகழ்ந்து தலைவன் குறியை ஒத்தவழி, அதனை மெய்யாக உணர்ந்து தலைவி மயங்கிய வழியும்: புனலொலிப்படுத்தன் முதலிய அவன் செயற்கையா னன்றி இயற்கையான் நிகழ்ந்துழிக் குறியினுெப்புமையாம்.

உ-ம்: ''மெய்யோ வாழி தோழி சாரன்
மைப்பட்டு அன்ன மாமுக முசுக்கலை
யாற்றப் பாயாத் தப்பல் ஏற்ற
கோட்டொடு போகி யாங்கு நாடன்
தான்குறி வாயாத் தப்பற்குத்
தாம்பசந் தனஎன் தடமென் தோளே.'' (குறுந். 121)

கோடு ஆற்றப் பாயாது வேண்டியவாறு பாய்ந்து அதனை முறித்த முசுப்போல, நாங் குறிபெறுங் காலத்து வாராது புள்தாமே வெறித்து இயம்புந்துணையும் நீட்டித்துப் பின்பு வருதலிற், குறி வாயாத்தப்பு அவன்மேல் ஏற்றி, அதற்குத் தோள் பசந்தன வென்று, பின்னொருநாள் அவன் வந்துழித் தோழியை நோக்கி இவ்வரவு மெய்யோவெனவே, அவ் விரண்டும் பெற்றும்.

''அணிகடல் தண்சேர்ப்பன் தேர்ப்பரிமா பூண்ட
மணியரவம் என்றெழுந்து போந்தேன்—கணிவிரும்பு
புள்ளரவம் கேட்டுப் பெயர்ந்தேன் ஒளியிழாய்
உள்ளுருகு நெஞ்சினேன் யான்'' (ஐந், ஐம். 50)

இதுவும் அது.

வரைவு தலைவரினும் - களவு வெளிப்பட்ட பின்னராயினும் முன்னராயினும் வரைந்தெய்துதற் செய்கை தலைவன்கண் நிகழினும் ஆண்டு முற்காலத்து நிகழ்ந்த ஆற்றுமை பற்றி அவ்விரண்டுங் கூறும்:

உ-ம்: ''நன்னாள் தலைவ ரும்எல்லை நமர்மலைத்
தம்நாண்தாம் தாங்குவார் என்னோற் றனர்கொல்;
புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றில்
நனவில் புணர்ச்சி நடக்குமாம் அன்றோ
நனவில் புணர்ச்சி நடக்கலும் ஆங்கே
கனவில் புணர்ச்சி கடிதுமாம் அன்றோ'' (கலி. 39)

என நாண்தாங்கி ஆற்றுவாரும் உளரோவெனவுங், கனவிற் புணர்ச்சி கடிதுமெனவும் இரண்டும் கூறினாள்.

''கொல்லைப் புனத்த அகில்சுமந்து கற்பாய்ந்து
வானின் அருவி ததும்பக் கவினிய
நாடன் அயனுடையன் என்பதனால் நீப்பினும்
வாடல் மறந்தன தோள்.'' (ஐந்திணை, எழு. 2)

'நயனுடையன்' என்பதனால் வரைவு தலைவந்தமையும், 'நீப்பினு' மென்பதனால் அவன்வயிற் பரத்தைமையுங் கூறினாள்.

களவு அறிவுறினும் - தம் ஒழுகலாறு புறத்தார்க்குப் புலனாகத் தலைவன் ஒழுகினும்: ஆண்டும் அவ்விரண்டுங் கூறும்.

உ-ம்: ''நாண்மழை தலைஇய நன்னெடும் குன்றத்து
மால்கடல் திரையின் இழிதரும் அருவி
அகலிரும் கானத்து அல்கணி நோக்கித்
தாங்கவும் தகைவரை நில்லா நீர்சுழல்
போதுஎழின் மழைக்கண் கலுழ்தலின் அன்னை

எவன்செய் தனையோநின் இலங்கெயிறு உண்கென
மெல்லிய இனிய கூறலின் வல்விரைந்து
உயிரினும் சிறந்த நாணு நனிமறந்து
உரைக்கல்உய்ந் தனனே தோழி சாரல்
காந்தள் ஊதிய மணிநிறத் தும்பி
தீந்தொடை நரம்பின் நிமிரும்
வான்றோய் வெற்பன் மார்பணங்கு எனவே.''

(நற்றிணை, 17)

யான் அவனை எதிர்ப்பட்ட இடங்கண்டு அழுதேனாக அதனைக் கண்டு நீ எவன் செய்தனையென வினைய அன்னைக்கு, இம்மறையினைக் கூறலுற்றுத் தவிர்ந்தேனெனத், தாய் களவறிவுற்றவாறு கூறக் கருதி, அவன்வயிற் பரத்தைமை கூறிற்று.

தமர் தற்காத்த காரண மருங்கினும் - அங்ஙனங் களவறிவுற்ற அதன்றலைச், செவிலி முதலிய சுற்றத்தார் தலைவியைக் காத்தற்கு ஏதுவாகிய காரணப்பகுதிக்கண்ணும்:

ஆண்டுந் தமரை நொந்துரையாது அவன்வயிற் பரத்தைமை கூறும்.

காரணமாவன தலைவி தோற்றப்பொலிவும், வருத்தமும் அயலார் கூறும் அலருமாம்.

உ-ம்: ''அடும்பின் ஆய்மலர் விரைஇ நெய்தல்
நெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்தல்
ஓரை மகளிர் அஞ்சியீர் ஞெண்டு
கடலில் பரிக்கும் துறைவனொடு ஒருநாள்
நக்குவிளை யாடலும் கடிந்தன்று
ஐதெமக்கு அம்ம மெய்தோய் நட்பே'' (குறுந். 401)

இது வேறுபாடு கண்டு இற்செறித்தமை தன்னுள்ளே கூறியது.

''பெருநீர் அழுவத்து எந்தை தந்த
கொடுமீன் உணங்கல் படுபுள் ஓப்பி
எக்கர்ப் புன்னை இன்னிழல் அசைஇச்
செக்கர் ஞெண்டின் குண்டளை கெண்டி

ஞாழல் ஓங்குசினைத் தொடுத்த கொடுங்கழித்
தாழை வீழ்கயிற்று ஊசல் தூங்கிக்
கொண்டல் இடுமணல் குரவை முனையின்
வெண்டலைப் புணரி ஆயமொடு ஆடி
மணிப்பூம் பைந்தழை தைஇ அணித்தகைப்
பல்பூங் கானல் அல்கினம் வருதல்
கௌவை நல்லணங்கு உற்ற இவ்வூர்க்
கொடிதறி பெண்டிர் சொற்கொண்டு அன்னை
கடிகொண் டனளே தோழி பெருந்துறை
எல்லையும் இரவும் என்னுது கல்லென
வலவன் ஆய்ந்த வண்பரி
நிலவுமணல் கொட்குமோர் தேருண்டு எனவே" (அகம்.20)

"பெருங்கடல் திரையது சிறுவெண் காக்கை
களிற்றுச் செவியன்ன பாசடை மயக்கிப்
பனிக்கழி துழவும் பானுள் தனித்தோர்
தேர்வந்து பெயரும் என்ப அதற்கொண்டு
ஒரு மலைக்கும் அன்னை பிறரும்
பின்னுவிடு கதுப்பின் மின்னிழை மகளிர்
இளையரும் முதியரும் உளரே
அலையாத் தாயரொடு நற்பா லோரே." (குறுந். 246)

இவை பிறர் கூற்றுல் தமர் காத்தன.

"முலைமுகம் செய்தன முள்ளெயிறு இலங்கின
தலைமுடி சான்ற தண்டழை உடையை
அலமரல் ஆயமொடு யாங்கணும் புடாஅல்
மூப்புடை முதுபதி தாக்கணங்கு உடைய
காப்பும் பூண்டிசின் கடையும் போகலை
பேதை அல்லை மேதையம் குறுமகள்
பெதும்பைப் பருவத்து ஒதுங்கினை புறத்தென
ஒண்சுடர் நல்லில் அருங்கடி நீவித்
தன்சிதை வறிதல் அஞ்சி இன்சிலை
ஏறுடை இனத்த நாறுயிர் நவ்வி
வலைகாண் பிணையில் போகி ஈங்கோர்
தொலைவில் வெள்வேல் விடலையொடு என்மகள்

இச்சுரம் படர்தந் தோளே ஆயிடை
அத்தக் கள்வர் ஆதொழு வறுத்தெனப்
பிற்படு பூசலின் வழிவழி ஓடி
மெய்த்தலைப் படுதல் செய்யேன் இத்தலை
நின்னொடு வினவுவல் கேளாய் பொன்னொடு
புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி
ஒலிக்குழைச் செயலை உடைமாண் அல்குல்
ஆய்சுளைப் பலவின் மேய்கலை உதிர்த்த
துய்த்தலை வெண்காழ் பெறூஉம்
கற்கெழு சிறுகுடிக் கானவன் மகளே'' (அகம். 7)

என்றன தோற்றப் பொலிவாற் காத்தன. இதற்கும் அவ் விரண்டும் உள.

தன்குறி தள்ளிய தெருளாக் காலை வந்தனன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித் தன் பிழைப்பாகத் தழீஇத் தேறலும் - தலைவி தன்னாற் செய்யப்பட்ட குறியிடங்கள் இற்செறிப்பு முதலிய காரணங் களான் இழக்கப்பட்டனவற்றை, இவை இழக்குமென முந்துறவே உணராத காலத்து, முற்கூறிய குறியிடமே இடமாக வந்து தலைவன் கூடாது பெயர்தலால், தமக்குப் பயம் படாத வறுங்களத்தை நினைந்து, அதனைத் தலைவற்கு முந்துறவே குறிபெயர்த்திடப்பெறாத தவறு தன்மேல் ஏற்றிக் கொண்டு, தோழியையும் அது கூறிற்றி லளெனத் தன்னொடு தழீஇக் கொண்டு, தலைவி தெளிதற்கண்ணும் : ஆகவே அவன் தவற்றைத் தன் தவறு ஆக்கினளாம். தழீஇ, தோழியைத் தழீஇ. அத்தவறு அவன்கட் செல்லாமல் தனதாகத் தேறினாள்.

உ- ம்: ''விரியிணர் வேங்கை வண்டுபடு கண்ணியன்
தெரியிதழ்க் குவளைத் தேம்பாய் தாரன்
அஞ்சிலை இடவ தாக வெஞ்செலற்
கணைவலம் தெரிந்து துணைபடர்ந் துள்ளி
வருதல் வாய்வது வான்றோய் வெற்பன்
வந்தனன் ஆயின் அந்தளிர்ச் செயலைத்
தாழ்வில் ஓங்குசினைத் தொடுத்த வீழ்கயிற்று
ஊசன் மாறிய மருங்கும் பாய்புடன்

ஆடா மையிற் கலுழ்பில தேறி
நீடிதழ் தலைஇய கவின்பெறு நீலம்
கண்ணென மலர்ந்த சுனையும் வண்பறை
மடக்கிளி எடுத்தல் செல்லாத் தடக்குரற்கு
உவவுப் பொறை இறுத்த கோற்றலை இருவிக்
கொய்தொழி புனமும் நோக்கி நெடிதுநினைந்து
பைதலன் பெயர்குவன் கொல்லோ ஐதேய்கு
அயவெள் அருவி சூடிய உயர்வரைக்
கூஉங் கண்ணதுஎம் ஊரென
ஆங்கதை யறிவுறன் மறந்திசின் யானே.'' (அகம். 38)

இதனுள் ஊசன்மாறுதலும் புனமுந் தன்குறி தள்ளிய இடன்; மறந்திசின் என்றது தெருளாக்காலை, கூஉங்கண்ணது ஊரென உணர்த்தாமையின்; இடையீடுபடுவதன்றி அவன்கண்தவறுண்டோ வெனத் தன் பிழைப்பாகத் தழீஇயினள். இது சிறைப்புறமாக வரைவுகடாயது.

வழுவின்றி நிலைஇய இயற்படு பொருளினும் - வழுப்படுத்தலின்றி நின்ற இயற்பட மொழிதற் பொருண்மைக் கண்ணும் :

வழுவின்றி நிலைஇய என்றதனால் தோழி இயற்பழித் துழியே இயற்பட மொழிவதென்க. தலைவன் வழுவைத் தோழி கூறியதற்குப் பொருது தான் இயற்பட மொழிந்த தல்லது, தன் மனத்து அவன் பரத்தைமை கருதுதலுடைமையிற் பொருள் வேறு குறித்தாளாம்.

உ - ம்: ''அடும்பமல் நெடுங்கொடி உள்புதைந்து ஒளிப்ப
வெண்மணல் விரிக்கும் தண்ணம் துறைவன்
கொடியன் ஆயினும் ஆக
அவனே தோழி என் உயிர்கா வலனே.'' (ஐங். 144)

''கொடிநிலை நெகிழச் சாஅய்த் தோள்அவர்
கொடுமை கூறின வாயினும் கொடுமை
நல்வரை நாடற்கு இல்லை தோழிஎன்
நெஞ்சிற் பிரிந்ததூஉம் இலரே தங்குறை
நோக்கம் கடிந்ததூஉம் இலரே
நிலத்தினும் பெரிதே நேர்ந்தவர் நட்பே''

என வரும்.

இஃது அகன்று உயர்ந்து தாழ்ந்தவற்றுட் பெரிதாகிய நட்புடையவன் எனக்கூறியது. ஒருகாலைக்கு ஒருகாற் பெருகுமென்றுங் கூறினாளாயினும், நமது நட்புப்போல் ஒரு காலேபெருத்ததில்லையென இரண்டுங் கூறினாள்.

பொழுதும் ஆறும் புரைவது அன்மையின் அழிவு தலைவந்த சிந்தைக்கண்ணும் - தலைவியுந் தோழியுந் தலைவன் இரவுக்குறி வருங்காற் பொழுதாயினும் நெறியாயினும் இடையூருகிப் பொருந்துதலின்மையின், அழிவு தலைத்தலை சிறப்ப வந்த ஆராய்ச்சிக் கண்ணும்:

ஆண்டும் அவ்விரண்டும் நிகழும்.

உ - ம்: "மன்றுபாடு அவிந்து மனைமடிந் தன்றே
கொன்ரோர் அன்ன கொடுமையோடு இன்றே
யாமங் கொளவரிற் கனைஇக் காமம்
கடலினும் உரைஇக் கரைபொழி யும்மே
எவன்கொல் வாழி தோழி மயங்கி
இன்ன மாகவு நன்னர் நெஞ்சம்
என்னொடு நின்னொடும் சூழாது கைம்மிக்கு
இறும்புபட்டு இருளிய இட்டரும் சிலம்பில்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கான நாடன் வரூஉம் யானைக்
கயிற்றுப் புறத்தன்ன கன்மிசைச் சிறுநெறி
மாரி வானம் தலைஇ நீர்வார்
பிட்டரும் கண்ண படுகுழி இயவின்
இருளிடை மிதிப்புழி நோக்கி அவர்
தளரடி தாங்கிய சென்றது இன்றே." (அகம். 128)

காமங் கரைபொழியா நிற்கவும் என்ன நன்றி கருதி இருவரோடுஞ் சூழாது சென்றது நெஞ்சென இரண்டுங் கூறினாள். மனைமடிந்தன்றென்பது பொழுது; சிறுநெறியென்பது ஆற்றின்னாமை. இதனைப் பொருளியலுட் (210) கூருது தன் வயினுரிமையும் அவன்வயிற் பரத்தைமையும்பற்றி ஈண்டுக் கூறினன்.

"குறைஒன் றுடை யேன்மற் றேழி நிறையில்லா
மன்னுயிர்க்கு ஏமஞ் செயல்வேண்டும் இன்னே
அரவழங்கு நீள்சோலை நாடனை வெற்பில்
இரவரால் என்பது உரை." (ஐந்திணை, எழு. 14)

"வளைவாய்ச் சிறுகிளி" என்னுங் (141) குறுந்தொகையும் அது.

காமஞ் சிறப்பினும் - தலைவி காமஞ்சிறந்து தோன்றினும் :

உ - ம்: "ஒலியவிந்து அடங்கி யாமம் நள்ளெனக்
கலிகெழு பாக்கம் துயின்மடிந் தன்றே
தொன்துறை கடவுள் சேர்ந்த பராரை
மன்றப் பெண்ணை வாங்குமடல் குடம்பைத்
துணைபுணர் அன்றில் உயவுக்குரல் கேட்டொறும்
துஞ்சாக் கண்ணள் துயரடச் சாஅய்
நம்வயின் வருந்து நன்னுதல் என்பது
உண்டுகொல் வாழி தோழி தெண்கடல்
வண்கைப் பரதவர் இட்ட செங்கோற்
கொடுமுடி யவ்வலை பரியப் போகிக்
கடுமுரண் எறிசுறு வழங்கும்
நெடுநீர்ச் சேர்ப்பன்றன் நெஞ்சத் தானே." (நற்றிணை,303)

"ஞாயிறு பட்ட அகல்வாய் வானத்து
அளிய தாமே கொடுஞ்சிறைப் பறவை
இறையுற ஓங்கிய நெறியயன் மராஅத்த
பிள்ளை உள்வாய்ச் செரீஇய
இரைகொண் டவையும்விரையுமாற் செலவே."(குறுந்.92)

"கொடுந்தாள் அலவ குறையாம் இரப்பேம்
ஒடுங்கா ஒலிகடல் சேர்ப்பன்—நெடுந்தேர்
கடந்த வழியைஎம் கண்ணுறக் காண
நடந்து சிதையாதி நீ." (ஐந்திணை, ஐம். 42)

"முடமுதிர் புன்னைப் படுகோட் டிருந்த
மடமுடை நாரைக் குரைத்தேன்—கடனறிந்து
பாய்திரைச் சேர்ப்பன் பரித்தேர் வரக்கண்டு
நீதகாது என்றே நிறுத்து"

என வரும்.

அவன் அளி சிறப்பினும்-தலைவிக்குக் காமமிக்க கழி படர் சிறந்தாற்போல்வது தலைவன்கட் சிறந்துழி, அது காரணத்தால் அவன் அளி சிறந்து தோன்றினும்: இவ்வாறு அரிதின் வருகின்றான் வரைகின்றிலனென அவ்விரண்டுந் தோன்றும்.

உ-ம்: "இருள்கிழிப்பதுபோல் மின்னி வானம்
துளிதலைக் கொண்ட நளிபெயல் நடுநாள்
மின்மினி மொய்த்த முரவுவாய்ப் புற்றம்
பொன்னெறி பிதிரில் சுடர வாங்கிக்
குரும்பி கெண்டும் பெருங்கை ஏற்றை
இரும்புசெய் கொல்லெனத் தோன்றும் ஆங்கண்
ஆறே அருமர பினவே ஆறே
சுட்டுநர்ப் பனிக்கும் சூருடை முதலைய
கழைமாய் நீத்தம் கல்பொருது இரங்க
அஞ்சுவந் தமியம் என்னாது மஞ்சுசுமந்து
அடுகழை நரலும் அணங்குடைக் கவாஅன்
ஈருயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய
இருங்களிறு அட்ட பெருஞ்சின உழுவை
நாம நல்லராக் கதிர்பட உமிழ்ந்த
மேய்மணி விளக்கில் புலர ஈர்க்கும்
வாணடந்து அன்ன வழக்குஅருங் கவலை
உள்ளுநர் உட்கும் கல்லடர் சிறுநெறி
அருள்புரி நெஞ்சமோடு எஃகுதுணை யாக
வந்தோன் கொடியனும் அல்லன் தந்த
நீதவறு உடையையும் அல்லை நின்வயின்
ஆனு வரும்படர் செய்த
யானே தோழி தவறுடை யேனே." (அகம். 72)

'வந்தோ' னென்பது அவனளி சிறத்தல்; 'தவறுடையே' னென்பது தன்வயினுரிமை; 'கொடியனுமல்ல' னென்பது அவன் வயிற் பரத்தைமை.

"சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி
வான மீனின் வயின்வயின் இமைக்கும்
ஓங்குமலை நாடன் சாந்துபுலர் அகலம்
உள்ளின் உண்ணோய் மல்கும்
புல்லின் மாய்வது எவன்கொல் அன்னாய்." (குறுந். 150)

இதுவுமது.

ஏமஞ் சான்ற உவகைக் கண்ணும்-நால்வகைப் புணர்ச்சியால் நிகழுங் களவின்கண், எஞ்ஞான்றும் இடையீடுபடாமற் றலைவன் வந்து கூடுதல், இன்பத்திற்குப் பாதுகாவல் அமைந்த உவகை யினைத் தலைவி எய்தியக்கண்ணும்:

அஃது எஞ்ஞான்றுங் கூட்டம் பெற்றமையான் மகிழ்ந்து கூறுதலாம்.

உ-ம்: "நோயலைக் கலங்கிய மதனழி பொழுதில்
காமஞ் செப்பல் ஆண்மகற்கு அமையும்
யானென், பெண்மை தட்ப நுண்ணிதின் தாங்கிக்
கைவல் கம்மியன் கவின்பெறக் கழாஅ
மண்ணுறுப் பசுமுத்து எய்ப்பக் குவியிணர்ப்
புன்னை அரும்பிய புலவுநீர்ச் சேர்ப்பன்
என்ன மகன்கொல் தோழி தன்வயின்
ஆர்வம் உடைய ராகி
மார்பணங்கு உறுநரை அறியா தோனே." (நற்றிணை, 94)

'மண்ணுறுப் பசுமுத்தேய்ப்ப நுண்ணிதிற்றுங்கிப் பெண்மைதட்ப' வென மாறிக் கழுவாத பசிய முத்தந் தனது மிக்க ஒளியை மறைத்துக் காட்டினாற்போல், யாமும் புணர்ச்சியால் நிகழ்ந்த மிக்க நலனைப் புலப்படாமல் அரிதாகத் தாங்கிப், பெண்மையாற் றகைத்துக் கொள்ளும்படியாகத், தன் மார்பால் வருத்தமுற்றாரைக் கண்டு அறியாதோனாகிய சேர்ப்பனை என்ன மகனென்று சொல்லப் படுமென மகிழ்ந்து கூறினாள். ஆர்வ முடையராக வேண்டி மார் பணங்குறுநரை அறியாதோனென்க. அலராமற் குவிந்த கொத்தை யுடைய புன்னைக்கண்ணே புலானாற்றத்தையுடைய நீர் தெறித் தரும்பிய சேர்ப்பனென்றதனால், புன்னையிடத்துத் தோன்றிய புலானாற்றத்தைப் பூவிரிந்து கெடுக்குமாறுபோல, வரைந்துகொண்டு களவின்கண் வந்த குற்றம் வழிகெட ஒழுகுவனென்பது உள்ளுறை.

"இரண்டறி கள்வி" (குறுந்தொகை, 312) என்னும் பாட்டினுள் தோற்றப் பொலிவை மறைப்பளெனத் தலைவன் கூறியவாறும் உணர்க.

மறைந்தவற் காண்டன் முதலிய ஆறற்கும் உம்மையும் உருபும் விரித்து ஏனையவற்றிற்கு உம்மை விரிக்க; உம்மை விரிக்க வேண்டு

வனவற்றிற்கு உம்மையும், இரண்டும் விரிக்க வேண்டுவனவற்றிற்கு இரண்டும் விரித்து, அவற்றிற்கும் ஏனைவினையெச்சங்கட்கும் கூற்று நிகழ்தலுளவென முடிக்க. கூற்று அதிகாரத்தான் வரும். உயிராக்காலத்து உயிர்த்தலு முளவென முடிக்க.

ஓரிடத்தான தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தையும் உள - இக்கூற்று முப்பத்தாறனுள் ஒரோவிடங்களிலே தன்னிடத்து அன்பிற்கு உரிமையுண்டாகவும் அவனிடத்து அயன்மை உண்டாகவுங் கூற்று நிகழ்தலுள:

ஆன் ஆனவெனஈறு திரிந்தது.

அன்னவும் உள - அவைபோல்வன பிறவும் உள என்றவாறு.

'அன்னபிற' வென்றதனுன் இன்னுந் தலைவிகூற்றாய் இவற்றின் வேறுபட வருவனவெல்லாம் இதனுன் அமைக்க.

''பிணிநிறம் தீர்ந்து பெரும்பணைத்தோள் வீங்க
அணிமலை நாடன் வருவான்கொல் தோழி
கணிநிற வேங்கை கமழ்ந்துவண் டார்க்கும்
மணிநிற மாலைப் பொழுது.'' (திணை, ஐம். 9)

இது தலைவி இரவுக்குறி நயந்து கூறியது.

''பெயல்கண் மறைத்தலின் விசும்புகா ணலரே
நீர்பறந்து ஒழுகலின் நிலம்கா ணலரே
எல்லை சேறலின் இருள்பெரிது பட்டன்று
பல்லோர் துஞ்சும் பானுள்கங்குல்
யாங்குவந் தனையோ ஓங்கல் வெற்ப
வேங்கை கமழும்எஞ் சிறுகுடி
யாங்குஅறிந் தனையோ நோகோ யானே'' (குறுந். 355)

இஃது இரவுக்குறி வந்த தலைவனை நோக்கிக் கூறியது.

''கொடுங்குரல் குறைத்த செவ்வாய்ப் பைங்கிளி
அஞ்சல் ஓம்பி ஆர்பதம் கொண்டு
நின்குறை முடித்த பின்றை என்குறை
சொல்லல் வேண்டுமால் கைதொழுது இரப்பல்

பல்கோட் பலவின் சாரல் அவர்நாட்டு
நின்கிளை மருங்கில் சேறி யாயின்
அம்மலை கிழவோற்கு உரைமதி இம்மலைக்
கானக் குறவர் மடமகள்
ஏனல் காவல் ஆயினள் எனவே'' (நற்றிணை. 102)

எனவும்,

''ஓங்கல் இறுவரைமேற் கா்ந்தள் கடிகவினைப்
பாம்பென ஓடி உருமிடித்துக் கண்டு இரங்கும்
பூங்குன்ற நாடன் புணர்ந்தஅந் நாட்போல
நீங்கி நெகிழ்ந்த வளை'' (திணை, ஐம். 3)

எனவும்,

''மன்றப் பலவின் சுளைவிளை தீம்பழம்
உண்டுவந்து மந்தி முலைவருடக் கன்றமர்ந்து
ஆமா சுரக்கும் அணிமலை நாடனை
யாமாப் பிரிவது இலம்'' (ஐந்திணை எழு. 4)

எனவும் வரும்.

''அவருடை நாட்ட வாயினும் அவர்போல்
பிரிதல் தேற்றுப் பேர்அன் பினவே
உவக்காண் என்றும் உள்ளுவ போலச்
செந்தார்ச் சிறுபெடை தழீஇப்
பைங்குரல் ஏனல் படர்தரும் கிளியே.''

இது பகற்குறிக்கண் தலைவனிட ஆற்றாது தோழிக்குக் கூறியது.

(வி - ரை) இந்நூற்பாவிற்கும் இதற்கு முன்னுள்ள மூன்று நூற்பாவிற்கும் இளம்பூரணர் கூறும் உரையே ஆசிரியர் கருத்தொடு பட்டதாம். இவற்றிற்கு நச்சினார்க்கினியர் தாம் வேண்டியவாறு கூறிச் செல்லும் உரை சிறிதும் பொருத்தமின்றாம். பின்வந்த கோவை இலக்கியங்கள் பலவும் இவர் உரையைத் தழுவி அமைத்துள்ளமை அவ்விலக்கியங்களோடு இவ்வுரையை ஒப்பிட்டு நோக்குவோர்க்குப் புலனாகும்.

மறைந்து அவற் காண்டல் - தன்னைத் தலைவன் காணாமல் தான் அவனைக் காணும் காட்சி என்பர் இளம்பூரணர்.

குற்றும் - பரித்தும், அல்கியும் - தங்கியும், இளிவர - சிறுமை தோன்ற, உதுவ - உங்கே; இங்கே.

மாரிப் பீரம் - மழைக்காலத்து மலரும் பீர்க்கு, தற்காட்டுறுதல் என்பதற்கு இவர் கூறும் உரையும் எடுத்துக் காட்டும் அத்துணைப் பொருத்தமின்ரும். தன்னை அவன் காணுமாறு நிற்றல் என உரை காண்பர் இளம்பூரணர்.

குறைபடுதற்கண்ணும் - நாண்மிகுதியால் நாவெழாது நிற்றற் கண்ணும். நிரம்பிய வேட்கையால் தலைவன் கூறிய சொற்கேட்டு எதிர் மொழி கூருது மடிந்து நிற்றல் என உரை காண்பர் இளம் பூரணர்.

இறைவரை - முன்கையளவு; ஒய்யும் - கொண்டு போய்க் கொடுக்கும். இரண்டும் கூறினுள் - தன்வயின் உரிமையும் அவன் வயின் பரத்தமையுமாகிய இரண்டும்.

வழிபாடு மறுத்தல் - இவள் வேட்கைக் குறிப்புக்கண்டு சாரலுற்றவழி அதற்குடம்படாது மறுத்தல் என உரை காண்பர் இளம்பூரணர்.

மரநார் உடுக்கை - மரவுரியாகிய உடுக்கை, வான் தோய் வற்றே - வானைத் தோய்ந்தாற் போன்ற பெருக்கத்தை உடைத்து.

ஒசியல் - ஒடிந்த கொம்பு.

மேற்கூறிய ஆறுதுறைகளும் புணர்ச்சிக்கண் நிகழும் என விளக்கம் கூறி, புணர்தற்கு உடம்பாடு காட்டிநிற்கும் குற்றம் தீர்ந்த முறுவலைச் சிறிதே தோற்றுவிப்பள் என உரை காண்பர் இளம்பூரணர்.

கணம் - தொகுதி, மறுவரல் - கலங்கல், படியோர் - பகைவர், பார்வல் ஒதுக்கின் - பார்வைக்கு ஒதுங்கி, உலந்தமை - அழிந்தமை.

தலைவன் வீடின் பரத்தமை கருதி என உரைத்தற்கேற்பதோர் சொற்ருெடர் நூற்பாவில் இன்மை அறியத்தக்கது.

கோட்டவும் - மரத்தின் கிளையில் உள்ளனவும், பூவாப்பூ - பொற்பூ, நாணுமிக வரினும் - தலைவிக்கு முன்புள்ள நாணத்தினும் மிக நாணம் வந்துழியும் எனப்பொருள் காண்பர் இளம்பூரணர்.

காழ்முளை - புன்னை விதையின்முளை, அகைய - தோன்ற, நுவ்வை - நும்தங்கை, விளர் இசை - இளைதாய ஓசை, இப்பாடற் கண் அவன்வயின் பரத்தமை கூறியதற்கு இடமின்று.

இட்டிதாக - சிறிதாக, 'ஆகு ஆறு அளவு இட்டிதாயினும்' என்றலும் காண்க. ஒருவழித் தணத்தற்குப் பருவமின்மையின் இவ்வாறு கூறினர். கற்பினிற் கூறும் பிரிவு ஈண்டுக் கூறுதற்கு இயைபின்று. தலைவன் இட்டு வைத்துப் பிரிவன் என அஞ்சியதற்கு இரக்கமுறினும் எனப்பொருள் காண்பர் இளம்பூரணர்.

பைந்தோடு - பசியதொகுதி, ஊடலும் உணர்த்தலுமின்றித் தோன்றும் கிளவி புலவிப் போலியாம்.

தண்டாது இரத்தல் - அமையாது மேன்மேல் இரத்தல், தலைவன் வருதற்குக் காவலாகிய அருமை செய்ததனால் அவனும் வருதல் தவறினும் எனப் பொருள் காண்பர் இளம்பூரணர்.

பிண்டம் வழுவ - யானையின் கருப்பம் அழிந்து புறத்தே விழ, இருவெதிர் - பெரிய மூங்கில், வெற்றிலை கொழுமுளை - இலைஇல்லாத கொழுத்தமுளை.

வந்தவழி எள்ளினும் - தலைவன் வந்தவிடத்து அலராகுமென்று அஞ்சி இகழ்ந்த வழியும் எனப் பொருள் காண்பர் இளம்பூரணர்.

வலந்த - சுற்றிய, இன்னா இசைய பூசல் - புலிபுலி என்னும் ஒலி, சிறைப்புறம் - மதில்புறம், அச்சம் நீடினும் - தலைவன் வருகின்றது இடையீடாக அச்சம் மீக்கூறியும் எனப்பொருள் காண்பர் இளம்பூரணர்.

பே எ முதிர் - அச்சம் பொருந்திய, பசைஇ - விரும்புமாறு,

வரிதேற்றாய் - தொய்யில் எழுதவல்வாய் அல்லை.

தூங்க - பொழிய, ஆகு அன்ன - அசையும் வண்ணம், பறை நிவந்தாங்கு - பறத்தற்கு உயர்ந்தது போல.

கொள்ளியின் - கொள்ளியால், இருவி - தினை அரிதாள் : தினையை அறியப்பட்டதாள்.

பொரிப்புறம் - பொரிந்த முதுகையுடைய, ஆழியால் - உடல் உழைப்பால்; புதுவது - புதிய மகிழ்ச்சி.

உரும் - இடி; கழை - மிக்க; விளிவிடம் - துயிலுமிடம்.

மல்லல் - வளம்.

அருங்கடி - அரியகாவல்.

பிறபெற்று - தலைவற்குரிய பொருள்களைப் பெற்று.

உந்தி - ஆறு, உயர்நிலை உலகம் - தேவருலகம், ஆற்றொடு வந்தகாந்தள் தலைவன் மலையிலிருந்து வந்தமையிற் தலைவி முயங் கவும் நடவும் செய்தாள். அதனை அன்னை விலக்காத பேருதவிக்குத் தேவருலகம் தரினும் சிறிதாம் என்பது கருத்து.

வாரண வாசிப்பதம் - பிறர்வருத்தத்தைத்தம் வருத்தமாகக் கொண்டு ஒழுகும் நிலை.

வாள் ஈறுவடியின் - வாளால் பிளக்கப்பட்ட மரவடு, தோய் மடல் - பனைமடல், அருமறை - பிறரறியாத களவுப் புணர்ச்சி.

ஏமான் - அம்புபட்டமான், சிரல் - சிச்சிலிப்பறவை, தளவில் - முல்லையைப்போல, பரல் அவல் - பரற் கற்களையுடைய பள்ளம்.

ஏகல் - பெருத்தகல்.

எற்றி - நினைந்து.

நுழை - நுணுகிய, கவலைமாக்கட்டு - கவலை இல்லாத மாக்களை உடையது.

அலர்வதுகொல் - களவு வெளிப்பட்டு விடுமோ, புலர்வது கொல் - இல்லையாகி விடுமோ.

என்னையென்றும் - எனது தலைவன் என்பேன், பால் - ஊழ்.

செந்தொடை - சிவந்த அம்பு, செறுஉறு - போரிடத்துச் செல்லுகின்ற, நீரு அமை - நீண்ட கோல், தயங்க - அசைய.

நாட்டத்து - ஆராய்கின்ற காலத்து.

பைஞ்சாய் - பசுமைமிக்க தண்டான் கோரை, பொறி - ஊழ்; 'பொறியின்மை யார்க்கும் பழியின்று' எனத்திருவள்ளுவர் கூறுவதும் காண்க.

மெய் தொட்டுப் பயிறல் முதலியவற்றை 102 ஆம் நூற்பாவில் காண்க.

போழும் - பிளக்கும், பொன் அகை தகை வகிர் - பொன்னைக் கூறுபடுத்தின அழகிய பிளந்த துண்டு, போழ் - தாழம்பூ, கவர் - சிவப்பு, ஐ - வியப்பு, அமன்றன்று - பெருக்கிற்று, புன்கண் நோக்கி- வருத்த முண்டாகப் பார்த்து, காழ் - குத்துக் கோல்.

இல்லொடு வரவும் - உயர் குடிப்பிறப்பு, தேசத்தமைதி - நாட்டை ஆளும் அமைதி, சூழ்ச்சி - மதி நுட்பம், அருமை சான்ற நாலிருவகை என்பதற்கு இவ்வெண் குணங்களையும் கூறுவார் யார் எனத் தெரிந்திலது. முட்டு வயிற் கழறல் முதலிய எட்டை யும் கூறுவார் இளம்பூரணராவர். அவரையே இரண்டாவது கூற்றில் வைத்து மறுத்துள்ளார்.

ஏமம் பூசல் - தம்மைக் காத்தற் கென உளவாகும் ஆரவாரம் அது புலி புலி என ஆர்ப்பதாம்.

கவா அன் - பக்க மலை, முனிவில் - வெறுப்பில்லாத, பிரப்பு - பிரப்பரிசி, செத்து - கருதி, பரைஇ - பரவி, வெண் போழ் - வெள்ளிய பனந்தோடு, நொவ்வல் - துன்பம்.

ஆற்று பாயாதப்பல் - கொம்பு தாங்குமாறு பாயாத தவற்றிற்கு. கோட்டொடு போகியாங்கு - அக்கொம்பினிடத்துச் சென்றாற் போல.

வெறித்து - அஞ்சி.

மழை தலை இய - மழை பெய்து விட்ட, அல்கு அணி - தங்கி யோடும் அழகு.

ஓரை மகளிர் - விளையாட்டு மகளிர், வரிக்கும் - ஓடும், ஐது - வியத்தற்குரிய.

குண்டு அளை - ஆழமான வலை.

ஓரும் - காது ஒற்றிக் கேட்கும்.

கடையும் - வாயிற்கடையும், வெண்காழ் - வெள்ளிய கொட்டை.

கண்ணியன் - நெற்றியில் அணிந்த மாலையையுடையவன், தாரன் - மார்பில் அணிந்த மாலையையுடையவன், வாய்வது - வாய்ப்புடையது, கூஉங் கண்ணது - கூப்பிடும் தூரத்தில் உள்ளது.

புற்றம் - புற்று, பொன் எறி - இரும்பினைக் காய்ச்சி, பிணவு - புலி.

ஞெகிழி - நெருப்புக் கொள்ளி.

மதன் - வலிமை, மண்ணா - கழுவாத.

பிணி நிறம் - பசலையால் ஏற்பட்ட நிறம், கணிநிற வேங்கை - சோதிடம் கூறுவோனின் தன்மை வாய்ந்த வேங்கை.

கொடுங்குரல் - மறைத்த கதிர், இறுவரை - தாழ்ந்த வரை; மலைப் பக்கம். (20)

## தலைவி தானே கூறும் காலம்

112. வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்
வரையா நாளிடை வந்தோன் முட்டினும்
உரையெனத் தோழிக் குரைத்தற் கண்ணுந்
தானே கூறுங் காலமும் உளவே.

இதுவும் அதிகாரத்தால் தலைவிகூற்று இன்னவாறுமாம் என்கின்றது.

(இ - ள்) வரைவிடைவைத்த காலத்து வருந்தினும் - வரைவு மாட்சிமைப் படாநிற்கவும் பொருள் காரணத்தான் அதற்கு இடையீடாகத் தலைவன் நீக்கிவைத்துப் பிரிந்த காலத்துத் தலைவி வருத்தமெய்தினும் :

ஆண்டுத் தோழி வினவாமலும் தானே கூறுமென்றான், ஆற்று வித்துப் பிரிதல் களவிற்குப் பெரும்பான்மை இன்மையின் - வைத்த வென்றது நீக்கப்பொருட்டு, வருந்துதல் ஆற்றுவிப்பாரின்மையின் வருத்த மிகுதலாம்.

வரையா நாளிடை வந்தோன் முட்டினும் - வரையா தொழுகுந் தலைவன் ஒருஞான்று தோழியையானும் ஆயத்தையானுஞ் செவிலி யையானுங் கதுமென எதிர்ப்பினும் :

உரையெனத் தோழிக்கு உரைத்தற்கண்ணும் - நொதுமலர் வரைவிற்கு மணமுரசியம்பியவழியானும் பிரிண்டானுந் தோழிக்கு இன்னவாறு கூட்டம் நிகழ்ந்ததெனக் கூறி அதனை நமரறியக் கூறல்வேண்டுமென்றுந் தலைவற்கு நம் வருத்தமறியக் கூறல் வேண்டுமென்றுங் கூறுதற்கண்ணும் ; தானே கூறும் காலமும் உளவே - இம்மூன்று பகுதியினுந் தோழி வினவாமல் தலைவி தானே கூறுங் காலமும் உள (எ - று).

உம்மையால் தோழி வினவிய இடத்துக் கூறலே வலியுடைத்து.

உ - ம்: ''அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மேக்கெழு பெருஞ்சினை யிருந்த தோகை
பூக்கொய் மகளிரிற் றோன்று நாடன்
தகாஅன் போலத் தான்தீது மொழியினுந்
தன்கண் கண்டது பொய்க்குவது அன்றே
முத்துநிரை ஒத்த முள்ளெயிற்றுத் துவர்வாய்
வரையாடு வன்பறழ்த் தந்தைக்
கடுவனும் அறியும்அக் கொடியோ னையே.'' (குறுந். 26)

''யாரும் இல்லைத் தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ
தினைத்தாள் அன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
குருகும் உண்டுதாம் மணந்த ஞான்றே.'' (குறுந். 25)

இவற்றுள் துறந்தான்போலவும் மறந்தான்போலவுங் கருதித் தான் தீதுமொழியினுமெனவும் யானெவன் செய்கோவெனவுந் தோழி வினவாக்காலத்து அவன் தவற்றை வரைவிடை வைத் தலின் ஆற்றாமைக்கு அறிவித்தாள்.

"பகலெரி சுடரின் மேனி சாயவும்
பாம்பூர் மதியின் நுதலொளி கரப்பவும்
எனக்குநீ உரையாம் ஆயினை நினக்கியான்
உயிர்பகுத் தன்ன மாண்பினென் ஆகலின்
அதுகண் டிசினல் யானே என்றுநனி
அழுதல் ஆன்றிசின் ஆயிழை ஒலிகுரல்
ஏனல் காவலின் இடையுற்று ஒருவன்
கண்ணியன் கழலன் தாரன் தண்ணெனச்
சிறுபுறங் கவையின னாக அதற்கொண்டு
அஃதே நினைந்த நெஞ்சமொடு
இஃதா கின்றுயான் உற்ற நோயே." (நற்றிணை, 128)

இது தோழி வினவியவழித் தலைவி கூறியது.

'வரைவிடைவைத்த காலத்து வருந்தினும்' என்பதனைத் 'தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்' (தொல் - பொ-666) என்னுந் தந்திரவுத்தியாகக்கொண்டு அதன்கண் வேறுபட வருவன வெல்லாங் கொள்க.

"உரைத்திசின் தோழியது புரைத்தோ அன்றே
அருந்துயர் உழத்தலும் ஆற்றா அதன்தலைப்
பெரும்பிறி தாகல் அதனினும் அஞ்சுதும்
அன்றோ இன்னு நன்மலை நாடன்
பிரியா அன்பினர் இருவரும் என்னும்
அலரதற்கு அஞ்சினன் கொல்லோ பலருடன்
துஞ்சூர் யாமத் தானும்என்
நெஞ்சத்து அல்லது வரவுஅறி யானே." (குறுந். 302)

இது வரைவிடைக் கவன்ற தோழிக்குக் கூறியது.

"அதுகொல் தோழி காம நோயே
வதிகுருகு உறங்கும் இன்னிழற் புன்னை
உடைதிரைத் திவலை அரும்பும் தீநீர்
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
பல்லிதழ் உண்கண் பாடொல் லாவே" (குறுந். 5)

என்னும் பாட்டும் அது.

"தோழி வாழி மேனாட் சாரல்
கொடியோர் குன்றம் பனிப்ப நெடிதுநின்று
புயல்தொடங் கின்றே பொய்யா வானக்
கலைவரல் அழிதுளி தலைஇ
வெம்முலை ஆகம் நனைக்கும்எங் கண்ணே."

இது வரைவிடைப் பருவங் கண்டு ஆற்ருது தோழிக்குக் கூறியது.

"பனிப்புதல் இவர்ந்த பைங்கொடி அவரைக்
கிளிவாய் ஒப்பின் ஒளிவிடு பன்மலர்
வெருக்குப்பல் உருவின் முல்லையொடு கஞல
வாடை வந்ததன் தலையும் நோய்பொரக்
கண்டிசின் வாழி தோழி தெண்திரைக்
கடலாழ் கலத்தில் தோன்றி
மாலை மறையுமவர் மணிநெடும் குன்றே." (குறுந். 240)

இது பருவங்கண்டு ஆற்ருது தோழிக்குக் கூறியது.

"நோயும் கைம்மிகப் பெரிதே மெய்யும்
தீயுமிழ் தெறலின் எய்தா கின்றே
பொய்யெனச் சிறிதாங்கு உரியர் பையென
முன்றில் கொளினே நந்துவள் பெரிதென
நிரைய நெஞ்சத்து அன்னைக்கு உய்த்தாண்டு
உரையினி வாழி தோழி புரையின்
உண்ணோர் எல்வளை ஞெகிழ்த்தோன் குன்றத்து
அண்ணல் நெடுவரை ஆடித் தண்ணென
வியலறை மூழ்கிய வளியென்
பசலை ஆகம் தீண்டிய சிறிதே." (நற்றிணை, 236)

இது வரைவிடை ஆற்ருமை மிக்குழி அவன்வரையின் முள்கிய காற்று என் மெய்க்கட்படினும் ஆற்றலா மென்றது.

"அம்ம வாழி தோழி அவர்போல்
நம்முடை வாழ்க்கை மறந்தன்று கொல்லோ
மனைஎறி உலக்கையில் தினைகிளி கடியும்
கான நாடன் பிரிந்தெனத்
தானும் பிரிந்தன்றுஎன் மாவமக் கவினே."

இது வன்புறையெதிரழிந்தது.

"சிறுபுன் மாலை சிறுபுன் மாலை
தீப்பனிப் பன்ன தண்வளி அசைஇச்
செக்கர் கொண்ட சிறுபுன் மாலை
வைகலும் வருதியால் எமக்கே
ஒன்றுஞ் சொல்லாய்அவர் குன்றுகெழு நாட்டே."

இது மாலைப் பொழுது கண்டு வருந்திக் கூறியது.

இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக.

"கேட்டிசின் வாழி தோழி அல்கல்
பொய்வ லாளன் மெய்யுறல் மரீஇ
வாய்த்தகைப் பொய்க்கனா மருட்ட ஏற்றெழுந்து
அமளி தைவந் தனனே குவளை
வண்டுபடு மலரில் சாஅய்த்
தமியேன் மன்ற அளியேன் யானே." (குறுந். 30)

இது வரைதற்குப் பிரிய வருந்துகின்றது என்னென்றாட்குக் கனவு நலிவுரைத்தது.

"ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கில்
கோடை அவ்வளி குழலிசை யாகப்
பாடின் அருவிப் பனிநீர் இன்னிசைத்
தோடமை முழவின் துதைகுர லாகக்
கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு
மலைப்பூஞ் சாரல் வண்டியா ழாக
இன்பல் இமிழிசை கேட்டுக் கலிசிறந்து
மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவளர் அடுக்கத்து இயலியா டும்மயில்
நனவுப்புகு விறலியில் தோன்று நாடன்
உருவ வல்விற் பற்றி அம்பு தெரிந்து
செருச்செய் யானை சென்னெறி வினாஅய்
புலர்குரல் ஏனற் புழையுடை ஒருசிறை
மலர்தார் மார்பன் நின்றோற் கண்டோர்
பலர்தில் வாழி தோழி அவருள்
ஆரிருள் கங்குல் அணையொடு பொருந்தி
ஓரியான் ஆகுவது எவன் கொல்
நீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே." (அகம். 82)

அவனை ஆயத்தார் பலருங் கண்டாரென வந்தோன் முட்டிய வாறும் அவருள் நெகிழ்தோளேன் யானேயெனத் தானே கூறிய வாறுங் காண்க.

''தாழை குருகீனும் தண்ணம் துறைவனை
மாழைமான் நோக்கின் மடமொழி— நூழை
நுழையு மடமகன் யார்கொல் என்று அன்னை
புழையும் அடைத்தாள் ததவு'' (கைந்நிலை, 59)

''நகைநீ கேளாய் தோழி அல்கல்
வயநாய் எறிந்து வன்பறழ் தழீஇ
இளையர் எய்துதன் மடக்கிக் கிளையொடு
நான்முலைப் பிணவல் சொலிய கானுழிந்து
அரும்புழை முடுக்கர் ஆட்குறித்து நின்ற
தறுகண் பன்றி நோக்கிக் கானவன்
குறுகினன் தொடுத்த கூர்வாய்ப் பகழி
மடைசெலன் முன்பில்தன் படைசெலச் செல்லாது
அருவழி விலக்கும்எம் பெருவிறல் போன்மென
எய்யாது பெயரும் குன்ற நாடன்
செறியரில் துடக்கலில் பரீஇப் புரியவிழ்ந்து
ஏந்துகுவவு மொய்ம்பில் பூச்சோர் மாலை
ஏற்றிமில் கயிற்றின் எழில்வந்து துயல்வர
இல்வந்து நின்றோன் கண்டனள் அன்னை
வல்லே என்முக நோக்கி
நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே.'' (அகம்.248)

இவை வந்தோன் செவிலியை எதிர்ந்துழிக் கூறியன.

''கொடியவும் கோட்டவு நீரின்றி நிறம்பெறப்
பொடியழல் புறந்தந்த பூவாப்பூம் பொலங்கோதைத்
தொடிசெறி யாப்பமை அரிமுன்கை அணைத்தோளாய்
அடியுறை அருளாமை ஒத்ததோ நினக்கென்ன
நரந்தநா றிருங்கூந்தல் எஞ்சாது நனிபற்றிப்
பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை

நலம்பெறச் சுற்றிய குரலமை ஒருகாழ்
விரன்முறை சுற்றி மோக்கலும் மோந்தனன்
நறுஅவிழ்ந் தன்னஎன் மெல்விரல் போதுகொண்டு
செறுஅச் செங்கண் புதைய வைத்துப்
பறுஅக் குருகின் உயிர்த்தலும் உயிர்த்தனன்
தொய்யில் இளமுலை இனிய தைவந்து
தொய்யலம் தடக்கையின் வீழ்பிடி அளிக்கும்
மையல் யானையின் மருட்டலும் மருட்டினன்;

அதனால்,

அல்லல் களைந்தனன் தோழி நந்நகர்
அருங்கடி நீவாமை கூறி னன்றுஎன
நின்னொடு சூழ்வல் தோழி நயம்புரிந்து
இன்னது செய்தாள் இவளென
மன்னா உலகத்து மன்னுவது புரைமே'' (கலி. 54)

எனக் கைப்பட்டுக் கலங்கிப் புணர்ச்சி நிகழ்ந்தமை கூறி 'அருங்கடி நீவாமை கூறின் நன்'றெனத் தமர்க்குக் கூறுமாறு தோழிக்குத் தலைவி கூறினாள். சுரிதகத்து இருகாற் றோழியென்றாள் நாணுத் தளையாக மறைகரந்தவாறு தீரத் தோழிக்கு முகமனாக.

''எரியகைந்து அன்ன செந்தலை அன்றில்
பிரியின் வாழாது என்மோ தெய்ய
துறைமேய் வலம்புரி துணைசெத் தோடிக்
கருங்கால் வெண்குருகு பயிறரும்
பெருங்கடல் படப்பைஎம் சிறுநல் லூரே.''

இஃது, அன்றில் பிரியின் வாழாதெனக் கூறென்றது.

''ஐயோ எனயாம் பையெனக் கூறில்
கேட்குவர் கொல்லோ தாமே மாக்கடல்
பருஉத்திரை தொகுத்த நுண்கண் வெண்மணல்
இன்னும் தூரா காணவர்
பொன்னி நெடுந்தேர் போகிய நெறியோ.''

இஃது, அவர் இன்னும் போவதற்குமுன்னே நம் வருத்தத்தை வெளிப்படக் கூறென்றது.

"என்னைகொல் தோழி அவர்கண்ணு நன்கில்லை
அன்னை முகனும் அதுவாகும்—பொன்னலர்
புன்னையம் பூங்கானல் சேர்ப்பனைத் தக்கதோ
நின்னல்லது இல்லென்று உரை." (ஐந். எழு. 58)

இதுவும் தலைவற்குக் கூறென்றது.

இவை தலைவி அறத்தொடு நிற்றற்பகுதி. தோழிக்கே உரைத்தற்குத் தோழிக்கென்றார்.

(வி - ரை) சாயவும் - வாடவும், உயிர் பகுத்தன்ன - ஒருயிரை இரண்டு உடம்பின் கண்ணே பகுத்து வைத்தாற் போன்ற, அழுதல் ஆன்றிசின் - வருந்தாது அமைவாயாக.

வதி குருகு - தங்கியிருக்கும் குருகு.

பனிப்ப - இடியால் நடுங்க.

வெருக்குப் பல் - காட்டுப் புலியின் பற்கள்.

தெறலின் - கொதித்தலின்.

தீப் பனிப்பு - தீயின் அசைவு.

வாய்த்தகை - மெய்த்தன்மை வாய்ந்த.

ஆடு அமை - அசைகின்ற மூங்கில், குயின்ற - துளைக்கப் பெற்ற, தோடமை - தொகுதி பொருந்திய, துதை - நெருங்கிய, கணக்கலை - மான்கூட்டம், நனவு - களம்.

நூழை - நுழையும் சிறு வாயில், புழையும் - கொல்லைப் புற வாயில்.

அல்கல் - நேற்றிரவு; பிணவல் - பெண் பன்றி, அரில் - தூறு, பருஅக் குருகின் - பறக்காத கொல்லன் உலை மூக்கை ஒத்த. அருங்கழி நீவாமை - அணிய மனத்தை நீங்காமை.

எரி அகைந்தன்ன - நெருப்புக் கப்பு விட்டாற் போன்ற நெறி. இன்னும் தூரு எனக் கூட்டுக. (21)

தலைவி கூற்றிற்குரிய சிறப்பு விதி.

113. உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ்
செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றெனத்
தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு
காமக் கிழவ னுள்வழிப் படினுந்
தாவில் நன்மொழி கிழவி கிளப்பினும்
ஆவகை பிறவுந் தோன்றுமன் பொருளே.

இது தலைவிகூற்றிற்குச் சிறப்பில்லன கூறி அவையும் அகப் பொருளாம் என்கின்றது.

(இ – ள்) உயிரினும் நாண் சிறந்தன்று - எல்லாவற்றினுஞ் சிறந்த உயிரினும் மகளிர்க்கு நாண் சிறந்தது; நாணினுஞ் செயிர்தீர் கற்புக் காட்சி சிறந்தன்று - அந்நாணினுங் குற்றந் தீர்ந்த கற்பினை நன்றென்று மனத்தாற் காணுதல் சிறந்தது; எனத் தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு - என்று முன் னுள்ளோர் கூறிய கூற்றினைப் பொருந்திய நெஞ்சுடனே; காமக் கிழவன் உள்வழிப் படினும் - தலைவன் இருந்தவிடத்தே தலைவி தானே செல்லினும்; தாவில் நன்மொழி கிழவி கிளப்பினும் – மனவலியின்றிச் செல்வாமெனக் கூறும் நன்மொழியினைத் தலைவி தானே கூறினும்; பொருள் தோன்றும் - அவை அகப்பொருளாய்த் தோன்றும்; ஆவகை பிறவும் மன் பொருள் தோன்றும் - அக் கூற்றின் கூறுபாட்டிலே பிற கூற்றுக்களும் மிகவும் அகப்பொரு ளாய்த் தோன்றும் (எ – று.)

என்றது, தலைவிகூற்று. சிறுபான்மை வேறுபட்டு வருவன வற்றைக் கற்புச்சிறப்ப நாண் துறந்தாலுங் குற்றம் இன்றென் றற்குச் 'செயிர்தீ'ரென்றார்; 'நன்மொழி' யென்றார் கற்பிற் றிரி யாமையின்; அவை இன்னேரன்னவழி நெஞ்சொடுகிளத்தல் போல்வன. இவள் கூற்றுத் தோழிக்குந் தலைவற்குமே தோன் றுவதென்க. மன் ஆக்கம், இழிந்த பொருளும் உயரத் தோன்றலின்;

''மள்ளர் குழீஇய விழவி னானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்

யாண்டும் காணேன் மாண்தக் கோனை
யானுமோர் ஆடுகள மகளே என்கைக்
கோடீர் இலங்குவளை ஞெகிழ்த்த
பீடுகெழு குரிசிலுமோர் ஆடுகள மகனே.'' (குறுந். 31)

யாண்டுங் காணேனென அவனை வழிபட்டுக் கூறினமையிற் கற்பின்பாலதாய்த் தோழியுந் தலைவனும் பெண்டன்மையிற்றிரியக் கருதாது நன்குமதித்தவாறு காண்க.

''அருங்கடி அன்னை காவல் நீவிப்
பெருங்கடை இறந்து மன்றம் போகிப்
பகலே பலரும் காண வாய்விட்டு
அகல்வயல் படப்பை அவனூர் வினவிச்
சென்மோ வாழி தோழி பன்னாள்
கருவி வானம் பெய்யாது ஆயினும்
அருவி யார்க்கும் அயந்திகழ் சிலம்பின்
வான்றோய் மாமலை நாடனைச்
சான்றோய் அல்லை என்றனம் வரற்கே.'' (நற்றிணை, 365)

''கோடீர் இலங்குவளை ஞெகிழ நாடொறும்
பாடில கலிழும் கண்ணொடு புலம்பி
ஈங்கிவள் உறைதலும் உய்குவம் ஆங்கே
எழுவினி வாழிஎன் நெஞ்சே முனாஅது
குல்லைக் கண்ணி வடுகர் முனையது
வல்வேல் கட்டி நன்னாட்டு உம்பர்
மொழிபெயர் தேஎத்தர் ஆயினும்
வழிபடல் சூழ்ந்திசின் அவருடை நாட்டே.'' (குறுந். 11)

இவை தோழிக்கும் நெஞ்சிற்குங் கூறியன.

''ஈயற் புற்றத்து ஈர்ம்புறத்து இறுத்த
குரும்பி வல்சிப் பெருங்கை ஏற்றை
தூங்குதோல் துதிய வள்ளுகிர் கதுவலின்
பாம்புமதன் அழியும் பானாள் கங்குலும்
அரிய அல்லமன் இகுளை பெரிய
கேழல் அட்ட பேழ்வாய் ஏற்றை

பலாவமல் அடுக்கம் புலவ ஈர்க்கும்
கழைநரல் சிலம்பின் ஆங்கண் வழையொடு
வாழை ஓங்கிய தாழ்கண் அசும்பில்
படுகடும் களிற்றின் வருத்தம் சொலிய
பிடிபடி முறுக்கிய பெருமரப் பூசல்
விண்டோய் விடரகத்து இயம்பும் அவர்நாட்டு
எண்ணரும் பிறங்கன் மானதர் மயங்காது
மின்னுவிடச் சிறிய ஒதுங்கி மென்மெலத்
துளிதலைத் தலைஇய மணியேர் ஐம்பால்
சிறுபுறம் புதைய வாரிக் குரல்பிழியூஉ
நெறிகெட விலங்கிய நீயிர் இச்சுரம்
அறிதலும் அறிதிரோ என்னுநர்ப் பெறினே.'' (அகம். 8)

என்னும் அகப்பாட்டும் அது.

இங்ஙனம் வந்துழியுங் கற்புச் சிறந்ததாம்.

இனிப் பிறவாற் கொள்வன வருமாறு:

''பொன்னிணர் வேங்கை கவினிய பூம்பொழிலுள்
நன்மலை நாடன் நலம்புனைய—மென்முலையாய்
போயின சின்னாள் புனத்து மறையினால்
ஏயினர் இன்றி இனிது'' (ஐந்திணை, ஐம். 11)

''கானலம் சிறுகுடிக் கடன்மேம் பரதவர்
நீனிறப் புன்னைக் கொழுநிழல் அசைஇத்
தண்பெரும் பரப்பின் ஒண்பத நோக்கி
அங்கண் அரில்வலை உணக்குந் துறைவனொடு
அலரே, அன்னை அறியின் இவணுறை வாழ்க்கை
அரிய வாகும் நமக்கெனக் கூறில்
கொண்டும் செல்வர்கொல் தோழி உமணர்
வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றிக்
கணநிரை கிளர்க்கு நெடுநெறிச் சகடம்
மணன்மடுத்து உரறும் ஓசை கழனிக்
கருங்கால் வெண்குருகு வெரூஉம்
இருங்கழிச் சேர்ப்பில்தம் இறைவன் ஊர்க்கே''
(நற்றிணை, 4)

என வரும்.

"விழுந்தண் மாரிப் பெருந்தண் சாரல்
கூதிர்க் கூதளத்து அலரி நாறு
மாதர் வண்டின நயவரும் தீங்குரல்
மணநாறு சிலம்பின் அசுணம் ஓர்க்கும்
உயர்வரை நாடற்கு உரைத்தல் ஒன்றோ
துயர்மருங் கறியா அன்னைக்கு இந்நோய்
தணியுமாறு இதுவென உரைத்தல் ஒன்றோ
செய்யாய் ஆகலின் கொடியை தோழி
மணிகெழு நெடுவரை அணிபெற நிவந்த
செயலை யந்தளிர் அன்னஎன்
மதனின் மாமைப் பசலையும் கண்டே." (நற்றிணை, 244)

இஃது அறத்தொடு நிற்குமாறு தோழிக்குத் தலைவி கூறியது. இன்னும் அதனானே தோழியைத் தலைவி ஆற்றுவித்தலுங் கொள்க.

"ஞெகிழ்ந்த தோளும் வாடிய வரியும்
தளிர்வனப்பு இழந்த நிறனும் நோக்கி
யாஞ்செய்வது அன்றிவள் துயர்என அன்பினால்
அழாஅல் வாழி தோழி வாழைக்
கொழுமடல் அகலிலைத் தளிதலைக் கலாவும்
பெருமலை நாடன் கேண்மை நமக்கே
விழும மாக அறியுநர் இன்றுஎனக்
கூறுவை மன்னோ நீயே
தேறுவென் மன்யான் அவருடை நட்பே" (நற்றிணை, 309)

என வரும்.

"துறுகல் அயலது மாணை மாக்கொடி
துஞ்சுகளிறு இவரும் குன்ற நாடன்
நெஞ்சுகள னாக நீயலென் யான்என
நல்தோள் மணந்த ஞான்றை மற்றவன்
தவாஅ வஞ்சின முரைத்தது
நோயோ தோழி நின்வயி னானே." (குறுந். 36)

இதுவும் அது.

(வி – ரை) தாவில் - மன வலிமையின்றி : 'தாவே வலியும் வருத்தமுமாகும்' என்பதால் ஈண்டு வலிமை குறித்தது.

மள்ளர் - வீரர், கோடு ஈர் - சங்கை அறுத்து.

அருங்கடி - அரிய காவல், நீவி - நீங்கி.

பாடு இல - இமை பொருந்துதலின்றி, முதுஅது - பழையது.

கட்டி - சேரனின் படைத்தலைவன், உம்பர் - அப்பாலுள்ள.

குரும்பி வல்சி - குற்ருஞ் சோருகிய உணவு, வழை - சுரபுன்னை, அசும்பு - புழி, சொலிய - நீக்குதற்கு, புறம் - மயிர்

ஏயினர் - எதிர்ப்பட்டார்.

அரில் வலை - முறுக்குண்டு கிடந்த வலை, கொல்லை - இலை; உரறும் - முழங்கும்.

பூதாளம் - தாளிக்கொடி.

தளரவும் - தளர்ந்து நிற்கும், விழுமமாக - துன்பமாக, துறுகல் - உருண்டையான கல், மாணை - ஒருவகைக் கொடி, தவா அவஞ்சினம்- கெடாத சூள். (22)

தோழி கூற்றுக்கள்

114\. நாற்றமுந் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியுஞ்
செய்வினை மறைப்பினுஞ் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி யெதிர்ப்பா டுள்ளுறுத்து வருஉம்
உணர்ச்சி யேழினு முணர்ந்த பின்றை
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் நாட்டத் தானுங்
குறையுறற் கெதிரிய கிழவனை மறையுறப்
பெருமையிற் பெயர்ப்பினு முலகுரைத்
தொழிப்பினும்
அருமையின் அகற்சியும் அவளறி வுறுத்துப்
[1]பின்வர வென்றலும் பேதைமை யூட்டலும்
முன்னுறு புணர்ச்சி முறைநிறுத் துரைத்தலும்
அஞ்சியச் சுறுத்தலு முரைத்துழிக் கூட்டமோ
டெஞ்சாது கிளந்த இருநான்கு கிளவியும்

1 பின்வா எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

வந்த கிழவனை மாயஞ் செப்பிப்
பொறுத்த காரணங் குறித்த காலையும்
புணர்ந்தபின் அவன்வயின் வணங்கற் கண்ணுங்
குறைந்தவட் படரினு மறைந்தவ ளருகத்
தன்னொடு மவளொடு [1]முதன்மூன் றளைஇப்
பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கினும்
நன்னயம் பெற்றுழி நயம்புரி யிடத்தினும்
எண்ணரும் பன்னகை கண்ணிய வகையினும்
புணர்ச்சி வேண்டினும் வேண்டாப் பிரிவினும்
வேளாண் பெருநெறி வேண்டிய விடத்தும்
புணர்ந்துழி யுணர்ந்த அறிமடச் சிறப்பினும்
ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணுஞ்
செங்கடு மொழியாற் சிதைவுடைத் தாயினும்
என்புநெகப் பிரிந்தோள் வழிச்சென்று கடைஇ
அன்பு தலையடுத்த வன்புறைக் கண்ணும்
ஆற்றது தீமை யறிவுறு கலக்கமுங்
காப்பின் கடுமை கையற வரினுங்
களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக்
காதன் மிகுதி யுளப்படப் பிறவும்
நாடு மூரும் இல்லுங் குடியும்
பிறப்புஞ் சிறப்பும் இறப்ப நோக்கி
அவன்வயிற் றோன்றிய கிளவியொடு தொகைஇ
[2]அனைநிலை வகையான் வரைதல் வேண்டினும்
ஐயச் செய்கை தாய்க்கெதிர் மறுத்துப்
பொய்யென மாற்றி மெய்வழிக் கொடுப்பினும்
[3]அவன்விலங் குறினுங் களம்பெறக் காட்டினும்
பிறன்வரை வாயினும் அவன்வரைவு மறுப்பினும்

1 'முன்ன முன் தளைஇப்', 2 'அனைநில', 3 'அவள்' எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

முன்னிலை யறனெனப் படுதலென் றிருவகைப்
புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்
வரைவுடன் பட்டோர் கடாவல் வேண்டினும்
ஆங்கதன் தன்மையின் வன்புறை யுளப்படப்
பாங்குற வந்த நாலெட்டு வகையுந்
தாங்கருஞ் சிறப்பிற் றோழி மேன.

இது முறையானே தோழி கூற்று நிகழும் இடம் பலவுந் தொகுத்துக் கூறுகின்றது.

(இ - ள்) நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும் செய்வினை மறைப்பும் செலவும் பயில்வும் - தலைவன் பெட்டவாயில் பெற்று இரவுவலியுற்று முன்னுறு புணர்ச்சியை உரைப்பின் இன்னது நிகழுமென்று அறியாது அஞ்சிக் கரந்து மதியுடம் படுப்பத் தோழி மதியுடம்படுங்கால் அவள் ஆராயும் ஆராய்ச்சி யெல்லாம் நாட்டமாம்; அஃது எட்டாம். அவற்றுள் முன்னுறு புணர்ச்சியை உணர்தற்குக் காரணம் எழுவகைய. அவை நாற்ற முதலிய ஏழும் :

நாற்றமாவது, ஓதியும் நுதலும் பேதைப் பருவத்துத் தகநாறுது தலைவன் கூட்டத்தான் மான்மதச்சாந்து முதலியனவும் பலபூக்களும் விரவி நாறுதல்.

தோற்றமாவது, நீண்டும் பிறழ்ந்தும் பிள்ளைப்பருவத்து வெள்ளை நோக்கின்றி உள்ளொன்று கொள்ள நோக்குங் கண்ணுந், தந்நிலை திரிந்து துணைத்து மெல்கிப் பணைத்துக் காட்டுந் தோளும் முலையுமென்று இன்னோரன்ன.

ஒழுக்கமாவது, பண்ணையாயத்தோடு முற்றிலான் மணற் கொழித்துச் சோறமைத்தன் முதலியன முனிந்த குறிப்பினளாய்ப் பெண்டன்மைக்கு ஏற்ப ஒழுகுதல்.

உண்டியாவது, பண்டு பால் முதலிய கொண்டு ஒறுத்து ஊட்ட உண்டு வருகின்ருள், இப்பொழுது ஆசாரமும் நாணுங் காதலும் மீதூர அதன்மேல் உவப்பு ஆண்டு இன்றி மிக ஒறுத்த உள்ளத் தளாதல்.

செய்வினை மறைத்தலாவது, முன்பு போலாது இக் காலத்து நினைவுஞ் செயலுந் தலைவனோடு பட்டனவே யாகலான் அவை பிறர்க்குப் புலனாகாமை மறைத்தல்; அஃது ஆயத்தோடு கூடாது இடந்தலைப்பாட்டிற்கு ஏதுவாக நீங்கி நிற்றலாம்.

செலவாவது, பண்டுபோல் வேண்டியவாறு நடவாது சீர் பெற நடந்து ஓரிடத்துச் சேறல்.

பயில்வாவது, செவிலி முலையிடத்துத் துயில் வேண்டாது பெயர்த்து வேறோரிடத்துப் பயிறல். இன்: சாரியை.

புணர்ச்சி எதிர்ப்பாடு - எதிர்ப்பாட்டுப் புணர்ச்சியென மாறுக. அது கொடுப்பாரும் அடுப்பாருமின்றி இருவருந் தமியராய் எதிர்ப் பட்டுப் புணரும் புணர்ச்சி. இவ்வொழுக்கம் பாங்கற் கூட்டத்திற்கு ஏதுவாகா.

உள்ளுறுத்து வரூஉம் உணர்ச்சி எழினும் உணர்ந்த பின்றை- அப்புணர்ச்சி யெதிர்ப்பாடு நிகழ்ந்ததனைத் தோழி தன்னுள்ளத் துள்ளே வினவி வருகின்ற ஐயவுணர்வினை அவ்வேழனானுந் தெளிந்து புணர்ச்சி உண்டென்பதனை உணர்ந்த பின்றை:

இன்னதும் இன்னதுமாகிய ஏழென்க. அங்ஙனந் துணிந்த பின்னல்லது, தலைவிமாட்டுத் தோழி சொன்னிகழ்த்தாளென்றற் குப் 'பின்றை' யென்றார்.

உ - ம்: "காம்பிவர் தோளும் கருமதர் மழைக்கணும்
வீங்கிள முலையும் வேறுபட் டனவே
தாங்கரு நாற்றம் தலைத்தலை சிறந்து
பூங்கொடிக்கு இவர்ந்த புகற்சிஎன வாங்கில்
பகலும் கங்குலும் அகலாது ஒழுகுமே
நன்றி அளவைத்து அன்றிது
எவன்கொல் மற்றுஇவட்கு எய்திய வாறே."

இதனுள் நாற்றமுந் தோற்றமுஞ் செலவும் வந்தன.

"கண்ணும் சேயரி பரந்தன்று நுதலும்
நுண்வியர் பொறித்து வண்டார்க் கும்மே
வாங்கமை மென்தோள் மடந்தை
யாங்கா யினள்கொல் என்னும்என் நெஞ்சே"
(சிற்றெட்டகம்)

"தெய்வத்தின் ஆயதுகொல் தெண்ணீர் புடைஉடுத்த
வையத்து மக்களின் ஆயதுகொல்—நைவுற்று
வண்டார்பூங் கோதை வரிவளைக்கை வாணுதலாள்
பண்டையள் அல்லள் படி."

இவையும் அவை.

"ஏனல் காவல் இவளும் அல்லள்
மான்வழி வருகுவன் இவனும் அல்லன்
நரந்தங் கண்ணி இவனோடு இவளிடைக்
கரந்த உள்ளமொடு கருதியது பிறிதே
எம்முன் நாணுநர் போலத் தம்முள்
மதுமறைந்து உண்டோர் மகிழ்ச்சி போல
உள்ளத்து உள்ளே மகிழ்ப
சொல்லும் ஆடுப கண்ணி னோனே."

இது புணர்ச்சி உணர்ந்தது.

"இவள்வயின் செலினே இவற்குஉடம்பு வறிதே
இவன்வயிற் செலினே இவட்கு மற்றே
காக்கை இருகணி ஒருமணி போலக்
குன்றுகெழு நாடற்கும் கொடிச்சிக்கும்
ஒன்றுபோல் மன்னிய சென்றுவாழ் உயிரே."

இதுவும் அது.

மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது பல்வேறு கவர் பொருள் நாட்டத்தானும் - அங்ஙனம் உணர்ந்தபின் தோழி தலைவியுடன் ஆராயுங்காற் றன்மனத்து நிகழ்ந்தனவற்றை மறைத்துக் கூறவேண்டுதலில் உண்மைப் பொருளானும் பொய்ப் பொருளானும் விராவிவரினும் அவட்குக் குற்றேவல் செய்யுந் தன்மையில் தப்பாதவாற்ருன் வேறுபல் கவர்பொருள் படக்கூறி ஆராயும் ஆராய்ச்சிக்கண்ணும்:

நாணல் இறந்து படாமற் கூறுதற்கு 'வழிநிலை பிழையாது' என்ருர்.

பிறைதொழுவா மெனவுங், கணைகுளித்த புண்கூர் யானை கண்டனெனெனவும். தன் பெருமைக்கு ஏலாத சிறு சொற் கூறிக் குறைவுற்று நிற்கின்ருன் ஒருவனுளன் அவனை நீயுங் காண்டல் வேண்டுமெனவும், அவன் என்னைத் தழுவிக் கொண்டு குறைகூற வும் நான் மறுத்து நின்றேனென்ருற் போலவும் மெய்யும் பொய் யும் விராயும் பிறவாருகவுங் கூறுவன பல்வேறு கவர்பொருளாம்.

உ - ம்: "முன்னும் தொழத்தோன்றி முள்ளெயிற்ருய் அத்திசையே
இன்னும் தொழத்தோன்றில் தீதேகாண்—மன்னும்
பொருகளிமால் யானைப் புகார்க்கிள்ளி பூண்போல்
பெருகொளியான் மிக்க பிறை."

இது பண்டு கூறியவாறு கூறலின் மெய்யும், பிறை தொழாமை அறிந்து கூறலிற் பொய்யுமாய் வழிநிலை பிழையாத கவர் பொருளாயிற்று.

"பண்டிப் புனத்துப் பகலிடத்து ஏனலுள்
கண்டிக் களிற்றை அறிவன்மன்—திண்டிக்
கதிரன் பழையனூர்க் கார்நீலக் கண்ணுய்
உதிரம் உடைத்திதன் கோடு." (சிற்றெட்டகம்)

இது நடுங்க நாட்டம்; இஃது இறந்துபாடு பயத்தலிற் கந்தரு வத்திற்கு அமையாது.

"தொய்யில் வனமுலையும் தோளும் கவின்எய்தித்
தெய்வம் கமழுமால் ஐம்பாலும்—ஐயுறுவல்
பொன்னங் கொடிமருங்குல் பூங்கயல் கண்ணிஞய்க்கு
என்னை இதுவந்த வாறு"

என வழிநிலை பிழையாமற் கவர்பொருளாக நெறிபடுநாட்டம் நிகழ்ந்தவழித் தலைவி சுனையாடினேற்கு இங்ஙனம் ஆயிற்றென்னும். அது கேட்டுத் தோழியும் யானும் ஆடிக் காண்பல் என்னும்.

உ - ம்: "பையுண் மாலைப் பழுமரம் படரிய
நொவ்வுப்பறை வாவல் நோன்சிறகு ஏய்க்கும்
மடிசெவிக் குழவி தழீஇப் பெயர்தந்து
இடுககவுள் மடப்பிடி எவ்வங் கூர

வெந்திறல் ஆளி வெரீஇச் சந்தின்
பொரியரை மிளிரக் குத்தி வான்கேழ்
உருவ வெண்கோடு உயக்கொண்டு கழியும்
கடுங்கண் யானை காலுற ஒற்றலில்
கோவா ஆரம் வீழ்ந்தெனக் குளிர்கொண்டு
பேஎ நாறும் தாழ்நீர்ப் பனிச்சுனை
தோளார் எல்வளை தெளிர்ப்ப நின்போல்
யானும் ஆடிக் காண்கோ தோழி
வரைவயிறு கிழித்த சுடரிலை நெடுவேல்
திகழ்பூண் முருகன் தீம்புனல் அலைவாய்க்
கமழ்பூம் புறவில் கார்பெற்றுக் களித்த
ஒண்பொறி மஞ்ஞை போல்வதோர்
கண்கவர் காரிகை பெறுதல்உண்டு எனினே''

என வரும்.

''நெருநல் எல்லை ஏனல் தோன்றித்
திருமணி ஒளிர்வரும் பூணன் வந்து
புரவலன் போலும் தோற்றம் உறழ்கொள
இரவன் மாக்களில் பணிமொழி பயிற்றிச்
சிறுதினைப் படுகிளி கடீஇயர் பன்மாண்
குளிர்கொள் தட்டை மதனில புடையாச்
சூரர மகளிரின் நின்ற நீமற்று
யாரை யோஎம் அணங்கியோய் உண்கெனச்
சிறுபுறங் கவையின னாக அதற்கொண்டு
இகுபெயன் மண்ணின் ஞெகிழ்பஞர் உற்றஎன்
உள்ளவன் அறிதல் அஞ்சி உள்ளில்
கடிய கூறிக் கைபிணி விடாஅ
வெரூஉமான் பிணையின் ஒரீஇ நின்ற
என்னுரத் தகைமையில் பெயர்த்துப்பிறிது என்வயின்
சொல்ல வல்லிற்றும் இலனே அல்லாந்து
இனந்தீர் களிற்றில் பெயர்ந்தோன் இன்றும்
தோலாவா றில்லை தோழிநாம் சென்மோ
சாயிறைப் பணைத்தோள் கிழமை தனக்கே

மாசின் ருதலும் அறியா னேசற்று
என்குறைப் புறனிலை முயலும்
அங்கண் ஆளனை நகுகம் யாமே'' (அகம். 32)

என்னும் அகப்பாட்டுங் கொள்க.

"எழாஅ யாகலின் எழில்நலம் தொலைய
வழாஅ தீமோ நொதுமலர் தலையே
ஏனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த
பகழி அன்ன சேயரி மழைக்கண்
நல்ல பெருந்தோ ளோயே கொல்லன்
எறிபொற் பிதிரில் சிறுபல் காய
வேங்கை வீயுகும் ஓங்குமலைக் கட்சி
மயிலறிபு அறியா மன்னோ
பயில்குரல் கவரும் பைம்புறக் கிளியே.'' (நற்றிணை, 13)

இது தலைவி வேறுபாடு கண்டு ஆராயுந் தோழி தனது ஆராய்ச்சியை மறைத்துக் கூறியது. 'நாட்டத்தானும்' என்னும் உம்மை, முற்று: நாட்டமெல்லாந் தழீஇயினமையின். ஆனுருபு இடப்பொருட்டாம். அஃது இடமாக வருகின்ற எட்டனையும் இடத்தியல் பொருளாக உரைக்கவே அவளை நாடுகின்ற காலமும் மேல்வருகின்ற எட்டனையுந் தலைவற்கு உரைக்குங் காலமும் ஒருங்கு நிகழுமென்பதாம். இங்ஙனம் நாடி மதியுடம்படுக்குந் துணையுந் தலைவற்கு இக்குறை முடிப்பல் என்னாது ஒழுகும்.

குறையுறற்கு எதிரிய கிழவனை மறையுறப் பெருமையிற் பெயர்ப்பினும் - இரவுவலியுற்றுக் குறைகூறத் தொடங்கிய தலைவனைத் தோழி தான் இவ்வொழுகலாறு அறிந்தும் அறிந்திலள் போலத் தலைவன் பெருமை கூறி அவன் குறிப்பினை மாற்றினும்:

தான் அறிந்ததனை மறைத்துக் கூறுதலன்றி அன்பின்மை ஒருதலையாக உடையளல்லள்.

உ - ம்: "கல்லோங்கு சாரல் கடிபுனம் காத்தோம்பு
நல்கூர்ந்தார் மாட்டு நயந்தொழுகித்—தொல்வந்த
வான்றோய் குடிக்கு வடுச்செய்தல் தக்கதோ
தேன்றோய்பூங் கண்ணியீர் நீர்''

"மறுவொடு பட்டன மாமலை நாட
சிறுகுடியோர் செய்வன பேணார்—சிறுகுடிக்கு
மூதான் புறத்திட்ட சூடேபோல் நில்லாதோ
தாதாடு மார்ப பழி"

"தகைமாண் சிறப்பில் சான்றோர்க்கு ஒத்த
வகையமை வனப்பினை ஆகலின் உலகமொடு
பாற்படப் பாலை மன்னோ காப்புடுத்து
ஓங்குயர் அடுக்கத்துச் சாந்துவளர் நனந்தலை
நெடுவரை மருங்கில் குடிமை சான்றோர்
இன்னர் என்னாது இன்பம் வெஃகிப்
பின்னிலை முயற்சியின் வருந்தினும்
நும்மோர் அன்னோர்க்குத் தகுவதோ அன்றே"

என வரும்

"இவளே, கானன் நண்ணிய காமர் சிறுகுடி
நீனிறப் பெருங்கடல் கலங்கவுள் புக்கு
மீனெறி பரதவர் மகளே
நீயே, நெடுங்கொடி நுடங்கு நியம மூதூர்க்
கடுந்தேர்ச் செல்வன் காதன் மகனே
நிணச்சுறு வறுத்த உணக்கல் வேண்டி
இனப்புள் ஓப்பும் எமக்குநலன் எவனோ
புலவு நாறுதும் செலநின் றீமோ
பெருநீர் விளையுள்எஞ் சிறுநல் வாழ்க்கை
நும்மொடு புரைவதோ அன்றே
எம்ம னோரில் செம்மலும் உடைத்தே." (நற்றிணை, 45)

இதுவும் அது.

உலகு உரைத்து ஒழிப்பினும் - அவ்வொழுக்கம் அறியாள் போற் கரந்த தோழி உலகத்தாரைப்போல் வரைந்து கொள் ளெனக் கூறித் தலைவனை நீக்கினும்:

உ - ம்: "கோடீர் எல்வளைக் கொழுமணிக் கூந்தல்
ஆய்தொடி மடவரல் வேண்டுதி யாயின்
தெண்கழிச் சேயிருப் படூஉம்
தெண்கடல் சேர்ப்ப வரைந்தனை கொண்மோ"
(ஐங்குறு. 196)

அருமையின் அகற்சியும் - அவை கேட்டுப் பிற்றை ஞான்றும் வந்தவன்மாட்டுச் சிறிது நெஞ்சுநெகிழ்ந்த தோழி அங்ஙனங் கூறுது இவள் அரியளெனக் கூறுதலும்:

இருவருமுள்வழி யவன்வர வுணர்தலின் இருவருள்ளமும் உணர்ந்து அங்ஙனங் கூறினுள்.

"நெருநலும் உன்னுள் எல்லையும் ஒருசிறைப்
புதுவை யாகலின் கிளத்தல் நாணி
நேரிறை வளைத்தோள்நின் தோழி செய்த
ஆரஞர் வருத்தம் களையா யோஎன
வெற்குறை உறுதி ராயின் சொற்குறை
எம்பதத்து எளியள் அல்லள் எமக்கோர்
கட்காண் கடவுள் அல்லளோ பெரும
வாய்கோன் மிளகின் மலையம் கொழுங்கொடி
துஞ்சுபுலி வரிப்புறம் தைவரும்
மஞ்சுசூழ் மணிவரை மன்னவன் மகளே." (பொருளியல்)

"தழையொடு தண்கண்ணி தன்மையால் கட்டி
விழையவும் கூடுமோ வெற்ப—விழையார்ந்து
இலங்கருவி பொன்கொழிக்கும் ஈர்ங்குன்ற நாட
குலங்கருதி வாழ்வார் மகள்."

அவள் அறிவுறுத்துப் பின் வர என்றலும் - தலைவனை நோக்கி நீ காதலித்தவட்கு நீயே சென்று அறிவித்துப் பின்னர் என்மாட்டு வருகவென்றலும்:

'அவள் அறிவுறுத்து' என்று பாடமோதுவாரும் உளர்.

உ - ம்: "தன்னையும் தான்நாணும் சாயலாட்கு இஃதுரைப்பின்
என்னையும் நாணப் படும்கண்டாய்—மன்னிய
வேயேர்மென் தோளிக்கு வேருய் இனிஒருநாள்
நீயே உரைத்து நிறு."

இது நீயே யுரையென்றது.

"நாள்வேங்கை பொன்சொரியும் நன்மலை நன்னாட
கோள்வேங்கை போற்கொடியர் என்னைமார்–கோள்வேங்கை
அன்னையால் நீயும் அருந்தழையாம் ஏலாமைக்கு
என்னையோ நாளை எளிது." (திணை, நூற். 20)

இது கையுறைமறுத்துப் பின் வருக என்றது.

இவை ஒரு கூற்றாக வருவன வுளவேற் காண்க.

பேதைமை ஊட்டலும் - அங்ஙனம் பின் வருகவென்றுழி முன் வந்தானை அறியாமை ஏற்றிக் கூறலுந், தலைவியையும் அங்ஙனம் அறியாமை யேற்றிக் கூறலும்:

உ-ம்: "நெடுந்தேர் கடைஇத் தமியராய் நின்று
கடுங்களிறு காணிரோ என்றீர்—கொடுங்குழையார்
யானை அதருள்ளி நிற்பரோ தம்புனத்து
ஏனல் கிளிகடிகு வார்."

"வேங்கை மலர வெறிகமழ் தண்சிலம்பில்
வாங்கமை மென்றோள் குறவர் மகளிரேம்
சோர்ந்த குருதி ஒழுகமற் றிப்புறம்
போந்ததில் ஐய களிறு." (திணை, ஐம். 8)

இவை தலைவனைப் பேதைமை ஊட்டின.

"நறுந்தண் தகரம் வகுளம் இவற்றை
வெறும்புதல்போல் வேண்டாது வெட்டி—எறிந்துழுது
செந்தினை வித்துவார் தங்கை பிறர்நோய்க்கு
நொந்தினைய வல்லளோ நோக்கு." (திணை,நூற்.24)

இது தலைவியைப் பேதைமை யூட்டியது.

"இளையள் விளைவிலள்" என்பதூஉம் இதன்கண் அடங்கும்.

"புன்றலை மந்திக் கல்லா வன்பறழ்
குன்றுழை நண்ணிய முன்றில் போகாது
எரியகைந் தன்ன வீததை இணர
வேங்கையம் படுசினைப் பொருந்திக் கைய

தேம்பெய் தீம்பால் வெளவலில் கொடிச்சி
எழுதெழில் சிதைய அழுத கண்ணே
தேர்வண் சோழர் குடந்தை வாயின்
மாரியம் கிடங்கின் ஈரிய மலர்ந்த
பெயலுறு நீலம் போன்றன விரலே
பாஅய் அவ்வயிறு அலைத்தலின் ஆனது
ஆடுமழை தவழும் கோடுயர் பொதியின்
ஓங்கிரும் சிலம்பில் பூத்த
காந்தளம் கொழுமுகை போன்றன சிவந்தே''
(நற்றிணை, 379)

என வரும்.

முன்னுறு புணர்ச்சி முறைநிறுத்து உரைத்தலும் - அங்ஙனம் பேதைமை யூட்டியவழி இவள் இக்குறை முடிப்பளென்று இரந்து ஒழுகினேற்கு இவள் புணர்ச்சி யறிந்திலள் போற் கூறினளென ஆற்றாளுயவனை யான் அப்புணர்ச்சி நிகழ்ந்தமை அறிவலென்று கூறி வருத்தந் தீர்த்தலும்:

உ - ம்: ''நறுந்தண் கூந்தல் குறுந்தொடி மடந்தை
சிறுமுதுக் குறைவி ஆயினள் பெரிதுஎன
நின்னெதிர் கிளத்தலும் அஞ்சுவல் எனக்கே
இன்னுயிர் அன்னள் ஆயினும்
தன்னுறு விழுமம் காத்த லானே.''

நின்னெதிர் கிளத்தல் அஞ்சுவல் நீ அவட்கு உரைத்தியெனக் கருதியென்றலிற் புணர்ச்சி யுணர்ந்தமை கூறினாள்.

அஞ்சி அச்சு உறுத்தலும் - அங்ஙனம் ஆற்றுவித்துங் கடிது குறைமுடியாமையைக் கருதுந் தோழி குரவரைத் தான் அஞ்சித் தலைவியும் அவரை அஞ்சுவளெனக் கூறலும் :

அஞ்சுதல் அச்சென்றாயிற்று. இவ்வச்சங் கூறவே அவன் ஆற்றும்.

உ - ம்: ''யாஅம் கொன்ற மரஞ்சுட்டு இயவில்
கரும்பும் அருண்முதல பைந்தாட் செந்தினை
மடப்பிடித் தடக்கை அன்ன பால்வார்பு
கரிக்குறட்டு இறைஞ்சிய செறிதாட் பெருங்குரல்

படுகிளி கடிகம்சேறு மடுபோர்
எஃகுவிளங்கு தடக்கை மலயன் கானத்து
ஆரம் நாறு மார்பினை
வாரன்மற் றைய வருகுவள் யாயே.'' (குறுந். 198)

இஃது யாயை அஞ்சியது.

''யானை உழலும் அணிகிளர் நீள்வரைக்
கானக வாழ்க்கைக் குறவர் மகளிரேம்
ஏனலுள் ஐய வருதன்மற்று என்னைகொல்
காணினும் காய்வர் எமர்.'' (திணை, ஐம். 6)

இது தமரை அஞ்சிக் கூறியது.

உரைத்துழிக் கூட்டமோடு எஞ்சாது கிளந்த இரு நான்கு கிளவியும்-ஆயத்தினீங்கித் தன்னோடு நின்ற தலைவியை அவனோடு கூட்டவேண்டி அவளினீங்கித் தலைவர்க்கு இன்னுழி எதிர்ப்படுதி யென உரைத்தவிடத்துக் கூடுங் கூட்டத்தோடே ஒழியாமற் கிளந்த எண்வகைக் கிளவியும்:

உ - ம்: ''நெய்தற் பரப்பில் பாவை கிடப்பினென்
நின்குறி வந்தனென் இயல்தேர்க் கொண்க
செல்கம் செலவியங் கொண்மோ அல்கலும்
ஆரல் அருந்தும் வயிற்ற
நாரை மிதிக்கும் என்மகள் நுதலே.'' (குறுந். 114)

'வந்தனென்' என்றும், 'என் மகள்' என்றும் ஒருமை கூறிச் 'செல்கம்' என்ற உளப்பாட்டும் பன்மையால் தலைவி வரவுங்கூறி இடத்துய்த்தவாறு முணர்த்தினள். 'செலவியங் கொண்மோ' என்றது நீயே அவளைப் போகவிடுவாய் என்றதாம். நாட்டந் தன் மனத்து நிகழாநிற்றலும் அவன் மனத்துக் குறையுணர்த்துதல் நிகழாநிற்றலுமென்னும் இரண்டினையும் எஞ்சாமற் றழீஇநிற்கும் இவ்வெட்டு மென்றற்கு 'எஞ்சாது' என்றார்.

வந்த கிழவனை மாயஞ் செப்பிப் பொறுத்த காரணங் குறித்த காலையும் - தன் முன்னர் வந்து நின்ற தலைவனைத் தோழி எதிர்ப் பட்டு நின்றேயும் வாராதான்போல மாயமேற்றி அதனைப்பொறுத்த காரணங் குறிப்பினுற் கொள்ளக் கூறுங் காலைக்கண்ணும்:

காரணமாவது நீ அரியையாதலின் இவள் ஆற்ருளா மென்று எதிர்கொள்கின்றேமென்றல்; கூட்டம் நிகழ்ந்தபின் தோழி இவ்வாறு கூறுதற்கு உரியளென்று அதன் பின் வைத்தார். இஃது அவன் வரவை விரும்பியது, வரைவு கடாய தன்று.

உ - ம்: நெடுங்கயிறு வலந்த குறுங்கண் அவ்வலைக்
கடல்பாடு அழிய இனமீன் முகந்து
துணைபுணர் உவகையர் பரத மாக்கள்
இளையரு முதியரும் கிளையுடன் துவன்றி
உப்போய் உமணர் அருந்துறை போக்கும்
ஒழுகை நோன்பகடு ஒப்பக் குழீஇ
அயிர்திணி அடைகரை ஒலிப்ப வாங்கிப்
பெருங்களம் தொகுத்த உழவர் போல
இரந்தோர் வறுங்கலம் மல்க வீசிப்
பாடுபல அமைத்துக் கொள்ளை சாற்றிக்
கோடுயர் திணிமணல் துஞ்சும் துறைவ
பெருமை என்பது கெடுமோ ஒருநாள்
மண்ணுறு முத்தம் அரும்பிய புன்னைத்
தண்ணறும் கானல் வந்து நும்
வண்ணம் எவனோ என்றனிர் செலினே.'' (அகம். 30)

இதனால் தம்மான் இடையூறெய்தி வருந்துகின்ருனை ஒரு நாள் வந்திலிரென மாயஞ் செப்பியவாறும், நீர் வாராமையின் வண்ணம் வேறுபடுமென ஏற்றுக்கோடுமெனக் காரணங் கூறிய வாறுங் காண்க. தம்மேல் தவறின்ருகக் கூறுங்காலத்து இது கூறுவரென்றற்குக் 'குறித்தகாலை' யென்ருர்.

புணர்ந்தபின் அவன்வயின் வணங்கற்கண்ணும் - அக்கூட்டத் தின்பின் முற்காலத்துப் பணிந்து பின்னின்ருனைத் தோழி தானே பணிந்தொழுகுமிடத்தும்:

உ - ம்: ''இவளே, நின்சொல்கொண்ட என்சொல் தேறிப்
பசுநனை ஞாழல் பல்கிளை ஒருசிறைப்
புதுநலன் இழந்த புலம்புமார் உடையள்
உதுக்காண் தெய்ய உள்ளல் வேண்டும்

நிலவும் இருளும் போலப் புலவுத்திரைக்
கடலும் கானலும் தோன்றும்
மடல்தாழ் பெண்ணைஎம் சிறுநல் லூரே'' (குறுந். 81)

'வாங்கு கோனெல்' என்னுங் குறிஞ்சிக்கலியுள்,

''அரவின் பொறியும் அணங்கும் புணர்ந்த
உரவுவில் மேலசைத்த கையை ஒராங்கு
நிரைவளை முன்கைஎன் தோழியை நோக்கிப்
படிகிளி பாயும் பசுங்குரல் எனல்
கடிதன் மறப்பித்தாய் ஆயின் இனிநீ
நெடிதுள்ளல் ஓம்புதல் வேண்டும்...'' (கலி. 50)

எனவும்,

''கடுமா கடவுறூஉங் கோல்போல் எனைத்தும்
கொடுமையிலை யாவது அறிந்தும் அடுப்பல்
வழைவளர் சாரல் வருடை நன்மான்
குழவி வளர்ப்பவர் போலப் பாராட்டி
உழையின் பிரியின் பிரியும்
இழையணி அல்குல்என் தோழியது கவினே'' (கலி. 50)

எனவும் வரும்.

இத்துணையும் ஓர் கூட்டங் கூறினர்.

குறைந்து அவட் படரினும் - தலைவன் இரந்து பின்னின்றமை கண்டு தோழி மனம் நெகிழ்ந்து தான் குறைநேர்ந்து தலைவி யிடத்தே சென்று குறைகூறினும்:

உ - ம்: ''வளையணி முன்கை வாலெயிற்று இன்னகை
இளையர் ஆடும் தளையவிழ் கானல்
விருந்தென வினவி நின்ற
நெடுந்தோள் அண்ணல் கண்டிகும் யாமே'' (ஐங்குறு. 198)

என வரும்.

மறைந்தவள் அருக - நாண் மிகுதியால் தனது வேட்கை மறைந்த தலைவி அக்கூற்றிற்கு உடம்படாது நிற்றலால்; தன்னொடும் அவளொடும் முதன் மூன்று அளைஇ - தலைவனோடுந் தலைவியோடும் நிகழ்ந்த இயற்கைப்புணர்ச்சி முதலிய மூன்றனை

யுந்தான் அறிந்தமை குறிப்பான் உணர்த்தி; பின்னிலை பலவேறு நிகழும் மருங்கினும் - இரந்து பின்னிற்றல் பலவாய் வேறுபட்டு நடக்குமிடத்தும்:

அவை பெருந்தன்மையாறெருவன் யானை முதலியன வினுயுந் தழையுங் கண்ணியுங் கொண்டும் இப்புனத்து வாரா நின்றானெனவும்; அவன் என்மாட்டுப் பெரிதுங் குறையுடையனெனவும், அவன் குறைமுடியாமையின் வருந்தாநின்றானெனவும், அத்தழை நீ ஏற்றல் வேண்டுமெனவும், அக்குறை முடித்தற்கு இஃதிடமெனவும், யான் கூறியது கொள்ளாயாயின் நினக்குச் செறிந்தாருடன் உசாவிக் குறைமுடிப்பா யெனவும், மறுப்பின் மடலேறுவனெனவும்; வரைபாய்வனெனவும், பிறவாற்றானுங் கூறிக் குறைநயப்பித்தலாம்.

உ - ம்: "புனைபூந் தழைஅல்குல் பொன்னன்னாய் சாரல்
தினைகாத் திருந்தேம்யா மாக—வினைவாய்த்து
மாவினவு வார்போல வந்தவர் நம்மாட்டுத்
தாம்வினவல் உற்றதொன்று உண்டு." (ஐந்திணை,ஐம்.14)

"கைதையம் தண்கானல் காலையும் மாலையும்
எய்த வரினும் இதுஎங் குறைஎன்னான்
செய்தழையும் கண்ணியும் சேர்ந்துழி வைத்திறந்தான்
உய்யலன் கொல்லோ உணரலனே என்றியால்."

"ஒருநாள் வாரலன் இருநாள் வாரலன்
பன்னாள் வந்து பணிமொழி பயிற்றிஎன்
நன்னர் நெஞ்சம் நெகிழ்ந்த பின்றை
வரைமுதிர் தேனில் போகி யோனே
யாசாகுஎந்தை யாண்டுளன் கொல்லோ
வேறுபுலன் நன்னாட்டுப் பெய்த
ஏறுடை மழையில் கலிழும்என் நெஞ்சே" (குறுந். 176)

"புணர்துணையோடு ஆடும் பொறியலவன் நோக்கி
இணர்ததையும் பூங்கானல் என்னையும் நோக்கி
உணர்வு ஒழியப் போன ஒலிதிரைநீர்ச் சேர்ப்பன்
வணர்சுரிஐம் பாலோய் வண்ணம் உணரேனால்."
(சிலப். கானல். 31)

"ஓரை யாயம் அறிய ஊரன்
நல்கினன் தந்த நறும்பூந் தண்தழை
ஆறுபடின் எவனோ தோழி வீறுசிறந்து
நெடுமொழி விளக்கும் தொல்குடி
வடுநாம் படுத்தல் அஞ்சுதும் எனவே."

இது கையுறை ஏற்பத் தலைவிக்குக் கூறியது.

"சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா
அலங்குகுலைக் காந்தள் தீண்டித் தாதுகக்
கன்றுதாய் மருளும் குன்ற நாடன்
உடுக்கும் தழைதந் தனனே அவையாம்
உடுப்பின் யாயஞ்சுதுமே கொடுப்பில்
கேளிடைக் கேடுஅஞ் சுதுமே ஆயிடை
வாடல கொல்லோ தாமே அவன்மலைப்
போருடை வருடையும் பாயாச்
சூருடை அடுக்கத்த கொயற்கரும் தழையே."

(நற்றிணை, 359)

இதுவும் அது.

"இலைசூழ் செங்காந்தள் எரிவாய் முகையவிழ்த்த ஈர்ந்தண் வாடை
கொலைவேல் நெடுங்கண் கொடிச்சி கதுப்புளரும் குன்ற நாடன்
உலைவுடை வெந்நோய் உழக்குமால் அந்தோ
முலையிடை நேர்பவர் நேரும் இடமிது மொய்குழலே."

"அவ்வளை வெரிநி னரக்கீர்த் தன்ன
செவ்வரி இதழ சேணுறு பிடவின்
நறுந்தாது ஆடிய தும்பி பசுங்கேழ்ப்
பொன்னுரை கல்லின் நன்னிறம் பெறூஉம்
வளமலை நாடன் நெருநல் நம்மொடு
கிளைமலி சிறுதினைக் கிளிகடிந் தசைஇச்
சொல்லிடம் பெறுஅன் பெயர்ந்தனன் பெயர்ந்தது
அல்லல் அன்றது காதலம் தோழி
தாதுண் வேட்கையில் போதுதெரிந்து ஊதா
வண்டோர் அன்ன அவன் தண்டாக் காட்சி
கண்டும் கழறுேடி வலித்தஎன்
பண்பில் செய்தி நினைப்பா கின்றே." (நற்றிணை, 25)

''மாயோன் அன்ன மால்வரைக் கவாஅன்
வாலியோன் அன்ன வயங்குவெள் அருவி
அம்மலைக் கிழவோன் நம்நயந்து என்றும்
வருந்தினன் என்பதோர் வாய்ச்சொல் தேருய்
நீயுங் கண்டு நுமரொடும் எண்ணி
அறிவறிந்து அளவல் வேண்டு மறுதரற்கு
அரிய வாழி தோழி பெரியோர்
நாடி நட்பின் அல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே.'' (நற்றிணை. 32)

''மறவல் வாழி தோழி துறைவர்
கடல்புரை பெருங்கிளை நாப்பண்
மடல்புனை தேறிநிற் பாடும் பொழுதே.''

இன்னும்வேறுபட வருவனவெல்லாம் ஈண்டு அடக்கிக்கொள்க.

நன்னயம் பெற்றுழி நயம்புரியிடத்தினும் - அங்ஙனந் தோழி கூறிய குறையினை அவள் அருளப் பெற்றவழி அதனைத் தலைவற்குக் கூறுதற்கு விரும்புமிடத்தும் :

அவை தலைவனுற்ருமை கண்டு தோழி கையுறையெதிர்தலும், இரவுக்குறியும் பகற்குறியும் நேர்தலுங், குறியிடங் காட்டலும், பிறவுமாம்.

உ - ம்: ''பொன்மெலியும் மேனியாள் பூஞ்சுணங்கின் மென்முலைகள்
என்மெலிய வீங்கினவே பாவம்என்று – என்மெலிவின்
கண்கண்ணி வாடாமை யானல்ல என்றுரைத்தால்
உண்கண்ணி வாடாள் உடன்று.'' (திணை, நூற். 21)

இதனுட் கண்கண்ணி, குறுங்கண்ணி.

''நிலாவின் இலங்கு மணன்மலி மறுகில்
புலாலம் சேரிப் புல்வேய் குரம்பை
ஊரென உணராச் சிறுமையொடு நீருடுத்து
இன்னு உறையுட் டாயினும் இன்பம்
ஒருநாள் உறைந்திசி னோர்க்கும் வழிநாள்
தம்பதி மறக்கும் பண்பில் எம்பதி
வந்தனை சென்மோ வளைமேய் பரப்ப

பொம்மல் படுதிரை கம்மென உடைதரும்
மரனேங்கு ஒருசிறைப் பலபா ராட்டி
எல்லே எம்மொடு கழிப்பி எல்லுற
நற்றேர் பூட்டலும் உரியிர் அற்றன்று
சேர்ந்தனிர் செல்குவி ராயின் யாமும்
எம்வரை அளவையில் பெட்குவம்
நும்மொப் பதுவோ விரித்திசின் எமக்கே'' (அகம். 200)

''கடும்புலால் புன்னே கடியும் துறைவ
படும்புலால் புட்கடிவான் புக்க—வடும்புலாம்
தாழைமா ஞாழல் ததைந்துயர்ந்த தாழ்பொழில்
ஏழைமான் நோக்கி இடம்'' (திணே, நூற். 44)

என வரும். இன்னும் 'நயம்புரியிடத்தும்' என்றதனுல் அவன் வரவினேத் தலேவிக்குக் கூறுதலுங் கொள்க.

''இவர்பரி நெடுந்தேர் மணியும் இசைக்கும்
பெயர்பட வியங்கிய இளேயரும் ஒலிப்பர்
கடலாடு வியலணிப் பொலிந்த நறுந்தழைத்
திதலே அல்குல் நலம்பா ராட்டிய
வருமே தோழி வார்மணல் சேர்ப்பன்
நிறைபட ஓங்கிய முழவுமுதல் புன்னே
மரவரை மறைகம் அம்மதி பானுள்
பூவிரி கானல் புணர்குறி வந்துநம்
மெல்லிணர் நறும்பொழில் காணு
அல்லல் அரும்படர் காண்கநாம் சிறிதே.''
(நற்றிணே, 307)

இது, தோழி தலேவிக்குப் பகற்குறிக்கண் தலேவன் வருகின்றமை காட்டி அவன் வருத்தங் காண யாம் மறைந்து நிற்பாம் வம்மோவெனக் கூறியது.

எண்ணரும் பன்னகை கண்ணிய வகையினும் - தலேவன் இளிவந் தொழுகுதற்குப் பொருத தோழி அவன் இளிவரவு உணர்த்துங் கருத்தினளாய்ச் செயற்கையாக ஆராய்தற்கு அரியவாய் வரும் ஒன்றல்லாப் பலநகை குறித்த பகுதிக்கண்ணும்:

அவை 'என்னை மறைத்த வெவனுகியர்' என்றலும், அறியாள் போறலுங், குறியாள் கூறலும், படைத்துமொழி கிளவியுங், குறிப்புவேறு கொளலும், பிறவுமாம்.

உ - ம்: "நிறைத்திங்கள் சேர்ந்தோடு நீண்மலை நாட
மறைக்கப் படாதேனை மன்னு—மறைத்துக்கொண்டு
ஓடினுய் ஆதலால் ஒண்டொடியாள் தன்பக்கம்
கூடக் கிடந்ததுஒன் றில்."

"மன்னேர்மன் சாயல் அவருண் மருள்தீர
இன்ஞர்கண் என்பது அறியேனுன்—மின்னூரும்
கார்கெழு தோன்றற் கணமலை நன்னுடை
யார்கண்ண தாகும் குறை."

"தன்னெவ்வம் கூரினும் நீசெய்த அருளின்மை
என்னையும் மறைத்தாள்என் தோழி அதுகேட்டு
நின்னையான் பிறர்முன்னர்ப் பழிகூறல் தான்நாணி."

இது, பழிகூறுவேனென்று தலைவி குறியாததொன்றைத் தோழி கூறினது.

"விருந்தினர் ஆதலின் வினவுதிர் அதன்எதிர்
திருந்துமொழி மாற்றம் தருதலும் இயல்புஎனக்
கூறுவது அம்மயான் ஊறுபல வரும்என
அஞ்சுவன் வாழி அறைய எஞ்சாது
எண்ணிலர் எண்ணியது முடிப்பர்
கண்ணிலர் கொடியர்இவர் அன்னை மாரே."

இது, நிகழாது நிகழ்வதாகப் படைத்து மொழிந்தது.

"நெறிநீர் இருங்கழி நீலமும் சூடாள்
பொறிமாண் வரியலவன் ஆட்டலும் ஆட்டாள்
சிறுநுதல் வேரரும்பச் சிந்தியா நின்ருட்கு
எறிநீர்த்தண் சேர்ப்பயான் என்சொல்லிச் செல்கோ."

இது குறிப்பு வேறு கொண்டாளென்றது.

புணர்ச்சி வேண்டினும் - தலைவன் பகற்குறியையும் இரவுக் குறியையும் விரும்பிக் கூறுமிடத்தும்:

தோழிமேன கிளவி. அவை பலவகைய.

உ - ம்: "நன்னலம் சிதைய நாடொறும் புலம்பப்
பொன்னிணர் வேங்கை துறுகற் ருஅய்
இரும்பிடி வெரூஉ நாடற்கோர்
பெருங்கண் நோட்டம் செய்தன்ரே இலமே."

இது, தோழி தலைவியைப் பகற்குறி நயப்பித்தது.

"மாயவனும் தம்முனும் போலே மறிகடலும்
கானலும்சேர் வெண்மணலும் காணுயோ—கானல்
இடையெலா ஞாழலும் தாழையும் ஆர்ந்த
புடையெலாம் புன்னை புகன்று." (திணை, நூற். 58)

"ஊர்க்கும் அணித்தே பொய்கை பொய்கைக்குச்
சேய்த்தும் அன்றே சிறுகான் யாறே
இரைதேர் வெண்குருகு அல்லது யாவதும்
துன்னல் போகின்ருல் பொழிலே யாமெங்
கூழைக்கு எருமண் கொணர்கம் சேறும்
ஆண்டும் வருகுவள் பெரும்பே தையே." (குறுந். 113)

இவை பகற்குறிநேர்ந்து இடங்காட்டின.

"செங்களம் படக்கொன்று அவுணர்த் தேய்த்த
செங்கோல் அம்பின் செங்கோட்டு யானைக்
கழல்தொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே." (குறுந். 1)

இது, தோழி தலைவியை இடத்துய்த்து நீங்கியது.

"ஆர்கலி வெற்பன் மார்புபுணை யாகக்
கோடுயர் நெடுவரைக் கவாஅன் பகலே
பாடின் அருவி ஆடுதல் இனிதே
நிரையிதழ் பொருந்தாக் கண்ணோடு இரவில்
பஞ்சி வெண்டிரிச் செஞ்சுடர் நல்லில்
பின்னுவீழ் சிறுபுறந் தழீஇ
அன்னை முயங்கத் துயில்இன் ஞதே." (குறுந். 353)

இஃது இரவுக்குறி நயந்த தலைவன் சிறைப்புறமாகப் பகற்குறி நேர்வாள்போல் இரவுக்காப்புமிகுதி கூறியது.

'பாடின்னருவி ஆட' என்றாள் அதன்கண் உதவினானென்பது பற்றி அல்லது களவிற்கு உடன் ஆடுதலின்று,

''செறுவார்க்கு உவகை யாகத் தெறுவர
ஈங்கும் வருபவோ தேம்பாய் துறைவ
சிறுநா வெண்மணி விளரி ஆர்ப்பக்
கடுமா நெடுந்தேர் நேமி போகிய
இருங்கழி நெய்தல் போல
வருந்தினள் அளியணீ பிரிந்திசி னோளே.'' (குறுந்.336)

இது, தலைவன் இரவுக்குறி நயந்தவனைத் தோழி மறுத்தது.

''நாகுபிடி நயந்த முளைக்கோட்டு இளங்களிறு
குன்ற நண்ணிக் குறவர் ஆர்ப்ப
மன்றம் போழு நாடன் தோழி
சுனைப்பூங் குவளைத் தொடலை தந்தும்
தினைப்புன மருங்கில் படுகிளி ஓப்பியும்
காலை வந்து மாலைப் பொழுதில்
நல்லக நயந்துதான் மயங்கிச்
சொல்லவும் ஆகாது அஃகி யோனே.'' (குறுந். 346)

இது, தோழி கிழத்தியை இரவுக்குறி நயப்பித்தது.

''தண்ணம் துறைவன் கடும்பரி மான்தேர்
காலை வந்து மாலை பெயரினும்
பெரிது புலம்பின்றே கானல்
சிறிது புலம்பினமால் தோழி நாமே.''

இது, தலைவியது ஆற்றாமைகண்டு நம் வருத்தந் தீர்தற்கு இரவுக்குறியும் வேண்டுமென்றது.

''ஏனம் இடந்திட்ட வீர்மணிகொண்டு எல்லிடைக்
கானவர் மக்கள் கனல்எனக் கைகாய்த்தும்
வானுயர் வெற்பன் வருவான்கொல் தோழிநம்
மேனி பசப்புக் கெட'' (திணை, ஐம். 4)

இது தலைவன் வருவனென்றது.

''சுறவுப்பிறழ் இருங்கழி நீந்தி வைகலும்
இரவுக்குறிக் கொண்கன் வந்தனன்
விரவுமணிக் கொடும்பூண் விளங்கிழை யோயே.''
(சிற்றெட்டகம்)

இஃது இரவுக்குறி. தலைவன் வந்தமை தலைவிக்குக் கூறியது.

''அன்னாய் வாழிவேண்டு அன்னை நம் படப்பைத்
தண்அயத்து அமன்ற கூதளம் குழைய
இன்னிசை அருவிப் பாடும் என்னதூஉம்
கேட்டியோ வாழிவேண்டு அன்னை நம் படப்பை
ஊட்டி அன்ன வொண்டளிர்ச் செயலை
ஓங்குசினைத் தொடுத்த ஊசல் பாம்பென
முழுமுதல் துமிய உருமெறிந் தன்றே
பின்னும் கேட்டியோ எனவும்அஃது அறியாள்
அன்னையும் கனைதுயின் மடிந்தனள் அதன்றலை
மன்னுயிர் மடிந்தன்றால் பொழுதே காதலர்
வருவர் ஆயின் பருவம் இதுவெனச்
சுடர்ந்திலங்கு எல்வளை ஞெகிழ்ந்த நம்வயின்
படர்ந்த உள்ளம் பழுதின் றாக
வந்தனர் வாழி தோழி அந்தரத்து
இமிழ்பெயல் தலைஇய இனப்பல் கொண்மூத்து
அவிர்வில் வெள்ளம் தலைத்தலை சிறப்பக்
கன்றுகால் ஒய்யும் கடுஞ்சுழி நீத்தம்
புன்றலை மடப்பிடிப் பூசல் பலவுடன்
வெண்கோட் டியானை விளிபடத் துழவும்
அகல்வாய்ப் பாந்தட் படாஅர்ப்
பகலும் அஞ்சும் பனிக்கடுஞ் சுரனே.'' (அகம். 68)

இது, தாயது துயிலுணர்ந்து தலைவன் வந்தமை தோழி தலைவிக்குக் கூறிக் குறிவயிற் சென்றது.

''சேய்விசும் பிவர்ந்த செழுங்கதிர் மண்டிலம்
மால்வரை மறையத் துறைபுலம் பின்றே
இறவருந்தி எழுந்த கருங்கால் வெண்குருகு
வெண்குவட்டு அருஞ்சிறைத் தாஅய்க் கரைய

கருங்கோட்டுப் புன்னை இறைகொண் டனவே
கணைக்கால் மாமலர் கரப்ப மல்குகழித்
துணைச்சுறு வழங்கலும் வழங்கும் ஆயிடை
எல்லிமிழ் பனிக்கடன் மல்குசுடர்க் கொளீஇ
எமரும் வேட்டம் புக்கனர் அதனால்
தங்கின் எவனோ தெய்ய பொங்குபிசிர்
முழவிசைப் புணரி எழுதரும்
உடைகடற் படப்பைஎம் முறைவின் ஊர்க்கே.''
(நற்றிணை, 67)

இஃது இரவுக்குறி வேண்டிய தலைவற்குத் தோழி உடன் பட்டுக் கூறியது.

''ஆம்பல் நுடங்கும் அணித்தழையும் ஆரமும்
தீம்புனல் ஊரன் மகளிவள்—ஆய்ந்தநறும்
தேமலர் நீலம் பிணையல் செறிமலர்த்
தாமரை தன்னையர் பூ.'' (திணை. ஐம். 40)

இஃது இரவுக்குறி நேர்ந்த தோழி இந்நிலத்தின்கண் நீ வருங்கால் இன்னபெற்றியான் வருவாயாகவென்றது.

''கடற்கானற் சேர்ப்ப கழியுலாஅய் நீண்ட
அடற்கானற் புன்னைதாழ்ந்து ஆற்ற—மடற்கானல்
அன்றில் அகவும் அணிநெடும் பெண்ணைத்தே
முன்றில் இளமணன்மேன் மொய்த்து.'' (திணை. நூற். 56)

இஃது இரவுக்குறியிடங் காட்டித் தோழி கூறியது.

''எம்மூர் வாயில் ஒண்துறைத் தடைஇய
கடவுண் முதுமரத்து உடனுறை பழகிய
தேயா வளைவாய்த் தெண்கண் கூருகிர்
வாய்ப்பறை யசாஅம் வலிமுந்து கூகை
மையூன் தெரிந்த நெய்வெண் புழுக்கல்
எலிவான் சூட்டொடு மலியப் பேணுதும்
எஞ்சாக் கொள்கைஎங் காதலர் அரனசைஇத்
துஞ்சாது அலமரு பொழுதின்
அஞ்சுவரக் கடுங்குரல் பயிற்றா தீமே.'' (நற்றிணை; 83)

இஃது இரவுக்குறிவந்த தலைவன் சிறைப்புறமாகக் கூகைக்கு உரைப்பாளாய்த் தோழி கூறியது.

"நிலவு மறைந்தன்று இருளும் பட்டன்று
ஓவத் தன்ன விடனுடை வரைப்பில்
பாவை அன்ன நிற்புறம் காக்கும்
சிறந்த செல்வத் தன்னையும் துஞ்சினள்
கெடுத்துப்படு நன்கலம் எடுத்துக்கொண் டாங்கு
நன்மார் படைய முயங்கி மென்மெலக்
கண்டனம் வருகம் சென்மோ தோழி
கீழு மேலும் காப்போர் நீத்த
வறுந்தலைப் பெருங்களிறு போலத்
தமியன் வந்தோன் பனியலை நிலையே." (நற்றிணை,182)

இது தலைவனைக் கண்டு முயங்குகம் வம்மோ என்றது.

வேண்டாப் பிரிவினும் - தலைவன்றான் புணர்ச்சியை விரும்பாது பிரிவை விரும்பிய இடத்தும் :

அப்பிரிவு தண்டாதிரத்தலை முனிந்த மற்றையவழி 'இட்டுப் பிரிவும் அருமைசெய் தயர்த்தலு' (111) மாம்; ஆண்டுத் தலைவற்குந் தலைவிக்குங் கூறுவன கொள்க.

உ - ம்: "முத்தம் அரும்பு முடத்தாண் முதிர்புன்னை
தத்தும் திரையலைக்கும் தண்ணம் கடல்சேர்ப்ப
சித்திரப் பூங்கொடியே அன்னாட்கு அருளீயாய்
வித்தகப் பைம்பூணின் மார்பு" (திணை, ஐம். 42)

"இறவுப்புறத் தன்ன பிணர்படு தடவுமுதல்
சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை
பெருங்களிற்று மருப்பின் அன்ன அரும்புமுதிர்பு
நன்மான் உழையின் வேறுபடத் தோன்றி
விழவுக்களம் கமழும் உரவுநீர்ச் சேர்ப்ப
இனமணி நெடுந்தேர் பாகன் இயக்கச்
செலீஇய சேறி ஆயின் இவளே
வருவை ஆகிய சின்னாள்
வாழ்வாள் ஆதல் அறிந்தனை சென்மே." (நற்றிணை, 19)

இது பிரிவுவேண்டியவழிக் கூறியது.

"சாரல் பலவின் கொழுந்துணர் நறும்பழம்
இருங்கல் விடரளை வீழ்ந்தன வெற்பில்
பெருந்தேன் இருலொடு கீறு நாடன்
பேரமர் மழைக்கண் கலுழத்தன்
சீருடை நன்னாட்டுச் செல்லும்அன்னாய்" (ஐங்குறு. 214)

எனவும் வரும்.

வேளாண் பெருநெறி வேண்டிய இடத்தும் - தலைவற்குத்தாஞ் சிலகொடுத்தலைத் தலைவி வேண்டியவிடத்தும்:

அது தலைவி 'வேளா ணெதிரும் விருந்தின்கண்' தோழி கூறுவதாம்.

உ - ம்: "பன்னாள் எவ்வம் தீரப் பகல்வந்து
புன்னையம் பொதும்பின் இன்னிழற் கழிப்பி
மாலை மால்கொள நோக்கிப் பண்ணாய்ந்து
வலவன் வண்டேர் இயக்க நீயும்
செலவுவிருப்பு உறுதல் ஒழிகதில் அம்ம
செல்லா நல்லிசைப் பொலம்பூண் திரையன்
பல்பூங் கானல் பவத்திரி யனவிவள்
நல்லெழில் இளநலம் தொலைய ஒல்லெனக்
கழியே யோத மல்கின்று வழியே
வள்ளெயிற்று அரவொடு வயமீன் கொட்கும்
சென்றோன் மன்ற மான்றின்று பொழுதென
நின்றிறத்து அவலம் வீட இன்றிவண்
சேப்பின் எவனோ பூக்கேழ் புலம்ப
பசுமீன் நொடுத்த வெண்ணெல்மாத் தயிர்மிதி
மிதவை மாவார் குநவே நினக்கே
வடவர் தந்த வான்கேழ் வட்டம்
குடபுல வுறுப்பில் கூட்டுபு நிகழ்த்தி
வண்டிமிர் நறுஞ்சாந்து அணிகுவம் திண்டிமில்
எல்லுத் தொழின்மடுத்த வல்வினைப் பரதவர்
கூர்வளிக் கடுவிசை மண்டலில் பாய்ந்துடன்
கோட்சுருக் கிழித்த கொடுமுடி நெடுவலை
தண்கடல் அசைவளி எறிதொறும் வினைவிட்டு

முன்றில் தாழைத் தூங்கும்
தெண்திரைப் பரப்பின்எம் உறைவின் ஊர்க்கே.''
(அகம். 340

இதனுள் தனக்கும் புரவிக்குங் கொடுப்பன கூறித் தடுத்த வாறு காண்க.

''நாள்வலை முகந்த'' (அகம்-300) என்பதும் அது.

புணர்ந்துழி உணர்ந்த அறிமடச் சிறப்பினும் - இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தகாலத்து அவன் தீங்கு உணராதவனை நன்றாக உணர்ந்த அறிவினது மடப்பங் கூறித் தங் காதற்சிறப்பு உரைத்த இடத்தும்:

உ - ம்: ''சுரஞ்செல் யானைக் கல்லுறு கோட்டின்
தெற்றென இறீஇயரோ வைய மற்றியாம்
நும்மொடு நக்க வால்வெள் எயிறே
பாணர் பசுமீன் சொரிந்த மண்டைபோல்
எமக்கும் பெரும்புல வாகி
நும்மும் பெறேஎம் இறீஇயர்எம் உயிரே.'' (குறுந். 169)

இஃது அவனோடு நகுதற்குத் தோன்றிய உணர்வு இன்றி யமையாமை கூறிக் காதற்சிறப்பு உரைத்தது.

ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணும் - தலைவற்குத் தலைவி யைப் பாதுகாத்துக்கொள்ளெனக் கூறுங் கிளவியது பகுதிக்கண் ணும் : தோழிமேன கிளவி.

பகுதியாவன வரைவிடைப்பிரிவு முதலிய பிரிவிடத்தும் புனத் திடைப் புணர்ச்சியின்றி நீங்குமிடத்தும் பிறவிடத்துங் கூறுவன வாம்.

உ- ம்: ''நனைமுதிர் ஞாழல் சினைமருள் திரள்வீ
நெய்தன் மாமலர்ப் பெய்த போல
ஊதை தூற்றும் உரவுநீர்ச் சேர்ப்ப
தாய்உடன்று அலைக்கும் காலையும் வாய்விட்டு
அன்னாய் என்னும் குழவி போல
இன்னா செய்யினும் இனிதுதலை அளிப்பினும்
நின்வரைப் பினள்என் தோழி
தன்னுறு விழுமம் களைஞரோ இலளே'' (குறுந்.397)

''பெருநன்று ஆற்றில் பேணுரும் உளரே
ஒருநன்று உடையள் ஆயினும் புரிமாண்டு
புலவி தீர அளிமதி இலேகவர்
பாடமை ஒழுகிய தண்ணறும் சாரன்
மென்னடை மரையா துஞ்சும்
நன்மலை நாட நின்னலது இலளே'' (குறுந். 115)

''எறிந்தெமர் தாம்உழுத இன்குரல் ஏனன்
மறந்தும் கிளியினமும் வாரா—கறங்கருவி
மாமலை நாட மடமொழி தன்கேண்மை
நீமறவல் நெஞ்சத்துக் கொண்டு'' (ஐந்திணை; ஐம். 18)

''அளிய தாமே செவ்வாய்ப் பைங்கிளி
குன்றக் குறவர் கொய்தினைப் பைங்கால்
இருவி நீள்புனம் கண்டும்
பிரிதல் தேற்றுப் பேரன் பினவே,'' (ஐங்குறு. 284)

இது, தினை அரிந்துழிக் கிளியை நோக்கிக் கூறுவாள்போற் சிறைப்புறமாக ஓம்படுத்தது. இன்னும் ஓம்படைக் கிளவியென்றதற்கு இவளை நீ பாதுகாத்துக்கொள்ளென்று தலைவன் கூறுங் கிளவியது பகுதிக்கண்ணுமென்றும் பொருள் கூறுக.

''பிணங்கரில் வாடிய பழவிறல் நனந்தலை
உணங்கூண் ஆயத்து ஓரான் தெண்மணி
பைய இசைக்கும் அத்தம் வையெயிற்று
இவளொடும் செலினோ நன்றே குவளை
நீர்சூழ் மாமலர் அன்ன கண்ணழக்
கலையொழி பிணையில் கலங்கி மாறி
அன்பிலிர் அகறிர் ஆயின் என்பரம்
ஆகுவது அன்றிவள் அவல நாகத்து
அணங்குடை அருந்தலை உடலி வலன்நேர்பு
ஆர்கலி நல்லேறு திரிதரும்
கார்செய் மாலை வரூஉம் போழ்தே.'' (நற்றிணை, 37)

இது, வரைவிடைப் பிரிகின்ருன் ஆற்றுவித்துக் கொண்டிரு என்ருற்குத் தோழி கூறியது.

செங்கடுமொழியாற் சிதைவுடைத்தாயினும் - தோழி செவ்வனங் கூறுங் கடுஞ்சொற்களால் தலைவி நெஞ்சு சிதைவுடைத் தாயினும்: ஆண்டுந் தோழிமேன கிளவி.

அவை தலைவனை இயற்பழித்தலுந் தலைவியைக் கழறலுமாம்.

உ - ம்: "கௌவையம் பெரும்பழி தூற்ற நலன்அழிந்து
பைதலம் சிறுநுதல் பசலை பாய
நம்மிகல் படுத்த அவரினும் அவர்நாட்டுக்
குன்றம் கொடியகொல் தோழி
ஒன்றும் தோன்ரு மழைமறைந் தனவே."

இது வரைவிடைப் பருவங்கண்டு அழிந்த தோழி இயற் பழித்தது.

"மாசறக் கழீஇய யானை போலப்
பெரும்பெயல் உழந்த இரும்பிணர்த் துறுகல்
பைதல் ஒருதலை சேக்கும் நாடன்
நோய்தந் தனனே தோழி
பசலை ஆர்ந்தன குவளையம் கண்ணே" (குறுந். 13)

"கேழல் உழுத கரிப்புனக் கொல்லையுள்
வாழை முதுகாய் கடுவன் புதைத்தயரும்
தாழருவி நாடன் தெளிகொடுத்தான் என்தோழி
நேர்வளை நெஞ்சூன்று கோல்." (ஐந்திணை, எழு. 11)

இஃது அவன் சூளுறவு பொய்த்ததென இயற்பழித்தது.

"மகிழ்நன் மார்பே வெய்யை யால்நீ
அழியல் வாழி தோழி நன்னன்
நறுமா கொன்று நாட்டில் போக்கிய
ஒன்றுமொழிக் கோசர் போல
வன்கண் சூழ்ச்சியும் வேண்டுமால் சிறிதே" (குறுந். 73)

"மெய்யில் தீரா மேவரு காமமொடு
எய்யாய் ஆயினும் உரைப்பல் தோழி
கொய்யா முன்னும் குரல்வார்பு தினையே
அருவி ஆன்ற பைங்கால் தோறும்

இருவி தோன்றிய பலவே நீயே
முருகும் உரண்கொள்ளும் தேம்பாய் கண்ணிப்
பரியல் நாயொடு பன்மலைப் படரும்
வேட்டுவற் பெறலோடு அமைந்தனை யாழநின்
பூக்கெழு தொடலை நுடங்க எழுந்தெழுந்து
கிள்ளைத் தெள்விளி இடையிடை பயிற்றி
ஆங்காங்கு ஒழுகாய் ஆயின் அன்னை
சிறுகிளி கடிதல் தேற்றாள் இவளெனப்
பிறர்த்தந்து நிறுக்குவ ளாயின்
உறற்கரி தாகும்அவன் மலர்ந்த மார்பே'' (அகம். 28)

என வரும். இதனானே வரையும் பருவமன்றெனக் கூறுதலுங் கொள்க.

என்பு நெகப் பிரிந்தோள் வழிச்சென்று கடைஇ அன்பு தலையடுத்த வன்புறைக்கண்ணும் - என்பு உருகுமாறு தலைவனாற் பிரியப்பட்ட தலைவிக்கு வழிபாடாற்றிச் சென்று தான் கூறும் மொழியை அவள்மனத்தே செலுத்தித் தலைவன் அன்பை அவளிடத்தே சேர்த்துக்கூறிய வற்புறுத்துதற் கண்ணும்:

அப்பிரிவு வரைந்துகோடற்குப் பொருள்வயிற் பிரிதலும், வேந்தர்க்குற்றுழிப் பிரிதலுங், காவற்குப் பிரிதலுமாம். ஆண்டு வற்புறுத்துங்கால் இயற்பழித்தும் இயற்படமொழிந்தும் பிறவாறும் வற்புறுத்தும். முன் 'செங்கடு மொழியா' லென்புழி இயற்பழித்தனவும் வற்புறுத்துதல் பயனாகக் கூறியன வென்றுணர்க.

உ - ம்: "யாஞ்செய் தொல்வினைக்கு எவன்பே துற்றனை
வருந்தல் வாழி தோழி யாம்சென்று
உரைத்தனம் வருகம் எழுமதி புணர்திரைக்
கடல்விளை அமுதம் பெயற்கேற் றாஅங்கு
உருகி அல்குதல் அஞ்சுவல் உதுக்காண்
தம்மோன் கொடுமை நம்வயின் எற்றி
நயம்பெரிது உடைமையில் தாங்கல் செல்லாது
கண்ணீர் அருவி யாக
அழுமே தோழிஅவர் பழமுதிர் குன்றே'' (நற்றிணை. 88)

இது பிரிவிடைத் தோழி இயற்பழித்து வற்புறுத்தது.

''தோளும் தொல்கவின் தொலைந்தன நாளும்
அன்னையும் அருந்துயர் உற்றனள் அலரே
பொன்னணி நெடுந்தேர்த் தென்னர் கோமான்
எழுவுறழ் திணிதோள் இயல்தேர்ச் செழியன்
நேரா எழுவர் அடிப்படக் கடந்த
ஆலங் கானத்து ஆர்ப்பினும் பெரிதென
ஆழல் வாழி தோழி அவரே
மாஅல் யானை மறப்போர்ப் புல்லிக்
காம்புடை நெடுவரை வேங்கடத் தும்பர்
அறையிறந்து அகன்றனர் ஆயினு நிறையிறந்து
உள்ளார் ஆதலோ அரிதே செவ்வேன்
முள்ளூர் மன்னன் கழல்தொடிக் காரி
செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்
ஓரிக் கொன்று சேரலர்க்கு ஈத்த
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி
நிலைபெறு கடவுள் ஆக்கிய
பலர்புகழ் பாவை அன்னநின் நலனே.'' (அகம். 209)

''அழியல் ஆயிழை இழிபுபெரி துடையன்
பழியும் அஞ்சும் பயமலை நாடன்
நில்லா மையே நிலையிற்று ஆகலின்
நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சில்
கடப்பாட் டாளன் உடைப்பொருள் போலத்
தங்குதற்கு உரிய தன்றுநின்
அங்கலுழ் மேனிப் பாஅய பசப்பே'' (குறுந். 143)

என்னுங் குறுந்தொகையுங் கொள்க.

''பெருங்கை இருங்களிறு ஐவன மாந்திக்
கருங்கான் மராம்பொழிற் பாசடைத் துஞ்சும்
சுரும்பிமிர் சோலை மலைநாடன் கேண்மை
பொருந்தினர்க்கு ஏமாப் புடைத்து.'' (ஐந்திணை, எழு. 12)

இவை இயற்பட மொழிந்து வற்புறுத்தன. இன்னும் 'அன்பு தலையடுத்த வன்புறை' என்றதனாற் பிறவுங்கொள்க.

"பெறுமுது செல்வர் பொன்னுடைப் புதல்வர்
சிறுதோள் கோத்த செவ்வரிப் பறையின்
கண்ணகத்து எழுதிய குரீஇப் போலக்
கோல்கொண்டு அலைப்பப் படீஇயர் மாதோ
வீரை வேண்மான் வெளியன் தித்தன்
முரசுமுற் கொளீஇய மாலை விளக்கின்
வெண்கோடு இயம்ப நுண்பனி அரும்பக்
கையற வந்த பொழுதொடு மெய்சோர்ந்து
அவல நெஞ்சினம் பெயர உயர்திரை
நீடுநீர்ப் பனித்துறைச் சேர்ப்பன்
ஓடுதேர் நுண்ணுக நுழைத்த மாவே." (நற்றிணை. 58)

இது, பகற்குறி வந்து போகின்ற தலைவன் புறக்கிடை நோக்கி ஆற்றாத தலைவி குறிப்பறிந்து மாவின்மேல் வைத்து வற்புறுத்தது.

"விளையாடு ஆயமொடு ஓரை யாடாது
இளையோர் இல்லிடத் தில்செறிந் திருத்தல்
அறனும் அன்றே ஆக்கமும் தேய்மெனக்
குறுநுரை சுமந்து நறுமலர் உந்திப்
பொங்கிவரு புதுநீர் நெஞ்சுண வாடுகம்
வல்லிதின் வணங்கிச் சொல்லுநர்ப் பெறினே
செல்கென விடுநண்மற் கொல்லோ வெல்லுமிழ்ந்து
உரவுரும் உரறும் அரையிருள் நடுநாள்
கொடிநுடங் கிலங்கின மின்னி
ஆடுமழை இறுத்தன்றுஅவர் கோடுயர் குன்றே."
(நற்றிணை, 68)

இது, வரைவுநீட ஆற்றாத தலைவி வேறுபாடு புறத்தார்க்குப் புலனாகாமையும் இயையும். இங்ஙனங் கூறுவாரைப் பெறினெனக் கூறி வற்புறுத்தது.

"மறுகுபு புகலு நெஞ்ச நோயின்று
இறுகப் புல்லி முயங்குகம்
சிறுபுன் மாலை செயிர்ப்ப நாமே."

இது, பிரிவிடையாற்றாத தலைவியைத் தோழி நன்னிமித்தங்கூறி வற்புறுத்தது.

ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும் - தலைவன் வருகின்ற நெறியினது தீமையைத் தாங்கள் அறிதலுற்றதனானே எய்திய கலக்கத்தின் கண்ணும்: தோழிமேன கிளவி.

உ - ம்: ''கழுதுகால் கிளர ஊர்மடிந் தன்றே
உருகெழு மரபில் குறிஞ்சி பாடிக்
கடியுடை வியனகர்க் கானவர் துஞ்சார்
வயக்களிறு பொருத வாள்வரி உழுவை
கன்முகைச் சிலம்பில் கழூஉ மன்னே
மென்றோள் நெகிழ்ந்து நாம் வருந்தினும் இன்றவர்
வாரார் ஆயினும் நன்று மன்தில்ல
உயர்வரை அடுக்கத்து ஒளிறுபு மின்னிய
பெயல்கான் மயங்கிய பொழுதுகழி பானாள்
திருமணி அரவுத்தேர்ந்து உழல
உருமுச்சிவந்து ஏறியும் ஓங்குவரை யாறே.''
(நற்றிணை, 255)

''கொடுவரி வேங்கை பிழைத்துக்கோட் பட்டு
மடிசெவி வேழம் வெரீஇ—அடியோசை
அஞ்சி ஒதுங்கு மதருள்ளி ஆரிருள்
துஞ்சா சுடர்த்தொடி கண்.'' (ஐந்திணை, ஐம். 16)

இவை இரவுக்குறிவரவால் தலைவி வருந்துவளென்றது.

''கரைபொரு கான்யாற்றங் கல்லதர்'' என்பதும் அது. ''கூருகிரெண்கின்'' என்னும் (112) அகப்பாட்டுங் காண்க.

'கலக்கம்' எனப் பொதுப்படக் கூறியவதனால் ஆற்றிடை ஏதமின்றிச் சென்றமை தோன்ற ஆண்டு ஓர் குறி செய் எனக் கூறுவனவுங் கொள்க.

''கான மானதர் யானையும் வழங்கும்
வான மீமிசை உருமுநனி உரறும்
அரவும் புலியும் அஞ்சுதக வுடைய
இரவுச் சிறுநெறி தமியை வருதி
வரையிழி அருவிப் பாடொடு பிரசம்
முழவுச்சேர் நரம்பின் இம்மென இமிரும்

பழவிறல் நனந்தலைப் பயமலை நாட
மன்றல் வேண்டினும் பெறுகுவை ஒன்றோ
இன்றுதலை யாக வாரல் வரினே
ஏமுறு துயர நாமிவள் ஒழிய
எற்கண்டு பெயரும் காலை யாழநின்
கற்கெழு சிறுகுடி எய்திய பின்றை
ஊதல் வேண்டுமாற் சிறிதே வேட்டொடு
வேய்பயில் அழுவத்துப் பிரிந்தநின்
ஆய்பயிர் குறிநிலை கொண்ட கோடே.'' (அகம். 318)

என்னும் நித்திலக்கோவையுள், 'வரினே ஏமுறு துயரம் நாமிவனொழிய, நின்னாய்பயிர் குறிநிலை கொண்ட கோட்டை ஊதல் வேண்டுமாற் சிறிது' என்றவாறு காண்க.

காப்பின் கடுமை கையற வரினும் - காத்தற்றொழிலால் உண்டாங் கடுஞ்சொற்கள் களவொழுக்கத்திடத்தே எல்லையற வருமிடத்தும் : தோழிமேன கிளவி; அவை பலவகைய.

உ-ம் : ''கடலுடன் ஆடியும் கானல் அல்கியும்
தொடலை ஆயமொடு தழுவணி அயர்ந்தும்
நொதுமலர் போல கதுமென வந்து
முயங்கினன் செலினே அலர்ந்தன்று மன்னே
துத்திப் பாந்தள் பைத்தகல் அல்குல்
திருந்திழை துயல்வுக்கோட் டசைத்த பசுங்கழைத்
தழையினும் உழையில் போகான்
தான்தந் தனன்யாய் காத்தோம் பல்லே.'' (குறுந். 294)

இது, பகற்குறிக்கட் சிறைப்புறமாகச் செறிப்பறிவுறீஇயது.

''கணமுகை கைஎனக் காந்தள் கவின
மணமுகை என்றெண்ணி மந்திகொண் டாடும்
விறன்மலை நாட வரவரிதாம் கொல்லோ
புனமும் அடங்கின காப்பு.'' (திணை, ஐம். 2)

இது திணை விளைந்தமை கூறிச் செறிப்பறிவுறீஇயது.

''அறையருவி ஆடாள் தினைவளமும் காவாள்
பொறைஉயர் தண்சிலம்பில் பூந்தழையும் கொய்யாள்
உறைகவுள் வேழம்ஒன்று உண்டென்றாள் அன்னை
மறையாதி வாழிய மையிரும் குன்றே.''

இது குன்றத்திற்குக் கூறுவாளாகச் செறிப்பறிவுறீஇயது.

''சாந்தம் எறிந்துஉழுத சாரல் சிறுதினைச்
சாந்த இதண மிசைச்சார்ந்து—சாந்தம்
கமழக் கிளிகடியும் கார்மயில் அன்னாள்
இமிழக் கிளிஎழா வார்த்து.' '(திணை, நூற். 3)

இது பிறரைக் காத்தற்கு இடுவரெனச் செறிப்பறிவுறீஇயது.

''பல்லோர் துஞ்சு நள்ளென் யாமத்து
உரவுக்களிறு போல்வந்து இரவுக்கதவு முயறல்
கேளேம் அல்லேம் கேட்டனெம் பெரும
ஓரி முருங்கப் பீலி சாய
நன்மயில் வலைப்பட் டாங்கியாம்
உயங்குதொறும் உயங்கும் அறனில் யாயே.'' (குறுந். 244)

இஃது இரவுக்குறிக் காப்பின் கடுமை கூறியது.

''வினைவிளையச் செல்வம் விளைவதுபோல் நீடாப்
பனைவிளைவு நாம்எண்ணப் பாத்தித்—தினைவிளைய
மையார் தடங்கண் மயிலன்னாய் தீத்தீண்டு
கையார் பிரிவித்தல் காண்.'' (திணை, நூற். 5)

இஃது இவ்வொழுக்கத்தினை வேங்கை நீக்கிற்றெனத் தலைவிக்குக் கூறியது. இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக.

''புன்னையம் பூம்பொழிலே போற்றவே பாதுகா
அன்னப் பெடையே அறமறவல்—மன்னும்
கடும்புதர்மான் காவலி கானலம் செல்லூர்
நெடுங்கடலே நீயு நினை.''

இது, புனங் கைவிட்டுப் போகின்றுழிச் சிறைப்புற மாகத் தோழி கூறியது.

"பண்டைக்கொள் நல்வினை இல்லேம் பதிப்பெயர்தும்
கண்டற் குலங்காள் கழியருகேர்—முண்டகங்காள்
நாணி யிராதே நயந்துஅங்கு அவர்க்குஉரைமின்
பேணி அவர்செறித்த லான்."

இது, தலைவற்குக் கூறுமினென்றது.

களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக் காதன் மிகுதி உளப்பட - (காதன் மிகுதி உளப்படக் களனும் பொழுதும் வரைநிலை விலக்கி) அவளிடத்துக் காதன் மிகுதி மனத்து நிகழாநிற்க இருவகையிடத்தையும் இருவகைக் காலத்தையுந் தாம் வரைந்து கூறும் நிலைமையைத் தவிர்த்து அவன் வயின் தோன்றிய கிளவியையும்; பிறவும் - கூறியவாறன்றிப் பிற வாருக அவன் வயின் தோன்றிய கிளவியையும்; நாடும் ஊரும் இல்லுங் குடியும் பிறப்பும் சிறப்பும் இறப்ப நோக்கி அவன் வயின் தோன்றிய கிளவியொடு தொகைஇ - அவன் பிறந்த நாடும் அதன் பகுதியாகிய குடியிருப்பும் அவ்வூர்க்கு இருப்பாகிய மனையும் பார்ப்பார் முதலிய நால்வகை வருணமும் அவ்வருணத்துள் இன்ன வழி இவனென்றலும் ஒரு வயிற்றுப் பிறந்தோர் பலருள்ளுஞ் சிறப்பித்துக் கூறலும் பிறரின் ஒவ்வாதிறந்தனவாதல் நோக்கித் தலைவனிடத்தே தோழி கூறிய கிளவியோடே கூடி; அனைநிலை வகையான் வரைதல் வேண்டினும் - அத்தன்மைத்தாகிய நிலைமை யின் கூறுபாட்டானே வரைந்து கோடலை விரும்பிய வழியும்: தோழிமேன கிளவி.

'பகற் புணர்களனே' (தொல்-பொ-132) 'இரவுக்குறியேயில்' (தொல்-பொ-131) 'குறியெனப் படுவது' (தொல்-பொ-130) என்னுஞ் சூத்திரங்களாற் களனும் பொழுதும் உணர்க.

உ - ம்: "புன்னை காத்தும் அன்னம் ஓப்பியும்
பனியிரும் கானல் யாம்விளை யாட
மல்லலம் பேரூர் மறுகின்
அல்கலும் ஓவாது அலரா கின்றே."

இது பகற்குறி விலக்கியது.

"நெடுமலை நன்னாட நின்வேல் துணையாக்
கடுவிசை வாலருவி நீந்தி—நடுவிருள்
இன்னா அதர்வர ஈர்ங்கோதை மாதராள்
என்னாவாள் என்னுமென் நெஞ்சு." (ஐந்திணை, ஐம். 19)

இது இரவுக்குறி விலக்கியது.

"இரவுவாரலை ஐய விரவுவீ
அகலறை வரிக்கும் சாரல்
பகலும் பெறுதிஇவள் தடமென் தோளே." (கலி. 49)

இது பகற்குறி நேர்வாள்போல் இரவுக்குறி விலக்கியது.

"திரைமேல்போந்து எஞ்சிய தெண்கழிக் கானல்
விரைமேவு பாக்கம் விளக்காக்—கரைமேல்
விடுவாய்ப் பசும்புற இப்பிகான் முத்தம்
படுவாய் இருளகற்றும் பாத்து." (திணை, நூற். 48)

இதுவும் அது.

இவை வரவுநிலை விலக்கின.

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட செவ்வியை ஆகுமதி
யாரஃது அறிந்திசி னோரே சாரல்
சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே. (குறுந். 18)

இது காதன் மிகுதி கூறியது.

'பிறவும்' என்றதனால்,

"கோடீர் இலங்குவளை ஞெகிழ நாளும்
பாடில கலிழ்ந்து பனியா னவே
துன்னரு நெடுவரைத் ததும்பிய அருவி
தண்ணென் முழவின் இமிழிசை காட்டும்
மருங்கில் கொண்ட பலவில்
பெருங்கண் நாடநின் நயந்தோள் கண்ணே" (குறுந். 365)

இஃது யான் வரையுந் துணையும் ஆற்றுவளோ என்றாற்கு ஆற்றாளென்றது.

"நெடுவரை மிசையது குறுங்கால் வருடை
தினைபாய் கிள்ளை வெரூஉ நாட
வல்லைமன்று அம்ம பொய்த்தல்
வல்லாய் மன்றநீ யல்லது செயலே." (ஐங்குறு. 287)

இது தலைவனைப் பழித்தது.

"கானல் கண்டல் கழன்றுகு பைங்காய்
நீனிற இருங்கழி உட்பட வீழ்ந்தென
உறுகால் தூக்கத் தூங்கி ஆம்பல்
சிறுவெண் காக்கை ஆவித் தன்ன
வெளிய விரியும் துறைவ என்றும்
அளிய பெரிய கேண்மை நும்போல்
சால்பெதிர் கொண்ட செம்மை யோரும்
தேறா நெஞ்சம் கையறுபு வாட
நீடின்று விரும்பா ராயின்
வாழ்தன்மற்று எவனோ தேய்கமா தெளிவே."
(நற்றிணை, 345)

இஃது ஆற்றாத தலைவியைக் கடிதின் வரைவேனென்று தலைவன் தெளிவிக்கப் புக்குழித் தோழி தெளிவிடை விலக்கியது.

"குன்றக் குறவன் காதல் மடமகள்
மென்தோள் கொடிச்சியைப் பெறற்கரி தில்ல
பைம்புறப் படுகிளி ஓப்பலர்
புன்புல மயக்கத்து விளைந்தன தினையே." (ஐங்குறு. 260)

இது புனங்காவல் இனியின்று என்றது.

"என்னுங்கொல் நீடில் இனவேங்கை நாளுரைப்பப்
பொன்னும்போல் வேலவர் தாம்புரிந்தது—என்னே
மருவியா மாலை மலைநாடன் கேண்மை
இருவியா மேனல் இனி." (திணை, நூற். 18)

இது, தினை அரிகின்றமையுஞ் சுற்றத்தார் பொருள் வேட்கையுங் கூறியது.

கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது
நறுவீ அடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்கும்
குறியா இன்பம் எளிதின் நின்மலைப்
பல்வேறு விலங்கு மெய்து நாட
குறித்த இன்ப நினக்கு எவனரிய
வெறுத்த வேஎர் வேய்மருள் பணைத்தோள்
நிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு
இவளும் இனைய ளாயின் தந்தை
அருங்கடிக் காவலர் சோர்பதன் ஒற்றிக்
கங்குல் வருதலும் உரியை பைம்புதல்
வேங்கையும் ஒள்ளிணர் விரிந்தன
நெடுவெண் திங்களும் ஊர்கொண் டன்றே.'' (அகம். 2)

'விலங்கும் எய்தும் நாட'வென்று அந்நாட்டினை இறப்பக் கூறி இந்நாடுடைமையிற் 'குறித்த இன்பம் நினக்கெவ னரிய' வென வரைதல் வேண்டியவாறும், வேங்கை விரிந்ததனால் தினை யறுத் தலின் இற்செறிப்புக் கூறியவாறுங், 'கங்குல் வருதலும் உரியை, யெனப் பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்வாள்போற்கூறி 'நெடு வெண்டிங்களு மூர்கொண் டன்றே' யென்று அதனையும் மறுத்து வரைதற்கு நல்லநாளெனக் கூறி வரைவுகடாய வாறுங் காண்க.

''காமங் கடவ வுள்ளம் இனைப்ப
யாம்வந்து காண்பதோர் பருவ மாயின்
ஓங்கித் தோன்றும் உயர்வரைக்கு
யாங்கெனப் படுவது நும்மூர் தெய்யோ.'' (ஐங்குறு. 237)

இஃது ஊரை இறப்பக் கூறியது.

''துணைபுணர்ந் தெழுதரும்'' என்னும் நெய்தற்கலியுட்,

''கடிமலர்ப் புன்னைக்கீழ்க் காரிகை தோற்றாளைத்
தொடிநெகிழ் தோளளாத் துறப்பாயான் மற்றுநின்
குடிமைக்கண் பெரியதோர் குற்றமாய்க் கிடவாதோ;
ஆய்மலர்ப் புன்னைக்கீழ் அணிநலம் தோற்றாளை
நோய்மலி நிலையளாத் துறப்பாயான் மற்றுநின்
வாய்மைக்கண் பெரியதோர் வஞ்சமாய்க் கிடவாதோ;
திகழ்மலர்ப் புன்னைக்கீழ்த் திருநலம் தோற்றாளை

திகழ்மலர்க் கண்ணளாத் துறப்பாயான் மற்றுநின்
புகழ்மைக்கண் பெரியதோர் புகராகிக் கிடவாதோ''
(கலி. 135)

என இவை ஒழுக்கமும் வாய்மையும் புகழும் இறப்பக் கூறியன. குடிப்பிறந்தார்க்கு இம்மூன்றுஞ் சிறப்பக் கூறல் வேண்டும். ஏனைய வந்துழிக் காண்க.

இன்னும் 'அனைநிலைவகை' என்றதனுலே தலைவி யாற்ருமை கண்டு வரைவுகடாவவோவென்று தலைவியைக் கேட்டலுஞ் சிறைப் புறமாகவுஞ் சிறைப்புறமன்ருகவுந் தலைவி யாற்ருமை கூறி வரைவுகடாவுவனவும் பிறவும் வேறுபட வருவனவும் இதனுன் அமைக்க.

''கழிபெரும் கிழமை கூறித் தோழி
ஒழியாய் ஆயின்ஒன்று உரைக்கோ தெய்ய''

''கடவுள் நெற்றிய கருங்கால் வேங்கை
தடவுநிலைப் பலவொடு தாழ்ந்த பாக்கத்துப்
பின்னீ ரோதி இவள்தமர்க்கு உரைப்பதோர்
பெண்யாப் பாயினு மாக ஒண்ணுதல்
இலங்குவளை மென்தோள் கிழமை
விலங்குமலை நாடநீ வேண்டுதி எனினே''

''நிலவும் இருளும் போல நெடுங்கடல்
கழியும் கானலும் மணந்தன்று
நுதலும் தோளும் அணிந்தன்ருல் பசப்பே''

எனவரும்.

ஐயச் செங்கை தாய்க்கு எதிர்மறுத்துப் பொய் என மாற்றி மெய்வழிக் கொடுப்பினும்- தலைவிக்குக் கூட்டம் உண்டு கொலென்று தாய் ஐயுற்றவழி அவ்வையப்பட்ட செய்கையைத் தாய்க்கு எதிரேநின்று மறுத்து அதனைப் பொய்யெனவே கருதும்படி அவள் மனத்தினின்றும் போக்கிப் பொய்யல்லன சில சொற்களை மெய்வழிப்படுத்து அறிவுகொள்ளக் கொடுப்பினும்:

உ ம் : ''உருமுரறு கருவிய பெருமழை தலைஇப்
பெயலான்று அவிந்த தூங்கிருள் நடுநாள்
மின்னுநிமிர்ந் தன்ன கனங்குழை இமைப்பப்
பின்னுவிடு நெறியில் கிளைஇய கூந்தலள்
வரையிழி மயிலின் ஒல்குவனள் ஒதுங்கி

மிடையூர்பு இழியக் கண்டனென் இவள்என
அலையல் வாழிவேண்டு அன்னை நம் படப்பைச்
சூருடைச் சிலம்பில் சுடர்ப்பூ வேய்ந்து
தாம்வேண்டு உருவின் அணங்குமார் வருமே
நனவின் வாயே போலத் துஞ்சுநர்க்
கனவாண்டு மருட்டலும் உண்டே இவள்தான்
சுடரின்று தமியளும் பனிக்கும் வெருவர
மன்ற மராஅத்த கூகை குழறினும்
நெஞ்சழிந்து அரணம் சேரும் அதன்தலைப்
புலிக்கணத் தன்ன நாய்த்தொடர் விட்டும்
முருகன் அன்ன சீற்றத்துக் கடுந்திறல்
எந்தையும் இல்ல ஞகை
அஞ்சுவள் அல்லளோ இவள்இது செயலே.'' (அகம்.158)

இது மிடையை ஏறி இழிந்தாளென்றது காரணமாக ஐயுற்ற தாயைக் கனவுமருட்டலும் உண்டென்றது முதலாகப் பொய்யென மாற்றி அணங்கும் வருமென மெய்வழிக் கொடுத்தது.

இது சிறைப்புறமாகக் கூறி வரைவு கடாதலின் அதன் பின் வைத்தார்'

''வேங்கை நறுமலர் வெற்பிடை யாம்கொய்து
மாந்தளிர் மேனி வியர்ப்பமற்—ருங்குளனைத்தும்
பாய்ந்துஅருவி ஆடினே மாகப் பணிமொழிக்குச்
சேந்தனவாம் சேயரிக்கண் தாம்;'' (ஐந்திணை, ஐம் 15)

இதுவும் அது.

அவன் விலங்குறினும் - தன்ஞனுந் தலைவியானும் இடையீடு படுதலின்றித் தலைவனுற் கூட்டத்திற்கு இடையூறு தோன்றினும்; அது வரைவிடைப் பொருட்பிரிவும், வேந்தற்குற்றுழியும், காவற்பிரிவுமாம்.

உ - ம்: ''செவ்விய தீவிய சொல்லி அவற்றெடு
பைய முயங்கிய வஞ்ஞான்று அவையெல்லாம்
பொய்யாதல் யான்யாங்கு அறிகோ மற்றுஐய
அகனகர் கொள்ளா அலர்தலைத் தந்து
பகன்முனி வெஞ்சுரம் உள்ளல் அறிந்தேன்
மகனல்லை மன்ற இனி.'' (கலி. 19)

"நுண்ஞாண் வலையில் பரதவர் போத்தந்த
பன்மீன் உணங்கல் கவரும் துறைவனைக்
கண்ணினால் காண இயையுங்கொல் என்தோழி
வண்ணந்தா வென்கம் தொடுத்து". (ஐந், எழு. 66)

களம்பெறக் காட்டினும் - காப்பு மிகுதியானுங் காதன் மிகுதியானுந் தமர் வரைவு மறுத்ததினானுந் தலைவி ஆற்றாளாயவழி இஃதெற்றினானாயிற்றெனச் செவிலி அறிவரைக் கூஉய் அவர் களத்தைப் பெருநிற்கத் தலைவியை அவர்க்கு வெளிப் படக் காட்டினும்:

களமாவது கட்டுங் கழங்கும் இட்டுரைக்கும் இடமும் வெறியாட்டிடமுமாம்.

உ-ம்: "பொய்படுபு அறியாக் கழங்கே மெய்யே
மணிவரைக் கட்சி மடமயி லாலுநம்
மலர்ந்த வள்ளியம் கானங் கிழவோன்
ஆண்டகை விறல்வேள் அல்லன் இவள்
பூண்டாங்கு இளமுலை அணங்கி யோனே." (ஐங்குறு. 250)

இது கழங்குபார்த்துழிக் கூறியது.

"கறிவளர் சிலம்பில் கடவுள் பேணி
அறியா வேலன் வெறியெனக் கூறும்
அதுமனங் கொள்குவை அனையிவள்
புதுமலர் மழைக்கண் புலம்பிய நோய்க்கே."
(ஐங்குறு. 243)

இது தாயறியாமை கூறி வெறி விலக்கியது.

"அம்ம வாழி தோழி பன்மலர்
நறுந்தண் சோலை நாடுகெழு நெடுந்தகை
குன்றம் பாடான் ஆயின்
என்பயம் செய்யுமோ வேலற்கு வெறியே."
(ஐங்குறு. 244)

இது தலைவிக்குக் கூறியது.

"நெய்தன் நறுமலர் செருந்தியொடு விரைஇக்
கைபுனை நறுந்தார் கமழும் மார்பன்
அருந்திறல் கடவுள் அல்லன்
பெருந்துறைக் கண்டிவள் அணங்கி யோனே."
(ஐங்குறு. 182)

இது வேலற்குக் கூறியது.

"கடவுள் கற்சுனை அடையிறந்து அவிழ்ந்த
பறியாக் குவளை மலரொடு காந்தள்
குருதி ஒண்பூ உருகெழக் கட்டிப்
பெருவரை அடுக்கம் பொற்பச் சூர்மகள்
அருவி இன்னியத் தாடு நாடன்
மார்புதர வந்த படர்மலி அருநோய்
நின்னணங்கு அன்மை அறிந்தும் அண்ணாந்து
கார்நறும் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்
கடவுள் ஆயினு மாக
மடவை மன்ற வாழிய முருகே." (நற்றிணை, 34)

இது முருகற்குக் கூறியது.

"அன்னை தந்தது ஆகுவது அறிவென்
பொன்னகர் வரைப்பில் கன்னம் தூக்கி
முருகென மொழியு மாயின்
அருவரை நாடன் பெயர்கொலோ அதுவே."
(ஐங்குறு. 247)

இது தமர்கேட்பக் கூறியது.

பிறன்வரைவு ஆயினும் - நொதுமலர் வரையக் கருதிய வழித் தலைவி சுற்றத்தார் அவ்வரைவினை ஆராயினும்; தோழி தலைவற்குந் தலைவிக்குங் கூறும்.

உ-ம்: "கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை
முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக்
கொழுமீன் கொள்பவர் பாக்கம் கல்லென
நெடுந்தேர் பண்ணி வரலா னுதே

குன்றத் தன்ன குவவுமணல் நீந்தி
வந்தனர் பெயர்வர்கொல் தாமே அல்கல்
இளையரும் முதியரும் கிளையுடன் குழீஇக்
கோட்சுரு வெறிந்தெனச் சுருங்கிய நரம்பின்
முடிமுதிர் பரதவர் மடமொழிக் குறுமகள்
வலையும் தூண்டிலும் பற்றிப் பெருங்கால்
திரைஎழு பௌவ முன்னிய
கொலைவெஞ் சிருஅர் பாற்பட் டனளே.'' (நற்றிணை, 207)

இது, நொதுமலர் வரைவு மலிந்தமை தோழி சிறைப்புறமாகக் கூறியது. 'பாற்பட்டனள்' எனத் தெளிவுபற்றி இறந்த காலத்தாற் கூறினாள்.

''இன்றியாண் டையனோ தோழிக் குன்றத்துப்
பழங்குழி அகழ்ந்த கானவன் கிழங்கினொடு
கண்ணகன் தூமணி பெறூஉ நாடன்
அறிவுகாழ்க் கொள்ளும் அளவைச் செறிதொடி
எம்மில் வருகுவை நீயெனப்
பொம்ம லோதி நீவி யோனே.'' (குறுந். 379)

அது தாய் கேட்பத் தோழி தலைவிக்குக் கூறியது.

அவன் வரைவு மறுப்பினும் - தலைவி சுற்றத்தார் தலைவற்கு வரைவு மறுத்தவழியும்: தோழி அறத்தொடுநிலையாற் கூறும்.

உ - ம்: ''அலங்குமழை பொழிந்த வகன்கண் அருவி
ஆடுகழை அடுக்கத்து இழிதரு நாடன்
பெருவரை அன்ன திருவிறல் வியன்மார்பு
முயங்காது கழிந்த நாளிவண்
மயங்கிதழ் மழைக்கண் கலிழும் அன்னாய்.''
(ஐங்குறு. 220)

''குன்றக் குறவன் காதன் மடமகள்
அணிமயில் அன்ன அசைநடைக் கொடிச்சியைப்
பெருவரை நாடன் வரையு மாயின்
கொடுத்தனெம் ஆயினோ நன்றே
இன்னும் ஆனாது நன்னுதல் துயரே.'' (ஐங்குறு. 258)

என வரும்.

"அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பிரிந்தோர்ப் புணர்ப்பவர் இருந்தனர் கொல்லோ
தண்டுடைக் கையர் வெண்டலைச் சிதவலர்
நன்றுநன்று என்னு மாக்களோடு
இன்றுபெரிது என்னும் ஆங்கணது அவையே."(குறுந்.146)

இது தமர் வரைவு மறுப்பரோவெனக் கவன்றாட்குத் தோழி கூறியது.

"நுண்ணேர் புருவத்த கண்ணு மாடும்
மயிர்வார் முன்கை வளையும் செற்றும்
களிறுகோட் பிழைத்த கதஞ்சிறந்து எழுபுலி
யெழுதரு மழையிற் குழுமும்
பெருங்கல் நாடன் வருங்கொல் அன்னாய்." (ஐங்குறு. 218)

இது, தமர் வரைவுமறுத்துழி ஆற்றாத தலைவிக்குத் தோழி, தீயகுறி நீங்கி நற்குறி தனக்குச் செய்யக்கண்டு கடிதின்வரைவ ரெனக் கூறியது.

முன்னிலை அறன் எனப் படுதல் என்று இருவகைப் புரை தீர் கிளவி தாயிடைப் புகுப்பினும் [அறனெனப்படுதல் இரு வகைப் புரைதீர் முன்னிலையென்று கிளவி தாயிடைப் புகுப் பினும்] - அறனென்று சொல்லப்படுந் தன்மை இருவர் கண்ணுங் குற்றந்தீர்ந்த எதிர்ப்பாடென்று செவிலியிடத்தே கூறி அக் கிளவியை நற்றாயிடத்துஞ் செலுத்தினும்:

என்றது, புனறருபுணர்ச்சியும், பூத்தரு புணர்ச்சியுங், களிறுதருபுணர்ச்சியும் போல்வன செவிலிக்குக் கூறி அவள் நற்றாய்க்குக் கூறுதலை நிகழ்த்துவித்தலாம். எனவே, அவள் தந்தைக்குந் தன்னையர்க்கும் உணர்த்துதலும் அதனை மீண்டு வந்து தலைவிக்கு உணர்த்துதலும் பெற்றாம். அவ்வறத்தொடு நிலை எழுவகைய (207) எனப் பொருளியலுட் கூறுப.

உதாரணம்: "காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்'. (கலி. 39) என்னுங் குறிஞ்சிக்கலியுள்; "தெருமந்து சாய்த்தார் தலை" எனப் புனறருபுணர்ச்சியால் தோழி செவிலிக்கு அறத் தொடுநிற்பச் செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநிற்ப அவள் ஏனை யோர்க்கு அறத்தொடு நின்றவாறு காண்க.

"வாடாத சான்றோர் வரவெதிர் கொண்டிராய்க்
கோடாது நீர்கொடுப்பின் அல்லது—கோடா
எழிலும் முலையும் இரண்டற்கு முந்நீர்ப்
பொழிலும் விலையாமோ போந்து". (திணை, நூற். 15)

"சான்றோர் வருந்திய வருத்தமு நுமது
வான்றோய்வு அன்ன குடிமையும் நோக்கித்
திருமணி வரன்றும் குன்றம் கொண்டிவள்
வருமுலை யாகம் வழங்கின் நன்றே
அஃதான்று, அடைபொருள் கருதுவிர் ஆயில் குடையொடு
கழுமலம் தந்த நற்றேர்ச் செம்பியன்
பங்குனி விழவின் வஞ்சியோடு
உள்ளி விழவின் உறந்தையும் சிறிதே."

இவை நற்றாய் தந்தை தன்னையர்க்கு அறத்தொடு நின்றன.

"அன்னாய் வாழிவேண்டு அன்னை என்னை
தானு மலைந்தான் எமக்கும் தழையாயின
பொன்வீ மணிஅரும் பினவே
என்ன மரங்கொல்அவர் சாரல் அவ்வே." (ஐங்குறு. 201)

இது தழைதந்தமை கூறிற்று.

"சுள்ளி சுனைநீலம் சோபா லிகைசெயலை
அள்ளி அளகத்தின் மேலாய்ந்து—தெள்ளி
இதனால் கடியொடுங்கா ஈர்ங்கடா யானை
உதனால் கடிந்தான் உளன்." (திணை, நூற். 2)

இது களிற்றிடையுதவி கூறிற்று.

"வில்லார் விழவினும் வேலாழி சூழ்உலகின்
நல்லார் விழவகத்து நாங்காணே—நல்லாய்
உவர்க்கத் தெறிதிரைச் சேர்ப்பனோடு ஒப்பார்
சுவர்க்கத்து உளராயின் சூழ்." (திணை, நூற். 62)

இது, செவிலி தலைவியைக் கோலஞ்செய்து இவள் நலத்திற்கு ஒப்பான் ஒருவனைப் பெறவேண்டுமென்றாட்குத் தோழி கூறியது.

"பெருங்கடல் திரையது சிறுவெண் காக்கை
துறைபடி அம்பி அகமனை ஈனும்
தண்ணம் துறைவன் நல்கின்
ஒண்ணுதல் அரிவை பாலா ரும்மே." (ஐங்குறு. 168)

இது, நொதுமலர் வரைவுழி ஆற்ருது பசியட நின்றுழி இதற்குக் காரணமென்னென்ற செவிலிக்குத் தோழி கூறியது.

"எந்தையும் யாயும் உணரக் காட்டி
ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்
மலைகெழு வெற்பன் தலைவந்து இரப்ப
நன்றுபுரி கொள்கையின் ஒன்ரு கின்றே
முடங்கல் இறைய தூங்கணம் குரீஇ
நீடிரும் பெண்ணைத் தொடுத்த
கூட்டினும் மயங்கிய மைய லூரே." (குறுந். 374)

இஃது அறத்தொடு நின்றமை தலைவிக்குக் கூறியது.

வரைவு உடன்பட்டோற் கடாவல் வேண்டினும் - தலைவி தமர் வரைவுடன் படத் தானும் வரைவுடன் பட்ட தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்து நீட்டித்துழி இனி நீட்டிக்கற்பாலையல்லையெனக் கடுஞ்சொற் கூறி வரைவுகடாவல் வேண்டிய இடத்தும்.

உ- ம்: "மாமலர் முண்டகம் தில்லையோடு ஒருங்குடன்
கானல் அணிந்த உயர்மணல் எக்கர்மேல்
சீர்மிகு சிறப்பினேன் மரமுதல் கைசேர்த்த
நீர்மலி கரகம்போல் பழந்தூங்கு முடத்தாழைப்
பூமலர்ந் தவைபோலப் புள்ளல்கும் துறைவகேள்;
ஆற்றுதல் என்பதுஒன்று அலந்தவர்க்கு உதவுதல்
போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகுதல்
அன்பெனப் படுவது தன்கிளை செருஅமை
அறிவெனப் படுவது பேதையார் சொல்நோன்றல்
செறிவெனப் படுவது கூறியது மருஅமை
நிறையெனப் படுவது மறைபிறர் அறியாமை
முறையெனப் படுவது கண்ணேடாது உயிர்வௌவல்
பொறையெனப் படுவது போற்ருரைப் பொறுத்தல்;

ஆங்கதை அறிந்தனிர் ஆயின்என் தோழி
நன்னுதல் நலனுண்டு துறத்தல் கொண்க
தீம்பால் உண்பவர் கொள்கலம் வரைதலின்
நின்தலை வருந்தியாள் துயரம்
சென்றனை களைமோ பூண்கநின் தேரே.'' (கலி. 133)

இது முற்காலத்து வரைவுகடாவுமாறு போலன்றி வரைவு கடாயது.

''யாரை எலுவ யாரே நீஎமக்கு
யாரையும் அல்லை நொதும லாளனை
அனைத்தால் கொண்கஎம் மிடையே நினைப்பில்
கடும்பகட் டியானை நெடுந்தேர்க் குட்டுவன்
வேந்தடு களத்தின் முரசதிர்ந் தன்ன
ஓங்கல் புணரி பாய்ந்தாடு மகளிர்
அணிந்திடு பல்பூ மரீஇ ஆர்ந்த
ஆபுலம் புகுதரு பேரிசை மாலைக்
கடல்கெழு மாந்தை அன்னஎம்
வேட்டனை அல்லையான் நலந்தந்து சென்மே''
(நற்றிணை, 395)

இது நலந்தொலைவுரைத்து வரைவுகடாயது.

ஆங்கு அதன் தன்மையின் வன்புறை உளப்பட - அங்ஙனங் கடாவியவழி அவ்வரைந்துகோடன் மெய்யாயினமையின் வதுவை முடியுமளவும் ஆற்றுதற்கு வற்புறுத்துக் கூறுதல் உளப்பட:

தன்மை, மெய்ம்மை. எனவே, முன் பொய்மையான வற்பு றுத்தலும் பெற்றும்.

உ - ம்: ''நெய்கனி குறும்பூழ் காய மாக
ஆர்பதம் பெறுக தோழி அத்தை
பெருங்கல் நாடன் வரைந்தென அவனெதிர்
நன்றே மகனே என்றலின்
நன்றே போலும் என்றுஉரைத் தோனே.'' (குறுந். 389)

இது, தலைவன் குற்றேவன்மகனால் வரைவுமலிந்த தோழி தலைவிக்குரைத்தது.

"கூன்முண் முண்டகக் கூர்ம்பனி மாமலர்
நூலறு முத்தில் காலொடு பாறித்
துறைதொறும் பரக்கும் தூமணல் சேர்ப்பனை
யானும் காதலென் யாயும்நனி வெய்யள்
எந்தையும் கொடீஇயர் வேண்டும்
அம்ப லூரும் அவனொடு மொழிமே" (குறுந். 51)

என வரும்.

"கொடிச்சி காக்கும் அடுக்கற் பைந்தினை
முந்துவிளை பெருங்குரல் கொண்ட மந்தி
கல்லாக் கடுவனொடு நல்வரை ஏறி
அங்கை நிறைய ஞெமிடிக் கொண்டுதன்
திரையணற் கொடுங்கவுள் நிறைய முக்கி
வான்பெயல் நனைந்த புறத்த நோன்பியர்
தையூண் இருக்கையில் தோன்று நாடன்
வந்தனன் வாழி தோழி உலகம்
கயங்கண் அற்ற பைதறு காலைப்
பீளொடு திரங்கிய நெல்லிற்கு
நள்ளென் யாமத்து மழைபொழிந் தாங்கே."
(நற்றிணை, 22)

இதனுள், தினை விளை காலம் வதுவைக் காலமாயினும் வம்ப மாரி இடையிடுதலன்றி யான்கூறிய வரைவு பொய்த்தனரேனும் இன்று மெய்யாகவே வந்தனரென்றாள்.

"உரவுத்திரை பொருத பிணர்படு தடவுமுதல்
அரவுவாள் வாய முள்ளிலைத் தாழை
பொன்னேர் தாதில் புன்னையொடு கமழும்
பல்பூங் கானல் பகற்குறி வந்துநம்
மெய்கவின் சிதையப் பெயர்ந்தனன் ஆயினும்
குன்றில் தோன்றும் குவவுமணல் ஏறிக்
கண்டனம் வருகம் சென்மோ தோழி
தண்டார் அகலம் வண்டிமிர் பூதப்
படுமணிக் கலிமா கடைஇ
நெடுநீர்ச் சேர்ப்பன் வரூஉம் ஆறே." (நற்றிணை, 235)

இது, தலைவன் வரைவொடு வருகின்றமை காண்கம் வம்மோ வென்றது.

பாங்குற வந்த நாலெட்டும் - பாங்கியர் பலருள்ளும் பாங்காந் தன்மை சிறப்பக் கூறிய முப்பத்திரண்டும்; நாலெட்டுமென உம்மை விரிக்க; வகையும் - இக்கூற்றுக்களிலே வேறுபட வருவனவும்; தாங்கருஞ் சிறப்பின் தோழி மேன - பொறுத்தற்கரிய சிறப்பினை யுடைய தோழியிடத்தன (எ - று).

எனவே, ஒன்றிய தோழிக்கன்றி ஏனையோர்க்கு இக்கூற்று இன்றென்றான். தாய்த்தாய்க் கொண்டுவருஞ் சிறப்பும், இருவர் துன்பமுந் தான் உற்றாளாகக் கருதுஞ் சிறப்பும் உடைமையின் 'தாங்கருஞ் சிறப்பு' என்றான். உரைத்துழிக் கூட்டத்தோடே அகற்சியும் என்றலும் ஊட்டலும் உரைத்தலும் அச்சுறுத்தலும் எஞ்சாமற் கிளந்த இருநான்கு கிளவியும் பாங்குற வந்த என்க. நாட்டத்தின் கண்ணும் எஞ்சாமற் கிளந்த என்க. என்றது, ஆராய்ச்சியுடனே இவ்வெட்டுங் கூறுமென்றான். பெயர்ப்பினும் ஒழிப்பினும் உரைத்துழிக் கூட்டத்தோடு எஞ்சாமற் கிளந்த என்க. ஏனைப்பொருள்கள் ஏழனுருபும் வினையெச்சமுமாய் நின்றவற்றைப் பாங்குறவந்த என்பதனோடு முடித்து அப்பெயரெச்சத்தினை நாலெட் டென்னும் பெயரோடு முடித்து அதனைத் தோழிமேனவென முடிக்க.

இனி 'வகை'யாற்கொள்வன வருமாறு:

"அன்னை வாழிவேண்டு அன்னை நெய்தல்
நீர்ப்படர் தூம்பின் பூக்கெழு துறைவன்
எந்தோள் துறந்த காலை எவன்கொல்
பன்னாள் வருமவன் அளித்த பொழுதே." (ஐங்குறு. 109)

இஃது, அறத்தொடு நின்றபின் வரைவான் பிரிந்து நீட்டித்துழி ஐயுற்ற செவிலி அவன் நும்மைத் துறந்தான் போலும் நுங்கட்கு அவன் கூறியதிறம் யாதென்றாட்குத் தோழி கூறியது.

"அன்னை வாழிவேண்டு அன்னை கழனிய
முண்டக மலரும் தண்கடல் சேர்ப்பன்
எந்தோள் துறந்தனன் ஆயின்
எவன்கொல் மற்றவன் நயந்த தோளே."

(ஐங்குறு. 108)

இஃது, அறத்தொடு நின்றபின் வரைவுநீட மற்றொரு குல மகளை வரையுங்கொலென்று ஐயுற்ற செவிலி குறிப்பறிந்த தோழி அவட்குக் கூறியது.

"அன்னை வாழிவேண்டு அன்னை புன்னையொடு
ஞாழல் பூக்கும் தண்ணந் துறைவன்
இவட்குஅமைந் தனனுற் றானே
தனக்கமைந் தன்றுஇவண் மாமைக் கவினே."
(ஐங்குறு. 103)

இது, வதுவை நிகழா நின்றுழித் தாய்க்குக் காட்டித் தோழி கூறியது.

"கல்நவில் தோளான் கடிநாள் விலக்குதற்கு
என்னை பொருள்நினைந்தார் ஏந்திழாய்—பின்னர்
அமரேற்றுக் கொள்ளும்என்று அஞ்சினேன் அஞ்சார்
நமரேற்றுக் கொள்ளாத ஞான்று."

இது, சுற்றத்தார் பொருள்வேண்டி மறுத்தாரென்றது.

"நொதும லாளர் கொள்ளார் இவையே
எம்மொடு வந்து கடலாடு மகளிரும்
நெய்தலம் பகைத்தழைப் பாவை புனையார்
உடலகம் கொள்வோர் இன்மையின்
தொடலைக் குற்ற சிலபூ வினரே." (ஐங்குறு. 187)

இது கையுறை மறுத்தது.

"அம்ம வாழி தோழி நம்மலை
வரையகம் இழியக் கோடல் நீடக்
காதலர்ப் பிரிந்தோர் கையற நலியும்
தண்பனி வடந்தை யச்சிரம்
முந்துவந் தனர்நம் காத லோரே. (ஐங்குறு. 223)

இது, வரைவிடைப் பிரிந்தோன் குறித்த பருவத்திற்குமுன் வருகின்றமை யறிந்த தோழி தலைவிக்குக் கூறியது.

(வி - ரை) பெட்ட வாயில் - தலைவியால் விரும்பப் பெற்ற வாயில்; இவளே இன்றியமையாத் தோழியாவாள். மதியுடம் படுத்தல் - தலைவியின் வேறுபாட்டால் ஐயுற்ற தோழியின் உணர்வைத் தலைவன் தன் கருத்திற்கு ஒப்ப ஒருப் படுத்துதல். பண்ணையாயத் தொடு - விளையாட்டு மகளிரொடு. முற்றிலான் - சுளகால்; முறத்தால். ஆசாரம் - ஒழுக்கம்.

காம்பு இவர் - மூங்கிலையொத்த, புகற்சி - பொலிவு, தெண்ணீர்-கடல், உடையுடுத்த - பக்கத்தே உடுத்திய, படி - தன்மை.

நரந்தம் - நாரத்தம்பூ, வறிதே - உயிர் இல்லாதது போல் ஆகின்றது, கிள்ளி - சோழன், பூண் - அணி.

திண்டி - ஓர் ஊர், தலைவி நாணவும் நடுங்கவும் தோழி ஆராய்தலாகாது என்பர் ஒரு சாரார். நொவ்வுப்பறைவாவல் - மென்மையாகப் பறத்தலையுடைய வெளவால், ஒற்றளன் - மிதித்தனன், கோவா ஆரம் - சந்தனமரம், அலைவாய் - திருச்செந்தூர்.

தட்டை - கிளிகடியும் கருவி, புறநிலை முயலும் - இரந்து பின்னிற்கும்.

நொதுமலர்தலை - நொதுமலரிடத்து.

முதுஆன் - முதிர்ந்த பெற்றம்.

உலகமொடு - உலகியலொடு பொருந்தி, பாற்படப்பாலை - அம்முறைமைக்கேற்ப நடப்பாய்.

நியமம் - கடைத்தெரு, உணக்கல் - தசை.

விழையார்ந்து - விரும்புதலமைந்தது.

அவனறிவுறுத்து-எனப்பாடம் ஓதுவார் யாரெனத் தெரிந்திலது.

கோல் வேங்கை - கொல்லுதலில் தப்பாத புலி, இவை - அவனிடத்து அறிவுறுத்துக என்பதும் பின் வருக என்பதும் ஆம். ஒரு கூற்றுக - இரண்டையும் ஒருங்கு கூறும் கூற்றுக.

யானை அதர் - யானை வரும் வழி.

வாங்கு அமை - வளைந்த மூங்கில்.

வகுளம் - கடம்பு.

கல்லா வன்பறல் - மரம் ஏறுதலை முழுமையாகக் கல்லாத குட்டி.

சிறுமுதுக்குறைவி - சிறிய வயதிலேயே பேரறிவுடைய தலைவி, என்னையும் மறைத்தலால் இங்ஙனம் சொல்லுதற்கும் அஞ்சுவல் என்றூர்.

மரம் சுட்டு இயல்பில் - மரங்களைச் சுட்ட வழியில். கரும்பு மருள்- கரும்பை யொத்த. முதல - அடியையுடையன. கரிகுறடு இறைஞ்சிய- (கொல்லர் முதலானோர்) கரியையெடுக்கும் குறடு போல் வளைந் திருக்கும்.

இடப்பினன் - துயிலச் செய்தேனாய். என்மகள் - (கடத்திய) பாவை.

வலந்த - கட்டப் பெற்ற, ஒழுகை - சகடு, பாடு - கூறு.

உரவில் - வலிய வில்.

கடவுறூஉம் - கடிதாகச் செலுத்தும், அடுப்பல் - சேர்த்துவேன். வழை - சுரபுன்னை.

புனை - தொகுக்கப்பட்ட, வினை - வேட்டை.

ஏறு இடி - கரிலும் கலங்கும்.

அளவன் - நண்டு.

ததையும் - செரிந்த. வணர் - வளைந்த.

ஆறுபடின் - ஏற்காது காலந்தாழ்க்குமாயின்.

சேதா - கபிலைப்பசு, கன்று தாய் மருளும் - கன்று அப்பசுவைத் தாயென்று அறியாது மயங்கும். வருடை - மான்.

அவ்வளை - அழகிய சங்கு, வாலியோன் - பலதேவன், நட்பின் ஆடா - நட்புக் கொண்ட பின் அதுபற்றி ஆராய்தலிலர், ஒட்டியோர்- விரும்பினோர்.

பாடும் பொழுது துறைவனை மறவல்; மறப்பின் மடல் புனைந்து ஏறுவன் என இயைக்க.

என் மெலிவில் - மெலிதற்குக் காரணமென்ன, உண்கண்ணி - மையுண்ட கண்ணினையுடையாள்.

பொம்மல் - பொலிவுற்ற, எல்லை - பகற்பொழுதில், எல்லுற - இரவு பொருந்த, பெட்குவம் - விருந்து புறத்தருவம்.

இவர்பரி - விரைந்து செல்லும் குதிரை, மரஅரை - அடிமரம்.

குறியாள் கூறல் - தலைவன் கூறுவனவற்றைக் கருதாதாள் போலப் பிறிது கூறுதல். கோவை இலக்கியங்கள் அறியாள் போன்று குறியாள் கூறல் என ஒருதுறையாகக் கொள்ளும்.

மறைக்கப்பி தானின் - எதனையும் மறைக்காது கூறப்பட வேண்டிய எனக்கு.

மன்ஏர் - நிலைபெற்ற அழகு,

விருந்தினர் - புதியவர், அறைய எஞ்சாது - சொல்ல முடியாது, எண்ணிலர் - மிகப்பலவாயவர், கண்ணிலர் - கண்ணோட்டமுடையரல்லர்,

துறுகல் - பெரியகல். வேங்கைத்தாய் - வேங்கைப்பூ பரவி, வெரூஉம் - புலியென அஞ்சும்.

தம்முன் - தமது பழையனாகிய பலதேவன்,

துன்னல் போகின்று - அடைதலில்லை, கூழை - கூந்தல்.

சேய் - முருகவேள், குன்றம் காந்தட் பூவினையுடையது. எனவே அவ்விடத்துச்செல்வாயாக என்பது குறிப்பெச்சம்.

அதன்கண் உதவினான் - தலைவி நீரினால் இழுத்துப்போக அவளை மீட்டுக் காப்பாற்றினான், களவிற்கு உடனாடுதல் இன்று - களவுக் காலத்தே தலைவனும் தலைவியும் உடன்நீராடுதல் இன்று.

விளரி - இரங்கற்பண்.

நாகுபிடி - இளைய பெண்யானை, முளைக்கோடு - மூங்கில்முளை போன்ற தந்தம், அஃகியோன் - குறையுற்றான்.

புலம்பின்று - பொலிவழிந்தது.

ஊட்டியன்ன - அரக்கை ஊட்டியதுபோல, கன்று கால் ஒய்யும் - யானைக் கன்றின் காலை இழுக்கும், விளிபட -.ஒலிமிக

இறைகொண்டன - தங்கின, உறைவின் ஊர்க்கு - தங்குகின்ற ஊரிடத்து.

வாய்ப்பறை அசாம் - வாயாகிய பறையின் ஓசையாலே பிறரை வருத்தும்.

ஓவம் - சித்திரம்.

அருளியாய் - அருளினுலே வழங்குவாயாக.

இறவு - இருல்மீன், பிணர்படு - சருச்சரை பொருந்திய, உரவு - வலிய.

பவக்கிரி - ஓர்ஊர், மாண்பின்று - மயங்கிற்று, உறுப்பு - சந்தனக்கட்டை, நொடுத்தல் - விற்றல்.

ஊதை - குளிர் காற்று.

பெருநன்று - பேருதவி, புரிமாண்டு - விருப்பம் சிறந்து.

இருவி - தினை அறுத்த பின்பு உள்ள தாள்.

பிணங்கு அரில் - ஒன்ருேடு ஒன்று மாறுபடு கின்ற தூறு, ஊண்உணங்கு ஆயம் - உணவிற்காக வருந்தும் பசுக்கூட்டம், என்பரம் - என்ஞல் பெறப் படுவது.

மழைமறைந்தனவே - மேகத்தால் மறைந்தன.

தெளி கொடுத்தான் - தெரிதற்குரிய சூள் செய்தான்.

கடல்விளை அமுதம் – உப்பு, உருகி அல்குதல் - உருகி ஒழுகுவதற்கு, எற்றி - நினைந்து.

புல்லி - ஒரு வள்ளல், அறை இரந்து - சிறுமலைகளைக்கடந்து, நலன்உள்ளாராதலோ அரிது என இயைக்க.

வேட்ட - விரும்பிய, கடப்பாட்டாளன் - ஒப்புரவுடையான்.

ஐவனம் - மலைநெல், மராம் - கடம்புமரம், ஏமாப்பு - பாதுகாப்பு.

வீரை - உறையூர், மாகோல் கொண்டு அளைப்பப்படியர் என இயைக்க. அம் மா விரைந்து செல்லுதலின் தலைவனை நெடிதுகாண இயலாமை நோக்கி இவ்வாறு கூறினர்.

புறக்கிடைநோக்கி - புறங்காட்டிப் போதலைப் பார்த்து.

உந்தி - தள்ளி; எல்லுமிழ்ந்து - ஒளியைச்கான்று, ஆடுமழை இயங்குகின்ற மேகம்.

மறுகுபு - சுழன்று, செயிர்ப்ப - சினப்ப.

கழுது கால் கிளர - பேய்கள் இயங்க.

கோட்பட்டு - பிடிபட்டு.

மானதர் - விலங்குகள் இயங்கும் வழி, பிரசம் - தேன், இன்று தலையாக - இன்று முதலாக, ஆய்பயிர்குறிநிலை - ஆராய்ந்து அழைக்கும் குறிப்புடைய.

அலர்ந்தன்று - அலர்வுண்டாயிற்று, துயல்வு - அசைவு.

அரை அருவி - ஒலிக்கும் அருவி.

சாந்த இதணம் - சந்தன மரத்தால் செய்த பரண், இமிழ - கிளியைக் கடிய.

ஓரி - தலைக்கொண்டை.

வினைவிளைய - நல்வினை மிக, பனைவிளைவு - பனையளவுடைய இன்ப நுகர்வு, தீத்தண்டு கையார் - வேங்கையார், தீயைக் கை தீண்டின் வேம்; வேம் + கை = வேங்கை.

பாதுகா - பாதுகாப்பாயாக.

பண்டை கொள் நல்வினை - முற்பிறவியின்கண் கொள்ளப்பட்ட நல்வினை.

குளஞ்சால் - தாழைக் கூட்டங்களில், பேணியவர் - காத்தவர்; செவிலி.

பாக்கம் கரைமேல் முத்தம் விளக்காஇருளகற்றும் என இயைக்க.

வேரல் - சிறுமூங்கில், தூங்கியாங்கு - தொங்கியதுபோல, தவ - மிகவும்.

அல்லது செயல் - பொய்யல்லாதவற்றைச் செய்தல், வல்லாய் - மாட்டாய், ஆபித்தன்ன - கொட்டாவி விட்டாற் போன்று.

நினை நீர்மை - நினையும் தன்மை.

பகட்டு - பெருமையுடைய, யாணர் - புதுவருவாய், நியமம் - ஓர் ஊர்.

வெறுத்த ஏர் - செறிந்த அழகு, இரப்ப - நேர்பட.

காரிகை - பெண்மை நலம்.

உரைக்கோ - உரைப்பேனே.

பெண்யாப்பு – பெண் தொடர்பு.

உரும் உரறு – இடி முழங்கும், பெயல் ஆன்று - பெய்தல் நீங்கிய, இமைப்ப - ஒளிவிட.

மிடையை ஏறி - பரணில் ஏறி.

போத் தந்த - கொண்டு வந்த.

அனை - அன்னையே.

அடையிரந்து - தழையைக் கடந்து.

குறி இறைக் குரம்பை - தாழ்ந்த கூரையை உடைய சிறுவீடு.

பொம்மல் ஓதி - நெருங்கிய கூந்தல்.

முந்நீர் - கடல்.

பொழில் - கடல் சூழ்ந்த உலகம்.

கழுமலம் - சீர்காழி.

என்னை - என்தலைவன்

சுள்ளி - அனிச்ச மலர், இதனால் - பரனால், உதனால்-அம்பால்

உவர்க்கத்து - கடற்கரையிடத்து, அம்பி - தோணி, ஒலித்த செய்தி - களவொழுக்கம், நன்றுபுரி கொள்கையின் - நன்மை செய்யும் கருத்தினால், குருவி தொடுத்த கூடு அதற்குரிய பொருள்களால் மயங்கி இருத்தல் போல இவ்வூரும் மயங்கி இருந்தது அறத்தொடு நின்றபின் ஒன்று பட்டது.

முண்டகம் - முள்ளிச்செடி, தில்லை - ஒருமரம், அலந்தவர் - வறியவர், பாடு - உலகவொழுக்கம், செருஅமை - கெடாதிருத்தல்.

எலுவ - நண்பனே.

குரும்பூழ் - காடை, காயமாக - கரியாக, பாறி–சிதறி, ஞெயிடிக் கொண்டு - தூய்மை செய்து கொண்டு, அணற்கு - மோவாய்க்கு, பீள் - சூள், வம்பமாரி - காலமின்றிப் பெய்தமழை, குவவு-குவிந்த.

தாய்த்தாய் கொண்டு வரும் - தோழியின் தாய் தலைவிக்குச் செவிலியாகவும் அச் செவிலியின் தாய் தலைவியின் தாய்க்குச் செவிலியாகவும் வரும் முறை.

தூம்பின்பூ - உள் துளையுடைய பூ.

கல்நவில் - கல்லை யொக்கும், வரைஆம் - மலையிலிருந்து நீர், கோடல் - வெண் காந்தள் பூ, நீட - மலர, வடந்தை - வாடை. அச்சிரம் - முன்பனி. (23)

செவிலியின் கூற்றுக்கள்

115. களவல ராயினுங் [1]காமமெய்ப் படுப்பினும்
அளவுமிகத் தோன்றினுந் தலைப்பெய்து காணினுங்
கட்டினுங் கழங்கினும் வெறியென விருவரும்
ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்
ஆடிய சென்றுழி யழிவுதலை வரினுங்
[2]காதல் கைமிகக் கனவி னரற்றலுந்
தோழியை வினவலுந் தெய்வம் வாழ்த்தலும்
போக்குட னறிந்தபிற் றோழியொடு கெழீஇக்
கற்பின் ஆக்கத்து நிற்றற் கண்ணும்
பிரிவின் எச்சத்து மகணெஞ்சு வலிப்பினும்
இருபாற் குடிப்பொரு ளியல்பின் கண்ணு
மின்ன வகையிற் பதின்மூன்று கிளவியோ
டன்னவை பிறவுஞ் செவிலி மேன.

இது, செவிலிகூற்று நிகழுமாறு கூறுகின்றது. அக்கூற்றுச் செவிலி தானே கூறப்படுவனவுந், தலைவியுந் தோழியுங் கொண்டு

1. காமமேற் படுப்பினும்,
2. காதல் கைம்மிக - எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

கூற்றுகக் கூறப்படுவனவுவென இருவகையவாம்; இக் கூறப்பட்ட பதின்மூன்று கிளவியும் அவைபோல்வன பிறவுஞ் செவிலி தானே கூறப்படுவனவுந் தலைவியுந் தோழியும் அவள் கூற்றுய்க் கொண் டெடுத்து மொழியப்படுவனவுமாய்ச் செவிலிக் குரியவாமென்ற வாறு. 'இன்னவகை' யென்றுர், தன் கூற்றுங் கொண்டுகூற்று மாய் நிகழுமென்றற்கு.

(இ - ள்) களவு அலர் ஆயினும்—களவொழுக்கம் புறத் தார்க்குப் புலனாய் அலர் தூற்றப்படினும்:

உ - ம்: "பாவடி உரல பகுவாய் வள்ளை
ஏதின் மாக்கள் நுவறலு நுவல்ப
அழிவது எவன்கொலிப் பேதை யூர்க்கே
பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லிக்
கருங்கண் தெய்வம் குடவரை எழுதிய
நல்லியல் பாவை அன்னஎன்
மெல்லியல் குறுமகள் பாடினள் குறினே." (குறுந். 89)

இது செவிலி தானே கூறியது.

"அம்ம வாழி தோழி நென்னல்
ஓங்குதிரை வெண்மனல் உடைக்கும் துறைவற்கு
ஊரார் பெண்டுஎன மொழிய என்னை
அதுகேட்டு அன்னு என்றனள் அன்னை
பைபைய வெம்மை என்றனென் யானே." (ஐங்குறு. 113)

இதனுள், பெண்டென்றதனைக் கேட்டு அன்னுயென்றனள் அன்னையென அலர்தூற்றினமை கண்டு செவிலி கூறிய கூற்றினைத் தலைவி கொண்டுகூறியவாறு காண்க.

காமம் மெய்ப்படுப்பினும் - தலைவி கரந்தொழுகுங் காமந்தானே அக்களவினை நன்றுயுந் தீதாயும் மெய்க்கண் வெளிப்படுப்பினும்:

உ - ம்: "மணியிற் றிகழ்தரு நூல்போல், மடந்தை
அணியில் திகழ்வதுஒன்று உண்டு." (குறள். 1273)

இது, காமத்தால் திகழ்ந்த பொலிவினைச் செவிலி தானே கூறியது.

அளவு மிகத் தோன்றினும் - கண்ணுந் தோளும் முலையும் பிறவும் புணர்ச்சியாற் கதிர்த்துக் காரிகை நீரவாய் அவளிடத்து அளவை மிகக்காட்டினும்:

உ - ம்: "கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோள் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது." (குறள். 1272)

இது, கதிர்ப்புக்கண்டு செவிலி தானே கூறியது.

"பின்னுவிட நெறித்த கூந்தலும் பொன்னென
ஆகத்து அரும்பிய சுணங்கும் வம்புவிடக்
கண்ணுருத்து எழுதரு முலையு நோக்கி
எல்லிவள் பெரிதுஎனப் பன்மாண் கூறிப்
பெருந்தோள் அடைய முயங்கி நீடுநினைந்து
அருங்கடிப் படுத்தனள் ......... .........
......... ......... ......... .........
தாரார் மார்பநீ தணந்த ஞான்றே." (அகம். 150)

இது, தோழி கொண்டு கூறியது.

தலைப்பெய்து காணினும் - இருவர்க்குங் கூட்டம் நிகழ்தலானே தலைவனை இவ்விடத்தே வரக் காணினுந் தலைவியைப்புறத்துப் போகக் காணினும்:

பெய்தென்பது காரணகாரியப் பொருட்டாய்ப் பிறவினை கொண்டது.

உ-ம்: "இரும்புலி தொலைத்த பெருங்கை வேழத்துப்
புலவுநாறு புகர்நுதல் கழுவக் கங்குல்
அருவி தந்த அணங்குடை நெடுங்கோட்டு
அஞ்சுவரு விடர்முகை ஆரிருள் அகற்றி
மின்னொளிர் எஃகம் சென்னெறி விளக்கத்
தனியன் வந்து பனியலை முனியான்
நீரிழி மருங்கின் ஆரிடத்து அமன்ற
குளவியொடு மிடைந்த கூதளம் கண்ணி
அசையா நாற்றம் அசைவளி பகரத்
துறுகல் நண்ணிய கறியிவர் படப்பைக்
குறியிறைக் குரம்பைநம் மனைவயின் புகுதரும்

மெய்ம்மலி உவகையன் அந்நிலை கண்டு
முருகென உணர்ந்து முகமன் கூறி
உருவச் செந்தினை நீரொடு தூஉய்
நெடுவேட் பரவும் அன்னை அன்னோ
என்னா வதுகொல் தானே பொன்னென
மலர்ந்த வேங்கை அலங்குசினை பொலிய
மணிநிற மஞ்ஞை அகவும்
அணிமலை நாடனொடு அமைந்தநம் தொடர்பே.''

(அகம். 272)

இம் மணிமிடைபவளத்துத் தலைவனைச் செவிலி கண்டு முருகெனப் பராவினமை தோழி கொண்டுகூறினாள்.

''உருமுரறு கருவிய'' (அகம். 158) என்பதனுள்:

''மிடையூர் பிழியக் கண்டனன் இவள்என
அலையல் வாழிவேண்டு அன்னை''

என்றது, தலைவி புறத்துப்போகக் கண்டு செவிலி கூறியதனைத் தோழி கொண்டுகூறினாள். தானே கூறுவன வந்துழிக் காண்க.

கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும் ஒட்டிய திறத்தாற் செய்திக்கண்ணும் - கட்டுவிச்சியும் வேலனுந் தாம்பார்த்த கட்டினானுங் கழங்கினானுந் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்யாக்கால் இம் மையல் தீராதென்று கூறுதலின், அவ்விருவருந் தம்மினொத்த திறம்பற்றியதனையே செய்யுஞ் செய்தியிடத்தும்:

'திறம்' என்றதனான் அவர் வேறு வேறாகவுங் கூறப்படும்.

உ - ம்: ''பெய்ம்மணன் முற்றம் கவின்பெற இயற்றி
மலைவான் கொண்ட சினைஇய வேலன்
கழங்கினான் அறிகுவது என்றால்
நன்றால் அம்ம நின்றஇவள் நலனே.'' (ஐங்குறு. 248)

இது வேலன் கழங்கு பார்த்தமை கூறிற்று.

''அறியா மையின் வெறியென மயங்கி
அன்னையும் அருந்துயர் உழந்தனள் அதனால்
எய்யாது விடுதலோ கொடிதே நிரையிதழ்

ஆய்மலர் உண்கண் பசப்பச்
சேய்மலை நாடன் செய்த நோயே.'' (ஐங்குறு. 242)

இது வெறியென அன்னைமயங்கினமை கூறிற்று.

''அணங்குடை நெடுவரை'' என்னும் (22) அகப்பாட்டினுட் கட்டுக்கண்டு வெறியெடுத்தமை கூறிற்று. ''பனிவரை நிவந்த'' என்னும் (98) அகப்பாட்டினுட் ''பிரப்புளர் பிரீஇ'' எனக் கட்டு விச்சியைக் கேட்டவாறும், ''என் மகட்கு'' எனச் செவிலிகூற்று நிகழ்ந்தவாறுங் காண்க. இதனுள் ''நெடுவேணல்குவ னெனினே'' எனத் தலைவி அஞ்சவேண்டியது, இருவரும் ஒட்டிக் கூறுமல் தெய்வந்தான் அருளுமென்று கோடலின்.

''இகுளை கேட்டிசின் காதலம் தோழி
குவளை உண்கண் தேன்பனி மல்க
வறிதியான் வருந்திய செல்லற்கு அன்னை
பிறிதொன்று கடுத்தன ளாகி வேம்பின்
வெறிகொள் பாசிலை நிலமொடு சூடி
உடலுநர்க் கடந்த கடலம் தானைத்
திருந்திலை நெடுவேல் தென்னவன் பொதியில்
அருஞ்சிமை இழிதரும் ஆர்த்துவரல் அருவியில்
ததும்புசீர் இன்னியம் கறங்கக் கைதொழுது
உருகெழு சிறப்பின் முருகு மனைத்தரீஇக்
கடம்பும் களிறும் பாடி நுடங்குபு
தோடும் தொடலையும் கைக்கொண்டு அல்கலும்
ஆடினர் ஆதல் நன்றோ நீடு
நின்றொடு தெளித்த நன்மலை நாடன்
குறிவரல் அரைநாள் குன்றத்து உச்சி
நெறிகெட வீழ்ந்த துன்னரும் கூரிருள்
திருமணி உமிழ்ந்த நாகம் காந்தள்
கொழுமடல் புதுப்பூ ஊதும் தும்பி
நன்னிறம் அருளும் அருவிடர்
இன்னா நீளிடை நினையுமென் நெஞ்சே'' (அகம், 138)

என்னும் மணிமிடைபவளம் விதந்து கூறுமையின் இரண்டும் ஒருங்கு வந்தது.

ஆடிய சென்றுழி அழிவு தலைவரினும் - அங்ஙனம் வெறியாடுதல் வேண்டிய தொழின் முடிந்த பின்னுந் தலைவிக்கு வருத்தம் மிகினும்:

உ-ம்: "வேங்கை இரும்புனத்து வீழும் கிளிகடியாள்
காந்தண் முகிழ்விரலால் கண்ணியும் கைதொடாள்
ஏந்தெழில் அல்குல் தழைபுனையாள் எல்லேஎன்
பூந்தொடி இட்ட புலம்பும் அறிதிரோ"

எனவும்,

"புனையிரும் குவளைப் போதுவிரி நாற்றம்
சுனையர மகளிர் அவ்வே சினைய
வேங்கை ஒள்வீ வெறிகமழ் நாற்றமொடு
காந்தள் நாறுப கல்லர மகளிர்
அகிலும் ஆரமு நாஅ றுபவன்
திறலரு மரபில் தெய்வம் என்ப
வெறிபுனம் காவல் இருந்ததன் தொட்டுத்
தீவிய நாறும் என்மகள்
அறியேன் யான்இஃது அஞ்சுதக உடைத்தே"

எனவும் வரும்.

இவை ஆற்றுமை கண்டு அஞ்சிச் செவிலி பிறரை வினயின.

"அன்னய் வாழிவேண்டு அன்னை நின்மகள்
பாலும் உண்ணள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனள்என வினவுதி அதன்திறம்
யானும் தெற்றென உணரேன் மேனாண்
மலிபூஞ் சாரல்என் தோழி மாரோடு
ஒலிசினை வேங்கை கொய்குவம் சென்றுழிப்
புலிபுலி என்னும் பூசல் தோன்ற
ஒண்செங் கழுநீர்க் கண்போல் ஆயிதழ்
ஊசி போகிய சூழ்செய் மாலையன்
பக்கம் சேர்த்திய செச்சைக் கண்ணியன்
குயமண்டு ஆகம் செஞ்சாந்து நீவி
வரிபுனை வில்லன் ஒருகணை தெரிந்துகொண்டு
யாதோ மற்றம் மாதிரம் படர்என

வினவி நிற்றந் தோனே அவற்கண்டு
எம்முள் எம்முள் மெய்ம்மறைபு ஒடுங்கி
நாணி நின்றன மாகப் பேணி
ஐவகை வகுத்த கூந்தல் ஆய்நுதன்
மையீர் ஓதி மடவீர் நும்வாய்ப்
பொய்யும் உளவோ என்றனன் பையெனப்
பரிமுடுகு தவிர்த்த தேரன் எதிர்மறுத்து
நின்மகள் உண்கண் பன்மான் நோக்கிச்
சென்றோன் மன்றவக் குன்றுகிழ வோனே
பகன்மாய் அந்திப் படுசுடர் அமயத்து
அவன்மறை தேஎ நோக்கி மற்றிவன்
மகனே தோழி என்றனள்
அதன்அள வுண்டுகோள் மதிவல் லோர்க்கே.''

(அகம். 48)

இது, செவிலிக்கூற்றினைத் தோழி கொண்டுகூறியது.

காதல் கைமிகக் கனவின் அரற்றலும் - தலைவியிடத்துக் காதல் கையிகந்து பெருகுதலால் துயிலா நின்றுழியும் ஒன்று கூறி அரற்றுதலும்:

கனவு - துயில், துயிலிற் காண்டலைக் கனவிற் காண்டலென்ப.

உதாரணம்: ''பொழுது மெல்லின்று'' (குறுந். 161) என்பதனுட் ''புதல்வற் புல்லி அன்னா'' என்று தலைவியை விளித்தது கனவின் அரற்றலாயிற்று.

அரற்றல், இன்னதோர் இன்னாக்காலத்து என் செய்கின்றாயெனக் காதல்பற்றி இரங்குதல்.

தோழியை வினவலும் - நின் றோழிக்கு இவ்வேறுபாடு எற்றினாயிற் றென்றாற்போலத் தோழியை வினாவுதலும்:

உ - ம்: ''நெடுவேல் ஏந்தி நீளமக்கு யாஅர்
தொடுதல் ஓம்பென அரற்றலும் அரற்றும்
கடவுள் வேங்கையும் காந்தளும் மலைந்த
தொடலைக் கண்ணி பரியலும் என்னும்
பாம்புபட நிவந்த பயமழைத் தடக்கைப்
பூம்பொறிக் கழற்கா லாஅய் குன்றத்துக்

குறுஞ்சுனை மலர்ந்த குவளை நாறிச்
சிறுதேன் கமழ்ந்த வம்மெல் ஆகம்
வாழிஎம் மகளை உரைமதி இம்மலைத்
தேம்பொதி கிளவிஎன் பேதை
யாங்கு ஆடினளோ நின்னொடு பகலே.''

எனவரும்.

இது செவிலி தோழியை வினயது.

''ஓங்குமலை நாட ஒழிகநின் வாய்மை
காம்புதலை மணந்த கல்லதர்ச் சிறுநெறி
உறுபகை பேணாது இரவின் வந்திவள்
பொறிகிளர் ஆகம் புல்லத் தோள்சேர்
பறுகால் பறவை அளவில மொய்த்தலின்
கண்கோ ளாக நோக்கிப் பண்டும்
இனையை யோஎன வினவினள் யாயே
அதன்எதிர் சொல்லாள் ஆகி அல்லாந்து
என்முக நோக்கி யோளே அன்னா
யாங்குணர்ந்து உய்குவள் கொல்என மடுத்த
சாந்த ஞெகிழி காட்டி
ஈங்கா யினவால் என்றிசின் யானே.'' (நற்றிணை, 55)

இது, செவிலி வினயினமையைத் தோழி கொண்டு கூறினள்.

தெய்வம் வாழ்த்தலும் - இன்னதொன்று நிகழ்ந்ததெனத் துணிந்த பின்னர்த் தன் மகளொடு தலைமகனிடை நிகழ்ந்த ஒழுக்கம் நன்னர்த்தாகவெனத் தெய்வத்திற்குப் பராவுதலும்:

உ - ம்: ''பெருமலைச் சிலம்பின் வேட்டம் போகிய
செறிபடை அம்பின் வல்வில் கானவன்
பொருதுதொலை யானை வெண்கோடு கொண்டு
நீர்திகழ் சிலம்பின் நன்பொன் அகழ்வோன்
கண்பொருது இமைக்கும் திருமணி கிளர்ப்ப
வைந்நுதி வான்மருப் பொடிய வுக்க
தெண்ணீர் ஆலி கடுக்கு முத்தமொடு
மூவேறு தாரமும் ஒருங்குடன் கொண்டு
சாந்தம் பொறைமர மாக நறைநார்

வேங்கைக் கண்ணியன் இழிதரு நாடற்கு
இன்றீம் பலவின் நேர்கெழு செல்வத்து
எந்தையும் எதிர்ந்தனன் கொடையே அலர்வாய்
அம்பல் ஊரும் அவனொடு மொழியும்
சாயிறைத் திரண்ட தோள்பா ராட்டி
யாயும் அவனே என்னும் யாமும்
வல்லே வருக வரைந்த நாள்என
நல்லிறை மெல்விரல் கூப்பி
இல்லுறை கடவுள் கோக்குதும் பலியே' (அகம். 282)

இதனுள் 'தோள்பாராட்டி யாயுமவனே என்னும்' என்று யாய் தெய்வம் பராயினுளென்பதுபடக் கூறி, யாம் அத்தெய்வத்திற்கு பலிகொடுத்து மென்றவாறு காண்க.

போக்குடன் அறிந்தபின் தோழியொடு கெழீஇக் கற்பின் ஆக்கத்து நிற்றற் கண்ணும் - உடன்போக்கு அறிந்த பின்னர்ச் செவிலி தோழியொடு மதியுடம்பட்டு நின்று, தலைவியது கற்புமிகுதியே கருதி உவந்த உவகைக்கண்ணும்:

அது,

''எம்மனை முந்துறத் தருமோ
தன்மனை உய்க்குமோ யாதவன் குறிப்பே'' (அகம். 195)

என்றாற்போலக் கற்பினாக்கத்துக் கருத்து நிகழ்தல்.

உ - ம்: ''முயங்குகம் வாராய் தோழி தயங்குபு
கடல்பெயர்ந்து அன்ன கானலம் கல்லெனப்
பெயல்கடைக் கொண்ட பெருந்தண் வாடை
வருமுலை வெப்பம் கொழுநன் போற்றிய
சென்றனள் அம்மநின் தோழி அவனோடு
என்றினி வரூஉம் என்றனள்
வலந்துரை தவிர்ந்தன்று அலர்ந்த ஊரே.''

இது, செவிலி கற்பினாக்கத்து நின்றமை தோழி கூறியது.

பிரிவின் எச்சத்தும் - தலைவி உடன்போயவழித் தான் பின் செல்லாதே எஞ்சுதலும் உளவாதலின் ஆண்டுக் கூறுவனவும்:

உ-ம்: "தெறுவது அம்ம நும்மகள் விருப்பே
உறுதுயர் அவலமோடு உயிர்செலச் சாஅய்ப்
பாழ்படு நெஞ்சம் படர்அடக் கலங்க
நாடிடை விலங்கிய வெற்பில்
காடிறந் தனள்நம் காத லோளே." (ஐங்குறு, 313)

இது, பின்செல்லாது வருந்தியிருந்த செவிலியைக் கண்ட நற்றாய் கூறியது.

இது, நற்றாய் கூற்றாய்ச் 'செவிலி மேன' ஆயிற்று.

மகள் நெஞ்சு வலிப்பினும் - உடன்போக்கிற்கு மகள் நெஞ்சு துணியினும்:

தன்மேல் அன்பு நீங்கியது உணர்ந்து செவிலி கூறும்.

உ-ம்: "பெயர்த்தனென் முயங்கயான் வியர்த்தனென் என்றனள்
இனியறிந் தேன்அது துனியா குதலே
கழல்தொடி யாஅய் மழைதவழ் பொதியில்
வேங்கையும் காந்தளும் நாறி
ஆம்பன் மலரினும் தான்தண் ணியளே" (குறுந். 84)

என வரும்.

இருபாற் குடிப்பொருள் இயல்பின்கண்ணும் - தலைவனுந் தலைவியுந் தோன்றிய இருவகைக் குடியும் நிரம்பி வருதல் இயல்பாகப் பெற்ற வழியும்:

'பொருள்' என்றார் பிறப்பு முதலிய பத்தையுங் (273) கருதி.

"காமர் கடும்புனல்" என்னும் (39) கலியுள்,

"அவனுந்தான், ஏனல்இதணத்து அகிற்புகை உண்டியங்கு
வானூர் மதியம் வரைசேரின் அவ்வரைத்
தேனின் இறாலென ஏணி இழைத்திருக்கும்
கானக நாடன் மகன் ......... ......... .........
எனவாங்கு அறத்தொடு நின்றேனைக் கண்டுதிறப்பட
என்னையர்க்கு உய்த்துரைத்தாள் யாய்"

எனத் தோழி தான் கூறிய இருபாற் குடிப்பொருளைக் கூறிச், செவிலி அறத்தொடு நின்றாளெனக் கொண்டெடுத்து மொழிந்த வாறு காண்க.

இன்னவகையிற் பதின்மூன்று கிளவியோடு அன்னவை பிறவும் - இத்தன்மைத்தாகிய கூறுபாட்டையுடைய பதின் மூன்று கிளவியோடே அவைபோல்வன பிறவாய் வருவனவும்; செவிலி மேன - தன் கூற்றுயும் பிறர் கொண்டு கூறும் கூற்றுயும் கூறுங் கூற்றுச் செவிலிக்கு உரியவாம் (எ - று).

'அன்னபிற' என்றதனல்,

"பறைபடப் பணில மார்ப்ப இறைகொள்பு
தொன்மூ தாலத்துப் பொதியில் தோன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல
வாயா கின்றே தோழி ஆய்கழல்
செயலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே." (குறுந். 15)

இஃது உடன்போயபின் செவிலி நற்றுய்க்கு அறத்தொடு நின்றது.

இன்னும் அதனனே,

"வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்' (அகம். 122)

என்றலுஞ்,

"சிறுகிளி கடிதல் தேற்ருள் இவள்" (அகம். 28)

என்றலுங்,

"கண்கோ ளாகநோக்கிப் பண்டும் இனையையோ"
(நற்றிணை, 55)

என்றலும் போல்வன பிறவுங் கொள்க.

(வி – ரை) பாவடி - பரந்த அடி, உரல பகுவாய் - உரலினது விரிந்த வாய், நென்னல் - நேற்று, துறைவர்க்குப் பெண்டென மொழிப அது கேட்டு அன்னை அன்னுய் என்றனள். யானும் வெம்மை என்றனன். வெம்மை - விருப்பம்.

காம்பு ஏர் - மூங்கிலையொத்த, வம்புவிட - கட்டு அறத் தலைப் பெய்தலால் காணினும் எனப் பொருள்படுதலின் காரண காரியப் பொருட்டாய் நின்றது என்ருர். தலைப் பெய்தல் - தலைவன் தலைவியரின் செயல், காண்டல் செவிலியின் செயல்.

தொலைத்த - வென்ற, புகர் - புள்ளி, விடர்முகை - பிளப்பாகிய குகை, அமன்ற - நெருங்கிய, குளவி - காட்டு மல்லிகை, கறி - மிளகு.

மிடை - பரண், எய்யாது விடுதலோ கொடிதே - அறியாமல் விடுதல் கொடியதாகும். எய்யா மையே அறியா மையே என்னும் தொல்காப்பியமும்.

வறிது - சிறிது, உருகெழு - அச்சம் பொருந்திய.

வேண்டு - விரும்பிக் கேட்பாயாக, பழங்கண் - துன்பம், ஒலி சிறை - தழைத்தகிளை, செச்சை - வெட்சிப்பூ, கோள் - கோட்பாடு·

பரியலம் - தாங்கலம்.

கண்கோளாக - கண்ணால் கொள்வது போல, சாந்தஞெகிழி - சந்தனக் கட்டையாகிய கொடியை.

மடை - மூட்டுவாய், ஆலி - ஆலங்கட்டி.

வலந்துரை தவிர்ந்தன்று - சூழ்ந்து உரைத்தலை நீக்கியது.

பெயர்த்தனன் - மீட்டும் ஒருமுறை, துனி - வெறுப்பு.

பணிலம் - சங்கு, தொல்மூது ஆரம் - மிகப்பழைய ஆலமரம். வாயாகின்று - உண்மையாகின்றது. (24)

### நற்றாய்க்குரிய கூற்று

116. தாய்க்கும் வரையார் உணர்வுடம் படினே.

இது, செவிலிக்கு உரியன கூறி நற்றாய்க்கு உரிய கூற்றுக் கூறுகின்றது.

(இ - ள்.) உணர்வு உடம்படின் - அங்ஙனஞ் செவிலி உணர்ந் தாங்கே நற்றாயும் மதியுடம்படில்; தாய்க்கும் வரையார் - நற்றாய்க்கும் முற்கூறிய பதின்மூன்று கிளவியும் பிறவுமாகக் கொண்டு எடுத்து மொழிதல் வரையார் (எ - று).

'தாய்க்கும்' என்றார், இவட்கு அத்துணை பயின்றுவாரா என்றற்கு. அது நற்றாய் இல்லறம் நிகழ்த்துங் கருத்து வேறு உடைமையின் உற்றுநோக்காள்; செவிலியே தலைவியை உற்றுநோக்கி ஒழுகுவாளாதலின். இலக்கணமுண்மையின் இலக்கியம் வந்துழிக் காண்க. (25)

நற்றாய்க்கும் செவிலிக்கும் உரியதோர் இலக்கணம்

117. கிழவோன் அறியா வறிவினள் இவளென
மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின்
ஐயக் [1]கிளவி யறிதலும் உரித்தே.

இஃது அங்ஙனங் களவு வெளிப்பட்ட பின்னர் நற்றாய்க்குஞ் செவிலிக்கும் உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

(இ - ள்.) கிழவோன் அறியா அறிவினள் இவளென ஐயக் கிளவி-நங்குலத்திற்கு ஒத்த தலைவனை அறிந்து கூடாத அறிவினை யுடையள் இவளென்று தம் மனத்தை ஐயமுற்றும் பிறரோடு உசாவுங் கிளவியை; மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின் அறிதலும் உரித்தே - குற்றமற்ற சிறப்பினையுடைய அந்தணர் முதலியோரிடத்தே கூறி அதுவும் முறைமையென்று அவர் கூற அறிதலும் உரித்து (எ - று).

என்றது, 'மிக்கோ னயினுங் கடிவரை யின்றே' என முற் கூறினமையின் தலைவன் தன் குலத்தின் உயர்ந்தமை அறிந்த விடத்து, இங்ஙனம் கூடுதல் முறையன்றென்று ஐயுற்ற செவிலியும் நற்றாயும், உயர்ந்தோரைக் கேட்டு இதுவுங் கூடுமுறைமை என் றுணர்வர் என்பதாம். இலக்கணமுண்மையின் இலக்கியமும் அக் காலத்து உளவென்றுணர்க.

(வி – ரை) இவ்வுரை ஆசிரியர் கருத்தொடு படாததாம். இளம்பூரணர் தலைவியின் மெய்வேறுபாடு கண்டு செவிலியும் நற்றாயும் அறிவரை நோக்கி வினவுவதாக உரைகாண்பர். அதுவும் அத்துணைப் பொருத்தமின்றாம். எனவே மேலும் எண்ணற் குரியது. (26)

தலைவிக்குரியதோர் சிறப்பிலக்கணம்.

118. தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்தல்
எண்ணுங் காலைக் கிழத்திக் கில்லைப்
பிறநீர் மாக்களின் அறிய ஆயிடைப்
பெய்ந்நீர் போலு முணர்விற் றென்ப.

இது தலைவிக்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

1. 'கிளவியின் அறிதலும்' எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

(இ - ள்.) பிறநீர் மாக்களின் - வேறுவேருகத் தம்மில் தாம் காதல்செய்து ஒழுகும் அறிவில்லாதாரைப் போல; கிழவன் அறியத் தன்னுறு வேட்கை முற்கிளத்தில் கிழத்திக்கு இல்லை - தலைவன் அறியும்படியாகத் தனக்குற்ற வேட்கையை அவன் முன்னர்க் கூறுதல் தலைவிக்கு இல்லை; ஆயிடை - அங்ஙனங் கூற்றில்லாத விடத்து; எண்ணுங் காலையும் - அவள் வேட்கையை அவன் ஆராயுங் காலையும்; பெய்நீர் போலும் உணர்விற்று என்ப - அவ்வேட்கை புதுக்கலத்துப் பெய்த நீர் புறத்துப் பொசிந்து காட்டுமாறுபோலும் உணர்வினையுடைத்தென்று கூறுவர் ஆசிரியர் (எ - று).

'கிழத்திக்கில்லை' யெனவே தோழிக்குத் தலைவி தனது வேட்கையை எதிர்நின்று கூறுதலுளதென்பது பெற்ரும். தலைவிக்குக் குறிப்பானன்றித் தலைவன் முன்னின்று கூறும் வேட்கைக்கூற்றின்மை முற்கூறிய செய்யுட்களுட் காண்க. எனவே, தோழிமுன்னர்த் தலைவிக்கு வேட்கைக்கூற்று நிகழ்தல் பெற்ரும்,

உதாரணம்:

"சேணோன் மாட்டிய நறும்புகை" (குறுந். 150)

"ஈயற் புற்றத்து ஈர்ம்புறத்து இறுத்த" (அகம். 8)

என்பனவும்,

"இவளே நின்சொல் கொண்ட" (குறுந். 81)

என்ருற்போல் வருவனவும் முன்னர்க் காட்டினும்.

"கடும்புனன் மலிந்த காவிரிப் பேரியாற்று
நெடுஞ்சுழி நீத்தம் மண்ணுநள் போல
நடுங்கஞர் தீர முயங்கி நெருநல்
ஆகம் அடைதந் தோளே" (அகம். 62, 9-12)

என்ருற்போல்வன தலைவி வேட்கையைத் தலைவன் குறிப்பான் உணர்ந்தன.

(வி - ரை) தலைவன் தன் வேட்கையைத் தலைமகளுக்கு விளங்கக் கூறுவதுபோலத் தலைவி தன் வேட்கையைத் தலைவனிடத்து வெளிப்படையாகக் கூருள். அவள் வேட்கைக் குறிப்பு புதுமண் கலத்தில் பெய்த நீர், புறம் கசிந்து காட்டுவது போல அவள் உள்ள வேட்கையினைக் குறிப்பானே அறிய முடியும்.

என்பது இந்நூற்பாவின் கருத்தாகின்றது. கோவலன் கண்ணகியிடத்து உலவாக் கட்டுரை பல பாராட்டியும், கண்ணகி தன் வேட்கையை அவ்வாறு கூறாமை சிலப்பதிகாரத்தானும் அறியலாம்.

மண்ணுநள் போல - நீராடினளைப் போல. (27)

தலைவனுந் தலைவியும் தாமே தூதுவராதல்

119. காமக் கூட்டந் தனிமையிற் பொலிதலின்
தாமே தூதுவ ராகலு முரித்தே.

இஃது எய்தாதது எய்துவித்தது, பாங்கனுந் தோழியும் நிமித்தமாகவன்றித் தாமே தூதாகும் இடமும் உண்டென்றலின்.

(இ - ள்.) காமக்கூட்டந் தனிமையிற் பொலிதலின் - இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடுங் கூட்டுவாரையின்றித் தனிமையாற் பொலிவு பெறுதலின்; தாமே தூதுவர் ஆகலும் உரித்தே - ஒருவருக்கு ஒருவர் தூதுவராகி ஒருவர் ஒருவரைக் கூடுதலும் ஆண்டுரித்து (எ - று).

அது மெய்ப்பாட்டினுட் 'புதுமுகம் புரிதல்' (261) முதலிய பன்னிரண்டானும் அறிக. இதன் பயன் இக் கூட்டத்தின் பின்னர் வரைதலும் உண்டென்பதாம். (28)

களஞ் சுட்டுக் கிளவி

120. அவன்வரம் பிறத்தல் அறந்தனக் கின்மையின்
களஞ்சுட்டுக் கிளவி கிழவிய தாகும்
தான்செலற் குரியவழி யாக லான.

இது முன்னர்க் களனும் பொழுதும் என்றவற்றுட் களங் கூறுதற்கும் உரியாள் தலைவியென்கின்றது.

(இ - ள்.) அவன் வரம்பு இறத்தல் - தலைவன் கூறிய கூற்றின் எல்லையைக் கடத்தல்; தனக்கு அறமின்மையின் - தலைவிக்கு உரித்தெனக் கூறிய தருமநூலின்மையின்; களஞ்சுட்டுக் கிளவி கிழவியது ஆகும் - தலைமகனை இன்னவிடத்து வருகவென்று ஓரிடத்தைத் தான் கருதிக் கூறுங்கூற்று அவன்குறிப்பு வழி ஒழுகுந் தலைவியதாம்; தான் செலற்கு உரியவழி ஆக

லான - தான் சென்று கூடுதற்குரிய இடந் தானே உணர்வள் ஆதலான் (எ - று)

'சுட்டுக்கிளவி' என்றதன் கருத்துத் தலைவன் இருவகைக் குறியும் வேண்டியவழி அவனை மருது தான் அறிந்த விடத்தினைக் கூற்றுனன்றிக் குறிப்பானுதல் சிறைப்புறத்தானுதல் தோழியானுதல் உணர்த்துமென்பதாம். தலைவன் களஞ்சுட்டு மாயின் யாண்டானும் எப்பொழுதானும் அக்களவொழுக்கம் நிகழ்ந்து பிறர்க்கும் புலனுய்க் குடிப்பிறப்பு முதலியவற்றிற்குத் தகாதாம். ''விரியிணர் வேங்கை'' என்னும் (38) அகப்பாட்டுத் தலைவி களஞ்சுட்டியது. ''மறந்திசின் யானே'' என்றலின் இது குறிப்பான் உணர்த்திற்று; பிறவும் வந்துழிக் காண்க. (29)

தோழிக்கும் களஞ்சுட்டுங் கிளவி உரித்து.

121 தோழியின் முடியு மிடனுமா ருண்டே.

இது, தோழிக்குங் களங்சுட்டுக் கிளவி உரித்தென்று எய்தாதது எய்துவித்தது.

(இ - ள்) களஞ்சுட்டுக் கிளவி தலைவி குறிப்பால் தோழி கூறுதலன்றித் தானேயுங் கூறப்பெறும் ஒரோவழி என்றவாறு. தோழி குறித்த இடமுந் தலைவி தான் சேறற்குரிய இடமாமென்பது கருத்து.

உ - ம்: ''செவ்வீ ஞாழல் கருங்கோட்டு அஞ்சினைத்
தனிப்பார்ப் புள்ளிய தண்பறை நாரை
மணிப்பூ நெய்தன் மாக்கழி நிவப்ப
இனிப்புலம் பின்றே கானலு நளிகடல்
திரைச்சுரம் உழந்த திண்டிமில் விளக்கில்
பன்மீன் கூட்டம் என்னையர்க் காட்டிய
எந்தையும் செல்லுமார் இரவே அந்தில்
அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி
யாயும் ஆயமோடு அயரு நீயும்
தேம்பாய் ஓதி திருநுதல் நீவிக்
கோங்கு முகைத்தன்ன குவிமுலை ஆகத்து
இன்றுயில் அமர்ந்தனை யாயின் வண்டுபட

விரிந்த செருந்தி வெண்மணன் முடுக்கர்ப்
பூவேய் புன்னையம் தண்பொழில்
வாவே தெய்ய மணந்தனை செலற்கே'' (அகம். 240)

எனத் தோழி களஞ்சுட்டியவாறும் காண்க.

(வி - ரை) அறை - சிறை, நிவப்ப - பரப்ப, திமில் - படகு, அய்யர் - தமையன்மார், முடுக்கர் - முடுக்கில். (30)

துணையின்றிக் கழியா நாட்கள்

122. முந்நா ளல்லது துணையின்று கழியா
தந்நா ளகத்தும் அதுவரை வின்றே.

இதுவும் அதிகாரத்தால் தலைவிக்கெய்தியதோர் இலக்கணங் கூறுகின்றது.

(இ - ள்.) முந்நாள் அல்லது துணையின்று கழியாது - பூப் பெய்திய மூன்றுநாளும் அல்லது கூட்டமின்றி இக்கள வொழுக்கங் கழியாது; அந்நாளகத்தும் அது வரைவு இன்றே - அம்மூன்று நாளின் அகப்பட்ட நாளாகிய ஒருநாளினும் இரண்டு நாளினுந் துணையின்றிக் கழிதல் நீக்கப்படாது (எ - று).

''அது என்றது துணையின்று கழிதலை. பூப்பினால் துணையின்றிக் கழிதல் பொருந்திற்றாயினும், பூப்பின்றி ஒருநாளும் இரண்டுநாளுந் துணையின்றிக் கழிதல் வழுவாமெனக் கருதின் அதுவும் புறத்தார்க்குப் புலனும் என்று அஞ்சுதலாற் கழிதலின் வழுவாகாவென்றற்கு 'வரைவின்று' என்றார். இன்னோரன்ன காரணந் தலைவற்கின்மையின் அவனால் துணையின்றிக் கழிதல் இன்றாயிற்று.

உ - ம்: ''குக்கூ என்றது கோழி அதன் எதிர்
துட்கென் றற்றென் றூஉ நெஞ்சம்
தோடோய் காதலர்ப் பிரிக்கும்
வாள்போல் வைகறை வந்தன்றால் எனவே.'' (குறுந். 157)

இது முந்நாளைப் பிரிவாகிய பூப்பிடைப்பிரிவு வந்துழித் தலைவி கூறியது.

இனி அல்லகுறிப்பட்டுழி ஒருநாளும் இரண்டுநாளும் இடையீடாமென்றுணர்க.

பூப்புநிகழாத காலத்துக் களவொழுக்கம் பூப்பு நிகழ்காலம் வரையப்பட்டதென்று உரைப்பாரும் உளர்; இவ்விதி அந்தணர்க்குக் கூறியதன்று; அரசர் வணிகராதியவர்க்குச் சிறுபான்மையாகவும், ஏனை வேளாளர் ஆயர் வேட்டுவர் முதலியோர்க்குப் பெரும்பான்மை யாகவுங் கூறிய விதியென்றுணர்க. என்னை? பூப்பு நிகழுங் காலத்து வரையாது களவொழுக்கம் நிகழ்த்தினார்க்கு,

'அந்தரத்து எழுதிய எழுத்தின் மான
வந்த குற்றம் வழிகெட ஒழுகலும்'. (தொல். கற்பியல்,5)

என்பதனாற் பிராயச்சித்தம் விதிப்பராதலின்.

இதனானே அந்தணர் மகளிர்க்கும் பூப்பெய்தியக்கால் அறத் தொடு நின்றும் வரைதல் பெறுதும்.

(வி - ரை) களவுக் காலத்தில் தலைவிக்குப் பூப்பு நிகழும் மூன்றுநாட்கள் தவிர ஏனைய நாட்களில் தலைவன் தலைவியைப் பிரியான். அம்மூன்று நாட்களில் கூட ஓரிரு நாட்கள் தலைவியுடன் இருந்து இன்புறுவன் என்பது இந்நூற்பாவின் கருத்தாக நச்சினார்க்கினியர் கூறுகின்றார். இயற்கைப்புணர்ச்சி, பாங்கர்க் கூட்டம், பாங்கியர்க் கூட்டம் ஆகிய மூன்று கூட்டத்தின் கண்ணும் தலைவன் பாங்கனையோ, அன்றிப் பாங்கியையோ துணையாகக் கொண்டே தலைவியுடன் கூடுவன் என இளம்பூரணர் உரை காண்பர்.

துட்கென்றற்று - அஞ்சியது, தூஉ நெஞ்சம் - தூய நெஞ்சம், பிறருரையாகக் கூறியது யாருடையது எனத் தெரிந்திலது. பூப்பு நிகழ்ந்த காலத்தும் அரசர் வணிகர் முதலியோர் தலைவியொடு சிறு பான்மை புணர்வர் என்றும், ஏனைய வேளாளர் முதலியோர் பெரும் பாலும் புணர்வர் என்றும் கூறியதற்கு இந்நூற்பாவில் ஏதும் இட னின்று. ஆசிரியர் கருத்தொடு படாததும் அருவருக்கத்தக்கதுமாய இவ்வுரை முற்றக் கடிதற்குரியதாம். (31)

### தலைவி அறத்தொடு நிற்குமாறு

123. பன்னூறு வகையினும் தன்வயின் வரூஉம்
நன்னய மருங்கின் நாட்டம் வேண்டலில்
துணைச்சுட்டுக் கிளவி கிழவிய தாகும்
துணையோர் [1]கரும மாக லான.

இது, தலைவிக்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

1. 'கரும மாதலான' எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

(இ - ள்.) தன்வயின் வருஉம் நன்னய மருங்கின் - தலைவி யிடத்தே தோழிக்குஞ் செவிலிக்கும் வருகின்ற அன்பு மிகுதிக் கண்ணே, பல்நூறு வகையினும் நாட்டம் வேண்டலில் - பல நூறாகிய பகுதியானும் ஆக்கமுங் கேடும் ஆராய்தலை அவர் விரும்புதலாலே; துணைச்சுட்டுக் கிளவி கிழவியதாகும் - இவள் ஓர் துணையுடையளென அவர் சுட்டுதலிடத்துக் கிளக்குங் கிளவி தலைவியதாம்; துணையோர் கருமம் ஆகலான - அக்கிளவி அத் தோழியானுஞ் செவிலியானும் முடியுங்காரியம் ஆதலான் (எ று).

என்றது, தோழி 'பல்வேறு கவர்பொருணாட்டம்' (114) உற்ற வழியுஞ் செவிலி களவு அலராதல் முதலியவற்றான் (115) நாட்ட முற்ற வழியுந் தலைவி அறத்தொடு நிற்குமென்று அறத்தொடு நிலைக்கு இலக்கணங் கூறியவாறாயிற்று.

தோழிக்குத் தலைவி அறத்தொடு நிற்ப, அவள் செவிலிக்கு அறத்தொடு நிற்ப, அவள் நற்றாய்க்கு அறத்தொடு நிற்குமென்று உணர்க. இதனானே பாங்கற்கு உற்றதுரைத்த பின்னர்த் தலைவன் உரையாமையும் பெற்றாம்.

''புனையிழை நோக்கியும்'' (கலி. 76.) என்னும் மருதக் கலியுள், ''வினவுதியாயின்'' என நாட்டம் நிகழ்ந்தவாறும், அதன் சுரிதகத்து கூட்டமுண்மை கூறுதலின் துணைச்சுட்டுக் கிளவி கிழவியதாய வாறுங் காண்க.

''கொடியவுங் கோட்டவும்'' (கலி – 54.) என்பதன் சுரிதகத்துச் செவிலிக்கு உரையாயெனக் கூறியவாறுங் காண்க.

(வி - ரை) களவுக் காலத்துத் தலைவி தம்செயல் முடிதற்காகத் தோழியிடத்தும், செவிலியிடத்தும் கூறும் கூற்றும், அதாவது அறத்தொடு நிற்பதும், உளதாம் என்பது இந்நூற்பாவின் கருத்தாக உரைத்தார் நச்சினார்க்கினியர். இளம்பூரணர் களவுக் காலத்துத் தலைவன் தலைவியிடத்துள்ள அரிய பண்புகள் பலவற்றிற்கும் ஏற்ப நடந்து கொள்ளுதற்கும் வரைவு செய்தற்கும் ஏற்பத் தனக்கு இன்றி யமையாத தோழி இன்னாள் எனத் தலைவனிடத்தும் தலைவி கூறு தலும் உண்டு என இந்நூற்பாவிற்கு உரை காண்பர். அதுவே பொருத்த முடைத்தாம். (32)

### செவிலியின் சிறப்பு

124. ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாயெனப் [1]படுவோள் செவிலி யாகும்.

இது முற்கூறிய செவிலி சிறப்புக் கூறுகின்றது.

(இ - ள்.) ஆய்பெருஞ் சிறப்பின் - தாய்த்தாய்க்கொண்டுஉயிர் ஒன்ருய் வருகின்ருளென்று ஆராய்ந்து துணியப்பட்ட பெருஞ் சிறப்புக் காரணமாக; அருமறை கிளத்தலின் - கூறுதற்கரிய மறை பொருளெல்லாங் குறிப்பானன்றிக் கூற்ருற் கூறத் தக்காளாதலின்; தாயெனப் படுவோன் செவிலி ஆகும் - தாயென்று சிறப்பித்துச் சொல்லப்படுவாள் செவிலியேயாம் (எ - று).

எனவே ஈன்ற தாயினுங் களவின்கட் சிறந்தாள் இவளென்ருர். கற்பிற்கு இருவரும் ஒப்பாராயிற்று. செவிலி சிறந்தமை சான்ருேர் செய்யுளுட் பலருங் கூறியவாறு காண்க. (33)

### தோழியாவாள்

125. தோழி தானே செவிலி மகளே.

இது தோழியது சிறப்புணர்த்துகின்றது.

(இ - ள்.) தோழி தானே-தோழியர் பலருள்ளும் ஒருத்தியெனப் பிரிக்கப்படுவாள்; செவிலி மகளே - முற்கூறிய செவிலியுடைய மகள் (எ - று).

இதற்கும் அருமறை கிளத்தல் அதிகாரத்தாற் கொள்க. தாய்த்தாய்க் கொண்டு வருகின்றமையின் உழுவலன்பு போல்வதோர் அன்பு உடையர் இருவருமென்று கொள்க. இதனுனே களவிற்குத்தோழியே சிறந்தாளாயிற்று; அது சான்ருேர் செய்யுளுட் காண்க.

(வி - ரை) தாய்த்தாய்க் கொண்டு - தாய் செவிலியாய் அவள் தாயும் செவிலியாய் வரும் நிலே. (34)

### இதுவும் அது

126. சூழ்தலு முசாத்துணே நிலைமையிற் பொலிமே.

இதுவுந் தோழி சிறப்பினேயே கூறுகின்றது.

---

1 'படுவாள்' எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

(இ - ள்.) உசாத்துணை நிலைமையின் - தலைமகனுந் தலைமகளும் உசாவுதற்குத் துணைமைசான்ற நிலைமையினாலே; சூழ்தலும் பொலிமே - புணர்ச்சி யுண்மையை ஏழுவகையானுஞ் சூழ்தற் கண்ணும் பொலிவுபெறும் (எ – று).

எனவே, இம்மூன்று நிலைக்குந் தோழி உரியள் என்றார். உதாரணம் முற்காட்டியவற்றுட் காண்க.

(வி - ரை) இம்மூன்று நிலைக்கும் - அருமறை கிளத்தல், உசாத்துணையாதல், சூழ்தல் ஆகிய மூன்று நிலையிலும். 125, 126ஆம் நூற்பாக்களிலும் இளம்பூரணர் கூறும் விளக்கம் ஈண்டு அறியத் தக்கதாம். தலைவியொடு பயின்றார் எல்லாரும் தோழியாகார் அருமறை கிளக்கப்படுதலான் உடன் முலையுண்டு வளர்ந்த செவிலி மகளே தோழியெனப்படுவாள். இவளும் செவிலி மகள் என்னும் துணையால் பொலிவுபெறாள்; என்றும் தோழியாவாள் செவிலி மகளே யாதலன்றிச் சூழவும் உசாத் துணையாகவும் வல்லள் ஆதல் வேண்டும் என்பது அவர் கருத்தாகும். 'தோழி தானேசெவிலி மகளாய்ச் சூழ்தலோடு உசாத் துணையாகி அசாத்தணிவித்தற்குக் காதல் மருவிய துணையே' என்னும் நம்பியகப் பொருள். (35)

### மதியுடம்படுத்தலின் வகை

127. குறையுற உணர்தல் முன்னுற உணர்தல்
இருவரு முள்வழி அவன்வர உணர்தலென
மதியுடம் [1]படுத்தல் ஒருமூ வகைத்தே.

இஃது, அத்தோழி சூழ்ச்சி இத்துணைப் பகுதித்து என்கின்றது.

(இ – ள்.) குறையுற உணர்தல் - தலைவன் தோழியை இரந்து குறையுற்றவழி உணர்தல்; முன் உற உணர்தல் - முன்னம் மிக உணர்தல்; இருவரும் உள்வழி அவன் வர உணர்தல் - தலைவியுந் தோழியும் ஒருங்கிருந்தவழித் தலைவன் வருதலால் தலைவன் குறிப்புந் தலைவி குறிப்புங் கண்டுணர்தல்; என மதியுடம்படுத்தல் ஒரு மூவகைத்தே - என்று இருவர் கருத்தினையுந் தன் கருத்தினோடு ஒன்றுபடுத்துணர்தல் ஒரு மூன்று கூற்றினையுடைத்து (எ - று).

எண்ணுதல் எண்ணென்றாற்போல முன்னுதல் 'முன்' னென நின்றது. உயிர்கலந்தொன்றலிற் குறிப்பின்றியும் பாகமுணர்வாள்

---

1. 'படுதல்' எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

குறிப்புப்பெற்றுழி மிகவுணரும் என்று கொள்க. இது மூவர் மதியினையும் ஒன்றுபடுத்துதலின் மதியுடம்படுத்தலென்று பெயராயிற்று. இம்மூன்றுங் கூடிய பின்னரல்லது மதியுடம்படுத்தலின்றென்றற்கு மூவகைத்தென்று ஒருமையாற் கூறினர்.

'முன்னுற' வென்றதனை 'முந்துற' வென்ருலோவெனின் குறையுறுதலான் உணர்தல் அவன் வருதலான் உணர்தலென்று இரண்டற்குக் காரணங் கூறுதலின், இதற்குங் குறிப்பு மிகுதலான் உணர்தலெனக் காரணங் கொடுத்தல் வேண்டுமென்றுணர்க.

'நாற்றமுந் தோற்றமும்' (தொல். பொ. 114) என்பதனுட் கூறியவாறன்றி முன்னுறவை இடை வைத்தார், அவ்விரண்டினுன் உணருங்காலும் இக்குறிப்பான் உணரவேண்டுமென்றற்கு. இம் மூன்றும் முற்கூறிற்றேனும் ஒரோவொன்ருற் கூட்டமுணரில் தலைவியை நன்கு மதித்திலளாவளென்றற்கு இம்மூன்றும் வேண்டுமென்று ஈண்டுக் கூறினர்.

உ-ம்: "கோனேர் எல்வளை தெளிர்ப்ப நின்போல்
யானும் ஆடிக் காண்கோ தோழி." (பக்கம், 154)

இது கூட்டமுணராதாள்போல நாணிற்கு மாருகாமற் கூறலின், முன்னுறவுணர்தல்.

"நின்னின் விடாஅ நிழல்போல் திரிதருவாய்
என்னீ பெருத திதென்." (கலி, 61)

இது குறையுற வுணர்தல்.

"ஏனல் காவல் இவளும் அல்லள்."

என்பது அவன் வரவுணர்தல்.

(வி - ரை) முன்னுதல் - மனத்தகத்து எண்ணுதல்: எனவே தலைவி கருத்தினை அவள் குறிப்பால் உணர்வள் என்பது கருத்து. பாகம் உணர்வாள் - தலைவியின் வேறு பாட்டிற்குரிய காரணத்தையும் அதற்கேற்பச் செய்ய வேண்டியதும் உணர்வாள்.

மதியுடம்படுதல் எனினும் புணர்ச்சியுணர்தல் எனினும் ஒக்கும். இம் மூன்றினும் ஒன்று கண்டுழி அவரவர் குறிப்பினுற் புணர்ச்சியுணரும் என்றவாறு. 'குறையுணர்தல்' முன் வைத்தார் நன்கு புலப்படுதலின். 'முன்னுற வுணர்தல்' அதன்பின்வைத்தார், தலைவி வேறுபாடு கண்டு பண்டையிற் போலாள் என்னும் நிகழ்ச்சியான்

முற்றத்துணிவின்மையின். 'இருவரு முன்வழியவன் வரவுணர்தல்' அதன்பின் வைத்தார், ஆண்டுப் புதுவோன் போலத் தலைவன் வருதலானும் தலைவி கரந்த உள்ளத்தளாய் நிற்குமாதலானும் அத்துணைப் புலப்பாடின்மையின். அக்கருத்தினானே மேற்சொல்லப் பட்ட தோழி கூற்று மூவகையாகப் பொருள் உரைத்ததென்று கொள்க. (36)

தலைவன் இரந்து பின் நிற்றற்குரிய இடம்

128. அன்ன வகையா னுணர்ந்தபி னல்லது
பின்னிலை முயற்சி [1]பெறூனென மொழிப.

இது மதியுடம்பட்ட பின்னல்லது தலைவன் கூற்று நிகழ்த்தப் பெறானென்கிறது.

(இ - ள்.) அன்னவகையான் உணர்ந்தபின் அல்லது-அம் மூவகையானுந் தோழி மதியுடம்படுத்த பின்னல்லது; பின்னிலை-இவன் ஓர் குறையுடையனென்று தோழி உய்த்துணர நிற்குமிடத்து; முயற்சிபெறான் என மொழிப - கூற்றான் அக்குறை முடித்தல் வேண்டுமென்று முடுக்குதல் பெறானென்று கூறுப ஆசிரியர் (எ - று).

தோழி தன்னை வழிப்பட்டவாறு கண்டு மதியுடம்பட்டவா றுணர்ந்து கூற்றான் உணர்த்தும்.

அது "நெருநலு முன்னாள்" என்பதனுள் "ஆரஞர் வருத்தங் களையாயோ" என்றவாறு காண்க.

(வி – ரை) 'பெருள் என மொழிப' எனப்பாடம் கொண்டு இளம்பூரணர் மேற் சொல்லப்பட்ட கூறுபாட்டான் இருவர் மாட்டும் அன்புடைமை உணர்ந்த பின் அல்லது வழிபாட்டு நிலைமையாற் கூட்டத்திற்கு முயலப் பெருள் தோழி என விளக்கம் காண்பர். இந் நூற்பாவிற்கு முன்னும் பின்னும் அதற்கேற்ப உரைப்பதற்குத் தோழியைப்பற்றி செய்தி உளதாகலின் இளம்பூரணர் கொண்ட பாடமும் உரையுமே சிறப்புடைத்தாம். (37)

தோழிக்கு முயற்சி பிறக்கும் இடம்

129. முயற்சிக் காலத் ததற்பட நாடிப்
புணர்த்த லாற்றலும் அவள்வயி னான.

1. 'பெருள்' எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

இது தலைவன் முயற்சி கூறிய முறையே தோழி முயற்சி பிறக்குமிடங் கூறுகின்றது.

(இ - ள்.) முயற்சிக்காலத்து - தலைவன் அங்ஙனங் கூடுதற்கு முயற்சி நிகழ்த்துங்காலத்தே; நாடி அதற்படப் புணர்த்தலும்-தலைவி கூடுதற்கு முயலுங் கருத்தினை ஆராய்ந்து அக்கூட்டத்திடத்தே உள்ளம்படும்படி கூட்டுதலும்; அவள் வயின் ஆன ஆற்றல் - தோழியிடத்து உண்டான கடைப்பிடி (எ - று).

ஆற்றல் - ஒன்றனை முடிவுபோக்கல். உம்மை, எச்சவும்மை. மதியுடம்படுத்தலே யன்றிக் கூட்டவும் பெறுமென்க.

(வி - ரை) இந் நூற்பாவிற்குத் தோழி வழி மொழிந்து முயலுங் காலத்து அவன் நினைவின்கட் படுந் திறன் ஆராய்ந்து புணர்த்தலைச் செய்யும் அவளிடத்து என்றவாறு,

அஃதாவது 'இன்னுழிச் செயல்' எனவும் 'இன்னுழி வா' எனவும், தலைவியை ஆயத்துணின்றும் பிரித்துத் தனி நிறுத்திப் பட்டாங்கு கூறியும் பிறவாற்றானும் ஆராய்ந்து கூட்டுதல் என விளக்கம் காண்பர் இளம்பூரணர். (38)

குறியின் வகை

130. குறியெனப் படுவ திரவினும் பகலினும்
[1]அறியத் தோன்றும் ஆற்ற தென்ப.

அங்ஙனங் கூட்டுகின்றவட்குக் கூடுதற்குரிய காலமும் இடனுங் கூறுகின்றது.

(இ - ள்.) குறியெனப் படுவது - குறியென்று சொல்லப்படுவது; இரவினும் பகலினும் - இரவின்கண்ணும் பகலின்கண்ணும்; அறியத் தோன்றும் ஆற்றது என்ப - தலைவனுந் தலைவியுந் தானும் அறியும் படி தோன்றும் நெறியினையுடைய இடம் (எ - று).

நெறியென்றார் அவன் வருவதற்குரிய நெறி இடமென்றற்கு, அதுவென்று ஒருமையாற் கூறினர், தலைப்பெய்வதோரிடமென்னும் பொதுமைபற்றி. இரவு களவிற்குச் சிறத்தலின் முற்கூறினர். அறியத் தோன்றுமென்றதனாற் சென்று காட்டல் வேண்டா நின்று காட்டல் வேண்டுமெனக் கொள்க.

1. 'அறியக் கிடந்த' எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

(வி - ரை) தலைவன் தலைவியை எதிர்ப்படும் பொழுது இரண்டேனும், இடப் பொதுமை நோக்கிக் குறியெனப் படுவது என ஒருமையால் கூறினார். (39)

## இரவுக் குறிக்குரிய இடம்

131. இரவுக் குறியே இல்லகத் துள்ளும்
மனையோர் கிளவி கேட்கும்வழி யதுவே
மனையகம் புகாஅக் காலை யான.

இது, நிறுத்தமுறையானே இரவுக்குறியிடம் உணர்த்துகின்றது.

(இ - ள்.) அகமனைப் புகாக் காலை ஆன இரவுக்குறியே - உண்மனையிற் சென்று கூடுதற்கு உரித்தல்லாத முற்காலத்து உண்டான இரவுக்குறியே: ஏகாரம், பிரிநிலை.இல்லகத்துள்ளும் மனையோர் கிளவி கேட்கும் வழியதுவே - இல்வரைப்பினுள்ளதாகியும் மனையோர் கூறிய கிளவி கேட்கும் பிறமனையிடத்ததாம் (எ-று).

அல்லகுறிப்பட்டதனை ஒருவாற்ருன் உணர்த்திய காலத்து அவன் அதுகேட்டு ஆற்றுவனென்பது கருதி, 'மனையோர் கிளவி கேட்கும் வழியது' என்ருர். ஏகாரம் ஈற்றசை. என்றது, இரவுக்குறி அம்முயற்சிக்காலத்து அச்சநிகழ்தலின், அகமனைக்கும் புறமதிற்கும் நடுவே புணர்ச்சி நிகழுமென்றதாம். அகமனையிற் புகாக்காலையெனவே, இரவுக்குறி அங்ஙனஞ் சிலநாள் நிகழ்ந்த பின்னர், அச்சமின்றி உண்மனையிற் சென்று கூடவும்பெறுமென்பதுங் கூறியதாம்.

உ - ம் "அஞ்சிலம்பு ஒடுக்கி அஞ்சினள் வந்து
துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்"
(அகம். 198)

எனவும்,

"மிடையூர் பிழியக் கண்டனென் இவள்என
அலையல் வாழிவேண் டன்னை." (அகம். 158)

எனவும்,

"அட்டி லோலை தொட்டனை நின்மே" (நற்றிணை, 300)

எனவும் வருவன பிறவும் மனையோர் கிளவி கேட்கும்வழியது.

"உளைமான் துப்பின் ஓங்குதினைப் பெரும்புனத்துக்
கழுதில் கானவன் பிழிமகிழ்ந்து வதிந்தென
உரைத்த சந்தின் ஊர இருங்கதுப்பு
ஐதுவரல் அசைவளி மாற்றக் கைபெயரா
ஒலியல் வார்மயிர் உளரினள் கொடிச்சி
பெருவரை மருங்கில் குறிஞ்சி பாடக்
குரலும் கொள்ளாது நிலையினும் பெயராது
படாஅம் பைங்கண் பாடுபெற்று ஒய்யென
மறம்புகன் மழகளிறு உறங்கு நாடன்
ஆர மார்பின் அணிமிஞிர் ஆர்ப்பத்
தாரன் கண்ணியன் எஃகுடை வலத்தன்
காவலர் அறிதல் ஓம்பிப் பையென
வீழாக் கதவம் அசையினன் புகுதந்து
உயங்குபடர் அகல முயங்கித் தோண்மணந்து
இன்சொல் அளைஇப் பெயர்ந்தனன் தோழி
இன்றுஎவன் கொல்லோ கண்டிகு மற்றவன்
நல்கா மையின் அம்ப லாகி
ஒருங்குவந் துவக்கும் பண்பின்
இருஞ்சூழ் ஓதி ஒண்ணுதல் பசப்பே. (அகம். 102)

இது மனையகம் புக்கது.

தலைவி புறத்துப் போகின்றாளெனச் செவிலிக்கு ஓர் ஐயம் நிகழ்ந்தவழிப் பின்னர் மனையகத்துப் புணர்ச்சி நிகழுமென்றுணர்க.

(வி - ரை) மனையகம் புகாக் காலையான - மனையகத்துள்ளோர் பழகுதலில்லாத இடத்தின்கண் என உரை காண்பது பொருத்த முடைத்தாம். சின்னாள் சென்றபின் உள்மனைக்கண் சென்று கூடவும் பெறும் என்றுரைத்தல் பொருத்தமுடைத்தன்றாம்.

உளைமான் - பிடரியுடைய சிங்கம்; பிழி - கள் (40)

பகற் குறிக்குரிய இடம்

132. பகற்புணர் களனே புறனென மொழிப
அவளறி வுணர வருவழி யான.

இது முறையானே பகற்குறி உணர்த்துகின்றது.

(இ - ள்.) அவள் அறிவு உணர வருவழி ஆன பகற்புணர் களனே - களஞ்சுட்டிய தலைவி அறிந்தவிடந் தலைவன் உணரும் படியாக வருவதோரிடத்து உண்டான பகற்புணருங் குறி யிடத்தை, புறன் என மொழிப - மதிற்புறத்தேயென்று கூறுவர் ஆசிரியர் (எ - று).

அறிவு : ஆகுபெயர்.

உ - ம்: "புன்னையம் கானல் புணர்குறி வாய்த்த
மின்னேர் ஓதிஎன் தோழிக்கு"

எனவும்,

"பூவே புன்னையம் தண்பொழில்
வாவே தெய்ய மணந்தனை செலற்கே" (அகம். 240)

எனவும் வருவன பிறவுங் கொள்க. (41)

அல்ல குறிப்படுதல்

133. அல்லகுறிப் படுதலும் அவள்வயி னுரித்தே
அவன்குறி மயங்கிய அமைவொடு வரினே.

இது தோழி அல்ல குறிப்படுமாறு கூறுகின்றது. இருவகைக் குறி பிழைப்பாகியவிடத்தும் என்புழித் தலைவி அல்ல குறிப்படுதல் கூறிற்று.

(இ - ள்.) அவன் குறி - தலைவன் தன்வரவு அறிவிக்குங் கருவிகள்; மயங்கிய அமைவொடு வரின் - அவன் செயற்கை யானன்றி இயற்கைவகையானே நிகழ்ந்து தோழி மயங்கிய அமைதியோடே வருமாயின், அல்லகுறிப் படுதலும் - குறி யிடத்துக் கூட்டுங்கால் அவ்வல்லவாகிய குறியிலே மயங்குதலும்; அவள்வயின் உரித்து - அத் தோழியிடத்து உரித்து (எ - று.)

வெறித்தல் வெறியாயினாற்போலக் குறித்தல் குறியாயிற்று. அக் கருவி புனலொலிப்படுத்தல் முதலியன.

உ - ம்: "கொடுமுண் மடற்றாழைக் கூன்புற வான்பூ
இடையுள் இழுதொப்பத் தோன்றிப்—புடையெலாம்

தெய்வம் கமழும் தெளிகடல் தண்சேர்ப்பன்
செய்தான் தெளியாக்குறி.'' (ஐந்திணை, ஐம். 49)

இஃது அல்லகுறிப்பட்டமை சிறைப்புறமாகக் கூறியது.

''எறிசுறு நீள்கடல் ஓதம் உலாவ
நெறியிருக் கொட்கு நிமிர்கடல்தண் சேர்ப்பன்
அறிவுரு இன்சொல் அணியிழையாய் நின்னில்
செறிவுரு செய்த குறி.'' (திணை, ஐம். 43)

இஃது அவன்மேற் குறிசெய்கின்றமை தலைவிக்குக் கூறியது.

''இடுமணல் எக்கர் அகன்கானல் சேர்ப்பன்
கடுமான் மணியரவம் என்று – கொடுங்குழை
புள்ளரவம் கேட்டுப் பெயர்ந்தாள் சிறுகுடியர்
உள்ளரவ நாணுவர் என்று''. (ஐந். எழு. 59)

இஃது இவன் இனி ஆண்டுவரிற் சுற்றத்தார் அறிவரென்றது.

''வீழ்பெயல் கங்குனின் விளியோர்த்த ஒடுக்கத்தால்
வாழுநாள் சிறந்தவள் வருந்துதோள் தவறுண்டோ
தாழ்செறி கடுங்காப்பில் தூய்முன்னர் நின்சாரல்
ஊழுறு கோடல்போல் ஒளிவளை உகுபவால்''. (கலி. 48)

இது தலைவற்கு பிற்றைஞான்று கூறியது.

''அன்னை வாழியோ வன்னைநம் படப்பை
மின்னென நுடங்கிடைக் கின்னிழல் ஆகிய
புன்னை மென்காய் போகுசினை இரிய
ஆடுவளி தூக்கிய அசைவில் கொல்லோ
தெண்ணீர்ப் பொய்கையுள் வீழ்ந்தென
எண்ணினை உரைமோ உணர்குவல் யானே''.

இது தோழி தாய்க்குக் கூறுவாளாய் அல்லகுறி அறிவித்தது.

''மணிநிற நெய்தல் இருங்கழிச் சேர்ப்பன்
அணிநலம் உண்டகன்றான் என்றுகொல் எம்போல்
திணிமணல் எக்கர்மேல் ஓதம் பெயரத்
துணிமுந்நீர் துஞ்சா தது''. (ஐந், எழு. 60)

இது தோழி இல்லுளிருந்து சிறைப்புறமாகக் கூறியது.

திங்கள்மேல் வைத்துக் கூறுவனவும் ஓதத்தின்மேல் வைத்துக் கூறுவனவும் பிறவுங் கொள்க.

"அரவளை மென்றேள் அனுங்கத் துறந்து
கரவலம் என்றுரைக் கண்டது இலையால்
இரவெலா நின்றுயால் ஈர்ங்கதிர்த் திங்காள்"

"புன்னை நனைப்பினும் பூஞ்சினை தோயினும்
பின்னிரும் கூந்தல்என் தோழி நடையொக்கும்
அன்னை நனையாதி வாழி கடலோதம்"

என வருவன பிறவுங்கொள்க. 'படுதல்' எதிர்ப்படாமையை உணர்த்திற்று. ஆண்டுத் தன்மேல் தவறேற்ருது தலைவன் பொழுதறிந்து வாராமையின் மயங்கிற்றென்று அமைவுதோன்றலின் 'அமை' வென்ருர். அது,

"தான்குறி வாயாத் தப்பற்குத்
தாம்பசந் தனஎன் தடமென் தோளே" (குறுந். 121)

என்ருர்போல வரும். இதன் பயன் தலைவி துன்பந் தனதாகத் துன்புறுதலாயிற்று.

(வி - ரை) இழுது – வெண்ணெ.

ஊழ் உரு கோடல் போல் – காந்தள் பூ முறைமையாக சொரிதலைப் போல்.

அனுங்க – வருந்த. (42)

தலைவனும் அல்லகுறிப் படுவான்

134. ஆங்காங் கொழுகும் ஒழுக்கமு முண்டே
யோங்கிய சிறப்பின் ஒருசிறை யான.

இது தலைவனும் அல்லகுறியால் வருந்துவனென்கிறது.

(இ - ள்) ஓங்கிய சிறப்பின் - தனது மிக்க தலைமைப்பாட்டினுலே பொழுதறிந்து வாராமையின், ஒருசிறை ஆன ஆங்கு – தான் குறிசெய்வதோரிடத்தே தன்னுனன்றி இயற்கையான் உண்டான அவ்வல்ல குறியிடத்தே; ஆங்கு ஒழுகும் ஒழுக்கமும் உண்டு – தலைவியுந் தோழியுந் துன்புறுமாறு போலத் தலைவனுந் துன்புற்று ஒழுகும் ஒழுக்கமும் உண்டு (எ - று).

முன்னர் நின்ற 'ஆங்கு' முன்னிற் சூத்திரத்து அல்ல குறியைச் சுட்டிற்று; பின்னர் நின்ற 'ஆங்கு' உவமவுருபு.

உ - ம்: ''தாவி னன்பொன் றைஇய பாவை
விண்டவம் இளவெயில் கொண்டுநின் றன்ன
மிகுகவின் எய்திய தொகுகுரல் ஐம்பால்
கிளையரி நாணல் கிழங்குமணற்கு ஈன்ற
முளையோர் அன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்
நயவன்று ஐவரும் செவ்வழி நல்யாழ்
இசையோர்த் தன்ன இன்றீங் கிளவி
அணங்குசால் அரிவையை நசைஇப் பெருங்களிற்று
இனம்படி நீரில் கலங்கிய பொழுதில்
பெறலருங்கு உரையள் என்னாய் வைகலும்
இன்னா அருஞ்சுர நீந்தி நீயே
என்னை இன்னல் படுத்தனை மின்னுவசி
புரவுக்கார் கடுப்ப மறலி மைந்துற்று
விரவுமொழிக் கட்டூர் வேண்டுவழிக் கொளீஇப்
படைநிலா விலங்குங் கடன்மருள் தானை
மட்டவிழ் தெரியன் மறப்போர்க் குட்டுவன்
பொருமுரண் பெறாது விலங்குசினம் சிறந்து
செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி
ஓங்குதிரைப் பௌவ நீங்க ஓட்டிய
நீர்மாண் எஃக நிறத்துச்சென்று அழுந்தக்
கூர்மதன் அழியரோ நெஞ்சே யானா
தெளியள் அல்லோள் கருதி
விளியா எவ்வம் தலைத்தந் தோயே.'' (அகம். 212)

''வடமலை மிசையோன் கண்ணில் முடவன்
தென்திசை எல்லை விண்புகு பொதியில்
சூருடை நெடுஞ்சுனை நீர்வேட் டாங்கு
வருந்தினை வாழிஎன் உள்ளம் சாரல்
பொருது புறங்கண்ட பூநுதல் ஒருத்தல்
சிலம்பிழி பொழுதின் அத்தம் பெயரிய
வல்லிய மடுக்கத்து ஒடுங்கு நல்வரைக்
கல்லக வெற்பன் மடமகள்
மெல்லியல் வனமுலைத் துயில்உற் றோயே.''

இவை அல்ல குறிப்பட்டு நீங்குகின்ருன் நெஞ்சிற்குக் கூறியன.

(வி - ரை) அவ்வவ்விடத் தொழுகும் ஒழுக்கமுந்தலைவிமாட்டு உண்டு, ஓங்கிய சிறப்பினையுடைய ஒருபக்கத்து என்றவாறு.

ஒரு சிறையென்றது மனத்தானும் மொழியானும் மெய்யானும் கற்புடை மகளிர் ஒழுகும் ஒழுக்கத்தில் மனத்தான் ஒழுகும் ஒழுக்கமும் உண்டு என்றவாறு என விளக்கம் காண்பர் இளம்பூரணர்.

தா - குற்றம், தைஇய - செய்யப்பெற்ற, உரல் - கொத்து, அரில் - வேர், நயவன் - யாழ்வல்லோன், வசிபு - பிளந்து, கட்டூர் - பாசறை.

வடமலை - மேருமலை, ஒருத்தல் - ஆண்யானை. (43)

களவொழுக்கத்திற் குரிய சிறப்பு.

135. மறைந்த வொழுக்கத் தோரையும் நாளும்
துறந்த வொழுக்கம் [1]கிழவோற் கில்லை.

இது தலைவற்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

(இ - ள்) ஓரையும் நாளுந் துறந்த ஒழுக்கம் - தீய இராசி யின்கண்ணுந் தீய நாளின்கண்ணுங் கூட்டத்தைத் துறந்த ஒழுக்கம்; கிழவோற்கு மறைந்த ஒழுக்கத்து இல்லை - தலைவற்குக் களவொழுக்கத்தின்கண் இல்லை; எனவே கற்பின்கணுள (எ - று).

ஒழுக்கமாவது சீலமாதலிற் சீலங்காரணத்தால் துறப்பது தீதாகிய இராசியும் நாளுமென்பது பெற்றும். நாளாவது அவ்விராசி மண்டில முழுவதும். கிழத்தி துறந்த ஒழுக்கம் முந்நாளல்லதென (122) முற்கூறிற்று. இதனன் அன்பு மிகுதி கூறினர். இதற்குப் பிராயச்சித்தம் அந்தணர் முதலிய மூவர்க்கும் உண்மை 'வந்த குற்றம் வழிகெட வொழுகலும்' (தொல். பொ. 146) எனக் கற்பியலிற் கூறுப.

1 'கிழவற் கில்லை' எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

(வி - ரை) என்றதனுல் ஆண்டு அறத்தின் வழுவினனல்லன் தலைவி மாட்டுத் தலையளிகுறைதலான் என விளக்கங் கூறுவர் இளம்பூரணர்.

இந்நூற்பாவில் அந்தணர் முதலிய மூவருமே இவ்வாறு தலைப் படுவர் என்றற்கு யாதொரு இடனும் இன்று. வந்த குற்றம் வழி கெட ஒழுகல் என்பது இதற்குரிய பிராயச் சித்தமுமன்று. இவ் வாறுரைப்பனவெல்லாம் ஆசிரியர் கருத்தொடுபட்டனவல்ல. (44)

தலைவனின் ஆண்மைச் சிறப்பு.

136. ஆறின தருமையு மழிவு மச்சமும்
ஊறு முளப்பட [1]அதனோ ரன்ன.

இதுவுந் தலைவற்கு இல்லன கூறுகின்றது.

(இ - ள்.) உ ளப்பட - நிலவும் இருளும் பகைவரும் போல் வனபற்றிச் செலவழுங்குதல் உளப்பட; ஆறினது அருமையும் - நெறியினது அருமை நினைந்து கூட்ட நிகழ்ந்தவழிக் கூறுதலும்; அழிவும் - குறைந்த மனத்தனாதலும்; அச்சமும் - பாம்பும் விலங்கும் போல்வன நலியுமென்று அஞ்சுதலும்; ஊறும் - அக்கருமத்திற்கு இடையூறு உளவாங்கொலென்று அழுங்குதலும்; அதனோர் அன்ன கிழவற்கு இல்லை (எ - று).

கிழவற்கில்லையெனவே கிழத்திக்குந் தோழிக்கும் உளவாயிற்று. அவை முற்காட்டியவற்றுட் காண்க.

(வி - ரை) நெறியினது அருமையும் மனன் அழிவும் அஞ்சு தலும் இடையூறும் தலைவன் மாட்டு நிகழா என இந்நூற்பாவிற்கு ஆற்ருெழுக்காகப் பொருள் கொள்வர் இளம்பூரணர். (45)

தந்தையும் தன்னையும் களவு உணருமாறு

137. தந்தையுந் தன்னையு முன்னத்தின் உணர்ப.

இது தந்தையும் தன்னையும் களவொழுக்கம் உணருமாறு கூறுகின்றது.

(இ - ள்) தந்தையுந் தன்னையும் ஒருவர் கூறக்கொள்ளாது உய்த்துக்கொண்டுணர்வர் (எ - று).

---

1. அதனோரற்றே - எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

நற்ருய் அறத்தொடு நின்ற வழியும்,

"இருவர்கண் குற்றமும் இல்லையால் என்று
தெருமந்து சாய்த்தார் தலை." (கலி. 39)

என்றலின், முன்னர் நிகழ்ந்த வெகுட்சி நீங்கி உய்த்துக்கொண்டு உணர்ந்தாராயிற்று. (46)

## நற்ருய் அறத்தொடு நிற்குமாறு

## 138. தாய்அறி வுறுதல் செவிலியோ டொக்கும்.

இது தந்தை தன்னைக்கு நற்ருய் களவொழுக்கம் உணர்த்து மாறு கூறுகின்றது.

(இ - ள்.) தாய் அறிவுறுதல் - நற்ருய் களவொழுக்கம் உண் டென்று அறிந்த அறிவு தந்தைக்குந் தன்னைக்குஞ் சென்று உறுந் தன்மை; செவிலியோடு ஒக்கும் - செவிலி நற்ருய்க்கு அறத்தொடு நின்று உணர்த்திய தன்மையோடு ஒக்கும் (எ - று).

என்றது, செவிலி நற்ருய்க்கு அறத்தொடு நின்ருற்போல, நற்ருயுந் தந்தைக்குந் தன்னைக்கும் அறத்தொடு நிற்கும் என்ற வாருயிற்று. அது,

"எனவாங்கு, அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
என்னையர்க்கு உய்த்துரைத்தாள் யாய்." (கலி. 39)

என்பதனுன் உணர்க.

இனி இதற்கு நற்ருயுஞ் செவிலி உணர்ந்தாற்போல உணரு மென்று பொருள் கூறில் 'தாய்க்கும் வரையார்' (தொல். பொ.116) என்னுஞ் சூத்திரம் வேண்டாவாம்.

(வி - ரை) இங்கு மறுக்கப்படும் உரை இளம்பூரணருடைய தாம். செவிலி கவலுவது போல நற்ருய் கவலுவதன்றித் தந்தை யும் தன்னையன்மாரும் போல வெகுளள் இலள் என இளம்பூரணர் பொருள் காண்பர். தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்ப அவள் உணருமாறு போல, நற்ருயும் செவிலி அறத்தொடு நிற்ப உணர்வள் என உரை காண்பது பொருத்தமுடைத்தாம். (47)

### களவு வெளிப்படுத்தற்கு உரியன் தலைவன்

139. அம்பலு மலருங் களவுவெளிப் படுத்தலின்
அங்கதன் முதல்வன் கிழவ னாகும்.

இது களவு வெளிப்படுத்தற்கு நிமித்தமாவான் தலைமகனென் கின்றது.

(இ - ள்.) அம்பலும் அலருங் களவு வெளிப்படுத்தலின் - முகிழ்த்தலும் பலரறியச் சொல் நிகழ்த்தலுங் களவொழுக்கத்தினை வெளிப்படுத்தலான்; அங்கதன் முதல்வன் கிழவன் ஆகும் - அவ்விடத்து அவ்வெளிப்படை நிகழ்த்துதற்கு நிமித்தமாயினான் தலைமகனும் (எ - று).

தலைவனை அறிந்தபின் அல்லது முற்கூறிய ஐயம் நிகழாமையின் தலைவி வருத்தம் நிமித்தமாகா; ஆண்டு ஐயம் நிகழ்தலன்றித் துணிவு தோன்றாமையின். வரைவு நீட்டிப்போனுந், தலைவி தமர்க்குக் கூறி வெளிப்படுப்போனுந் தலைவனே என்றுணர்க. அது,

"நீரொலித் தன்ன பேஎர்
அலர்நமக் கொழிய அழப்பிரிந் தோரே." (அகம். 211)

எனவும்,

"நெறியறி செறிகுறி புரிதிரிபு அறியா
வறிவனை முந்துறீஇ" (கலி. 39)

என்றாற்போல வருவனவும் பிறவும் வெளிப்படையாமாற்றாற் கண்டுணர்க.

(வி - ரை) இவ்வுரை முழுமையாக இளம்பூரணர் உரையைத் தழுவியதாகும். அம்பல் என்பது முகிழ்த்தல். அஃது ஒருவரொருவர் முகக்குறிப்பினால் தோற்றுவித்தல். அலராவது சொல்லுதல் என உரைகாண்பர் இளம்பூரணர். (48)

### வரைவின் வகை

140. வெளிப்பட வரைதல் படாமை வரைதலென்
றாயிரண் டென்ப வரைத லாறே.

(இ - ள்.) வெளிப்பட வரைதல் - முற்கூறியவாற்றானே களவு வெளிப்பட்டபின்னர் வரைந்து கோடல்; படாமை வரைதல் - அக்

களவு வெளிப்படுவதன் முன்னர் வரைந்துகோடல்; என்று ஆ இரண்டு என்ப வரைதல் ஆறே - என்று கூறப்பட்ட அவ்விரண்டே என்று கூறுவர் ஆசிரியர் வரைந்துகொள்ளும் வழியை (எ - று).

"சேயுயர் வெற்பனும் வந்தனன்
பூவெழில் உண்கணும் பொலிகமா இனியே." (கலி. 39)

இது வெளிப்பட்டபின் வரைவு நிகழ்ந்தது.

"கொல்லைப் புனத்த அகில்சுமந்து கற்பாய்ந்து
வானின் அருவி ததும்பக் கவினிய
நாடன் நயனுடையன் என்பதனுன் நீப்பினும்
வாடன் மறந்தன தோள்." (ஐந்திணை, எழு. 2)

இது வெளிப்படாமல் வரைவு நிகழ்ந்தது.

"எம்மனை முந்துறத் தருமோ
தன்மனை உய்க்குமோ யாதவன் குறிப்பே" (அகம். 195)

என்ருற்போல்வன வெளிப்படுவதன்முன்னர்க் கொண்டுதலைக் கழிந்துழிக் கொடுப்போரின்றியுங் கரணம் நிகழ்ந்தமையின், அதுவும் வெளிப்படாமல் வரைந்ததாம்.

(வி - ரை) வாடல் மறந்தன - வாடுதற்குமறந்தன. (49)

வரைந்தபின் பிரியும் பிரிவு

141. வெளிப்படை தானே கற்பினொ டொப்பினும்
ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக
வரையாது பிரிதல் கிழவோற் கில்லை.

இது முதற்கூறிய வரைவு நிகழ்த்தாது பிரியும் இடம் இது வெனவும் பிரியலாகா இடம் இதுவெனவுங் கூறுகின்றது.

(இ - ள்) வெளிப்படைதானே கற்பினொடு ஒப்பினும் - முற் கூறிய வெளிப்படைதானே கற்பினுள் தலைவி உரிமை சிறந்தாங்கு அருமை சிறந்து கற்போடொத்ததாயினும்; ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக - முற்கூறிய ஓதல் பகை தூதென்ற மூன்றும் நிமித்தமாக; வரையாது பிரிதல் கிழவோற்கு இல்லை - வரைவிடை வைத்துப் பிரிதல் தலைமகற்கில்லை. (எ - று).

மூன்றுமென முற்றும்மைகொடாது கூறினமையின், ஏனைப் பிரிவுகளின் வரையாது பிரியப்பெறும் என்றவாறாயிற்று. அவை வரைதற்குப் பொருள்வயிற் பிரிதலும், வேந்தற்குற்றுழிப் பிரிதலுங், காவற்குப் பிரிதலு மென மூன்றுமாம்.

உ - ம்: "பொன்னடர்ந் தன்ன ஒள்ளிணர்ச் செருந்திப்
பன்மலர் வேய்ந்த நலம்பெறு கோதையள்
திணிமணல் அடைகரை அலவ னாட்டி
அசையினள் இருந்த வாய்தொடிக் குறுமகள்
நலஞ்சால் விழுப்பொருள் கலநிறை கொடுப்பினும்
பெறலருங் குரையள் ஆயின் அறந்தெரிந்து
நாமுறை தேஎ மரூஉப்பெயர்ந்து அவனொடு
இருநீர்ச் சேர்ப்பின் உப்புடன் உழந்தும்
பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்
படுத்தனம் பணிந்தன மடுத்தனம் இருந்தபின்
தருகுவன் கொல்லோ தானே விரிதிரைக்
கண்டிரண் முத்தம் கொண்டு ஞாங்கர்த்
தேனிமிர் தண்கரைப் பகுக்கும்
கானலம் பெருந்துறைப் பரதவன் நமக்கே."

(அகம். 280)

இதனுள் ஈண்டுள்ள பொருள் கொடுத்தாற் பெறல் அரிய ளாயின் தன்னை வழிபட்டால் தந்தை தருவனோ? அது நமக்கரி தாகலின் இன்னும் பொருள் நாம் மிகத் தேடிவந்து வரைதுமெனப் பொருள்வயிற்பிரியக் கருதியவாறு காண்க.

"பூங்கொடி மருங்குல் பொலம்பூ ணோயே
வேந்து வினைமுடித்து வந்தனர்
காந்தண் மெல்விரல் கவையினை நினைமே."

இது வேந்தற்குற்றுழிப் பிரிந்தான் வரைவு மலிந்தமை தோழி கூறியது. ஏனைய வந்துழிக் காண்க.

ஓதுதற்கு ஏவுவார் இருமுது குரவராதலின், அவர் வரையாமற் பிரிகவென்றார். பகைவென்று திறைகோடற்குப் பிரியுங்கால்,

அன்புறுகிழத்தி துன்புற்றிருப்ப வரையாது பிரிதலின்று. இது தூதிற்கும் ஒக்கும்.

மறைவெளிப்படுதல் (499) கற்பென்று செய்யுளியலுட் கூறு தலின், இதனை இவ்வோத்தின் இறுதிக்கண் வைத்தார். கற்பினோ டொப்பினும் பிரிவின்றெனவே, கற்பிற்காயிற் பிரிவுவரைவின் றாயிற்று.

(வி - ரை) இவ்வுரை இளம்பூரணர் உரையை முழுமையாகத் தழுவியதாகும்.

அடர்ந்தன்ன - நெருங்கினாற்போல, அசையினள் இருந்த - களைப்புற்றிருந்த, பெறலருங்குரையள் - பெறுதற்கு அரியள், நாம் உரை தேஎம் - அச்சம் பொருந்திய தேயத்தின்கண், மரூஉ - மருவி, படுத்தனம் - உப்பையும் மீனையும் உளவாக்கியும்.

கவையினை நினைமே - அகப் படுத்துதற்கு நினையும்.

---

# 4. கற்பியல்

## பொருளமைப்பு

இல்வாழ்க்கைக்கு முன் நிகழ்வது களவொழுக்கமாகும். களவொழுக்கத்தின் பின் தலைவனும் தலைவியும் வாழ்வியல் அமைத்துக் கொண்டு பலரும் அறியத் திருமணம் செய்து கொண்டு வாழ்வது கற்பொழுக்கமாகும்.

கொண்டானிற் சிறந்த தெய்வம் இல்லை எனவும், அவனை இன்னவாறு வழிபடுக எனவும் இருமுது குரவரால் கற்பித்தலானும், அந்தணர், சான்றோர், அருந்தவத்தோர் ஆகியோரிடத்து ஒழுகும் ஒழுக்கத்தைத் தலைமகன் கற்பித்தலானும்; தமிழ் மறையிடத்தும் அதன் செயல் முறையிடத்தும் விரிக்கப்பட்ட ஒழுகலாறுகளின் வழிக்குத் தம்மைக் கற்பித்துக்கொண்டு, தம்மை உளப்படுத்திக் கொண்டு, தலைவனும் தலைவியும் அவ்வாழ்வியல் நடத்துதலானும், கொண்ட கொழுநனை இன்னவாறு பாதுகாப்பாய் என்றும் அவரிடத்து நீ இன்னவாறு நடந்து கொள்ள வேண்டும் என்றும் மணவினைச் சடங்கின் போது கற்பிக்கப்படுதலானும் இவ்வொழு கலாறு கற்பெனப் பெயர் பெறுவதாயிற்று. கற்பெனப் படுவது கொள்ளுதற்குரிய தலைவன் மணவினைச் சடங்கோடு கூடத் தலைவியை அவர் பெற்றோர் கொடுப்பக் கொள்வதாகும்.

தலைவியின் தமர் கொடுப்பக் கொள்ளாது, தலைவியை உடன் போக்காக அழைத்துச்செல்லுமிடத்து ஆண்டு மணவினை நிகழ்தலும் உண்டு. அதுவும் கற்பின்பாற்படும்.

### மணவினைச்சடங்கு அமைந்தவிதம்:

மணவினைச்சடங்கு அந்தணர், அரசர், வணிகர், ஆகிய மூவர்க்கும் முதற்கண் அமைந்திருந்தது. வேளாண் வருணத்தினர் இச்சடங்கு இன்றியே அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றினர். காலப்போக்கில் இவர்களிடத்துப் பொய்யும் குற்றமும் தோன்றிய பின்னர், சான்றோர் இவர்களுக்கும் மணவினைச் சடங்கை உரித் தாக்கி அதன் வழி நிற்கச்செய்தனர்.

தலைவன் கூற்று:

ஒரு குறையுமின்றி மணவினைச்சடங்கு முடிந்தபின் மூன்றிரவும் முயக்கமில்லாது நான்காம் நாள் இரவு தன் மனக்குறை தீர தலைவியிடத்து முயங்கும் காலத்தும், அதன்பின்னர் மகிழ்ச்சி மேலீட்டால் ஏற்படும் நுகர்ச்சிக் கண்ணும், தலைவியின் இல்லற ஒழுகலாற்றைக்கண்டு வியக்குமிடத்தும்,

களவுக்காலத்தில் வழுவி அமைந்த ஒழுகலாறுகளை நினைந்து அவற்றைப் பிறர்க்கு உரைக்குமிடத்தும், இத்தகைய இல்வாழ் வியல் அமைப்பதற்குக் காரணமாக இருந்த கடவுளைத் தோழி ஏற்றுப் போற்று மிடத்தும், வரைந்த காலத்து மூன்றுநாள் கூட்ட மின்மைக்குரிய காரணத்தைத் தலைவி அறியாது வருந்தியபோது அவ்வருத்தத்தை நீக்குமிடத்தும், நஞ்சை நுகரினும் நின் கைப் பட்டது வானோர் அமிழ்தத்தை ஒத்திருக்கிறது என அவள் கொடுக்கும் அடிசிலையும் பூவையும் தான் தீண்டியவிடத்தும், அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் முதலியோரிடத்து ஒழுக வேண்டிய ஒழுகலாற்றைத் தலைவிக்குக் கூறுமிடத்தும், களவுக் காலத்து வணக்கம் செய்தும் இரந்து பின்நின்றும் செய்த பல நிகழ்ச்சிகளை நினைந்து தனித்து உள்ளத்தோடு உசாவுமிடத்தும், களவுக்காலத்து உண்டாகிய குற்றங்கள் விண்ணில் எழுதிய எழுத்துப்போலக் கெடுமாறு, கருமக்கழிவு செய்யுமிடத்தும்,

அவ்வாறு வந்த குற்றம் நினக்கு உளதென்று அழியல் எனவும் எனக்கு உளதென்று அஞ்சல் எனவும் கூறுமிடத்தும், எவ்வாறாயினும் களவுக்காலத்துத்தான் செய்தது குற்றமெனத் தலைவி கருதியவழி அவை அனைத்தும் என் அன்பின் வழிச்செய்தன ஆதலின் குற்றமின்று எனக்கூறுமிடத்தும், தலைவன்கண் உளதாகிய பொறை, கல்வி முதலியவற்றைப் பொருந்தி நிற்கும் கருவைத் தன் வயிற்றகத்தே கொண்டு நிற்கும் பொழுது நிகழ்த்தப்பெறும் சடங்குகள் செய்யுமிடத்தும் தலைவி மகப்பெற்ற காலத்து அவளையும் மகவையும் நோக்கி முகமனுகக் கூறுமிடத்தும், அக்காலத்துச் செய்தற்குரிய சிறப்புச் செய்யுமிடத்தும், ஆற்ருமையால் வருந்தி நிற்கும் தலைமகன் அவள் சீரடி தழுவிப்புணர்ச்சி கருதி இரத்தற் கண்ணும் தலைவனின் உடல் வேறுபாடு கண்டு அவன், பரத்தமை கண்டு

ஊடல் மிகுந்த தலைவியை வேறுபிற பெண்டிரை எடுத்துக் காட்டி ஊடல் உணர்த்துமிடத்தும், பிரிவு நிமித்தமாக வருந்திய தலைவியையும் காமக்கிழத்தியையும் அவ்வருத்தத்தினின்று நீங்குமாறு செய்யு மிடத்தும், தலைவி ஊடல் மிகுந்துழி தலைவன் தனித்ததொரு பக்கத்தில் போய் வருந்துமிடத்தும், தலைவி ஊடல் நீங்கக் கூடுதலுறுமிடத்தும், தலைவன் தன் காம மிகுதியால் வலிந்து சென்று தலைவியைக் கூடுமிடத்தும், தலைவியின் உணர்ப்புவயின் வாரா ஊடலிடத்தும், தலைவியிடத்து நின்னிற் பிரியேன், பிரியின் தரியேன் எனக்கூறிய சொற்களினின்றும் தவறித் தான் பிரிந்த விடத்தும், தலைமகனது பிரிவின்கண் தலைவியையும் உடன்கொண்டு செல்க எனத்தோழி கூறுமிடத்தும், வேற்று நாட்டகத்துத் தான் பிரிந்த காலத்து உறும் துன்பத்திடத்தும், தலைவியைப் பிரிந்து செல்லுங்கால் உறும் இடைச்சுரத்து உருவ வெளிப்பாட்டானும் மனம்வேறு பாட்டானும் மீண்டு வருதலை நினைந்த இடத்தும், தலைவியைப்பிரிந்து மேற்கொண்ட முயற்சியில் தகைமையும் ஆக்கமும் எய்திய இடத்தும், காமக்கிழத்தியும் மனையோளும் வருத்தம் உற்றுக் கூறுமிடத்தும், சொற்களுக்கு மாறு கூறுமிடத்தும் அவ்விருவரையும் பிரிந்ததனால் தான் சென்ற தேயத்தில் தனக்குற்ற துன்பத்தைக் கூறுமிடத்தும், வினைமுடிந்துழி தலைவியின்கோலத்தையும், விருந்தேற்றலையும் காணுமிடத்தும், வினைமுற்றிவந்த தன்னைப் பெண்டிரும் மக்களுமாகிய கேளிர் எதிர் கொண்டு சிறப்பித்த விடத்தும் வாயில்களிடத்தும் தலைமகன் கூற்று நிகழ்த்துவன்.

தலைவி கூற்று:

அந்தணர் முதலிய மூவரும் வேள்வி செய்யுங்கால் தத்தம் மரபிற்கேற்பத் தலைமகளிருள் ஒருத்திக்கு உரிமை கொடுக்குங்கால் அதனைத் தலைவியர் ஏற்றுக்கொள்ளுமிடத்தும், அறமும் பொருளும் காரணமாகத் தலைவன் பிரிந்துறையுங்கால் அப்பிரிவின்கண் தம் வேட்கை மிகுதி பெருகியவிடத்தும், தலைவன் எதிர்ப்பட்ட ஞான்று இன்பமும் அவனைப் பிரிந்த ஞான்று துன்பமும் உளவாகிய விடத்தும், மகப்பெற்ற ஞான்று தன் மெய்யணி காண விரும்பிய தலைவனிடத்து அவன் அதுகாறும் பிரிந்திருந்தமையைக் கூறி வருந்துமிடத்தும், பரத்தையர் மாட்டுப்பிரிந்து வந்த தலைவனிடத்து

தன் நெஞ்சு நெகிழவும் அதனை மீட்டுக்கொண்டு அவனது பரத்தையருள் ஒருத்தியைக் கண்டாள் போல வாயில் மறுத்து அதனால் நயந்தவிடத்தும், பரத்தையைப்பிரிந்த தலைவன் தன்னிடம் பணிந்த மொழிகள் பலவற்றைக் கூற அவற்றை எம் தங்கையர்க்குக் கூறெனக்கூறு மிடத்தும், ஊடல் உள்ளத்தால் தலைவனைத் தன்னிடத்தினின்றும் செல்வாய் என்னுமிடத்தும், காமக்கிழத்தி தன் மனைப் புறத்து விளையாடுகின்ற மகனைத் தழுவிக்கொண்டு இன்புற்றுப்பேச அப்பேச்சின் முடிவில் அவளிடத்துப் பேசும் இடத்தும், தன் இல்லின்கண் தன் மகனிடத்து விளையாடுமிடத்துத் தலைவன் அவ்வழி அவள் அறியாவண்ணம் நின்று தன் ஊடலைப் போக்குமிடத்தும், அவ்வாறு விளையாடும் அமையத்துத் தன் மகன் தானறியாது நிற்கும் தலைவனோடு சேர்வுழி அவனைப் பழிக்கும் இடத்தும், காவல் முதலிய கடமைகளைகூறிப் பிரிந்த தலைவன் அக் கடமையை மேற்கொள்ளாது பரத்தையரோடு கூடிவர அவன் தவறு தன் நெஞ்சைச் சுடுவதாகக் கூறுமிடத்தும், அவ்வாறு தவறு செய்த தலைவன் தன் அடிக்கீழ் வீழ்ந்து பொறுக்க என வேண்ட அதனை எம் தங்கையர் காணின் நன்று எனக்கூறி அவனோடு வேறுபடப் பேசுமிடத்தும், தன் மகன் பரத்தையர் அணிந்த அணிகலன் களுடன் வந்தானாக அது கண்டு தலைவனது பரத்தமையை இணைத்துக் கூறுமிடத்தும், தலைவனை விடத் தன் மகற்குத் தான் சிறந்தவளாகி தலைவனிடத்தும் அவன் விரும்பும் பரத்தையரிடத்தும் செல்லாதவாறு தன் மகனைத் தகைக்குமிடத்தும், அன்றி அம்மகனைத் தனக்கு உரியன் அல்லனாகக் கூறித் தலைவனிடத்து விடுத்தவிடத்தும், தீங்கு பயங்கும் சூளுறவினைத்தலைவன் கூறு மிடத்தும், காமக்கிழத்தியர் தம்மையும் இற்பரத்தையையும் பாராட்டுமிடத்தும், பரத்தையர் பிரிவு முதலாகத்தலைவன் பிரியும் பிரிவுகள் பலவற்றையும் கண்டு தோழி கொடுமை கூறியவழி அதனைத்தன் பெருமைக்கும் கற்பிற்கும் ஏற்குமாறு வெகுளுதலும், மகிழ்தலும், அவனைப் பிரிதலும், மீண்டுமவனை விரும்புதலும் ஆகிய செயல்கள் நிகழ்ந்தவிடத்தும், பாணன் முதலிய வாயில்களோடு பேசுமிடத்தும் தலைவிகூற்று நிகழும்.

களவுக்காலத்து உடன்போகிய தலைவி, கற்புக்காலத்துத் தன் இல்லத்திருந்து தான் முன்பு இடைச்சுரத்துக்கண்ட கருப் பொருள்களையும் அவற்றின் தொழில்களையும் கருதிக்கூறுவள் :

அவ்வாறு கூறுவது தலைவன் தான் எடுத்துக்கொண்ட வினையை அவ்வன்புறு பொருள்களைக் கண்ட விடத்து முடியாது விட்டுவிடு வானோ என்னும் அச்சத்தாலும். தலைவன் செலவு அழுங்குவித்தற்கு வாயில்களைத் துணைக்கோடலும் உண்டு. இன்றியமையாத் தோழி யிடம் தோழி அன்பிலை கொடியை எனத் தலைவனைக்கூற அது கேட்ட தலைவன் வெகுண்ட உள்ளத்தனாகுவனோ என ஐயுற்று அவனது குறிப்பை அறிய வேண்டியும், தனது ஊடல் துனியாய வழி தலைவர்க்கு என்னாகுமோ என அஞ்சிய வழியும் தலைவி தலைவனை அயன்மைப் பட மொழிவள். இவ்வாறு தலைவியும் தோழியும் கூறிய வழித்தன் காம மிகுதியால் அவளிடத்துத் தலைவன் பணி மொழி கூறுதலும் உண்டு. அவ்வாறு அவன் பணி மொழி கூறியவிடத்து அவனிடத்துத் தலைவியும் பணிமொழி கூறுவாள்.

தோழி கூற்று:

தலைவன் தலைவியரின் திருமணம் முடிந்த பின் தலைவன் தன்னைப் பாராட்டிக்கூறுமிடத்தும், களவுக்காலத்து உண்டாய வருத்தம் இப்பொழுது நீங்கியது எனக்கூறுமிடத்தும், தலைவன் தலைவியின் திருமணம் முடித்தற்குக் காரணமாய் இருந்த தெய்வத் திற்குப் பரவுக்கடன் கொடுத்தல் வேண்டும் எனத் தலைவனிடத்துக் கூறுமிடத்தும், தலைவி இல்லறம் நிகழ்த்த தலைவன் அறம், பொருள் செய்தற்கும் இசையும் கூத்துமாகிய இன்பம் நுகர்தற்குமாகத் தலைவியை மறந்து ஒழுகுமிடத்தும், தலைவனின் புறத்தொழுக்கம் கண்டு வேறுபட்ட தலைவியிடத்து அவன் புறத்தொழுக்கம் இல்லா தவன் என்றும் அன்புடையவன் என்றும் கூறுமிடத்தும், பரத்தை யரைப்பிரிந்த தலைவன், தலைவி இருக்குமிடத்திற்குச் செல்லாது புறநகர்க்கண் இருந்துழி அவனை மிகக்கழறுமிடத்தும், அன்றி அவள் வணங்கி அவ்வொழுக்கம் தகாதெனக் கூறுமிடத்தும், பரத்தைய ரோடு பொருந்தி, யாறும் குளனும் காவும் ஆடிவரும் தலைவனி டத்துப் பேசுமிடத்தும், மகன் வாயிலாகக்கொண்டு தலைவன் தலைவி யிடம் போக அவள் மறுத்தவிடத்தும், வெகுட்சி மிகுவுணர்வால் இதுகாறும் நுகர்ந்த தலைவியினது நலத்தைத் தந்து செல் எனத் தலைவனிடத்துக்கூறுமிடத்தும், தலைவன் சொல்லும் சூளுரையின் பொய்மையால் தலைவி வருந்துமிடத்தும், பெரியோர் ஆற்றும்

இல்லறம் பெருந்தகையுடையது எனக்கூறி அதன்மூலம் தலைவன் நடத்தும் இல்லறத்தைக் குறைகூறி அவனைத் திருத்துமிடத்தும், புலவியுள் மூழ்கி நிற்கும் தலைவியின் புலவியை நீக்குமிடத்தும், அதனானும் ஊடல் தீராது தலைவி இருப்பாளாயின் தலைவனிடமாக நின்று அவள் ஊடலைக்கழறி நீக்குமிடத்தும், கற்புக்காலத்து எளியராகி நிற்கும் தலைவன் தலைவியர்க்குக் களவுக்காலத்து அருமையை எடுத்துக்கூறுமிடத்தும், வாயில் வேண்டி வந்த பாணர், கூத்தர், விறலியர் ஆகியோர்க்கு மறுத்தும் நேர்ந்தும் கூறுமிடத்தும், பரத்தையர் வழிப்பட்டுத் தலைவியைக் கைவிட்ட தலைவனை மீண்டும் இல்லறத்தில் படுத்தல் வேண்டி அவனது புறவொழுக்கின் பயனின்மை கூறி அவனைக் கண்ணோட்டம் இன்றி நீக்குமிடத்தும், கற்பின் பிரிவினை நீக்குமிடத்தும், கற்பின் பிரிவு நிகழ்த்தும் தலைவனிடத்து எதிர்காலத்தும் இறந்த காலத்தும் நடக்க இருப்பதும் நடந்ததுமாகிய நிகழ்ச்சியைக் கூறுமிடத்தும், தோழி கூற்று நிகழும். தலைவனின் பரத்தமையைப் போக்குமிடத்தும் அவனது பரத்தமையைக் கண்டு தலைவி சீற்றங்கொள்ளாது பொறுக்கும் எளிமையைக் காணுமிடத்தும் தலைவனைப் பார்த்து நினக்கு அன்பில்லை நீ மிகவும் கொடியை எனக்கூறுமிடத்தும் தோழி கூற்று நிகழும்.

கற்புக்காலத்து ஊடல் உணர்த்திய வழியும் தெளியாது தலைவி ஊடல் கொள்ளும் இடத்தும் களவின்கண் தலைவி செய்தகுறியைத்தான் தவறினும் தலைவனும் புலத்தனும் ஊடலும் கொள்வான். புலத்தல் - உள்ளம் சிறிது வேறுபடுதல். ஊடல் அவ்வேறுபாடுமிக்குச் செயல் வகையிலும் காட்டல். இவ்விடத்தும் தோழி பணிமொழி கூறித் தேற்றுவாள்.

காமக்கிழத்தியர் கூற்று:

தலைவன் தனது முயக்கத்தைத் தலைவியிடத்தும் தன்னிடத்தும் இடையிட்டுச் செய்தலால் வருந்தித் தலைவியிடத்துத் தோன்றும் புலவியிடத்தும், தலைவனும் தலைவியும் வீட்டிடத்தினின்று ஊடியும் கூடியும் செய்த இன்பச்சிறப்பினைக் கேட்டு இகழுமிடத்தும், தலைவனின் புதல்வர் பலரையும் கண்டு மகிழ்ச்சி செய்யுமிடத்தும், தைந்நீராடல் ஆறுஆடல் முதலிய விழாக்களை நிகழ்த்தும் தலைவியின் வேருகிய பிறிதொரு தலைவியைக்கண்டு இவள் தோற்றப்பொலிவு காணின் தலைவன் வரைவன் எனப்பொருது கூறு

யுமே மறந்த தலைவனிடத்து ஊடல் மிகுந்த தலைவியை அவளுக்குத் தாய் போல் பல அறங்களைக்கூறி அவனொடு கூட்டு விக்கும் இடத்தும், இன்னகைப் புதல்வனை எடுத்து அணிகள் பல அணிந்து அவனொடு வாயிலாகப் புக்க இடத்தும், தலைவனிடத்துத் தலைவியொடு ஒத்த தன் தகையைப்பிறர் சிறப்பித்துக்கூறு மிடத்தும், தலைவனொடு யாறும் குளனும் காவும் ஆடி விளையாடு மிடத்தும் காமக்கிழத்தியின் கூற்று நிகழும்.

வாயில்களாவார் கூற்று :

வாயில்களாவார் தோழி, அறிவர், பார்ப்பார், விறலி, பாணன், முதலியோர் ஆவர். இவர்கள் தலைவியின் கற்பொழுக்கத்தையும், அன்பையும், தன் குலத்திற்கேற்றவாறு ஒழுகும் நல்லியல்பினையும், மென்மையான இயல்பினையும், பொறையையும், மறை பிறர் அறியாதவாறு நிகழ்த்தும் நிறையையும், வறுமையும் செல்வமும் கருதாது விருந்தினைப் புரக்கும் மனமகிழ்வினையும், சுற்றம் ஓம்பலை யும், ஆக இன்ன பிற குணங்களையும் தலைவன் விரும்பிக்கேட் குமாறு இவர்கள் கூறுவர். தலைவி எத்துணைப் புலம்பினும் அவளிடத்துத் தலைவனின் கொடுமைகளை வாயில்களாவார் கூறார். தலைவனை நோக்கிப் பிறரைக் கூறுமாறு போலக் கூறுதல் வாயில்கள் அனைவர்க்கும் உரிய செயலாம். வாயில்களாவார் அனைவரும் தலைவன் தலைவியருக்கு மன மகிழ்ச்சிக்குரிய செயல்களையே செய்தற் குரியர். அன்றி, அவர்களிடத்துக் கடுஞ்சொல் கூற நேரின் சிறைப்புறமாகக் கூறக் கடவர். இவையே வாயில்களாவார் கூற்றுரும்.

செவிலி அறிவர் கூற்று :

இறப்பு, நிகழ்வு, எதிர்வு ஆகிய முக்காலத்தும் தத்தம் குலத்திற்கேற்றவாறு நல்லவை உரைத்தலும், அல்லவை கடிதலும் செவிலிக்குரியவாம். தலைவனும் தலைவியும் அறிவரின் ஆணைவழி நிற்பவராதலின் அவரிடத்து இழித்துக் கூறுதலும் அவர்க்குரிய தாகும்.

அலர் தோன்றுதல் :

களவுக்காலத்தும் கற்புக்காலத்தும் தலைவன் தலைவியரின் வாழ் வியலில் அலரெழுதல் இயற்கை. அவ்வலரால் அவ்விருவரிடத்தும்

இன்பம் சிறக்கும். தலைவன் பரத்தையரின் ஆடலும், பாடலும், கண்டும், கேட்டும் அவருடன் புனலாடியும் வரும் இன்பச்சிறப்பின் கண்ணும் இவ்வலர் தோன்றும்.

கூத்தர் கூற்று :

தலைவன் தலைவியருள் சிறந்தார் இவ்வாறு இன்பம் நிகழ்த்துவர் எனக் கூறலும், நும் நுகர்ச்சி அவரினும் மேம்பட்டதெனக்கூறலும், இல்லறச் சிறப்பிற்கு இது இயல்பன்று என்றுனும் இது அன்பின்மை என்றுனும் கூறித் தலைவியின் ஊடலைத்தணித்தலும், இல்லறம் சிறத்தற்குரிய உறுதியைக் கூறுதலும், கூத்தற்குரியவாம். இவை தலைவியிடத்துக் கூறுதற்குரியன. புறத்தொழுக்கம் நிகழ்த்துவது நின்னறிவிற்கு ஏலாது எனக்கூறலும், இக்கழி காமத்தின் இழிவைப் பின்னர் அறிவாய் எனக்கூறுதலும், இக்கழிகாமத்தால் கெட்டவர் இவரென எடுத்துக்காட்டலும், தலைவியது மெய்யில் தொய்யில் எழுதும் முறை இதுவாம் எனக் கூறுதலும் கூத்தற்குரியனவாம். இவை தலைவனிடத்துக் கூறுதற்குரியனவாகும்.

கூத்தரும் பாணரும் :

தலைவன் சேட் புலத்துப் பிரிந்துறைதலைத் தலைவிக்காக நீக்கி அவன் மீளும் நிலையை இவர்கள் கூறுவர்.

இளையோர் :

தலைவன் தலைவியுடனே அன்றித் தானே செல்லுமிடத்து அவன் செல்லும் வழியது பண்பைக் கூறலும், மேற்கொள்ளும் வினையை இவ்வாறு முடித்தல் தக்கது எனத் துணிவாகக் கூறுதலும், இன்னவிடத்துச் சென்று இவ்வாறு செய்து வருகென ஏவிய விடத்து அவ்வாறு செய்து வந்தமை கூறுதலும், தலைவன் ஏவலைத் தாம் கேட்டலும், தலைவனும் தலைவியும் தம்மை வினவாத இடத்தும் அவற்குச் செய்யத்தகுவன கூறுதலும், வழியிடத்துக் கண்ட பொருள்களின் நிமித்தமறிந்து கூறுதலும், வழியிடத்து மாவும் புள்ளும் புணர்ந்து விளையாடுவனவற்றை அவர்க்குக் கூறலும், அவை போல்வன பிறவும் இளையோர்க்குரிய கூற்றுக்களாகும். தலைவன் தலைவியர் ஆகிய இருவரும் கூறிய தொழிலைச்செய்தலும்,

அவருக்குப் பாதுகாவல் செய்தலும், உயர்ந்தோருக்குச் செய்யும் செயல்களும் இவ்விளையர்க்கு உரியவாம்.

தலைவன் பரத்தமை நீங்குமிடம் :

பின்முறை வதுவைப் பெரும்குலக் கிழத்தியைத் தொன்முறை மனைவி எதிர்கொண்ட இடத்தும், தொன்முறை மனைவி புதல்வனை வாயிலாகக் கொண்டு பின்முறை வதுவைப் பெரும்குலக் கிழத்தியிடம் செல்லுமிடத்தும் தலைவனும் இத்தகாத நிலையைக் கண்டு பரத்தமையினின்றும் நீங்குவான்.

தலைவியது பண்பு :

தன் ஊடலினை நீக்கிக் கூடிய காலத்துத் தன் புலவி முழுவதையும் மாற்றிக் கொண்டு இனியேனும் இவ்வாறு ஒழுகுவாயாக என்று தாய் போலத் தலைவனிடத்து அறிவுரை கூறி அவனிடத்துப் பண்டுபோல் இயைந்து ஒழுகலும் தலைவியது பண்பாம். தான் நிகழ்த்துகின்ற இல்லறத்தால் தலைவனுக்கு இழுக்கு நேராமல் பாதுகாத்தல் தலைவியது கடமை எனக்கூறப் படுதலால் தலைவனுக்குரிய பின்முறை வதுவைப் பெருங்குலக் கிழத்தியையும் ஒப்பக் கருதி ஏற்றுக்கோடல் தலைவியது இயல்பாம். தலைவியினிடத்துத் தாய்போலத் தழுவிக் கோடலும், மகன் தாய் உயர்வு தன் உயர்வாகக்கருதிக் கூறுதலும் அல்லாதவிடத்துத் தலைவி தன்னைப்பற்றிப் புகழாள் என்பதாம். தலைவனும் தலைவி யிடத்து வினைவயின் பிரியும் காலத்து அல்லது தன்னைப் புகழ்ந்து கூறமாட்டான். (தலைவன் கூற்றிற்கு எதிர்மொழி பேசுதல் பாங்கற்கும் உண்டு. அவ்வாறு கூறுதல் அருகியே வரும்).

பார்ப்பார்க்குரிய கூற்று :

தலைவனது காம மிகுதியை இழித்துக் கூறலும், அவனைத் தேறுமாறு ஏதுவும் எடுத்துக்காட்டும் கூறலும், தலைவனின், குறிப்பினை எடுத்து மொழிதலும், பசுவின் பால் பயம் குன்று தலானும் குன்றாது கலம் நிறையப் பொழிதலானும் வரும் நிமித்தம் பற்றித் தலைவர்க்கு வரும் நன்மை தீமைகளைக் கூறுதலும் அவன் பிரிந்து செல்லுங்கால் நல் நிமித்தம்பற்றிச் செலவு நன்று எனக் கூறுதலும், தீ நிமித்தம் பற்றிச் செலவைத் தவிர்த்துக் கூறு தலும் போல்வன பார்ப்பார்க்குரிய செயல்களாம்.

தலைவனுக்குரிய மரபு :

பிரிவினால் தலைவி துன்பம் பெறுவள் எனக்கருதியவிடத்தெல்லாம் தலைவன் ஆற்றுமாறு வற்புறுத்திச்செல்வன். அவன் செலவிடை அழுங்குதல் எஞ்ஞான்றும் செல்லாமை அன்று, தலைவியை வற்புறுத்திப் பிரிதற்குரிய இடைக்காலத் தவிர்ச்சியே ஆகும். தலைவன் வினை செய்யுமிடத்துத் தலைவியை நினையான். வினை முடிந்து வெற்றி பெற்ற ஞான்று தலைவியை நினைவன். தலைவிக்குப் பூப்புத் தோன்றிய நாள் முதலாகப் பன்னிரண்டு நாட்களும் தலைவன் அவளிடத்தினின்றும் பிரியான். இறைமை உணர்ந்து வீடு பெறுதற்குரிய கல்வியினைப் பயில மூன்றாண்டுகள் பிரியலாம். வேந்தர்க்கு உற்றுழிப் பிரிவிற்கும் ஏனைப்பிரிவிற்கும் உரிய எல்லை ஓராண்டுக்குள்ளாம். தலைவன் தலைவியொடு தன் பதி யிகந்து ஆறும், குளனும், காவும் ஆடி வருதற்கும் உரியன். தலைவன் வினைவயின் பிரிந்து மீளும் காலத்து இடைசுரத்துத் தங்கான்: காரணம் அவன் மனம்போல் விரைந்து செல்லும் குதிரையை ஊர்தியாக உடையவனாதலின்.

புலநெறி வழக்க மரபு :

தலைவன் தலைவியரோடு பாசறைக்கண் செல்லான்.

துறவறம் :

தலைவனும் தலைவியும் தம் மக்களோடும் சுற்றத்தாரோடும் இல்லறம் நிகழ்த்திய பின் தாம் இதுகாறும் துய்த்த காமமும் இன்பமும் தீதெனத் தோன்றுதலால் அவற்றை விடுத்து வீட்டின்பம் பெறுவதற்கு ஏதுவாகிய துறவறத்தை மேற்கொள்ளுவர். தாம் இதுகாறும் நிகழ்த்திய இல்லறத்தின் பயன் இதுவாம்.

---

# 4. கற்பியல்

கற்பின் இலக்கணம்.

142 கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே.

என்பது சூத்திரம். இவ்வோத்துக் களவு கற்பென்னுங் கைகோளிரண்டினுட் கற்புணர்த்தினமையிற் கற்பியலென்னும் பெயர்த்தாயிற்று. கற்பியல் கற்பினது இயலென விரிக்க. இயல், இலக்கணம். அஃது ஆகுபெயரான் ஓத்திற்குப் பெயராயிற்று.

அது கொண்டானிற் சிறந்த தெய்வம் இன்றெனவும், அவனை இன்னவாறே வழிபடுகவெனவும் இருமுதுகுரவர் கற்பித்தலானும் 'அந்தணர்திறத்துஞ் சான்ேறார் தேஎத்தும், 'ஐயர் பாங்கினும் அமரர்ச்சுட்டியும்' (தொல். பொ. 146) ஒழுகும் ஒழுக்கந் தலைமகன் கற்பித்தலானுங் கற்பாயிற்று. இனித் தலைவனுங் களவின்கண் ஓரையும் நாளுந் தீதென்றதனைத் துறந்தொழுகினாற்போல ஒழுகாது ஓத்தினுங் கரணத்தினும் யாத்த சிறப்பிலக்கணங்களைக் கற்பித்துக்கொண்டு துறவறத்திற் செல்லுந் துணையும் இல்லறம் நிகழ்த்துதலிற் கற்பாயிற்று.

களவு வெளிப்பட்ட பின்னராயினும் அது வெளிப்படாமையாயினும் உள்ளப் புணர்ச்சி நிகழ்ந்தவழியாயினும் வரைதல் அக்களவின் வழியாதலின் மேலதனோடு இயைபுடைத்தாயிற்று.

இச் சூத்திரம் கற்பிற் கெல்லாம் பொது விலக்கணங் கூறுகின்றது.

(இ - ள்.) கற்பு எனப்படுவது - கற்பென்று சிறப்பித்துக் கூறப்படுவது; கரணமொடு புணர - வேள்விச் சடங்கோடே கூட; கொளற்கு உரி மரபிற் கிழவன் - ஒத்த குலத்தோனும் மிக்க குலத்தோனுமாகிக் கொள்ளுதற்குரிய முறைமையினையுடைய தலைவன்; கிழத்தியை - ஒத்த குலத்தாளும் இழிந்த குலத்தாளுமாகிய

தலைவியை; கொடைக்கு உரி மரபினோர் கொடுப்ப – கொடுத்தற் குரிய முறைமையினையுடைய இருமுது குரவர் முதலாயினார் கொடுப்ப; கொள்வது – கோடற்றொழில் (எ–று).

'எனப்படுவது' என்னும் பெயர் 'கொள்வது' என்னும் பெயர்ப் பயனிலை கொண்டது; இது சிறப்புணர்த்துதல் 'அவ்வச்சொல்லிற்கு' (தொல்.சொல்.இடை. 47) என்னுஞ்சூத்திரத்துட் கூறினும். 'கொடுப் போரின்றியும்' (தொல். பொ. 143) என மேல் வருகின்றதாகலின் இக்கற்புச் சிறத்தலிற் சிறந்ததென்றார். இஃது 'என' என்கின்ற எச்சமாதலிற் சொல்லளவே எஞ்சிநின்றது. இதனாற் கரணம் பிழைக்கில் மரணம் பயக்குமென்றார். அத்தொழிலின் நிகழுங்கால் இவளை இன்னவாறு பாதுகாப்பாயெனவும், இவற்கு இன்னவாறே நீ குற்றேவல் செய்தொழுகெனவும் அங்கியங்கடவுள் அறிகரியாக மந்திர வகையாற் கற்பிக்கப்படுதலின் அத்தொழிலைக் கற்பென்றார். தலைவன் பாதுகாவாது பரத்தைமை செய்து ஒழுகினும் பின்னர் அது கைவிட்டு இல்லறமே நிகழ்த்தித் துறவறத்தே செல்வனென் றுணர்க. இக் கற்புக்காரணமாகவே பின்னர் நிகழ்ந்த ஒழுகலா றெல்லாம் நிகழவேண்டுதலின் அவற்றையுங் கற்பென்று அடக் கினார். இருவரும் எதிர்ப்பட்ட ஞான்று தொடங்கி உழுவலன்பால் உரிமை செய்து ஒழுகலிற் கிழவனுங் கிழத்தியும் என்றார். தாயொடு பிறந்தாருந் தன்னையருந் தாயத்தாரும் ஆசானும் முதலியோர் கொடைக்குரியர் என்றற்கு மரபினோர் என்றார்.

உ - ம்: "உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவைப்
பெருஞ்சோற்று அமலை நிற்ப நிரைகால்
தண்பெரும் பந்தர்த் தருமணன் ஞெமிரி
மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
கனையிருள் அகன்ற கவின்பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கள்
கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென
உச்சிக் குடத்தர் புத்தகன் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவு முறைமுறை தரத்தரப்
புதல்வர் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்

கற்பின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோர் பெட்கும் பிணையை ஆகென
நீரொடு சொரிந்த வீரிதழ் அலரி
பல்லிரும் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணம் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர
ஓரில் கூட்டிய உடன்புணர் கங்குல்
கொடும்புறம் வளைஇக் கோடிக் கலிங்கத்து
ஒடுங்கினள் கிடந்த ஓர்புறந் தழீஇ
முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப
அஞ்சினள் உயிர்த்த காலை யாழநின்
நெஞ்சம் படர்ந்தது எஞ்சாது உரையென
இன்னகை இருக்கைப் பின்யான் வினவலின்
செஞ்சூட்டு ஒண்குழை வண்காது துயல்வர
அகமலி உவகையள் ஆகிமுகன் இகுத்து
ஒய்யென இறைஞ்சி யோளே மாவின்
மடங்கொண் மதைஇய நோக்கின்
ஒடுங்கீர் ஓதி மாஅ யோளே.'' (அகம். 86)

இதனுள் வதுவைக்கு ஏற்ற கரணங்கள் நிகழ்ந்தவாறும் தமர் கொடுத்தவாறும் காண்க. சுற்றஞ் சூழ்ந்து நிற்றலானுந் தமர் அறிய மணவறைச் சேறலானுங் களவாற் சுருங்கிநின்ற நாண் சிறந்தமையைப் பின்னர்த் தலைவன் வினவ அவள் மறு மொழி கொடாது நின்றமையைத் தலைவன் தோழிக்குக் கூறிய வாறு காண்க. இதனானே இது களவின்வழி நிகழ்ந்த கற் பாயிற்று.

(வி – ரை) இந்நூற்பாவிற்குரிய உரை இளம்பூரணர் உரையை முழுமையாகத் தழுவியதாம். கைகோள் - கொள்ளப்படும் ஒழுக்கம். கற்பியல் - கற்பினது இலக்கணம். ஈண்டு அவ்விலக்கணம் உணர்த்தும் ஓத்திற்குப் பெயராயிற்று. இடத்து நிகழ்பொருள் அவ்இடத்திற்காயது தானியாகு பெயராம்.

ஐயர் பாங்கினும் - முனிவர் திறத்தும், ஓரை - இராசி, நாள் - விண்மீன் (நட்சத்திரம்). ஓரையும் நாளும் தீதென்றதனை - தலைவி

யொடு கூடுதற்கு இன்ன இராசியும் இன்ன நட்சத்திரமும் தீது என நூல்கள் கூறியிருப்பவற்றைத் துறந்து. ஒழுகினூற் போல - கைவிட்டு அன்னாளிலும் தலைவியொடு கூடினூற்போல. "மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும், துறந்த ஒழுக்கம் கிழவர்க்கு இல்லை" எனக் களவியலில் கூறியதும் காண்க.

கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தி என்பதற்குக் கொள்ளு தற்குரிய மரபினையுடைய தலைவன் தலைவியை என உரை காண்பதே பொருத்தமாம். ஈண்டுக் குலம் பற்றி உரைத்தற்கு நூற்பாவில் யாதும் இடனின்று.

எனப்படுவது என்பது சிறப்புணர்த்தி வரும் சொல் ஆகும்: ஊரெனப்படுவது உறையூர் என்புழிப் போல. கற்பென்பது குரவர் முதலாயினோர் முன்னின்று கொடுப்பத் தலைவனும் தலைவியும் மணம் செய்து வாழ்வதாகும். கொடுப்போர் இன்றித் தலைவன் தலைவியர் மணம் செய்து வாழ்வதும் கற்பாம். எனினும் முன்னையது சிறத்தலின் கற்பெனப்படுவது என்றூர். என - என்று சொல்ல எனப் பொருள்படுதலின் அச்சொல்லென்னும் சொல் எஞ்சி நின்றது.

கரணம் பிழைக்கில் மரணம் பயக்கும் என்பது உடற்பயிற்சி செய்வார் தம் உடற்கூறுகளை நெறியின்றிப் பயிற்சி செய்வாராயின் இறப்பினைத் தரும் என்னும் பொருளுடையதாகும். மாறுக நச்சினூர்கினியர் கூறியிருப்பது பொருத்தமில் கூற்றேயாகும்,

அங்கியங் கடவுள் - தீக் கடவுள், அறிகரியாக - அறிதற்குரிய சான்றாக, கொடைக்குரி மரபினோர் என்றதனுல் தந்தையும் தாயும் தன்னையரும் மாதுலனும், இவரில்லாத வழிச் சான்றோரும் தெய்வமும் என்று கொள்க என விளக்குவர் இளம்பூரணர்.

தலைப்பெய்த - கூட்டிய, களிமிதவை - குழைதலையுடைய பொங்கல், அமலை - ஆர்ப்பு, ஞெமிரி - பரப்பி, தொடரி - தொங்க விட்டு, கோள்கால் - தீய ஓரை, கொடு - வளைந்த, உரோகிணி என்றலும் ஒன்று. திங்கள் உரோகிணியோடு கூடிய நாள் மண நாளிற்குரிய தெனப்பண்டைச் சான்றோர் கருதினர். "வானோர் மதியம் சகடனைய" எனச் சிலம்பும், "அங்கண் இரு விசும்பு விளங்கத் திங்கள், சகட மண்டிய துகடீர் கூட்டத்துக் கடிநகர்

புனைந்து கடவுள் பேணிப் படுமண முடிவொடு பருஉப்பனை இமிழ, வதுவை மண்ணிய'' என அகநானூறும் கூறுதல் காண்க. மண்டை - நீர் கொள்ளும் கலம், கோடிக்கலிங்கம் - புத்தாடை, பெட்கும் - விரும்பும், மதைஇய நோக்கு - செருக்கிய நோக்கு. (1)

கொடுப்போர் இன்றியும் கரணம் நிகழ்தல்

143. கொடுப்போர் இன்றியுங் கரணம் உண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி.

(இ - ள்) கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே- முற்கூறிய கொடைக்குரிய மரபினோர் கொடுப்பக் கோடலின்றி யுங் கரணம் உண்டாகும்; புணர்ந்து உடன் போகிய காலையான- புணர்ந்து உடன்போகிய காலத்திடத்து (எ - று).

இது புணர்ந்து உடன்போயினோர் ஆண்டுக் கொடுப்போ ரின்றியும் வேள்வி யாசான் காட்டிய சடங்கின் வழியாற் கற்புப் பூண்டு வருவதும் ஆமென்றவாறு. இனி ஆண்டு வரையாது மீண்டுவந்து கொடுப்பக் கோடல் உளதேல் அது மேற்கூறிய தன்கண் அடங்கும். இனிப் போயவழிக் கற்புப் பூண்டலே கரணம் என்பாருமுளர். எனவே கற்பிற்குக் கரணம் ஒருதலை யாயிற்று.

''பறைபடப் பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு
தொன்மூ தாலத்துப் பொதியில் தோன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல
வாயா கின்றே தோழி ஆய்கழல்
செயலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே.'' (குறுந். 15)

இதனுள் 'வாயாகின்று' எனச் செவிலி நற்றாய்க்குக் கூறின மையானும் 'விடலை' யெனப் பாலை நிலத்துத் தலைவன் பெயர் கூறினமையானும் இது கொடுப்போரின்றிக் கரணம் நிகழ்ந்தது ''அருஞ்சுர மிறந்தவென் பெருந்தோள் குறுமகள்'' என்பதும் அது.

(வி – ரை) வேள்வி ஆசான் - மணம் செய்து வைக்கும் ஆசிரியன். போயவழி - உடன் போய விடத்து.

பறை - முரசு, பணிலம் - சங்கு, இறை கொள்பு - தங்குதலை யுடைய. (2)

கரணம் வேளாளர்க்கு உரியவாதல்

144. மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணங்
கீழோர்க் காகிய காலமு முண்டே.

இது முதலூழியில் வேளாளர்க்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

(இ - ள்.) மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம் வேத நூல்தான் அந்தணர் அரசர் வணிகரென்னும் மூவர்க்கும் உரிய வாகக் கூறிய கரணம்; கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டு - அந்தணர் முதலியோர்க்கும் மகட் கொடைக்குரிய வேளாண் மாந்தர்க்குந் தந்திர மந்திர வகையான் உரித்தாகிய காலமும் உள (எ - று).

எனவே, முற்காலத்து நான்கு வருணத்தார்க்குங் கரணம் ஒன்றாய் நிகழ்ந்தது என்பதாம். அஃது இரண்டாம் ஊழி தொடங்கி வேளாளர்க்குத் தவிர்ந்தது என்பதூஉந் தலைச்சங்கத் தாரும் முதனூலாசிரியர் கூறிய முறையே கரணம் ஒன்றாகச் செய்யுள் செய்தார் என்பதூஉங் கூறியவாறாயிற்று. உதாரணம் இக்காலத்து இன்று.

(வி – ரை) வேத நூல் கூறிய கரணம் என விளக்கம் தருதற்கு நூற்பாவில் இடனின்று. தந்திரம் - நூல்.

இதனால் சொல்லியது, முற்காலத்துக் கரணம் பொதுப்பட நிகழ்தலின் எல்லார்க்கும் ஆம் என்பதும், பிற்காலத்து வேளாண் மாந்தர்க்குத் தவிர்ந்ததெனவும் கூறியவாறு போலும், அஃதாமாறு தருமசூத்திரம் வல்லாரைக் கொண்டு உணர்க எனக் கூறுவர் இளம்பூரணர். காலத்தாலும், சீலத்தாலும் அறிவாலும் முதிர்ந்த பெருமக்கள் முன்னின்று கூட்டத் தலைவனும் தலைவியும் அவர்களின் அருளாசியும் அறவுரையும் பெற்று வாழ்க்கை தொடங்குதற்குரிய

சிறப்பு விழாவே திருமண விழாவாகும். இந்நிலை தொன்று தொட்டே இருந்திருத்தல் வேண்டும். இப்பெரு விழாவில் ஆரியர் வழி வந்த சடங்கு முறை இடை புகுந்ததே பிற்காலமாம். பல அரிய செந்தமிழ் நூல்கள் அழிந்து பட்டமையின் தமிழரின் மண முறை தெளிவாக அறிதற்கு இயலாதாயிற்று. அரிய செந்தமிழ் நூல்களின் சிதைவே ஆரியச் சடங்கு இடைபுகக் காரணமாயிற்று. (3)

கரணம் தோன்றியவாறு

145. பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப.

இது வேதத்திற் கரணம் ஒழிய ஆரிடமாகிய கரணம் பிறந்த வாறும் அதற்குக் காரணமுங் கூறுகின்றது.

(இ - ள்.) பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர் - ஆதி ஊழி கழிந்த முறையே அக்காலத்து அந்தந் தொடங்கி இரண்டாம் ஊழி முதலாகப் பொய்யும் வழுவுஞ் சிறந்து தோன்றிய பிற் காலத்தே; ஐயர் யாத்தனர் கரணம் என்ப - இருடிகள் மேலோர் கரணமும் கீழோர் கரணமும் வேறுபடக் காட்டினு ரென்று கூறுவர் (எ - று).

ஈண்டு 'என்ப' (249) என்றது முதனூலாசிரியரையன்று. வட நூலோரைக் கருதியது. பொய்யாவது செய்த ஒன்றனைச் செய்திலே னென்றல்; வழுவாவது சொல்லுதலே அன்றி ஒழுக்கத்து இழுக்கி ஒழுகல். அஃது அரசரும் வாணிகருந் தத்தம் வகையாற் செய்யத் தகுவன செய்யாது சடங்கொப்புமை கருதித் தாமும் அந்தணரோடு தலைமை செய்தொழுகுதலுங் களவொழுக்கத்தின் இழுக்குதல் போல் வனவும் அவர்க்கிழுக்கம். ஏனை வேளாளரும் இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தபின்னர்ப் பொய்யும் வழுவுந் தோன்றி வழுவுதல் அவர்க் கிழுக்கம். இவற்றைக் கண்டு இருடிகள் மேலோர் மூவர்க்கும் வேறு வேறு சடங்கினைக் கட்டிக் கீழோர்க்குங் களவின்றியும் கற்பு நிகழுமெனவுஞ் சடங்கு வேறு வேறு கட்டினுர். எனவே, ஒருவர் கட்டாமல் தாமே தோன்றிய கரணம் வேதநூற்கே உளதென்பது பெற்றும். ஆயின் கந்தருவ வழக்கத்திற்குச் சிறந்த களவு விலக் குண்டதன்றே எனின், ஒருவனையும் ஒருத்தியையும் எதிர்நிறீஇ

'இவளைக் கொள்ள இயைதியோ நீ' எனவும், 'இவற்குக் கொடுப்ப இயைதியோ நீ, எனவும் இருமுதுகுரவர் கேட்டவழி அவர் கரந்த உள்ளத்தான் இயைந்தவழிக் கொடுப்ப வாகலின் அது தானே ஒரு வகையாற் கந்தருவ வழக்கமாம், களவொழுக்கம் நிகழாதாயினும் என்பது, கரணம் யாத்தோர் கருத்தென்பது பெற்றும். இதனானே இயற்கைப் புணர்ச்சிக்கண் மெய்யுறு புணர்ச்சியையும் உள்ளப் புணர்ச்சியென்று கூறி அதன் வழிக் கற்பு நிகழ்ந்ததென்றுங் கூறவும்படும்.

இவ்வாசிரியர் ஆதி ஊழியின் அந்தத்தே இந்நூல் செய்தலின் முதனூலாசிரியர் கூறியவாறே களவு நிகழ்ந்தபின்னர்க் கற்பு நிகழு மாறுங் கூறித் தாம் நூல் செய்கின்ற காலத்துப் பொய்யும் வழுவும் பற்றி இருடிகள் கரணம் யாத்தவாறுங் கூறினர். அக் களவின் வழி நிகழ்ந்த கற்புங் கோடற்கென்று உணர்க.

உ - ம்: ''மைப்பறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணிப்
புள்ளுப்புணர்ந்து இனிய ஆகத்து எள்ளொளி
அங்கண் இருவிசும்பு விளங்கத் திங்கள்
சகட மண்டிய துகடீர் கூட்டத்துக்
கடிநகர் புனைந்து கடவுள் பேணிப்
படுமண முழவொடு பரூஉப்பணை இமிழ
வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்றுப்
பூக்கணும் இமையார் நோக்குபு மறைய
மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை
பழங்கன்று கறித்த பயம்பமல் அறுகைத்
தழங்குகுரல் வானின் தலைப்பெயற்கு ஈன்ற
மண்ணு மணியன்ன மாயிதழ்ப் பாவைத்
தண்ணறு முகையொடு வெண்ணூல் சூட்டித்
தூவுடைப் பொலிந்து மேவரத் துவன்றி
மழைபட் டன்ன மணன்மலி பந்தர்
இழையணி சிறப்பில் பெயர்வியர்ப்பு ஆற்றித்
தமர்நமக்கு ஈத்த தலைநாள் இரவின்
உவர்நீங்கு கற்பினெம் உயிருடம்பு அடுவி
முருங்காக் கலிங்கம் முழுவதும் வளைஇப்

பெரும்புழுச் குற்றநின் பிறைநுதல் பொறிவியர்
உறுவளி ஆற்றச் சிறுவரை திறவென
ஆர்வ நெஞ்சமொடு போர்வை வவ்வலின்
உறைகழி வாளின் உருவுபெயர்ந்து இமைப்ப
மறைதிறன் அறியா ளாகி ஒய்யென
நாணினள் இறைஞ்சி யோளே பேணிப்
பரூஉப்பகை ஆம்பல் குரூஉத்தொடை நீவிச்
சுரும்பிமிர் ஆய்மலா வேய்ந்த
இரும்பல் கூந்தல் இருண்மறை ஒளித்தே" (அகம். 136)

என வரும்.

(வி - ரை) இந்நூற்பாவிற் கமைந்த பாயிரமும் உரையும் நூற்பாவின் வழி நின்று உரைக்கப் பட்டதன்று. நச்சினார்க்கினியர் தமக்குத் தோன்றியவாறு எழுதியதாம்.

அரசரும், வணிகரும் அந்தணரோடு தலைமை செய்தொழுகல் இழுக்கம் என்பதும், இருடிகள் மேலோர் மூவர்க்கும் வேறு வேறு சடங்கும் வேளாளர்க்கு வேறு சடங்குமாகக் கட்டினர் என்பதும், வடநூலார் தம் உட்கிடக்கை விளங்குதற்குரிய இடமாம். இவை யனைத்தும் ஆழ நினைந்து தமிழினம் உய்தி பெறுவது தக்கதாகும்,

இரண்டும் (பொய்யும் வழுவும்) தோன்றுவது இரண்டாம் ஊழியின் கண்ணுதலின், முதலூழியிற் கரணமின்றியே இல் வாழ்க்கை நடந்த தென்பதூம் இவை தோன்றிய பின்னர்க்கரணம் தோன்றிற்று என்பதூஉம் கூறியவாறாயிற்று. பொய்யாவது செய்த தனை மறைத்தல். வழுவாவது செய்ததன் கண் முடிய நில்லாது தப்பிஒழுகுதல். கரணத்தொடு முடிந்த காலையின் அவையிரண்டும் நிகழாவாம் ஆதலாற் கரணம் வேண்டுவதாயிற்று.

மைப்பு – குற்றம், புழுக்கு – இறைச்சி, நெய்க்கனி - நெய் மிகுந்த, புரையோர் - உயர்ந்தோர், புள்ளுப்புணர்ந்து இனியவாக – புள்நிமித்தம் இனியவாக, சகடம் – உரோகிணி, கூட்டத்து – நாள் ஓரை நிமித்தம் முதலாகியன ஒன்று கூடிய நன்னாளில், பரூஉப் பணை – பருத்த முரசு, பயம்பு – பள்ளம், அறுகை – அறுகம்புல், உயிர் உடம்பு அருவி – உயிருக்கு உடம்பாக அடுத்தவள், முருங்கா – கசங்காத, பெரும்புழுக்கு – பெரிய வியர்வை. (4)

## தலைவன் கூற்று நிகழும் இடம்

146. கரணத்தி னமைந்து முடிந்த காலை
நெஞ்சுதலை யவிழ்ந்த புணர்ச்சிக் கண்ணும்
எஞ்சா மகிழ்ச்சி யிறந்துவரு பருவத்தும்
அஞ்ச வந்த உரிமைக் கண்ணும்
நன்னெறிப் படருந் தொன்னலப் பொருளினும்
பெற்ற தேஎத்துப் பெருமையி னிலைஇக்
குற்றஞ் சான்ற பொருளெடுத் துரைப்பினும்
நாமக் காலத் துண்டெனத் தோழி
யேமுறு கடவு ளேத்திய மருங்கினும்
அல்லல் தீர வார்வமொ டளைஇச்
சொல்லுறு பொருளின் கண்ணுஞ் சொல்லென
ஏனது சுவைப்பினு நீகை தொட்டது
வானோ ரமுதம் புரையுமா லெமக்கென
அடிசிலும் பூவுந் [1]தொடுதற் கண்ணும்
அந்தணர் திறத்துஞ் சான்றோர் தேஎத்தும்
அந்தமில் சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினும்
ஒழுக்கங் காட்டிய குறிப்பினும் ஒழுக்கத்துக்
களவினு ணிகழ்ந்த அருமையைப் புலம்பி
அலமர லுள்ளமொ டளவிய விடத்தும்
அந்தரத் தெழுதிய வெழுத்தின் மான
வந்த குற்றம் வழிகெட வொழுகலும்
அழியல் அஞ்சலென் றாயிரு பொருளினுந்
தானவட் பிழைத்த பருவத் தானும்
நோன்மையும் பெருமையு மெய்கொள [2]வருளிய
பன்னல் சான்ற வாயிலொடு பொருந்தித்
தன்னின் ஆகிய தகுதிக் கண்ணும்

1. தொடுத்தற் கண்ணும் 2. அருளிப் - எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

புதல்வற் பயந்த [1]புனிறுசேர் பொழுதின்
நெய்யணி மயக்கம் புரிந்தோ ணேக்கி
ஐயர் பாங்கினு மமரர்ச் சுட்டியுஞ்
செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற் கண்ணும்
பயங்கெழு துணையணை [2]புல்லிய புல்லாது
உயங்குவள் கிடந்த கிழத்தியைக் குறுகிப்
[3]புல்கென முன்னிய நிறையழி பொழுதின்
மெல்லென் சீறடி புல்லிய விரவினும்
[4]உறலருங் குண்மையினூடல் மிகுந்தோளைப்
பிறபிற பெண்டிரிற் பெயர்த்தற் கண்ணும்
பிரிவி னெச்சத்துப் புலம்பிய இருவரைப்
[5]பிரிவின் நீக்கிய பகுதிக் கண்ணும்
நின்றுநனி பிரிவின் அஞ்சிய பையுளுஞ்
சென்றுகை யிகந்துபெயர்த் துள்ளியவழியுங்
காமத்தின் வழியுங் கைவிடி னச்சமும்
தானவள் பிழைத்த நிலையின் கண்ணும்
உடன்சேறல் செய்கையொடு அன்னவைபிறவும்
மடம்பட வந்த தோழிக் கண்ணும்
வேற்றுநாட்டகல்வயின் விழுமத் தானும்
மீட்டுவர வாய்ந்த வகையின் கண்ணும்
அவ்வழிப் பெருகிய சிறப்பின் கண்ணும்
பேரிசை யூர்திப் பாகர் பாங்கினும்
காமக் கிழத்தி மனையோ ளென்றிவர்
ஏமுறு கிளவி சொல்லிய வெதிருஞ்
சென்ற தேஎத் துழப்புநனி விளக்கி
இன்றிச் சென்ற தந்நிலை கிளப்பினும்

1. புனிறுதீர், 2. புல்லிப்புல்லாது, 3. அல்கல், 4. உறலருங் குரைமையின், 5. பரிவு நீக்கிய எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

அருந்தொழின் முடித்த செம்மற் காலை
விருந்தொடு நல்லவை வேண்டற் கண்ணும்
மாலை யேந்திய பெண்டிரு மக்களுங்
கேளி ரொழுக்கத்துப் புகற்சிக் கண்ணும்
[1]ஏனை வாயி லெதிரொடு தொகைஇப்
பண்ணமை பகுதிமுப் பதிஞெரு மூன்றும்
எண்ணருஞ் சிறப்பிற் கிழவோன் மேன.

இது, பார்ப்பார் முதலிய பன்னிருவருங் (501 - 2) கற்பிடத்துக் கூற்றிற்கு உரியராயினும் அவருள் தலைவன் சிறந்தமையின் அவன் கூற்றெல்லாந் தொகுத்துக் களவிற் கூறியாங்கு முற் கூறுகின்றது.

(இ - ள்.) கரணத்தின் அமைந்து முடிந்த காலை - ஆதிக் கரணமும் ஐயர் யாத்த கரணமுமென்னும் இருவகைச் சடங்கானும் ஒரு குறைபாடின்றாய் மூன்று இரவின் முயக்கம் இன்றி ஆன்றோர்க்கு அமைந்த வகையாற் பள்ளிசெய்து ஒழுகி நான்காம் பகலெல்லை முடிந்தகாலத்து.

ஆன்றோராவார், மதியுங் கந்தருவரும் அங்கியும்.

நெஞ்சு தளை அவிழ்ந்த புணர்ச்சிக்கண்ணும் - களவிற் புணர்ச்சிபோலுங் கற்பினும் மூன்று நாளுங் கூட்டமின்மையானும் நிகழ்ந்த மனக்குறை தீரக்கூடிய கூட்டத்தின் கண்ணும்.

அது நாலாம் நாளை யிரவின்கண்ணதாம்.

உ - ம்: "விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்
அரிதுபெறு சிறப்பில் புத்தேள் நாடும்
இரண்டும் தூக்கில் சீர்சா லாவே
பூப்போல் உண்கண் பொன்போன் மேனி
மாண்வரி அல்குல் குறுமகள்
தோண்மாறு படூஉம் வைகலொடு எமக்கே." (குறுந்.101)

இது நெஞ்சு தளையவிழ்ந்த புணர்ச்சி.

---

1. ஏனைய வாயிலோர் எதிரொடு தொகைக்குப் - எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

"முகன்இகுத்து ஒய்யென இறைஞ்சி யோளே"
(அகம். 86)

என முற்காட்டியது கரணத்தின் அமைந்து முடிந்தது.

எஞ்சா மகிழ்ச்சி இறந்துவரு பருவத்தும் – அதன் பின்னர் ஒழியாத மகிழ்ச்சி பலவேறு வகையவாகிய நுகர்ச்சிக்கட் புதிதாக வந்த காலத்தினிடத்தும்.

உ - ம்: "அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு." (குறள்.1110)

என்றது பொருள்களை உண்மையாக உணர்ந்த இன்பத்தை அறியுந்தோறும் அவற்றை முன்னர் இவ்வாறு விளங்க உணராத அறிவின்மையை வேறுபடுத்துக் கண்டாற்போலுஞ் சேயிழை மாட்டுச் செறியுந்தொறுந் தலைத்தலை சிறப்பப்பெறுகின்ற காமத்தை முன்னர் அறியப்பெற்றிலேமென்று வேறுபடுத்தலென்றவாறு.

அஞ்ச வந்த உரிமைக்கண்ணும் – தலைவனும் பிறரும் அஞ்சும் படி தலைவிக்கட் டோன்றிய உரிமைகளிடத்தும்.

அவை இல்லறம் நிகழ்த்துமாறு தன் மனத்தாற் பலவகையாகக் காணலும் பிறர்க்குத் தான் கொடுத்தலுங் கற்புச் சிறத்தலுமாம்.

உ - ம்: "உள்ளத்து உணர்வுடையான் ஓதிய நூலற்றால்
வள்ளன்மை பூண்டான் கண்ஒண் பொருள்—தெள்ளிய
ஆண்மகன் கையில் அயில்வாள் அனைத்தரோ
நாணுடையாள் பெற்ற நலம்." (நாலடி. 39-6)

இதனுள் நலமென்றது இம்மூன்றினையும். தலைவி இல்லறப் பகுதியை நிகழ்த்துமாறு பலவகையாகக் காணும் தன்மை உணர்வுடையோன் ஓதிய நூல் விரியுமாறுபோல விரியாநின்றதெனவும், இவள் கொடைநலம் வள்ளன்மை பூண்டான் பொருளனைத் தெனவும் இவளது கற்புச்சிறப்புப் பிறர்க்கு அச்சஞ் செய்தலின் வாளனைத்தெனவும் தலைவன் அவளுரிமைகளை வியந்து கூறியவாறு காண்க:

நன்னெறிப் படரும் தொல் நலப் பொருளினும் – இல்லறத்திற்கு ஓதிய நெறியின்கண் தலைவி கல்லாமற் பாகம்பட ஒழுகுந் தொன்னலஞ் சான்ற பொருளின் கண்ணும்:

பொருள்வருவாய் இல்லாத காலமும் இல்லற நிகழ்த்துதல் இயல்பாயிருத்தற்குத் தொன்னலமென்றார்.

உ - ம்: "குடநீர்அட்டு உண்ணும் இடுக்கண் பொழுதும்
கடல்நீர் அறஉண்ணும் கேளிர் வரினும்
கடன்நீர்மை கையாறுக் கொள்ளும் மடமொழி
மாதர் மனைமாட்சி யாள்." (நாலடி. 39-2)

இஃது ஒரு குடம் நீராற் சோறமைத்து உண்ணுமாறு மிடிப்பட்ட காலத்தும் மனைக்கு மாட்சிமையுடையாள் கடல் நீரை வற்ற உண்ணுங் கேளிர் வரினும் இல்லற நிகழ்த்துதலைக் கைக்கு நெறியாகக் கொள்ளுமெனத் தலைவன் வியந்து கூறினான்.

பெற்ற தேஎத்துப் பெருமையின் நிலைஇக் குற்றஞ்சான்ற பொருள் எடுத்து உரைப்பினும் – தலைவி அங்ஙனம் உரிமை சான்ற இடத்து அவளைப் பெருமையின்கண்ணே நிறுத்திக் குற்றமமைந்த களவொழுக்கத்தை வழுவியமைந்த பொருளாகக் கேளிர்க்காயினும் பிறர்க்காயினும் உரைப்பினும் :

அது களவொழுக்கத்தையுந் தீய ஒரையுள்ளுந் துறவாது ஒழுகிய குற்றத்தையும் உட்கொண்டும் அதனைத் தீதென்னமற் கூறுதலாம்.

உ - ம்: "நாலாறும் ஆறாய் நனிசிறிதாய் எப்புறனும்
மேலாறு மேலுறை சோரினும்—மேலாய
வல்லாளாய் வாழுமூர் தற்புகழும் மாண்கற்பின்
இல்லாள் அமைந்ததே இல்." (நாலடி. 39-3)

இதனுள் மனைவி அமைந்துநின்ற இல்நிலையே இல்லறமாவதெனவே யாம் முன்னரொழுகிய ஒழுக்கமும் இத்துணை நன்மையாயிற்று என்றானாயிற்று. இதுகுறிப்பெச்சம்.

நாமக்காலத்து உண்டெனத் தோழி ஏமுறு கடவுள் ஏத்திய மருங்கினும் (தோழி நாமக்காலத்து ஏமுறு கடவுள் உண்டென

ஏத்திய மருங்கினும்) — தோழி இன்னது விளையுமென்று அறியாது அஞ்சுதலையுடைய களவுக்காலத்தே யாம் வருந்தாதிருத்தற்குக் காரணமாயதோர் கடவுள் உண்டு எனக் கூறி அதனைப் பெரிதும் ஏத்திய இடத்துத் தலைவன் வதுவைகாறும் ஏதமின்ருகக் காத்த தெய்வம் இன்னும் காக்குமென்று ஏத்துதலும்:

அது,

"குனிமா எருக்கின் குவிமுகிழ்......
தாமரை முகத்தியைத் தந்தபாலே."

என்னுங் குறுநாற்பதில் ஏழுறு கடவுளைத் தலைவன் தானே ஏத்தியது போலாது,

"நேரிழாய் நீயும்நின் கேளும் புணர
வரையுறை தெய்வம் உவப்ப உவந்து
குரவை தழீஇயாம் ஆடக் குரவையுள்
கொண்டு நிலைபாடிக் காண்" (கலி. 39)

எனத் தான் பராய தெய்வத்தினைத் தோழி கற்புக்காலத்துப் பரவுக்கடன் கொடுத்தற்கு ஏத்தியவழித் தலைவனும் ஏத்துதலாம்.

உ-ம்: "அதிரிசை அருவி அருவரைத் தொடுத்த
பல்தேன் இருஅல் அல்குநர்க்கு உதவும்
நுந்தைநல் நாட்டு வெந்திறன் முருகுஎன
நின்னோய்க்கு இயற்றிய வெறிநின் தோழி
என்வயின் நோக்கலின் போலும் பன்னுள்
வருந்திய வருத்தம் தீரநின்
திருந்திழைப் பணைத்தோள் புணர்ந்துவந் ததுவே."

தேன் இருலை அல்குநர்க்கு உதவும் நாடாதலின் நின்நோய்க்கு இயற்றிய வெறி நுமக்குப் பயன்படாது எமக்குப் பயன்தருமென்ருன். என்வயின் நோக்கலின் என்றது, எனக்குப் பயன் கொடுக்கவேண்டுமென்று பராவுதலிற் ருேளைப் புணர்ந்து உவந்தது என்ருன். இது கற்புக்காலத்துப் பரவுக்கடன் கொடுக்கின்ற காலத்துத் தலைவன் கூறியது.

அல்லல் தீர ஆர்வமொடு அளைஇச் சொல்லுறு பொருளின் கண்ணும் - வரைந்த காலத்து மூன்றுநாட் கூட்டமின்மைக்குக்

காரண மென்னென்று தலைவி மனத்து நிகழாநின்ற வருத்தந் தீரும்படி மிக்க வேட்கையோடு கூடியிருந்து வேதஞ்சொல்லுதலுற்ற பொருளின்கண்ணும்: தலைவன் விரித்து விளங்கக்கூறும்.

அது முதனாள் தண்கதிர்ச் செல்வற்கும், இடைநாள் கந்தருவர்க்கும், பின்னாள் அங்கியங் கடவுட்கும் அளித்து நான்காநாள் அங்கியங் கடவுள் எனக்கு நின்னை அளிப்ப யான் நுகரவேண்டிற்று, அங்ஙனம் வேதங் கூறுதலால் எனத்தலைவிக்கு விளங்கக் கூறுதல். உதாரணம் இக்காலத்தினின்று.

சொல்லென ஏனது சுவைப்பினும் நீ கைதொட்டது வானோர் அமுதம் புரையுமால் எமக்கென அடிசிலும் பூவுந்தொடுதற்கண்ணும் – அமுதிற்கு மாறாகிய நஞ்சை நுகரினும் நீ கையால் தீண்டின பொருள் எமக்கு உறுதியைத் தருதலின் தேவர்களுடைய அமிர்தத்தை ஒக்கும் எமக்கெனப் புனைந்துரைத்து இதற்குக் காரணங் கூறென்று அடிசிலும் பூவுந் தலைவி தொடுதலிடத்தும்: கூற்று நிகழும்.

உம்மை இழிவு சிறப்பு.

''வேம்பின் பைங்காயென் தோழி தரினே
தேம்பூங் கட்டி யென்றனிர்'' (குறுந். 196)

எனத் தலைவன் கூற்றினைத் தோழி கொண்டு கூறியவாறு காண்க.

அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும் அந்தமில் சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினும் ஒழுக்கங்காட்டிய குறிப்பினும் – வேட்பித்த ஆசிரியனுங் கற்பித்த ஆசிரியனுமாகிய பார்ப்பார் கண்ணும், முற்ற உணர்ந்து ஐம்பொறியையும் அடக்கியோர் கண்ணும், முடிவில்லாச் சிறப்பினையுடைய தேவர்கள் கண்ணும் ஒழுகும் ஒழுக்கத்தினைத் தான் தொழுதுகாட்டிய குறிப்பின் கண்ணும்:

'பிறர்பிற'ரென்றார் தேவர் மூவரென்பதுபற்றி. தன்னையன்றித் தெய்வந் தொழாதாளை இத் தன்மையோரைத் தொழல் வேண்டு மென்று தொழுது காட்டினான். குறிக்கொளுங் கூற்றால் உரைத்தலிற் குறிப்பினுமென்றார். உதாரணம் வந்துழிக்காண்க.

ஒழுக்கத்துக் களவினுள் நிகழ்ந்த அருமையைப் புலம்பி அலமரல் உள்ளமொடு அளவிய இடத்தும் – வணக்கஞ் செய்தும்

எதிர்மொழியாது வினையவழிப் பிறராற் கூற்று நிகழ்த்தியும் எதிர்ப் பட்டுழி எழுந்தொடுக்கியுந் தான் அக்காலத்து ஒழுகும் ஒழுக்கத் திடத்து முன்னர்க் களவுக்காலத்து நிகழ்ந்த கூட்டத் தருமையைத் தனித்துச் சுழலுதலையுடைய உள்ளத்தோடே உசாவிய இடத்தும் தலைவற்குக் கூற்று நிகழும்.

உதாரணம் வந்துழிக் காண்க. "கவவுக் கடுங்குரையள்" (குறுந். 132) என்பது காட்டுவாரும் உளர்.

அந்தரத்து எழுதிய எழுத்தின் மான வந்த குற்றம் வழிகெட ஒழுகலும் (வந்த குற்றம் அந்தரத்து எழுதிய எழுத்தின் மான வழி கெட ஒழுகுதலும்) - களவுக்காலத்து உண்டாகிய பாவம் ஆகாயத் தெழுதிய எழுத்து வழிகெடுமாறுபோல வழிகெடும்படி பிராயச் சித்தஞ்செய்து ஒழுகுதற்கண்ணும் :

அது முன்புபோலக் குற்றஞ்சான்ற பொருளை வழுவமைத்துக் கொள்ளாது குற்றமென்றே கருதிக் கடிதலாம்.

"பொய்யற்ற கேள்வியால் புரையோரைப் படர்ந்துநீ
மையற்ற படிவத்தால்" (கலி. 15)

என்றவழி 'மையற்ற படிவம்' எனத் தலைவன் கூறியதனைத் தோழி கூறியவாறு காண்க.

அழியல் அஞ்சல் என்று ஆ இரு பொருளினும் – வந்த குற்றம் நினக்கு உளதென்று அழியலெனவும் எனக்குள தென்று அஞ்ச லெனவுஞ் சொல்லப்படும் அவ்விருபொருண்மைக் கண்ணும் :

இவை இரண்டாகக்கொள்ளின் முப்பத்துநான்காமாதலின் இருவர் குற்றமுங் குற்றமென ஒன்றாக்கியது. தெய்வத்தினாதலின் ஏதம் பயவாதென்றான்.

"யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே." (குறுந். 40)

இது நம்மானன்றி நெஞ்சந் தம்மில் தாங் கலத்தலின் தெய்வத்தாள் ஆயிற்றெனத் தெருட்டியது.

தான் அவட் பிழைத்த பருவத்தானும் – அங்ஙனந் தெய்வத்தினுன் ஆயிற்றேனுங் குற்றமேயன்றோ என உட்கொண்ட அவட்கு யான் காதன்மிகுதியாற் புணர்ச்சி வேண்ட என் குறிப்பிற் கேற்ப ஒழுகினையாகலின் நினக்கோர் குற்றமின்றென்று தான் பிழைத்த பருவமுணர்த்தும் இடத்தும் : கூற்று நிகழும்.

உ - ம்: "நகைநீ கேளாய் தோழி தகைபெற
நன்னாள்படராத் தொன்னிலை முயக்கமொடு
நாணிழுக் குற்றமை அறிகுநர் போல
நாம்கண் டனைய நம் கேள்வர்
தாங்கண்டு அனைய நாம்என் றோரே."

இதனுள் நன்னாள் வேண்டுமென்னாது கூடிய கூட்டத்துள்தங்கி நாணுச் சுருங்கி வேட்கை பெருகிய நம்மினும் ஆற்றாராயினர் போல நாங் குறித்துழி வந்தொழுகிய தலைவர் தாங்குறித்தனவே செய்தனமென நமக்குத் தவறின்மை கூறினரெனத் தோழிக்குத் தலைவி கூறியவழித் தலைவன் பிழைப்புக் கூறியவாறு காண்க.

(நோன்மையும் பெருமையும் மெய்கொள அருளிய பன்னல் சான்ற வாயிலொடு பொருந்தித் தன்னின் ஆகிய தகுதிக் கண்ணும்) தன்னின் ஆகிய நோன்மையும் பெருமையும் மெய்கொள – தலைவனன் உளதாகிய பொறையையுங் கல்வி முதலிய பெருமையையும் உடைய மகவைத் தலைவி தன் வயிற்றகத்தே கொள்கையினாலே; பன்னல் சான்ற வாயிலொடு பொருந்தி அருளிய தகுதிக்கண்ணும் – வேதத்தை ஆராய்தல் அமைந்த அந்தணரோடு கூடி இருத்தற்குச் செய்யத்தகுஞ் சடங்குகளைச் செய்த தகுதிப்பாட்டின் கண்ணும்:

'தன்னினாகிய மெய்'-கருப்பம். அவிப்பலிகொள்ளும் அங்கியங்கடவுட்கும் அது கொடுக்குந் தலைவர்க்கும் இடையே நின்று கொடுப்பித்தலின் அந்தணரை வாயிலென்றார்.

"ஆற்றல் சான்ற தாமே அன்றியும்
நோற்றோர் மன்றநம் கேளிர்அவர் தகைமை
வட்டிகைப் படூஉந் திட்டம் ஏய்ப்ப
வரிமயிர் ஒழுகுநின் அவ்வயிறு அருளி
மறைநவில் ஒழுக்கம் செய்தும் என்றனர்
துனிதீர் கிளவிநம் தவத்தினும்
நனிவாய்த் தனவால் முனிவர்தம் சொல்லே."

இதனுள் நந்தலைவரேயன்றிச் சுற்றத்தாரும் நோற்று ஓர் கருப்பந் தங்கிய நினது வயிற்றைக்கண்டு உவந்து அதற்கேற்ற சடங்கு செய்துமென்றா ரெனவும், முற்காலத்து நாங்கேட்ப நமக்குக் கூறிய முனிவர் சொல்லும் உண்மையாயிற்றெனவுங் கூறியவாறு காண்க. தலைவன் கூற்று வந்துழிக் காண்க.

புதல்வற் பயந்த புனிறுசேர் பொழுதின் – அங்ஙனஞ் சிறப் பெய்திய புதல்வனைப் பெற்ற ஈன்றணுமை சேர்ந்த காலத்தே: நெய் அணி மயக்கம் புரிந்தோள் நோக்கி – சுற்றக் குழாத்துடனே வாலாமை வரைதலின்றி எண்ணெயாடும் மயக்கத்தை விரும்பிய தலைவியை முகமனாகக் கூறுதலைக் குறித்து: ஐயர்பாங்கினும் – முனிவர் மாட்டும்: அமரர்ச் சுட்டியும் – தேவர்கள் புதல்வனைப் பாது காத்தலைக் கருதியும்: செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற் கண்ணும் – அக்காலத்துச் செய்யும் பெரிய சிறப்புக்களைக் குறித்த மனத்தோடே சென்று சார்தற்கண்ணும்:

சிறப்பாவன :- பிறந்த புதல்வன் முகங்காண்டலும் ஐம்படை பூட்டலும் பெயரிடுதலும் முதலியனவும், எல்லா முனிவர்க்குந் தேவர்க்கும் அந்தணர்க்குங் கொடுத்தலும்.

சேர்தல் கூறவே, கருப்பம் முதிர்ந்த காலத்துத் தலைவன் பிற ரொடு கூட்டமுண்மையுங் கூறிற்றாம். ஆண்டுத்தோழி கூறுவனவும் 'ஒன்றென முடித்த'லாற் கொள்க.

''வாராய் பாண நகுகம் நேரிழை
கடும்புடைக் கடுஞ்சூல் நங்குடிக்கு உதவி
நெய்யோடு இமைக்கும் ஐயவித் திரள்காழ்
விளங்குநகர் விளங்கக் கிடந்தோள் குறுகிப்
புதல்வன் ஈன்றெனப் பெயர்பெயர்த்து அவ்வரித்
திதலை யல்குண் முதுபெண் டாகித்
துஞ்சுதி யோமெல் அஞ்சில் ஒதிஎனப்
பன்மாண் அகட்டில் குவளை ஒற்றி
உள்ளினென் உறையும் எற்கண்டு மெல்ல
முகைநாண் முறுவல் தோற்றித்
தகைமலர் உண்கண் கைபுதைத் ததுவே.''

(நற்றிணை 370)

இது நெய்யணி மயக்கம்பற்றித் தலைவன் கூறியது.

"நெடுநா ஒண்மணி கடிமனை இரட்டக்
குரையிலைப் போகிய விரவுமணல் பந்தர்ப்
பெரும்பாண் காவல் பூண்டென ஒருசார்த்
திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப
வெறியுற விரிந்த அறுவை மெல்லணைப்
புனிறுநாறு செவிலியொடு புதல்வன் துஞ்ச
ஐயவி அணிந்த நெய்யாட்டு ஈரணிப்
பசுநெய் கூர்ந்த மென்மை யாக்கைச்
சீர்கெழு மடந்தை ஈரிமை பொருந்த
நள்ளென் கங்குல் கள்வன் போல
அகன்றுறை ஊரனும் வந்தனன்
சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே." (நற்றிணை. 40)

இது, முன் வருங்காலத்து வாராது சிறந்தோன் பெயரன் பிறத்தலான் வந்தானெனத் தோழி கூறினள்.

"குவளை மேய்ந்த குறுந்தாள் எருமை
குடநிறை தீம்பால் படூஉம்ஊர
புதல்வனை ஈன்றிவண் நெய்யா டினளே."

இதுவும் அது.

பயங்கெழு துணையணை புல்லிய புல்லாது உயங்குவள் கிடந்த கிழத்தியைக் குறுகிப் புல்கு என முன்னிய நிறையழி பொழுதின் மெல்லென் சீறடி புல்லிய இரவினும் – தலைவி தனது ஆற்றாமை மிகுதியால் தழுவி ஆற்றுதற்குக் குளிர்ந்த பயன் கொடுத்தல் பொருந்திய பல அணைகளைத் தழுவித் தன்னைப் புல்லுதல் பெறாதே வருந்திக் கிடந்த தலைவியை அணுகித் தான் கூடுதலைக் கருதின நிறையழிந்த காலத்தே அவளது மெத்தென்ற சிறிய அடியைத் தீண்டிய இரத்தற்கண்ணும் :

இதனானே மகப்பெறுதற்கு முன்னர் அத்துணை யாற்றாமை எய்திற்றிலளென்றார். இப்பிரிவு காரணத்தால் தலைவனும் நிறையழிவனென்றார்.

"அகன்றுறை யணிபெற" என்னும் மருதக்கலியுள்,

"என்னைநீ செய்யினும் உணர்ந்து ஈவார் இல்வழி
முன்னடிப் பணிந்து எம்மை உணர்த்திய வருதிமன்

நிரைதொடி நல்லவர் துணங்கையுள் தலைக்கொள்ளக்
கரையிடைக் கிழிந்தநின் காழகம்வந்து உரையாக்கால்''
(கலி. 73)

என இதனுட் சீறடிப் புல்லிய இரவினைத் தலைவி கூறியவாறு காண்க. தலைவன் கூற்று வந்துழிக் காண்க.

உறலருங்கு உண்மையின் ஊடல் மிகுத்தோளைப் பிறபிற பெண்டிரிற் பெயர்த்தற்கண்ணும் – தலைவற்குச் சாந்தழி பெருங்(குறியும்) குறிபெற்றார் கூந்தல் துகளும் உண்மையின் அவனைக் கூடுதல் அருமையினாலே ஊடல் மிகுந்த தலைவியைப் பிறபிற பெண்டிர் ஏதுவாக ஊடல் உணர்த்துதலிடத்தும்:

என்றது உலகத்துத் தலைவரொடு கூடுந் தலைவியர் மனையறத்து இவ்வாறொழுகுவரென அவர் ஒழுக்கங் காட்டி அறத்துறைப் படுத் தலாம். மறைவெளிப்படுத்தலுந் தமரிற்பெறுதலும் மலிவும் முறையே கூறிப் பின்னர்ப் புலவி நிகழ்ந்து ஊடலாய் மிகுதலின் 'ஊடல் மிகுத்தோள்' என்றார். இரத்தற் பாலினும் பெண்பால் காட்டிப் பெயர்த்தலிற் 'பிறபிற பெண்டிர்' என்றார்.

''புனம்வளர் பூங்கொடி'' என்னும் மருதக்கலியுள்,

''ஒருத்தி, புலவியால் புல்லாது இருந்தாள் அலவுற்று
வண்டினம் ஆர்ப்ப இடைவிட்டுக் காதலன்
தண்டார் அகலம் புகும்'' (கலி. 92)

எனக் கூறி,

''அனவகை யால்யான் கண்ட கனவுதான்
நனவாகக் காண்டை நறுநுதால் பன்மாணும்
கூடிப் புணர்ந்தீர் பிரியன்மின் நீடிப்
பிரிந்தீர் புணர்தம்மின் என்பன போல
அரும்பவிழ் பூஞ்சினை தோறும் இருங்குயில்
ஆனாது அகவும் பொழுதினால் மேவர
நான்மாடக் கூடன் மகளிரு மைந்தரும்
தேனிமிர் காவில் புணர்ந்திருந்து ஆடுமார்
ஆனா விருப்போடு அணியயர்பு காமற்கு
வேனில் விருந்தெதிர் கொண்டு.'' (கலி. 92)

எனவே, புல்லாதிருந்தாளென்றதனன் ஊடல்மிகுதி தோன்றுவித்து மகளிரும் மைந்தரும் வேனில் விழாச் செய்கின்ருர் நாமும் அது செய்யவேண்டுமென்று கூறியவாறு காண்க.

பிரிவின் எச்சத்துப் புலம்பிய இருவரைப் பிரிவின் நீக்கிய பகுதிக்கண்ணும் - பரத்தையிற் பிரிவினது தவிர்ச்சிக்கண்ணே தனிமையுற்றிருந்த தலைமகனையுந் தலைமகளையுந் தனதருளினலே தானும் பிரிவினெச்சத்துப் புலம்பி நின்ருன் ஒருவன் தலைவிதனைக் கண்டு அருளுதற்கு அப்பிரிவினின்று நீக்கிய கூறுபாட்டின் கண்ணும் :

பிரிந்து வந்துழியல்லது புலத்தல் பிறவாமையின் 'எச்சத்து' என்ருர். உதாரணம் வந்துழிக் காண்க. இதுவும் ஊடற்பகுதியாம்.

நின்று நனி பிரிவின் அஞ்சிய பையுளும் - முன்னில்லாது ஒரு சிறைப் போய் நின்று நீட்டித்துப் பிரிவினல் தலைவன் அஞ்சிய நோயின்கண்ணும் : இது துனி.

"மையற விளங்கிய" என்னும் மருதக்கலியுள்,

"ஏதப்பாடு எண்ணிப் புரிசை வியலுள்ளோர்
கள்வரைக் காணது கண்டேம்என் பார்போலச்
சேய்நின்று செய்யாத சொல்லிச் சினவனின்
ஆணை கடக்கிற்பார் யார்." (கலி. 81)

எனச்சேய் நின்றென்றதனல் [1]துனித்து நின்றவாறுஞ், சினவலென்றதனற் பிரிவு நீட்டித்தவாறும், நின்னணை கடக்கிற்பார் யாரென அஞ்சியவாறுங் கூறியவாறு காண்க.

"பொய்யெல்லாம் ஏற்றித் தவறு தலைப்பெய்து
கையொடு கண்டாய் பிழைத்தேன் அருளினி." (கலி. 95)

என்பதும் அச்சமாதலின் இதன்கண் அடங்கும்.

(சென்று கை இகந்து பெயர்த்து உள்ளிய வழியும்) சென்று - தலைவன் ஆற்ருனைய்த் துனியைத் தீர்த்தற்கு அவளை அணுகச் சென்று; கையிகந்து - அவன் மெய்க்கட் கிடந்த தவறுகண்டு தலைவி ஆற்ருளாய் நீக்கி நிறுத்தலானே :

1 துணித்து நின்றவாறும் என்பதும் பாடம்.

பெயர்த்து - அவன் ஒருவாற்ருன் அவளாற்ருமையைச் சிறிது மீட்கையினுலே ; உள்ளிய வழியும் - அவள் கூடக் கருதிய விடத்தும் : தலைவன் கூற்று நிகழும்.

இதுவுந் துனிதீர்ப்பதோர் முறைமை கூறிற்று.

உதாரணம் :

முற்கூறிய பாட்டுள்,

"அதிர்வில் படிறுஎருக்கி வந்தென் மகன்மேல்
முதிர்பூண் முலைபொருத ஏதிலாள் முச்சி
உதிர்துகள் உக்கநின் ஆடை ஒலிப்ப
எதிர்வளி நின்ருய்நீ செல்;
இனி எல்லாயாம் தீதிலேம் என்று தெளிப்பவும் கைந்நீவி
யாதொன்றும் எங்கண் மறுத்தர இல்லாயின்
மேதக்க எந்தை பெயரனை யாம்கொள்வேந்து
ஆவா விருப்பொடு கன்றியாத் துழிச்செல்லும்
ஆபோல் படர்தக நாம்." (கலி. 81)

எனத் தலைவன் கூறியவாறு காண்க.

காமத்தின் வலியும் - அவள் அது நீத்து நீங்கியவழி முற் கூறியவாறன்றிக் காமஞ் சிறத்தலின் ஆற்ருமைவாயிலாகச் சென்று வலித்துப் புக்கு நெருங்கிக் கூடுமிடத்தும் : தலைவன் கூற்று நிகழும்.

இதுவுந் துனி தீர்ப்பதோர் முறைமை கூறிற்று.

உ - ம்: "யாரிவன் எங்கூந்தல் கொள்வான் இதுவுமோர்
ஊராண்மைக்கு ஒத்த படிறுடைத்து எம்மனை
வாரல்நீ வந்தாங்கே மாறு." (கலி. 89)

என வலிந்து சென்றதனைத் தலைவி கூறியவழி.

"ஏஎ, இவை, ஒருயிர்ப் புள்ளின் இருதலை உள்ளொன்று
போரெதிர்ந் தற்ருப் புலவல்நீ கூறினென்
ஆருயிர் நிற்குமா றியாது." (கலி. 89)

என ஆற்ருமை மிகுதியாற் சென்றமை கூறியவாறு காண்க.

கைவிடின் அச்சமும் - தலைவி தான் உணர்த்தவும் உணராமல் தன்னைக் கைவிட்டுப் பிரியில் தான் அவனை நீங்குதற்கு அஞ்சிய அச்சத்தின்கண்ணும் : தலைவற்குக் கூற்று நிகழும். அஃது உணர்ப்புவயின் வாரா ஊடலாம்.

"எவ்வி இழந்த வறுமையாழ்ப் பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்று
இனைமதி வாழிய நெஞ்சே மனைமரத்து
எல்லுறு மௌவல் நாறும்
பல்லிரும் கூந்தல் யாரளோ நமக்கே" (குறுந். 19)

இதனுள் அவளையின்றி வருந்துகின்ற நெஞ்சே அவள் நமக்கு யாரெனப் புலத்தலன்றி ஆண்டுநின்றும் பெயர்தல் கூறுமையிற் கைவிடின் அச்சமாயிற்று.

தான் அவட் பிழைத்த நிலையின்கண்ணும் – தலைவன் தலைவியைப் பிழைத்த பிரிவின்கண்ணும்:

'பிழைத்த' வென்றார் ஆசிரியர், இயற்கைப்புணர்ச்சி தொடங்கிப் பலகாலும் பிரியேனெனத் தெளிவித்ததனைத் தப்பலின்.

உ-ம்: "அன்பும் மடனும் சாயலும் இயல்பும்
என்பு நெகிழ்க்கும் கிளவியும் பிறவும்
ஒன்றுபடு கொள்கையொடு ஓராங்கு முயங்கி
இன்றே இவணம் ஆகி நாளைப்
புதலிவர் ஆடமைத் தும்பி குயின்ற
அகலா அந்துளை கோடை முகத்தலின்
நீர்க்கியங் கினநிரைப் பின்றை வார்கோல்
ஆய்க்குழல் பாணியின் ஐதுவந்து இசைக்கும்
தேக்கமழ் சோலைய கடறோம் கருஞ்சுரத்து
யாத்த தூணித் தலைதிறந் தவைபோல்
பூத்த இருப்பைக் குழைபொதி குவியிணர்
கழறுளை முத்தில் செந்நிலத்து உதிர
மழைதுளி மறந்த அங்குடிச் சீறூர்ச்
சேக்குவம் கொல்லோ நெஞ்சே பூப்புனை
புயலென ஒலிவரும் தாழிரும் கூந்தல்
செறிதொடி முன்கைநம் காதலி
அறிவனுர் நோக்கமும் புலவியும் நினைந்தே." (அகம். 225)

இது நெஞ்சினுற் பிரியக் கருதி வருந்திக் கூறியது.

"வயங்கு மணிபொருத" என்பதும் அது. (அகம். 167)

(உடன்சேறல் செய்கையொடு அன்ன பிறவும் மடம்பட வந்த தோழிக்கண்ணும்) அன்னவும் பிற - நீ களவில் தேற்றிய தெளிவகப்படுத்தலுந் தீராத் தேற்றமும் பொய்யாம்; செய்கையொடு உடன்சேறல் - அவை பொய்யாகாதபடி செய்கைகளோடே இவளை உடன்கொண்டு செல்க; மடம்பட வந்த தோழிக்கண்ணும் - தன்னறியாமை தோன்றக் கூறிவந்த தோழிக்கண்ணும் : கூற்று நிகழும்.

உடன் கொண்டுபோதல் முறைமையன்றென்று அறியாமற் கூறலின் 'மடம்பட' வென்றார். செய்கைகளாவன தலைவன் 'கைபுனை வல்வில்' நாண் ஊர்ந்தவழி இவள் 'மையில் வாண்முகம் பசப்பூர்' தலும் அவன் புனைமாண் மரீஇய அம்பு' தெரிந்தவழி இவள் 'இனைநோக் குண்கண்ணீர் நில்லா'மையும் பிறவுமாம்.

"பா அலஞ்செவி" என்னும் பாலைக்கலியுள்,

"ஓரிரா வைகலுள் தாமரைப் பொய்கையுள்
நீர்நீத்த மலர்போல நீநீப்பின் வாழ்வாளோ" (கலி.5)

எனவும்,

"அந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே" (கலி.5)

எனவும், உடன்கொண்டு சென்மினெனத் தோழி கூறியது கேட்ட தலைவன் இவளை உடன்கொண்டு போதல் எல்லாவற்றானும் முறைமையன்றென்று தோழிக்குக் கூறுவனவும் நெஞ்சிற்குக் கூறுவனவும் பிறவுங் கொள்க.

"வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்
குள்வி மொய்த்த அழுகற் சின்னீர்
வளையுடைக் கையள் எம்மொடு உணீஇய
வருக தில் அம்ம தானே
அளியளோ அளியள்என் நெஞ்சமர்ந் தோளே."
(குறுந். 56)

இது தோழி கேட்பக் கூறியது.

"நாம்நகை உடையம் நெஞ்சே கடுந்தெறல்
வேனின் நீடிய வானுயர் வழிநாள்
வறுமை கூறிய மன்னீர்ச் சிறுகுளத்து
தொடுகுழி மருங்கில் துவ்வாக் கலங்கல்
கன்றுடை மடப்பிடி கயந்தலை மண்ணிச்
சேறுகொண்டு ஆடிய வேறுபடு வயக்களிறு
செங்கோல் வாலிணர் தயங்கத் தீண்டிச்
சொறிபுற முரிஞ்யு நெறியயன் மராஅத்து
அல்குறு வரிநிழல் அசைஇய நம்மொடு
தான்வரும் என்ப தடமென் தோளி
உறுகண மழவர் உருள்கீண் டிட்ட
ஆறுசென் மாக்கள் சோறுபொதி வெண்குடைக்
கணைவிசைக் கடுவளி எடுத்தலில் துணைசெத்து
வெருளேறு பயிரும் ஆங்கண்
கருமுக முசுவின் கானத் தானே." (அகம். 121)

இது நெஞ்சிற்குக் கூறியது.

வேற்று நாட்டு அகல் வயின் விழுமத்தானும் - அங்ஙனம் வேற்றுநாட்டிற் பிரியுங்காலத்துத் தானுறும் இடும்பையிடத்து; தலைவற்குக் கூற்று நிகழம்.

விழுமமாவன :- பிரியக் கருதியவன் பள்ளியிடத்துக் கனவிற் கூறுவனவும், போவேமோ தவிர்வேமோ என வருந்திக் கூறுவனவும், இவள் நலன் திரியுமென்றலும், பிரியுங்கொலென்று ஐயுற்ற தலைவியை ஐயந்தீரக் கூறலும், நெஞ்சிற்குச் சொல்லி அழுங்குதலும் பிறவுமாம்.

"நெஞ்ச நடுக்குற" (கலி. 24) என்னும் பாலைக்கலியுள் கனவிற் கூறியவாறு காண்க.

"உண்ணு மையின் உயங்கிய மருங்கின்
ஆடாப் படிவத்து ஆன்றோர் போல
வரைசேர் சிறுநெறி நிரைபுடன் செல்லும்
கான யானை கவினழி குன்றம்
இறந்துபொருள் தருதலும் ஆற்ருய் சிறந்த

சில்லைம் கூந்தல் நல்லகம் பொருந்தி
ஒழியின் வறுமை அஞ்சுதி அழிதக
உடைமதி வாழிய நெஞ்சே நிலவென
நெய்கனி நெடுவேல் எஃகிலை இமைக்கும்
மழைமருள் பஃறேன் மாவண் சோழர்
கழைமாய் காவிரிக் கடன்மண்டு பெருந்துறை
இறவொடு வந்து கோதையொடு பெயரும்
பெருங்கட லோதம் போல
ஒன்றில் கொள்ளாய் சென்றுதரு பொருட்கே.''
(அகம். 123)

இது போவேமோ தவிர்வேமோ என்றது.

'' அருவி ஆர்க்கும் பெருவரை அடுக்கத்து
ஆளி நன்மான் வேட்டெழு கோளுகிர்ப்
பூம்பொறி உழுவை தொலைச்சிய வைந்நுதி
ஏந்துவெண் கோட்டு வயக்களிறு இழுக்கும்
துன்னரும் கானம் என்னுய் நீயே
குவளை உண்கண் இவள்ஈண்டு ஒழிய
*வாள்வினைக்கு அகறி யாயின் நின்றொடு
போயின்று கொல்லோ தானே படப்பைக்
கொடுமுள் ஈங்கை நெடுமா வந்தளிர்
நீர்மலி கதற்பெயல் தலைஇய
வாய்நிறம் புரையும்இவண் மாமைக் கவினே.''
(நற்றிணை. 205)

இஃது இவள் நலனழியுமென்று செலவழுங்கியது.

'' தேர்செல அழுங்கத் திருவில் கோலி
ஆர்கலி எழிலி சோர்தொடங் கின்றே
வேந்துவிடு விழுத்தொழில் ஒழிய
யாண்தொடங் கினென் ஆனிற்புறந் தரவே.''
(ஐங்குறு. 428)

இஃது ஐயந் தீர்த்தது.

'' ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்லெனச்
செய்வினை கைம்மிக எண்ணுதி அவ்வினைக்கு
அம்மா அரிவையும் வருமோ
எம்மை உய்த்தியோ உரைத்திசின் நெஞ்சே.'' (குறுந்.63)

இது தலைவியை வருகின்றாளன்றே எனக் கூறிச் செல வழுங்கியது.

மீட்டு வரவு ஆய்ந்த வகையின்கண்ணும் - பிரிந்த தலைவன் இடைச்சுரத்து உருவு வெளிப்பட்டுழியும் மனம் வேறுபட்டுழியும் மீண்டு வருதலை ஆராய்ந்த கூறுபாட்டின்கண்ணும் :

"உழையணந் துண்ட விறைவாங்கு உயர்சினைப்
புல்லரை இரத்திப் பசுங்காய் பொறப்பக்
கல்சேர் சிறுநெறி மல்கத் தாஅம்
பெருங்காடு இறந்தும் எய்தவந் தனவால்
அருஞ்செயல் பொருட்பிணி முன்னி யாமே
சேறு மடந்தை என்றலின் தான்தன்
நெய்தல் உண்கண் பைதல் கூரப்
பின்னிருங் கூந்தன் மறையினள் பெரிதழிந்து
உதியன் மண்டிய ஒலிதலை ஞாட்பின்
இம்மென் பெருங்களத்து இயவர் ஊதும்
ஆம்பலம் குழலின் ஏங்கிக்
கலங்கஞர் உறுவோள் புலம்புகொள் நோக்கே."

(நற்றிணை, 113)

இஃது உருவு வெளிப்பட்டுக் கூறியது.

"ஒன்றுதெரிந்து உரைத்திசின் நெஞ்சே புன்கால்
சிறியிலை வேம்பின் பெரிய கொன்று
கடாஅம் செருக்கிய கடுஞ்சின முன்பில்
களிறுநின்று இறந்த நீரல் ஈரத்துப்
பால்வீ தோன்முலை அகடுநிலஞ் சேர்த்திப்
பசியட முடங்கிய பைங்கண் செந்நாய்
மாயா வேட்டம் போகிய கணவன்
பொய்யா மரபில் பிணவுநினைந்து இரங்கும்
விருந்தின் வெங்காட்டு வருந்துதும் யாமே
ஆள்வினைக்கு அகல்வாம் எனினும்
மீள்வாம் எனினு நீதுணிந் ததுவே." (நற்றிணை, 103)

இது வேறுபட்டு மீட்டுவரவு ஆய்ந்தது.

''ஆள்வழக் கற்ற பாழ்படு நனந்தலை
வெம்முனை அருஞ்சுரம் நீந்தி நம்மொடு
மறுதரு வதுகொல் தானே செறிதொடி
கழிந்துகு நிலைய வாக
ஒழிந்தோள் கொண்டஎன் உரங்கெழு நெஞ்சே.''

(ஐங்குறு. 329)

இது மீளலுறும் நெஞ்சினை நொந்து தலைவன் உழையர்க்கு உரைத்தது.

''நெடுங்கழை முளிய வேனில் நீடிக்
கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின்
வெய்ய வாயின முன்னே இனியே
யொண்ணுதல் அரிவையை உள்ளுதொறும்
தண்ணிய வாயின சுரத்திடை ஆறே.''

(ஐங்குறு. 322)

இஃது இடைச்சுரத்துத் தலைவி குணம் நினைந்து இரங்கியது. இன்னும் 'இரட்டுறமொழித' லென்பதனாற் செய்வினை முற்றி மீண்டு வருங்கால் வருந்தி நெஞ்சொடு கூறுவனவும் பிறவுங் கொள்க. அது,

''என்றுகொல் எய்தும் ஞான்றே சென்ற
வளமலை நாடன் மடமகள்
இளமுலை ஆகத்து இன்னுயிர்ப் புணர்ப்பே''
''கொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் புழுகின்
வில்லோர் தூணி வீங்கப் பெய்த
அப்புநுனை ஏய்ப்ப அரும்பிய இருப்பைச்
செப்படர அன்ன செங்குழை அகந்தோறு
இழுதின் அன்ன தீம்புழல் துய்வாய்
உழுதுகாண் டுளைய வாகி ஆர்கழல்
பாலி வானில் காலொடு பாறித்
துப்பின் அன்ன செங்கோட்டு இயவின்
நெய்த்தோர் மீமிசை நிணத்தில் பரிக்கும்
அத்தம் நண்ணிய அங்குடிச் சீறூர்க்
கொடுநுண் ஞேதி மகளிர் ஓக்கிய

தொடிமாண் உலக்கைத் தூண்டுரல் பாணி
நெடுமால் வரைய குடிஞையொடு இரட்டும்
குன்றுபின் ஒழியப் போகியுரம் துரந்து
ஞாயிறு படினும் ஊர்சேய்த்து எனாது
துணைபரி துரக்கும் துஞ்சாச் செலவின்
எம்மினும் விரைந்துவல் எய்திப் பன்மாண்
ஓங்கிய நல்லில் ஒருசிறை நிலைஇப்
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்
கன்றுபுகு மாலை நின்றோள் எய்திக்
கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை அன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறநசைஇச் சென்றஎன் நெஞ்சே.''

(அகம். 9)

என வரும். இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக.

அவ்வழிப் பெருகிய சிறப்பின்கண்ணும் - பிரிந்தவிடத்துத் தான் பெற்ற பெருக்கம் எய்திய சிறப்பின்கண்ணும் : மன மகிழ்ந்து கூறும்.

சிறப்பாவன பகைவென்று திறை முதலியன கோடலும் பொருள் முடித்தலுந் துறைபோகிய ஓத்தும் பிறவுமாம்.

உதாரணம் : ''கேள்கே டூன்றவுங் கிளைஞ ராரவும்'' (அகம். 93) எனவும், ''தாழிருள் துமிய'' (குறுந். 270) என்பதனுட் ''செய்வினை முடித்த செம்ம லுள்ளமொடு'' எனவும், மனமகிழ்ந்து கூறியவாறு காண்க. ''முன்னியது முடித்தனமாயின்'' என்னும் (169) நற்றிணையுட் பொதுப்படச் சிறப்புங் கூறியவாறு காண்க.

பேரிசை ஊர்திப் பாகர் பாங்கினும் - அச்சிறப்புக்களை எய்திய தலைவன் பெரிய புகழையுடைத்தாகிய தேரையுடைய பாகரிடத்தும்: கூற்று நிகழ்த்தும்.

அவரது சிறப்பு உணர்த்துதற்குப் பாகரெனப் பன்மையாற் கூறினர்.

“இருந்த வேந்தன் அருந்தொழின் முடித்தெனப்
புரிந்த காதலொடு பெருந்தேர் யானும்
ஏறியது அறிந்தது அல்லது வந்த
ஆறுநனி அறிந்தன்றோ இலனே தாஅய
முயற்பறழ் உகளும் முல்லையம் புறவில்
கவைக்கதிர் வரகின் சீறூர் ஆங்கண்
மெல்லியல் அரிவை இல்வயின் நிறீஇ
இழிமின் என்றநின் மொழிமருண் டிசினே
வான்வழங்கு இயற்கை வளிபூட் டினையோ
மான்உரு வாகநின் மனம்பூட் டினையோ
உரைமதி வாழியோ வலவ எனத்தன்
வரைமருள் மார்பின் அளிப்பனன் முயங்கி
மனைக்கொண்டு புக்கனன் நெடுந்தகை
விருந்தேர் பெற்றனள் திருந்திழை யோளே.”
(அகம். 384)

இதனாற் பாகன் சிறப்புக் கூறியவாறு காண்க.

“மறத்தற்கு அரிதாற் பாக பன்னாள்
அறத்தொடு பொருந்திய உலகுதொழில் கொளீஇய
பழமழை பொழிந்த புதுநீர் அவல
நாநவில் பல்கிளை கறங்க நாவுடை
மணிஒலி கேளாள் வாணுதல் அதனால்
ஏகுமின் என்ற இளையர் வல்லே
இல்புக்கு அறியுநர் ஆக மெல்லென
மண்ணாக் கூந்தன் மாசறக் கழீஇச்
சில்போது கொண்டு பல்குரல் அழுத்திய
அந்நிலை புகுதலின் மெய்வருத் துறாஅ
அவிழ்பூ முடியினள் கவைஇய
மடமா அரிவை மகிழ்ந்தயர் நிலையே.” (நற்றிணை, 42)

இது தானுற்ற இன்பத்தினைப் பாகற்குக் கூறியது.

“ஊர்க பாக ஒருவினை கழீஇய” (அகம். 44)

" செல்க தேரே நல்வலம் பெறுந " (அகம். 34; 374)
எனவும் வரும்.

" தயங்கிய களிற்றின்மேல் தகைகாண விடுவதோ
... ... ... ... ...
தாள்வளம் படவென்ற தகைநன்மா மேல்கொண்டு "
(கலி. 31)

என வருவன தலைவி கூற்றுதலின் தலைவன் மீண்டு வருங்காற் பாகற்கே கூறுவனென்றார்.

(காமக்கிழத்தி மனையோள் என்று இவர் ஏமுறு கிளவி சொல்லிய எதிரும்) காமக்கிழத்தி மனையோளென்றிவர் சொல்லிய ஏமுறு கிளவி எதிரும் - இற்பரத்தை தலைவியென்று கூறிய இருவர் சொல்லிய வருத்தமுற்ற கிளவியின் எதிரிடத்தும்: கூற்று நிகழ்த்தும்.

அவை 'அருஞ்சுரத்து வருத்தம் உற்றீரே' எனவும், 'எம்மை மறந்தீரே' எனவுங் கூறுவனவும் பிறவுமாம்.

" எரிகவர்ந்து உண்ட என்றூழ் நீளிடை
அரிய ஆயினும் எளிய அன்றே
அவவுறு நெஞ்சம் கவவுநனி விரும்பிக்
கடுமான் திண்தேர் கடைஇ
நெடுமான் நோக்கிநின் உள்ளியாம் வரவே."
(ஐங்குறு. 360)

இது வருத்தம் உற்றீரே என்பதற்குக் கூறியது.

" தொடங்குவினை தவிரா அசைவில் நோன்றாள்
கிடந்துயிர் மறுகுவது ஆயினும் இடம்படின்
வீழ்களிறு மிசையாப் புலியினும் சிறந்த
தாவில் உள்ளந் தலைத்தலைச் சிறப்பச்
செய்வினைக்கு அகன்ற காலை எஃகுற்று
இருவே றாகிய தெரிதகு வனப்பின்
மாவின நறுவடி போலக் காண்டொறும்
மேவல் தண்டா மகிழ்நோக்கு உண்கண்
நினையாது கழிந்த வைகல் எனையதூஉம்

வாழலென் யான்எனத் தேற்றிப் பன்மாண்
தாழக் கூறிய தகைசால் நன்மொழி
மறத்தனிர் போறிர் எம்மெனச் சிறந்தநின்
எயிறுகெழு துவர்வாய் இன்னகை அழுங்க
வினவ வாஅனுப் புனையிழை கேளினி
வெம்மை தண்டா எரியுகு பறந்தலைக்
கொம்மை வாடிய இயவுள் யானை
நீர்மருங்கு அறியாது தேர்மருங் கோடி
அறுநீர் அம்பியின் நெறிமுதல் உணங்கும்
உள்ளுநர்ப் பனிக்கும் ஊக்கரும் கடத்திடை
எள்ளல் நோனுப் பொருள்தரல் விருப்பொடு
நாணுத்தளை யாக வைகிமாண் வினைக்கு
உடம்பாண்டு ஒழிந்தமை அல்லதை
மடங்கெழு நெஞ்ச நின்னுழை அதுவே.'' (அகம். 29)

இது மறந்தீர்போலும் என்றதற்குக் கூறியது.

'' உள்ளினென் அல்லெனே யானே உள்ளி
நினைத்தனென் அல்லெனே பெரிதே நினைத்து
மருண்டனென் அல்லேனே உலகத்துப் பண்பே
நீடிய மராஅத்த கோடுதோய் மலிர்நிறை
இறைத்துணச் சென்றற் றுஅங்கு
அனைப்பெருங் காமம் ஈண்டுகடைக் கொளவே.''

(குறுந். 99)

'பிறவு' மென்றதனுன் இத்தன்மையனவுங் கொள்க. இவை இருவர்க்கும் பொது. இவற்றைக் காமக்கிழத்தி விரைந்து கூறுமென்றதற்கு அவளை முற்கூறினர்.

சென்ற தேயத்து உழப்பு நனி விளக்கி இன்றிச் சென்ற தம் நிலை கிளப்பினும் - அங்ஙனங் கூறிய இருவர்க்குந் தான் சென்ற தேயத்தில் நேர்ந்த வருத்தத்தை மிகவும் விளங்கக் கூறி நனவினுற் சேறலின்றிக் கனவினுற் கடத்திடைச் சென்ற தம்முடைய நிலையைத் தலைவன் கூறினும் :

உ-ம். "ஒழித்தது பழித்த நெஞ்சமொடு வழிப்படர்ந்து
உள்ளியும் அறிதிரோ எம்மென யாழநின்
முள்ளெயிற்றுத் துவர்வாய் முறுவல் அழுங்க
நோய்முந் துறத்து நொதுமல் மொழியல்நின்
ஆய்நல மறப்பெனோ மற்றே சேணிகந்து
ஒலிகழை பிசைந்த ஞெலிசொரி ஒண்பொறி
படுஞமல் புதையப் பொத்தி நெடுநிலை
முளிபுல் மீமிசை வளிசுழற் றுறுஅக்
காடுகவர் பெருந்தீ ஓடுவயின் ஓடலின்
அதற்கெடுத்து அலறிய சாத்தொடு ஓராங்கு
மதர்புலி வெரீஇய மையல் வேழத்து
இனந்தலை மயங்கிய நனந்தலைப் பெருங்காட்டு
ஞான்றுதோன்று அவிர்சுடர் மான்றுல் பட்டெனக்
கட்படர் ஓதி நிற்படர்ந் துள்ளி
அருஞ்செலவு ஆற்று ஆரிடை ஞெரேர் எனப்
பரந்துபடு பாயல் நவ்வி பட்டென
இலக்குவளை செறியா இகுத்த நோக்கமொடு
நிலங்கிளை நினைவினை நின்ற நிற்கண்டு
இன்னகை இனையம் ஆகவும் எம்வயின்
ஊடல் யாங்குவந்து அன்றென யாழநின்
கோடேந்து புருவமொடு குவவுநுதல் நீவி
நறுங்கதுப்பு உள்ளிய நன்னர் அமயத்து
வறுங்கை காட்டிய வாயல் கனவின்
ஏற்றேக் கற்ற அலமரல்
போற்றாய் ஆகலில் புலத்தியால் எம்மே." (அகம். 39)

இதனுள் வறுங்கை காட்டிய வாயல் கனவினென நனவின்றிச் சென்றவற்றைத் தலைவன் கூறியவாறு காண்க. இதுவும் இருவர்க்குமாம்.

அருந்தொழின் முடித்த செம்மற் காலை விருந்தொடு நல்லவை வேண்டற்கண்ணும் - செயற்கு அரிதாகிய வினையை முடித்த தலைமையை எய்திய காலத்தே தலைவி விருந்தெதிர் கோடலோடே நீராடிக் கோலஞ்செய்தல் முதலியவற்றைக் காண்டல் வேண்டிய இடத்தும்: தலைவன் கூற்றுநிகழ்த்தும்.

உ-ம். "முரம்புதலை மணந்த நிரம்பா இயலின்
ஓங்கித் தோன்றும் உமண்பொலி சிறுகுடிக்
களரிப் புளியில் காய்பசி பெயர்ப்ப
உச்சிக் கொண்ட ஓங்குகுடை வம்பலீர்
முற்றையும் உடையமோ மற்றே பிற்றை
வீழ்மா மணிய புனைநெடும் கூந்தல்
நீர்வார் புள்ளி யாக நனைப்ப
விருந்தயர் விருப்பினள் வருந்தும்
திருந்திழை அரிவைத் தேமொழி நிலையே."
(நற்றிணை, 374)

என இதனுள் விருந்தயர் விருப்பினளென விருந்தொடு நல்லவை வேட்டுக் கூறியவாறு காண்க.

மாலை ஏந்திய பெண்டிரும் மக்களும் கேளிர் ஒழுக்கத்துப் புகற்சிக் கண்ணும் - வினைமுற்றிப் புகுந்த தலைமகனை எதிரேற்றுக் கொள்ளும் மங்கலமரபினர் மாலையேந்திய பெண்டிரும் புதல்வருங் கேளிரும் ஆகலான் அக்கேளிர் செய்யும் எதிர்கோடலொழுக்கத்துக் கண்ணும்; தலைமகன் உள்ளமகிழ்ந்துரைக்கும்.

உம்மை விரிக்க. பெண்டிரும் மக்களுமாகிய கேளி ரென்றுமாம்.

உ-ம்: "திருத்தும் காட்சிப் பெரும்பெயர்க் கற்பின்
நாணுடை அரிவை மாண்நகர் நெடுந்தேர்
எய்த வந்தன்றால் பாக நல்வரவு
இளையர் இசைத்தலின் கிளையோர் எல்லாம்
சேயுயர் நெடுங்கடைத் துவன்றினர் எதிர்மார்
தாயரும் புதல்வரும் தம்முன்பு அறியாக்
கழிபேர் உவகை வழிவழி சிறப்ப
அறம்புரி ஒழுக்கம் காண்கம்
வருந்தின காண்கநின் திருந்துநடை மாவே"

என வரும்.

ஏனை வாயில் எதிரொடு தொகைஇ - சிறந்த மொழியை ஒழிந்துநின்ற வாயில்கட்கு எதிரே கூறுங் கூற்றோடே முற் கூறியவற்றைத் தொகுத்து:

உ-ம்: "நகுகம் வாராய் பாண பகுவாய்
அரிபெய் கிண்கிணி ஆர்ப்பத் தெருவில்
தேர்நடை பயிற்றும் தேமொழிப் புதல்வன்
பூநாறு செவ்வாய் சிதைத்த சாந்தமொடு
காமர் நெஞ்சம் துரப்ப யாம்தன்
முயங்கல் விருப்பொடு குறுகினே மாகப்
பிறைவனப் புற்ற மாசில் திருநுதல்
நாறிரும் கதுப்பின்எம் காதலி வேறுணர்ந்து
வெரூஉம் மான்பிணையின் ஒரீஇ
யாரை யோஎன் றிகந்துநின் றதுவே." (நற்றிணை. 250)

இஃது ஏனைவாயிலாகிய பாணற்கு உணர்ந்தது.

பண்ணமை பகுதி முப்பதினொரு மூன்றும் - ஓதப்பட்ட இவையே இடமாக நல்லறிவுடையோர் ஆண்டாண்டு வேறு வேறுகச் செய்யுள் செய்து கோடற்கு அமைந்துநின்ற கூறு பாட்டை உடையவாகிய முப்பத்துமூன்று துறையும்:

எண்ணருஞ் சிறப்பிற் கிழவோன் மேன - களவுபோல இழிதொழிலின்றி ஆராய்தற்கரிய சிறப்போடுகூடிய தலைவன் கண்ண என்றவாறு.

சிறப்பாவன, வந்தகுற்றம் வழிகெட ஒழுகலும், இல்லறம் நிகழ்த்தலும், பிரிவாற்றுதலும் பிறவுமாம்.

இன்னவிடத்தும் இன்னவிடத்தும் நிகழுங் கூற்றுக்களை வாயிலெதிர் கூறுங் கூற்றேடே தொகுத்துப் பண்ணுதற்கமைந்த பகுதியுடையவாகிய முப்பத்துமூன்று துறையுந் தலைவன்கண் நிகழ்வன என்று முடிக்க. எடுத்துரைப்பினுந் தந்நிலைகிளப்பினும் அக்கூற்றுக்களையும் வாயிலெதிரொடு தொகைஇயென முடிக்க.

இவற்றுட் பண்ணிக்கொள்ளும் பகுதியாவன, யாம் மறைந்து சென்று இவனைக் கண்ணைப்புதைத்தால் தலைநின்றொழுகும் பரத்தையர் பெயர் கூறுவனென்று உட்கொண்டு காமக்கிழத்தியாதல் தலைவியாதல் சென்று கண்புதைத்துழித் தலைவன் கூறுவனவும், பள்ளியிடத்து வந்திருந்து கூறுவனவும், இவள் ஊடற்குக் காரணம் என்னென்று தோழி வினையவழிக் கூறுவனவும், பிரிந்தகாலத்து

இவளை மறந்தவாறென்னென்ற தோழிக்குக் கூறுவனவும், பிறவுமாம்.

உ - ம்: " சிலம்புகமழ் காந்தள் நறுங்குலை அன்ன
நலம்பெறு கையினஎம் கண்புதைத் தோயே
பாயல் இன்துணை யாகிய பணைத்தோள்
தோகை மாட்சிய மடந்தை
நீயலது உளரோஎன் நெஞ்சமர்ந் தோரே"
(ஐங்குறு. 293)

" தாழிருள் துமிய மின்னித் தண்ணென
வீழுறை இனிய சிதறி ஊழில்
கடிப்பிகு முரசின் முழங்கி இடித்திடித்துப்
பெய்தினி வாழியோ பெருவான் யாமே
செய்வினை முடித்த செம்மல் உள்ளமொடு
இவளின் மேவலம் ஆகிக் குவளைக்
குறுந்தாள் நாள்மலர் நாறும்
நறுமென் கூந்தல் மெல்லணை யேமே" (குறுந். 270)

" இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்" (குறள். 1315)

" தன்னை உணர்த்தினும் காயும் பிறர்க்குநீர்
இந்நீரர் ஆகுதிர் என்று" (குறள். 1319)

" எரிகவர்ந்து உண்ட என்றூழ் நீளிடைச்
சிறிதுகண் படுப்பினும் காண்குவென் மன்ற
நள்ளென் கங்குல் நளிமனை நெடுநகர்
வேங்கை வென்ற சுணங்கில்
தேம்பாய் கூந்தன் மாஅ யோளே"

எனவும் வரும். இன்னும் அதனானே ஊடலைவிரும்பிக் கூறுவனவுங் கொள்க.

" ஊடலின் உண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவது அன்றுகொல் என்று" (குறள். 1307)

" ஊடுக மன்னோ ஒளியிழை யாம்இரப்ப
நீடுக மன்னோ இரா" (குறள். 1329)

என வரும். இன்னுங் கற்பியற்கண் தலைவன் கூற்ருய் வேறுபட வருஞ் சான்ருேர் செய்யுட்களெல்லாம் இதனுன் அமைத்துக் கொள்க.

(வி–ரை) ஆதிக் கரணம் - வேதத்தில் கூறப்பட்ட திருமணம் ஐயர் யாத்த கரணம் - முனிவர்களால் அமைக்கப்பட்ட திருமண முறை. திருமணம் ஆனநாள் தொடங்கி முதல் நாளில் மதியத் துக்கும், இரண்டாம் நாள் கந்தர்வர்க்கும், மூன்ரும் நாள் தீக்கட வுட்கும் உரியளாகத் தன் மனைவியை உளப்படுத்தி நான்காம் நாளில் கூட்டம் நிகழ்த்துங்கால் தலைவன் தன் ஆர்வம் மிகத் தலைவியிடம் உரையாடுவன் என் உரை காணுகிருர் நச்சினுர்க் கினியர். ''இதனை அல்லல் தீர...... கண்ணும்'' என வரும் பகுதி யிலும் விளக்கிக் கூறுவர். இவ்வாறு கூறல் இந்நூற்பாவின் அமைப்பிற்கோ, தமிழ் மரபிற்கோ சிறிதும் ஒவ்வாதாம். இவ்வாறு சிறிதும் இயைபற்றதும் பொருத்தமற்றதுமான உரைகளை முற்றக் கடிதல் வேண்டும். கரணத்தினை அமைந்து முடிந்த காலை என்பது ஆசான் புணர்ந்த கரணத்திஞல் வதுவை முடிந்தபின் என்றவாறு.

நெஞ்சுதளை யவிழ்தலாவது - தலைவியைத்தலைவன் கண்ணுற்ற ஞான்று தலைவன் மாட்டு உளதாகிய பெருமையும், உரனும், தலைவி மாட்டு உளதாகிய அச்சமும், நாணும், மடனும் ஏதுவாக இயற் கைப் புணர்ச்சி இடையீடு பட்டுழி வேட்கைத் தணியாது வரைந்து எய்துங்காறும் இருவர் மாட்டும் கட்டுண்டு நின்ற நெஞ்சம் கட்டு விடப்படுதல். இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைவன் அலரறி வுறுக்கப்பட்டு நீங்கி வரைந் தெய்துங்காறும் புணர்ச்சி வேட்கை யாற் செல்கின்ற நெஞ்சினை இருவரும் வேட்கை தோற்ருமல் தளைக்கப்பட்டதனைத் தளை என்றலும் ஒன்று. இவையிரண்டினும் மிகுதி பொருளாகக் கொள்க என விளக்கம் காண்பர் இளம்பூரணர். இயற்கைப் புணர்ச்சி இடையீடு படுதற்கு இருவர் தம் தகைமை யும் காரணம் ஆகலாம், அன்றி அலரும் காரணமாகலாம் எனக் கூறியிருப்பதும் பெரிதும் பாராட்டுதற்குரியதாகும். இத்தொடர்க்கு இவர் கூறியிருக்கும் உரையே ஆசிரியர் கருத்தொடு பட்டதாகும்.

தூக்கின் - ஒப்பிட்டுக்காணின்; தோள்மாறுபடூஉம் வைகல் - புணர்ச்சியால் இன்பமுறும் காலம்.

தலைத்தலை - மேலும் மேலும்.

பாகம்பட - பக்குவப்பட

கையாறு - ஒழுக்க நெறியாக எனப் பொருள் கொள்ளுதல் சிறப்புடைத்து. அறம் பொருள் இன்பங்களை வழாமல் தன் குலத்திற்கு ஏற்ற மனை வாழ்க்கையைத் தலைமகள் நடத்துதற் கண்ணும் எனப் பொருள் காண்பர் இளம்பூரணர்.

நால் ஆறும் ஆறாய் - நான்கு பக்கமும் வழியுடையதாய். மேல் ஆறு - மேல் பக்கத்தில். கூரை உறை சோரினும் - மழை பொழியினும், வல்லாளாய் - திறமையுடையவராய். குற்றம் சான்ற பொருள் - களவுக் காலத்தே உண்மையுணராது வெறியாட்டுச் செய்த குற்றம் என உரை காண்பர் இளம்பூரணர்.

தந்தபாலை - தந்த தெய்வம் : ஊழ்.

கொண்டுநிலை - ஒருவர் கூற்றினை ஒருவர் கொண்டு கூறுவது.

அல்குநர் - தங்குநர்.

இவ்வுரை பொருந்தாமை 'கரணத்தின் அமைந்து ...... புணர்ச்சிக் கண்ணும்' என்ற விடத்துக் கூறப்பட்டது. களவுக் காலத்து வருந்திய வருத்தம் தீரத்தனது காதல் மிகுதி தோன்ற சொல்லுதற் கண்ணும் என உரை காண்பர் இளம்பூரணர். இதுவே பொருத்த முடைத்தாம்.

சொல்லென என்பதனை எமக்கென என்பதற்குப் பின் கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது.

தேம்பூங் கட்டி - இனிய அழகிய வெல்லக் கட்டி. அந்தணர் - அருளாளர்கள். சான்றோர் - அறிவும் குணனும் நிறைந்த அறிஞர்கள். பிறர் பிறர் - காலத்தானும் சீலத்தானும் உயர்ந்தவர்களும் தனக்கும் தன் குடும்பத்திற்கும், நாட்டிற்கும் எல்லாம் நன்றாக்கியவர்களும்.

இவ்வுதாரணம் காட்டுவார் யாரெனத் தெரிந்திலது.

வழிகெட ஒழுகல் - பின்னும் அக்குற்றம் வாராமல் காத்தல் எனப் பொருளுணர்த்தப் பொருந்துவதாம், பிராயச்சித்தம் - கருமக் கழிவு.

மையற்ற படிவம் - குற்றம் தீர்ந்த விரத ஒழுக்கம். அழியல் அஞ்சல் என இயற்கைப் புணர்ச்சிக்கண் கூறிய அவ்விரு பொருளைப் பிழைத்த காலத்தினும்: அஃதாவது புறப்பெண்டிர் மாட்டுப் பிரிந்த விடத்தும் என உரை காண்பர் இளம்பூரணர்.

தலைவி கருவுற்றிருப்ப அது பொழுது அந்தணர்கள் கூடிச் செய்யும் சடங்கின் கண்ணும் தலைமகன் கூற்று நிகழ்த்துவன் என உரை காண்பர் நச்சினார்கினியர். இவ்வாறு உரைகொள்ளுதற் கேற்ற சொற்கிடக்கை இப்பகுதியில் ஏதுமின்று என்பது அறியத் தக்கது. தலைவன் பரத்தைமை கண்டு வருந்தியிருக்கும் தலைவி யிடத்துப் பொறுமையையும், பெருமையையும் கொண்டு இனி ஆற்றுதல் வேண்டும் எனத் தோழியாகிய வாயிலொடு பொருந்தித் தலைவன் கூற்று நிகழ்த்துவன் என உரை காண்பர் இளம்பூரணர் அதுவே பொருத்தமுடைத்தாம்.

வட்டிகைப்படூஉம் திட்டம் ஏய்ப்ப - எழுதுகோலால் வரையறை செய்து எழுதி விட்டாற் போன்ற.

வாலாமை வரைதலின்றி - தூய்மையின்மையை நீக்குதலின்றி.

சேர்தல் கூறவே கருப்பம் முதிர்ந்த காலத்துத் தலைவன் பிறரொடு கூட்டமுண்மையும் கூறிற்றும் எனவரும் தொடர் இயை பில்லாததும் வேண்டாததுமாம்.

கடும்புடைக் கடுஞ்சூல் - சுற்றத்தாரால் பேணப்படும் சிறந்த கருப்பம். ஐயவி - வெண்சிறு கடுகு, பெயர் பெயர்த்து - வேறு பெயர் பெற்று. அது தலைவி என்பதுடன் அன்னை எனவும் பெயர் பெறுதலாம். அகட்டில் - வயிற்றில். குவளை ஒற்றி - குவளை மலரை வைத்து.

இரட்ட - ஒலிக்க.

காழகம் - ஆடை

சாந்தழி பெருங்குறி - சந்தனம் அழியப் பெற்ற பெரிய அடையாளம். குறிபெற்றார் - பரத்தையர்.

புணர் தம்மின் - தம்மில் புணர்வீர்களாக. ஆனது - அமையாது. ஆடுமார் - விளையாட வேண்டி, அயர்பு - அணிந்து.

பிரிவினை எச்சம் - பரத்தையர் பிரிவால் தனிமையுற்று இருக்கும் தலைமக்களைக் கண்டு அருள் கொண்ட ஒருவன் அவர்களை அப்பிரிவினின்றும் நீக்குதற்குப் புலவி வேண்டியிருக்கும் தலைவியிடம் கூற்று நிகழ்த்துவன் எனப் பொருள் காணுகின்றார் நச்சினார்க்கினியர். இங்ஙனம் கூறின் தலைவன் கூற்றின்றிப் பிறனொருவனின் கூற்றாகின்றது. இளம்பூரணர் பிரிவின் நிமித்தமாக வருந்திய மனையாளையும், காமக் கிழத்தியையும் அவ்வருத்தத்தினின்று நீக்கிய பகுதிக் கண் கூற்று நிகழும் எனக் கூறி அஃதாவது பிரியேன் என்றல் என விளக்கமும் காண்பர். இங்ஙனம் கூறின் தலைவனின் கூற்றாகின்றது. இதுவே பொருத்தமுடைத்தாம்.

ஒரு சிறை - ஒரு பக்கம், துனி - ஊடலின் மிக்கது.

வியலுள்ளோர் - ஊர்க் காவலர்.

சென்று இகந்து பெயர்த்து என்பன தலைவன் செயலாகவும் உள்ளுதல் தலைவியின் செயலாகவும் கூறுதல் அத்துணைச் சிறப்பின்றாம். மேற்கூறியவாறினைக் கையிகந்து முன்னொருகால் சென்று மீட்டும் அந்நெறியினைப் போக நினைந்த வழியும் கூற்று நிகழும் என உரை காண்பர் இளம்பூரணர்.

அதிர் வில் - நடுக்கமில்லாது. படிறு எருக்கி - வஞ்சனையாலே வருத்தி. முச்சி - முடியினின்று. கைந்நீவி-கை கடந்து. பொருளினும் காமம் வலியுடைத்து என உட்கொண்ட வழியும் கூற்று நிகழும் என உரை காண்பர் இளம்பூரணர்.

படிறு - கொடுமை, வந்தாங்கே மாறு - வந்தவாறே செல்வாயாக.

ஓருயிர்ப் புள் - இருதலையும் ஒருயிரும் உடைய பறவை. தலைவியைக் கைவிட்ட வழி அவளது உயிர் பொருட்டு அஞ்சுதற் கண்ணும் என உரை காண்பர் இளம்பூரணர்.

எவ்வி - ஒரு வள்ளல், இனை - வருந்துவாயாக. இவணம் - இவ்விடத்து, தூணி - அம்புக்கூடு, கடறு - காடு.

தெளிவு அகப்படுத்துதல் - நின்னில் பிரியேன் பிரியின் ஆற்றேன். பிரியின் அறனல்லது செய்யேனுவன் எனத் தலைவி மனத்துத் தேற்றம் படக் கூறல். தீராத் தேற்றம் - என்றும்

பிரியாமைக்குக் காரணமாகிய சூளுறுதல். கைபுனை வல்வில் எனத் தொடங்கி எழுதப்படும் விளக்கம் கலித் தொகையில் ஏழாவது பாடல் கொண்டு எழுதுவதாகும்.

இளைத்தூண் மிச்சில் - தோன்றி உண்டு எஞ்சிய நீர். குளவி - காட்டு மல்லிகை.

கடுந்தெறல் - மிக்க வறட்சி, துவ்வா - உண்ணுதற்கு. மண்ணி-கழுவி. உரிஞிய - உராய்ந்துகொள்.

உயங்கிய - வாடிய, ஆடாப்படிவம் - அசையாத விரதம். ஒன்றில் கொள்ளாய் - போதல் தவிர்தல் ஆகிய இரண்டில் ஒன்றில் நிலை பெருய்.

பிரிவில் போலி - இந்திர வில் விளைத்து, சோர் தொடங் கின்றே - மழைப் பெய்யத் தொடங்கியது.

உழையணந்து - மான் நிமிர்ந்து. இரத்தி - ஒருவகை மரம்.

பெரிய கொன்று - பெரிய கிளைகளை முறித்து. இறந்த - பெய்து அகன்ற. நீரல் ஈரம் - சிறுநீர்.

மறுதருவது - சுழல்வது.

முளிய - உலர. கல்பக - கற்கள் பிளக்க.

புழுகு - அம்பின் தலையைச் செறிக்கும் குப்பி, இழுது - நெய், புழல் - துளை, குடிஞை - ஆந்தை, பின்னகம் - கூந்தல்.

இருந்த வேந்தன் - பாசறைக்கண் இருந்த வேந்தன். நளிப் பனன் முயங்கி - அன்பு செய்தவனைத் தழுவி.

வறத்தொடு - வறட்சியொடு, நா நவில் பல்கிளை - நாவால் ஒலிக்கும் தவளைக் கூட்டம்.

என்றூழ் - வெயில்.

அசைவு - தளர்ச்சி, துவர்வாய் - பவழம் போன்ற வாய், பறந்தலை - பாரிடம். இயவுள் - வழி. தேர் - பேய்த் தேர். அம்பி - ஓடம்.

மலிர் நிரை - மிக்க வெள்ளம், சென்றற்றாங்கு - சென்று வற்றியது போல, அனைப்பெறுங்காமம் - அவ்வளவு பெருங்காமம்

இன்றிச் சென்ற - தலைவியை ஒழித்துச் சென்ற என உரை காண்பர் இளம்பூரணர்.

ஒழித்தது - தலைவியைப் பிரிதல் கூடாதென முன்னோர் விலக்கியது. முந்துறுத்து - தோற்றுவித்து. ஞெலி - கடைந்த. ஞெமல் - சருகு, பொத்தி - மூடலால், மான்று - மயங்கி, ஞான்று - தாழ்ந்து, வாயல் - உண்மையல்லாத.

முரம்பு - பரற்கற்கள். களறி - களர்நிலம்.

கேளிரும் என்னும் உம்மை எஞ்சி நின்றது. ஈண்டு ஒழுக்கமாவது சொல்லாது பெயர்ந்தீர் என்றுனும், இளமையும் காமமும் நோக்காது பெயர்ந்தீர் என்றுனும் கூற இதற்குக் காரணம் என்னையெனத் தலைவன் வந்துழி அவர் நிகழ்த்தும் நிகழ்ச்சி என உரை காண்பர் இளம்பூரணர்.

எதிர்மார் - எதிர்கொள்வார்

பகுவாய் - பிளந்தவாய், அரி - பரல்.

மிக்க சிறப்பினையுடைய கிழவோன் மேலன என்றமையால் மிகாத சிறப்பினையுடையார் மாட்டு இவையெல்லாம் ஒருங்கு நிகழ்தல் இல என்பர் இளம்பூரணர்.

சிலம்பு - மலை.

உறை - தீர்த்துளி, கடிப்பு - குறுந்தடி. (5)

### தலைவி கூற்று நிகழும் இடம்

147. அவனறிவு ஆற்ற அறியு மாகலின்
ஏற்றற் கண்ணும் நிறுத்தற் கண்ணும்
உரிமை கொடுத்த கிழவோன் பாங்கில்
பெருமையில் திரியா அன்பின் கண்ணும்
கிழவனை மகடூஉப் புலம்புபெரி தாகலின்
அலமரல் பெருகிய காமத்து மிகுதியும்
இன்பமும் இடும்பையும் ஆகிய இடத்தும்
கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி
நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ

நளியில் நீக்கிய இளிவரு நிலேயும்
புகன்ற வுள்ளமொடு புதுவோர் சாயற்(கு)
அகன்ற கிழவனேப் புலம்புநனி காட்டி
இயன்ற நெஞ்சந் தலேப்பெயத் தருக்கி
எதிர்பெய்து மறுத்த ஈரத்து மருங்கினும்
தங்கிய ஒழுக்கத்துக் கிழவனே வணங்கி
எங்கையர்க் குரையென இரத்தற் கண்ணும்
செல்லாக் காலேச் செல்கென விடுத்தலும்
காமக் கிழத்தி தன்மகத் தழீஇ
ஏமுறு விளேயாட் டிறுதிக் கண்ணும்
சிறந்த செய்கை அவ்வழித் தோன்றி
அறம்புரி [1]உள்ளமொடு தன்வர வறியாமைப்
புறஞ்செய்து பெயர்த்தல் வேண்டிடத் தானும்
தந்தையர் ஒப்பர் மக்களென் பதனல்
அந்தமில் சிறப்பின் மகப்பழித்து [2]நெருங்கலும்
கொடியோர் கொடுமை சுடுமென ஒடியாது
நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇப்
பகுதியின் நீங்கிய தகுதிக் கண்ணும்
கொடுமை யொழுக்கங் கோடல் வேண்டி
அடிமேல் வீழ்ந்த கிழவனே நெருங்கிக்
காத லெங்கையர் காணின் நன்றென
மாதர் சான்ற வகையின் கண்ணும்
தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனே
மாயப் பரத்தை உள்ளிய வழியும்
தன்வயின் [3]சிறைப்பினு மவன்வயின் பிரிப்பினும்
இன்னத் தொல்சூள் எடுத்தற் கண்ணும்
[4]காமக் கிழத்தியர் நலம்பா ராட்டிய

---

1. நெஞ்சமொடு, 2. நெருங்கினும், 3. சிறப்பினும், 4. காமக் கிழத்தி எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

தீமையின் முடிக்கும் பொருளின் கண்ணும்
கொடுமை [1]யொழுக்கந் தோழிக் குரியவை
வடுவறு சிறப்பிற் கற்பில் திரியாமைக்
காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும்
ஆவயின் வருஉம் பல்வேறு நிலையினும்
வாயிலின் வருஉம் வகையொடு தொகைஇக்
கிழவோள் செப்பல் கிழவ தென்ப.

இது, முறையானே தலைவிகூற்று நிகழும் இடங் கூறுகின்றது.

(இ-ள்.) (அவன் அறிவு ஆற்ற அறியும் ஆகலின் ஏற்றற் கண்ணும் நிறுத்தற்கண்ணும் உரிமை கொடுத்த கிழவோன் பாங்கிற் பெருமையில் திரியா அன்பின்கண்ணும்) அவன் அறிவு ஆற்ற அறியும் ஆகலின் - வேதத்தையுந் தருமநூலையுந் தலைவன் அறிந்த அறிவைத் தலைவி மிக அறியுமாதலின்; ஏற்றற் கண்ணும் - அந்தணர் முதலிய மூவருந் தத்தமக்குரிய வேள்வி செய்யுங்கால் தம் மனைவியர் பலருள்ளுந் தமக்கு ஒத்தாளை வேள்விக்கண் உரிமை வகையான் ஏனை மகளிரின் உயர்த்தல் செய்யுமிடத்தும்; நிறுத்தற்கண்ணும் - தத்தங் குலத்திற்கேற்ப நிறுத்துதலைச் செய்யுமிடத்தும்; உரிமை கொடுத்த கிழவோன் பாங்கில் - அவர் குலத்திற்கேற்ற உரிமைகளைக் கொடுத்த தலைவனிடத்து; பெருமையில் திரியா அன்பின்கண்ணும் - தத்தங் குலத்திற்கேற்ற பெருமையினின்றும் நீங்காத அன்பு செய்து ஒழுகுதற்கண்ணும்: அறியுமாகலின் அன்பு செய்து ஒழுகுமெனக் கூட்டுக.

என்றது, அந்தணர்க்கு நால்வரும் அரசர்க்கு மூவரும் வணிகர்க்கு இருவருந் தலைவியராகியவழித் தங்குலத்திற் கொண்டவரே வேள்விக்கு உரியர்; ஏனையோர் வேள்விக்கு உரியரல்லரென்பதூஉம் அவர்க்குத் தங்குலங்கட்கு ஏற்றவகையின் உரிமை கொடுப்பரென்பதூஉம் அவர்களும் இது கருமமே செய்தானென்று அன்பில் திரியாரென்பதூஉங் கூறியவாறு.

உ-ம்: "நின்ற சொல்லர் நீடுதோன்று இனியர்
என்றும் என்றோள் பிரிபுஅறி யலரே

1. ஒழுக்கத்து எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

தாமரைத் தண்தாது ஊதி மீமிசைச்
சாந்தில் தொடுத்த தீந்தேன் போலப்
புரைய மன்ற புரையோர் கேண்மை
நீரின்று அமையா உலகம் போலத்
தம்மின்று அமையா நந்நயந்து அருளி
நறுநுதல் பசத்தல் அஞ்சிச்
சிறுமை உறுபவோ செய்புஅறி யலரே.''
(நற்றிணை, 1)

இதனுள், தாமரைத்தாதையும் ஊதிச் சந்தனத்தாதையும் ஊதி வைத்த தேன்போலப் புரைய என்றதனான் ஏற்றற்கண் தலைவி கூறினாள். பிரிவறியலரென்றதும் அன்னதோர் குணக் குறையில ரென்பதாம். பிரிவுணர்ந்து புலந்துரைப்பின் நாணழிவாம்.

'' நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே சாரல்
கருங்கோல் குறிஞ்சிப்பூக் கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே.''
(குறுந். 3)

இது, நிறுத்தற்கட் கூறியது.

கிழவனை மகடூஉப் புலம்பு பெரிதாகலின் அலமரல் பெருகிய காமத்து மிகுதியும் - அறமும் பொருளுஞ் செய்வதனாற் புறத் துறைதலில் தலைவனைத் தலைவி நீங்குங்காலம் பெரிதாகலின், அதற்குச் சுழற்சிமிக்க வேட்கைமிகுதி நிகழ்ந்தவிடத்தும் :

உ - ம்: '' காமந் தாங்குமதி என்போர் தாமஃது
அறியலர் கொல்லோ அனைமது கையர்கொல்
யாம்எங் காதலர்க் காணே மாயின்
செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்
கல்பொரு சிறுநுரை போல
மெல்ல மெல்ல இல்லா குதுமே.'' (குறுந் 290)

இது, தெருட்டுந் தோழிக்குத் தலைவி காமத்து மிகுதிக்கட் கூறியது.

இன்பமும் இடும்பையும் ஆகிய இடத்தும் - அங்ஙனம் அலமரல் பெருகியவழித் தலைவனை எதிர்ப்பட்டஞான்று இன்பமுந் தனிப்பட்டஞான்று துன்பமும் உளவாகிய இடத்தும்:

உ - ம்: ''வாரல் மென்தினைப் புலவுக்குரல் மாந்திச்
சாரல் வரைய கிளையுடன் குழீஇ
வளியெறி வயிரில் கிளிவிளி பயிற்றும்
நளியிரும் சிலம்பின் நன்மலை நாடன்
புணரில் புணருமார் எழிலே பிரியின்
மணிமிடை பொன்னின் மாமை சாயஎன்
அணிநலம் சிதைக்குமார் பசலை அதனால்
அசுணம் கொல்பவர் கைபோல் நன்றும்
இன்பமும் துன்பமும் உடைத்தே
தண்கமழ் நறுந்தார் விறலோன் மார்பே''
(நற்றிணை, 304)

''இன்கண் உடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தால் புணர்வு'' (குறள். 1152)

என வரும்.

கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ நளியில் நீக்கிய இளிவரு நிலையும் - யானைக் கன்று போலும் புதல்வன் பிறத்தலான் உளதாகிய விருப்பத்தை யுடைய நெய்யணிக்கு விரும்பிய தலைவனை நெஞ்சை வருத்தித் தன்னைச் செறிதலினின்று நீக்கிய இளிவந்த நிலைமைக்கண்ணும் :

தன்னை அவமதித்தானென்றது இளிவரு நிலையென்றார்.

''கரும்புநடு பாத்தியில் கலித்த ஆம்பல்
சுரும்புபசி களையும் பெரும்புனல் ஊர
புதல்வனை ஈன்றஎம் முயங்கல்
அதுவே தெய்யநின் மார்புசிதைப் பதுவே.''
(ஐங்குறு.65)

இது, புதல்வற் பயந்தகாலத்துப் பிரிவுப்பற்றிக் கூறியது.

புகன்ற உள்ளமொடு புதுவோர் சாயற்கு அகன்ற கிழவனை - புதல்வனை விளையாட்டை விரும்பின உள்ளத்தோடே

புதுவது புணர்ந்த பரத்தையர் தன்மாட்டு மனநெகிழ்ந்த மென்மையின்பொருட்டு அவர்க்கு அருள்செய்யப் பிரிந்து வந்தோனை; புலம்பு நனி காட்டி - தனது தனிமை மிகவும் அறிவித்து; இயன்ற நெஞ்சந் தலைப்பெயர்த்து அருக்கி - அவன் மேற் சென்ற நெஞ்சினைச் செல்லாமல் அவனிடத்தினின்றும் மீட்டு அருகப்பண்ணி; எதிர்பெய்து மறுத்த ஈரத்து மருங்கினும் - பிறருள் ஒருத்தியைக் காணாளாயினுங் கண்டாள்போலத் தன்முன்னர்ப் பெய்துகொண்டு வாயின் மறுத்ததனால் தோன்றிய நயனுடைமைக்கண்ணும்:

எனவே, மறுப்பாள்போல் நயந்தாளாயிற்று. கிழவனை மறுத்தவெனக் கூட்டுக.

உ - ம்: "கடல்கண் டன்ன கண்ணகன் பரப்பில்
நிலம்பக வீழ்ந்த வேர்முதிர் கிழங்கில்
கழைகண் டன்ன தூம்புடைத் திரள்கால்
களிற்றுச் செவியன்ன பாசடை மருங்கில்
கழுநிவந் தன்ன கொழுமுகை இடையிடை
முறுவன் முகத்தில் பன்மலர் தயங்கப்
பூத்த பொய்கைப் புள்ளிமிழ் பழனத்து
வேப்புநனை அன்ன நெடுங்கண் நீர்ஞெண்டு
இரைதேர் வெண்குருகு அஞ்சி அயலது
ஒலித்த பகன்றை இருஞ்சேற் றள்ளல்
திதலையின் வரிப்ப ஓடி விரைந்துதன்
ஈர்மலி மண்ணளைச் செறியும் ஊர
மனைநகு வயலை மரனிவர் கொழுங்கொடி
அரிமலர் ஆம்பலோடு ஆர்தழை தைஇ
விழவாடு மகளிரொடு தழூஉவணிப் பொலிந்து
மலரேர் உண்கண் மாணிழை முன்கைக்
குறுந்தொடி தொடக்கிய நெடுந்தொடர் விடுத்தது
உடன்றனள் போலுநின் காதலி எம்போல்
புல்லுளைக் குடுமிப் புதல்வர் பயந்து
நெல்லுடை நெடுநகர் நின்னின்று உறைய
என்ன கடத்தளோ மற்றே தன்முகத்து
எழுதெழில் சிதைய அழுதனள் ஏங்தி

16 ...AI-60

அடித்தென உருத்த தித்திப் புல்லார்
நொடித்தெனச் சிவந்த மெல்விரல் திருகுபு
கூர்நுதி மழுங்கிய எயிற்றள்
ஊர்முழுது நுவலும்நிற் காணிய சென்மே'' (அகம். 176)

என வரும்.

எதிர்பெய்து மறுத்த ஈரமெனவே எதிர்பெய்யாது மறுத்த ஈரமுங் கொள்க.

''கூர்முள் முள்ளிக் குவிகுலைக் கழன்ற
மீன்முள் அன்ன வெண்கால் மாமலர்
பொய்தன் மகளிர் விழவணிக் கூட்டும்
அவ்வயல் நண்ணிய வளங்கேழ் ஊரனைப்
பலத்தல் கூடுமோ தோழி அல்கல்
பெருங்கதவு பொருத யானை மருப்பின்
இரும்புசெய் தொடியின் நேர வாகி
மாக்கள் நடைய மார்பகம் பொருந்தி
முயங்கல் விடாஅல் இவைஎன மயங்கி
யானோம் என்னவும் ஒல்லார் தாமற்று
இவைபா ராட்டிய பருவமும் உளவே
இனியே, புதல்வன் தடுத்த பாலொடு தடைஇத்
திதலை அணிந்த தேங்கொள் மென்முலை
நறுஞ்சாந்து அணிந்த கேழ்கிளர் அகலம்
வீங்க முயங்கல் யாம்வேண் டினமே
தீம்பால் படுதல் தாம்அஞ் சினரே
ஆயிடைக், கவவுக்கை ஞெகிழ்ந்தமை போற்றி மதவுநடைச்
செவிலி கையென் புதல்வனை நோக்கி
நல்லோர்க்கு ஒத்தனிர் நீயிர் இஃதோ
செல்வற்கு ஒத்தனெம் யாமென மெல்லஎன்
மகன்வயிற் பெயர்தந் தேனே அதுகண்டு
யாமும் காதலெம் அவற்கு எனச் சாஅய்ச்
சிறுபுறம் கவையினன் ஆக உறுபெயல்
தண்டுளிக்கு ஏற்ற பழவுழு செஞ்செய்
மண்போன் ஞெகிழ்ந்தவா கலுழ்ந்தேம்
நெஞ்சறை போகிய அறிவி னேற்கே.'' (அகம். 26)

இதனுள் ஒருத்தியை வரைந்து கூருது நல்லோரைப் பொது வாகக் கூறியவாறும் வேண்டினமெனப் புலம்புகாட்டிக் கலுழ்ந்த தென ஈரங்கூறியவாறுங் காண்க.

தங்கிய ஒழுக்கத்துக் கிழவனை வணங்கி எங்கையர்க்கு உரை யென இரத்தற்கண்ணும் - பரத்தையர்மாட்டுத் தங்கிய செவ்வியை மறையாத ஒழுக்கத்தோடே வந்த தலைவனை நீ கூறுகின்ற பணிந்த மொழிகளை எங்கையர்க்கு வணங்கிக் கூறெனை இரந்துகோடற் கண்ணும் :

உதாரணம்,

''அகன்றுறை அணிபெற'' என்னும் மருதக்கலி (73)யுள்

''நோதக்காய் எனநின்னை நொந்தீவார் இல்வழித்
தீதிலேன் யான்எனத் தேற்றிய வருதிமன்
ஞெகிழ்தொடி இளையவர் இடைமுலைத் தாதுசோர்ந்து
இதழ்வனப்பு இழந்தநின் கண்ணிவந்து உரையாக்கால்''

என்பன கூறி,

''மண்டுநீர் ஆரா மலிகடல் போலுநின்
தண்டாப் பரத்தை தலைக்கொள்ள நாளும்
புலத்தகைப் பெண்டிரைத் தேற்றிமற் றியாமெனில்
தோலாமோ நின்பொய் மருண்டு'' (கலி. 73)

எனவும் எங்கையரைத் தேற்றெனக் கூறியவாறு காண்க.

செல்லாக் காலைச் செல்கென விடுத்தலும் - தலைவன் செல்லா னென்பது இடமுங் காலமும்பற்றி அறிந்தகாலத்து ஊடலுள்ளத் தாற் கூடப்பெருதாள் செல்கெனக்கூறி விடுத்து ஆற்றுதற்கண்ணும்:

உதாரணம் :

''புள்ளிமி ழகல்வயல்'' என்னும் மருதக்கலியுள்,

''பூங்கள் புதல்வனைப் பொய்பல பாராட்டி
நீங்காய் இகவாய் நெடுங்கடை நில்லாதி
ஆங்கே அவர்வயின் சென்றி அணிசிதைப்பான்
ஈங்குளம் புதல்வனைத் தந்து'' (கலி. 79)

எனவும்,

"சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்
ஊர்மடி கங்குலின் நோன்தளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டின் நீக்கி
நீர்முது பழனத்து மீனுடன் இரிய
அந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டுது பனிமலர் ஆரும் ஊர
யாரை யோநிற் புலக்கேம் வாருற்று
உறையிறந்து ஒளிரும் தாழிரும் கூந்தல்
பிறரும் ஒருத்தியை எம்மனைத் தந்து
வதுவை அயர்ந்தனை என்ப அஃதுயாம்
கூறேம் வாழியர் எந்தை செறுநர்
களிறுடை அருஞ்சமந் ததைய நூறும்
ஒளிறுவாள் தானைக் கொற்கைச் செழியன்
பிண்ட நெல்லின் அள்ளூர் அன்னஎன்
ஒண்டொடி நெகிழினும் நெகிழ்க
சென்றீ பெருமநிற் தகைக்குநர் யாரோ" (அகம். 46)

எனவும் வரும்.

காமக்கிழத்தி தன்மகத் தழீஇ ஏமுறு விளையாட்டு இறுதிக் கண்ணும் - மனையறத்திற்கு உரியளாக வரைந்து கொண்ட காமக்கிழத்தி, தலைவி புதல்வன் மனைப்புறத்து விளையாடுகின்ற வனைத் தழுவிக்கொண்டு தான் ஏமுறுதற்குக் காரணமான விளையாட்டின் முடிவின் கண்ணும் :

அவள் எம்மைப் பாதுகாப்பீரோவென வினயவழி அவனும் அதற்கு உடன்பட்டான்போலக் கூறுவன உளவாதலின் 'ஏமுறு விளையாட்டு' என்றார். 'இறுதி' யென்றார் விளையாட்டு முடியுந் துணையுந் தான் மறையநின்று பின்னர்க் கூறுதலின்.

உ - ம்: "நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்
தாதின் அல்லி அயலிதழ் புரையும்
மாசில் அங்கை மணிமருள் செவ்வாய்
நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்
யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனைத்
தேர்வழங்கு தெருவில் தமியோர்கண்டே

கூரெயிற்று அரிவை குறுகினள் யாவரும்
காணுநர் இன்மையின் செத்தனள் பேணிப்
பொலங்கலம் சுமந்த பூண்டாங்கு இளமுலை
வருக மாளஎன் உயிரெனப் பெரிதுஉவந்து
கொண்டனள் நின்றோள் கண்டுநிலைஇச் செல்லேன்
மாசில் குறுமகள் எவன்பே துற்றனை
நீயும் தாயை இவற்கென யான்தற்
கரைய வந்து விரைஇனள் கவைஇக்
களவுடம் படுநரில் கவிழ்ந்துநிலம் கிளையா
நாணி நின்றோள் நிலைகண்டு யானும்
பேணினேன் அல்லெனோ மகிழ்ந வானத்து
அணங்கருங் கடவுள்அன் னோள்நின்
மகன்தாய் ஆதல் புரைவதாங்கு எனவே'' (அகம். 16)

என வரும்.

(சிறந்த செய்கை அவ்வழித் தோன்றி அறம்புரி உள்ள மொடு தன்வரவு அறியாமைப் புறஞ்செய்து பெயர்த்தல் வேண்டு இடத்தானும்) சிறந்த செய்கை அவ்வழித்தோன்றி - காமக்கிழத்தி யது ஏமுறும் விளையாட்டுப்போலாது தலைவி தன் புதல்வனைத் தழீஇ விளையாட்டையுடைய இல்லிடத்தே தலைவன் தோன்றி; அறம்புரி உள்ளமொடு தன்வரவு அறியாமைப் புறஞ்செய்து - அவ் விளையாட்டு மகிழ்ச்சியாகிய மனையறத்தினைக் காண விரும்பிய நெஞ்சோடே தன் வரவினைத் தலைவி அறியாமல் அவள் பின்னே நிற்றலைச்செய்து; பெயர்தல் வேண்டு இடத்தானும் - தலைவியது துனியைப் போக்குதல் வேண்டிய இடத்தும் :

'தன்வரவறியாமை' என்றதற்குத் தன்னைக் கண்டால் தலைவியுழைநின்றார் தனக்குச் செய்யும் ஆசாரங்களையும் அவர் செய்யாமற் கைகவித்துத் தன் வரவு அறியாமை நிற்பனென்று கொள்க.

உ - ம்: ''மையற விளங்கிய மணிமருள் அவ்வாய்தன்
மெய்பெறு மழலையின் விளங்குபூண் நனைத்தரப்
பொலம்பிறை யுள்தாழ்ந்த புனைவினை உருள்கலன்
நலம்பெறு கமழ்சென்னி நகையொடு துயல்வர

உருவெஞ்சாது இடைகாட்டும் உடைகழல் அந்துகில்
அரிபொலி கிண்கிணி ஆர்ப்போவாது அடிதட்பப்
பாலோடு அலர்ந்த முலைமறந்து முற்றத்துக்
கால்வல்தேர் கையின் இயக்கி நடைபயிற்ரு
ஆலமர் செல்வன் அணிசால் பெருவிறல்
போல வருமென் உயிர் ;
பெரும, விருந்தொடு கைதூவா எம்மையும் உள்ளாய்
பெருந்தெருவில் கொண்டாடி ஞாயர் பயிற்றத்
திருந்துபு நீகற்ற சொற்கள்யாம் கேட்ப
மருந்தோவா நெஞ்சில் கமிழ்தயின்று அற்ருப்
பெருந்தகாய் கூறு சில ;
எல்லிழாய்,
சேய்நின்று நாங்கொணர்ந்த பாணன் சிதைந்தாங்கே
வாயோடி ஏஞதிப் பாடிய மென்றற்ரு
நோய்நாம் தணிக்கு மருந்தெனப் பாராட்ட
ஓவாது அடுத்தடுத்து அத்தத்தாஎன் பான்மாண
வேய்மென்ருேள் வேய்த்திறம் சேர்த்தலும் மற்றிவன்
வாயுள்ளில் போகான் அரோ ;
உள்ளி உழையோ ஒருங்கி படைவிடக்
கள்ளர் படர்தந் ததுபோலத் தாமெம்மை
எள்ளுமார் வந்தாரே ஈங்கு ;
ஏதப்பாடு உள்ளிப் புரிசை வியலுள்ளோர்
கள்வரைக் காஞது கண்டேம்என் பார்போலச்
சேய்நின்று செய்யாத சொல்லிச் சினவல்நின்
ஆணை கடக்கிற்பார் யார் ;
அதிர்வில் படிறெருக்கி வந்தென் மகன்மேல்
முதிர்பூண் முலைபொருத ஏதிலாள் முச்சி
உதிர்துகள் உக்கநின் ஞடை ஒலிப்ப
எதிர்வளி நின்ருய்நீ செல் ;
இனி எல்லா யாம்,
யாதொன்றும் எங்கண் மறுத்தர இல்லாயின்
மேதக்க எந்தை பெயரனை யாம்கொள்வேந்து
ஆவா விருப்பொடு கன்றியாத் துழிச்செல்லும்
ஆபோல் படர்தக நாம்'' (கலி. 81)

என வரும்.

தந்தையர் ஒப்பர் மக்கள் என்பதனல் அந்தமில் சிறப்பின் மகப்பழித்து நெருங்கலும் - அங்ஙனம் விளையாடுகின்றகாலத்து

மக்கள் தந்தையரை ஒப்பரென்னும் வேதவிதி பற்றி முடி வில்லாத சிறப்பினையுடைய மகனைப் பழித்து வெகுளுதற் கண்ணும் :

மகனுக்கும் இது படுமென்று கருதிக் கூறலின் தலைவனைப் பழித்தென்றது 'மகப்பழித்' தென்றார்.

" மைபடு சென்னி" என்னும் மருதக்கலியுள்,

" வனப்பெலா நுந்தையை ஒப்பினும் நுந்தை
நிலைப்பாலுள் ஒத்த குறியென் வாய்க் கேட்டொத்தி
கன்றிய தெவ்வர்க் கடந்து களங்கொள்ளும்
வென்றிமாட் டொத்தி பெருமமற்று ஒவ்வாதி
ஒன்றினேம் யாமென்று உணர்ந்தாரை நுந்தைபோல்
மென்றோள் நெகிழ விடல் " (கலி. 86)

என அவனைக் கொண்டு விளையாடியவழி அவன் தலைவன்மேல் வீழ்தலின்,

" தந்தை வியன்மார்பில் பாய்ந்தான் அறனில்லா
அன்பிலி பெற்ற மகன் " (கலி. 86)

எனத் தன் திறத்து அன்பிலனென நெருங்கிக் கூறியவாறு காண்க.

(கொடியோர் கொடுமை சுடுமென ஒடியாது நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇப் பகுதியின் நீங்கிய தகுதிக் கண்ணும்) கொடியோர் நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇ - கொடியோரென்றது பாணர் கூத்தர் விறலியர் அந்தணர் முதலியோரை ; கொடியோராய்த் தலைவன் புகழைக் கூறுதற்கு விரும்பினோர் பரத்தையர்க்கு வாயிலாய் வந்து கூறிய சொல்லோடே தானும் அவரிடத்தே சேர்ந்து ; பகுதியி னீங்கிய கொடுமை - காவற்பாங்கிற் பக்கமும் ஆங்கோர் பக்கமுமாகிய பகுதி காத்தலினின்று நீங்கிய பரத்தையரைக் கூடிய கொடுமை ; சுடுமென ஒடியாது தகுதிக்கண்ணும் - நெஞ்சைச் சுடுமென்று கூறி அவன் தவற்றைக் கூறுதலைந் தவிராமற் கூறுதற்குத் தக்க தகுதியிடத்தும் ;

இன், நீக்கப்பொருட்டு; பகுதி - கூறுபாடு, ஆகுபெயர் ; பகுதிகளைக் காத்தற்குப் பிரிவேனெனக் கூறிப் பிரிந்து பாணர்

முதலியோர் புதிதிற் கூட்டிய பரத்தையரிடத்தே ஒழுகிய மெய் வேறுபாட்டோடு வந்தானைக் கண்டு அப்பகுதிகளைப் பரத்தைய ராகக் கூறுவாளாயிற்று. அது, ''இணைபட நிவந்த'' என்னும் மருதக்கலியுள்,

''கண்ணிநீ கடிகொண்டார்க்கு அனைதொறும் யாமழப்
பண்ணினுல் களிப்பிக்கும் பாணன்காட்டு என்ருனே
பேணுன்என்று உடன்றவர் உகிர்செய்த வடுவினுன்
மேல்நாள்நின் தோள்சேர்ந்தார் நகைசேர்ந்த இதழினை
நாடிநின் தூதாடித் துறைச்செல்லாள் ஊரவர்
ஆடைகொண்டு ஒலிக்குநின் புலைத்திகாட்டு என்ருளோ
கூடியார்ப் புனலாடப் புணையாய மார்பினில்
ஊடியார் எறிதர ஒளிவிட்ட அரக்கினை;
வெறிதுநின் புகழ்களை வேண்டாரின் எடுத்தேத்தும்
அறிவுடை அந்தணன் அவளைக்காட்டு என்ருனே
களிபட்டார் கமழ்கோதை கயம்பட்ட உருவின்மேல்
குறிபெற்ருர் குரல்கூந்தல் கோடுளர்ந்த துகளினை''(கலி.72)

என்பவற்ருற் பாணர் முதலியோர் வாயிலாயவாறு காண்க.

''ஏந்தெழின் மார்ப எதிரல்ல நின்வாய்ச்சொல்
பாய்ந்தாய்ந்த தானைப் பரிந்தாறு மைந்தினை
சாந்தழி வேரை சுவற்ருழ்ந்த கண்ணியை
ஆங்குச்சென் றீங்குவந்து ஈத்தந்தாய்; கேளினி
ஏந்தி, எதிரிதழ் நீலம் பிணைந்தன்ன கண்ணுய்
குதிரை வழங்கிவரு வல்;
அறிந்தேன் குதிரைதான்
பால்பிரியா ஐங்கூந்தல் பன்மயிர்க் கொய்சுவல்
மேல்விரித்து யாத்த சிகழிகைச் செவ்வுளை
நீல மணிக்கடிகை வல்லிகை யாப்பின்கீழ்
ஞாலியன் மென்காதில் புல்லிகைச் சாமரை
மத்திகைக் கண்ணுறை யாகக் கவின்பெற்ற
உத்தி ஒருகாழ்நூ லுத்தரியத் திண்பிடி
நேர்மணி நேர்முக்காழ்ப் பல்பல கண்டிகைத்
தார்மணி பூண்ட தமனிய மேகலை
நூபுரப் புட்டில் அடியொடு அமைத்தியாத்த

வார்பொலங் கிண்கிணி ஆர்ப்ப இயற்றிநீ
காதலித் தூர்ந்தநின் காமக் குதிரையை
ஆய்சுதை மாடத்து அணிநிலா முற்றத்துள்
ஆதிக் கொளீஇய வசையினை யாகுவை
வாதுவன் வாழிய நீ;
சேகா, கதிர்விரி வைகலில் கைவாரூஉக் கொண்ட
மதுரைப் பெருமுற்றம் போலநின் மெய்க்கண்
குதிரையோ வீறி யது;
கூருகிர் மாண்ட குளம்பின் அதுநன்றே
கோரமே வாழிகுதி ரை;
எதிருழக்கு நாழியால் சேதிகைக் குத்திக்
குதிரை உடலணி போலநின் மெய்க்கண்
குதிரையோ கவ்வி யது;
சீத்தை, பயமின்றி ஈங்குக் கடித்தது நன்றே
இயமமே வாழிகுதி ரை;
மிகநன்று, இனியறிந்தேன் இன்றுநீ ஊர்ந்த குதிரை
பெருமணம் பண்ணி அறத்தினில் கொண்ட
பருமக் குதிரையோ அன்று; பெருமநின்,
ஏதில் பெரும்பாணன் தூதாட ஆங்கேயோர்
வாதத்தான் வந்த வளிக்குதிரை ஆதி
உருவழிக்கும் அக்குதிரை ஊரல்நீ ஊரில் பரத்தை
பரியாக வாதுவனாய் என்று மற்றச்சார்த்
திரிகுதிரை ஏறிய செல்.'' (கலி. 96)

இதனுட் பாணன் தூதாட வாதத்தால் வந்த குதிரையென்பதனால் அவன் கூட்டிய புதிய பரத்தையர் என்பதூஉம் அவன் பகுதியினின்று நீங்கியவாறுங் குதிரையோ வீறியதென்பது முதலியவற்றாற் கொடுமை நெஞ்சைச் சுடுகின்றவாறும் அதனை நீக்கிய பரத்தையரைக் குதிரையாகக் கூறித் தான் அதற்குத் தக்குநின்றவாறுங் காண்க.

கடவுட்பாட்டு 'ஆங்கோர் பக்கமும்' யானைப்பாட்டுக் 'காவற் பாங்கின் பக்க'முமாம்.

(கொடுமை ஒழுக்கங் கோடல் வேண்டி அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக் காதல் எங்கையர் காணின் நன்றென மாதர்

ாசன்ற வகையின்கண்ணும்) கொடுமை ஒழுக்கங் கோடல் வேண்டி - அங்ஙனம் பகுதியினீங்கிப் பரத்தையர்மாட்டு ஒழுகிக் கொடுமை செய்த ஒழுக்கத்தைத் தலைவி பொறுத்தலை வேண்டி ; அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கி - தன் அடிமேல் வீழ்ந்து வணங்கிய தலைவனை அதனின்மீது துனிமிக்குக் கழறி ; காதல் எங்கையர் காணின் நன்றென - நின்மாட்டுக் காதலையுடைய எங்கையர் காணின் இவை நன்றெனக் கொள்வரெனக் கூறி ; மாதர் சான்ற வகையின்கண்ணும் - காதல் அமைந்து மாறிய வேறுபாட்டின்கண்ணும் ;

பொருதாரைக் கொள்ளா ரென்பவாகலிற் கோடல் பொறுத்தலாயிற்று, 'காதலெங்கையர் மாதர் சான்ற' என்பன வற்ருல் துனிகூறினுர். எனவே, யாங்கண்டதனுற் பயனின் றென்ருர்.

உதாரணம்:

''நில்லாங்கு நில்'' என்னும் பூழ்ப்பாட்டினுள்,

''மெய்யைப்பொய் யென்று மயங்கிய கையொன்று
அறிகல்லாய் போறிகா ணீ ;
நல்லாய்,
பொய்யெல்லாம் ஏற்றித் தவறு தலைப்பெய்து
கையொடு கண்டாய் பிழைத்தேன் அருளினி;
அருளுகம் யாம்யாரேம் எல்லா தெருள
அளித்துநீ பண்ணிய பூழெல்லாம் இன்னும்
விளித்துநின் பாணனெடு ஆடி அளித்தி
விடலைநீ நீத்தலின் நோய்பெரிது ஏய்க்கும்
நடலைப்பட்டு எல்லாநின் பூழ்.'' (கலி. 95)

இதனுள் 'அருளினி'யென அடிமேல் வீழ்ந்தவாறும் 'அருளுகம் யாம்யார்' எனக் காதல் அமைந்தவாறும் 'விளித் தளித்தி' யென இப்பணிவை நின் பெண்டிர் கொள்வரெனவுங் கூறியவாறுங் காண்க.

''நினக்கே அன்றுஅஃது எமக்குமார் இனிதே
நின்மார்பு நயந்த நன்னுதல் அரிவை

வேண்டிய குறிப்பினை யாகி
ஈண்டுநீ அருளாது ஆண்டுறை தல்லே.'' (ஐங்குறு. 46)

இதுவும் அது.

தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை மாயப் பரத்தை உள்ளிய வழியும் - பரத்தையர் கருதி அணிந்த நன்றாகிய அணி களையுடைய புதல்வனை மாயப் பரத்தமையைக் குறித்த விடத்தும் :

அவருள் துனியாலே வருந்திய பரத்தையர் தம் வருத்தத் தினை உணர்த்தியும் தலைநின்றொழுகும் பரத்தையர் தஞ்சிறப்பு உணர்த்தியும் அணிவரென்றற்குக் 'கண்ணிய' என்றார். பரத் தையர்சேரி சென்ற அணியணிந்ததற்கு வெகுண்டு கூறலிற் பொய்யாகிய பரத்தை யென்றார். எனவே தலைவன் பரத்தமை கருதினளாயிற்று.

உ - ம்: ''உறுவளி தூக்கும் உயர்சினை மாவின்
அறுவடி யாரிற்று அவைபோல் அழியக்
கரந்தியான் கரக்கவும் கைந்நில்லா வீங்கிச்
சுரந்தஎன் மென்முலைப் பால்பழு தாகநீ
நல்வாயிற் போத்தந்த பொழுதினான் எல்லா
கடவுள் கடிநகர் தோறும் இவனை
வலங்கொளீஇ வாவெனச் சென்றாய் விலங்கினை
ஈர மிலாத இவன்தந்தை பெண்டிருள்
யாரில் தவிர்ந்தனை கூறு ;
நீருள், அடைமுறை ஆயிதழ்ப் போதுபோல் கொண்ட
குடைநிழல் தோன்றுநின் செம்மலைக் காணூஉ
இவன்மன்ற யான்நோவ உள்ளங்கொண்டு உள்ளா
மகனல்லான் பெற்ற மகன்என்று அகனகர்
வாயில் வரையிறந்து போத்தந்து தாயர்
தெருவில் தவிர்ப்பத் தவிர்ந்தனன் மற்றவர்
தத்தம் கலங்களுள் கையுறை என்றிவற்கு
ஒத்தவை ஆராய்ந்து அணிந்தார் பிறன்பெண்டிர்
ஈத்தவை கொள்வானும் இஃதொத்தன் சீத்தை
செறுத்தக்கான் மன்ற பெரிது ;
சிறுபட்டி, ஏதிலார் கைஎம்மை எள்ளுபு நீதொட்ட

மோதிரம் யாவோயாம் காண்கு ;
அவற்றுள் நருவிதழ் கண்டன்ன செவ்விரற்கு ஏற்பச்
சுருவேறு எழுதிய மோதிரம் தொட்டாள்
குறியறிந்தேன் காமன் கொடிஎழுதி என்றும்
செறியாப் பரத்தை இவன் தந்தை மார்பில்
பொறியொற்றிக் கொண்டாள்வல் என்பது தன்னை
அறீஇய செய்த வினை ;
அன்னையோ இஃதொன்று,
முந்தைய கண்டும் எழுகல்லாது என்முன்னர்
வெந்தபுண் வேலெறிந் தற்றால் இஃதொன்று
தந்தை இறைத்தொடிஇ மற்று; இவன், தன்கைக்கண்
தந்தார் யார்; எல்லாஅ் விது
இஃதொன்று,
என்னைத்துக் காண்க பிறரும் இவற்குஎன்னும்
தன்னலம் பாடுவி தந்தாளாம் நின்னை
இதுதொடுகு என்றவர் யார்;
அஞ்சாதி,
நீயும் தவறிலை நின்கை யிதுதந்த
பூவெழில் உண்கண் அவளும் தவறிலள்
வேனில் புனலன்ன நுந்தையை நோவார்யார்
மேல்நின்றும் எள்ளி இதுஇவன் கைத்தந்தாள்
தான்யாரோ என்று வினவிய நோய்ப்பாலேன்
யானே தவறுடையேன்'' (கலி. 84)

என வரும்.

[1]தன்வயிற் சிறைப்பினும் - தலைவனில் தான் புதல்வற்குச் சிறந்தாளாகி அத்தலைவன்மாட்டும் அவன் காதலித்த பரத்தையர் மாட்டுஞ் செல்லாமற் புதல்வனைத் தன்பாற் சிறை செய்தற் கண்ணும்:

உதாரணம்:

''புள்ளிமி ழகல்வயல்'' என்னும் மருதக்கலியுள்,

''அணியொடு வந்தீங்குஎம் புதல்வனைக் கொள்ளாதி
மணிபுரை செவ்வாய்நின் மார்பகல நனைப்பவால்

1. தன்வயிற் சிறப்பினும் எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

தோய்ந்தாரை அறிகுவென் யான்எனக் கமழுநின்
சாந்திஞல் குறிகொண்டாள் சாய்குவள் அல்லளோ;
புல்லல்எம் புதல்வனைப் புகலகன் நின்மார்பில்
பல்காழ்முத்து அணியாரம் பற்றினன் பரிவாஞல்
மாணிழை மடநல்லார் முயக்கத்தை நின்மார்பில்
பூணிஞல் குறிகொண்டாள் புலக்குவள் அல்லளோ;
கண்டேஎம் புதல்வனைக் கொள்ளாதி நின்சென்னி
வண்டிமிர் வகையிணர் வாங்கினன் பரிவாஞல்
நண்ணியார்க் காட்டுவது இதுவெனக் கமழுநின்
கண்ணியால் குறிகொண்டாள் காய்குவள் அல்லளோ;
எனவாங்கு,
பூங்கண் புதல்வனைப் பொய்பல பாராட்டி
நீங்கா இகவாய் நெடுங்கடை நில்லாதி
ஆங்கே அவர்வயின் சென்றி அணிசிதைப்பான்
ஈங்குஎம் புதல்வனைத் தந்து.'' (கலி. 79)

இது தலைவனிடத்தினின்றும் புதல்வனைச் சிறைத்தது.

''ஞாலம் வறந்தீர'' என்னும் மருதக்கலியுள்,

''அவட்குஇனி தாகி விடுத்தனன் போகித்
தலைக்கொண்டு நம்மொடு காயுமற்று ஈதோர்
புலத்தகைப் புத்தேளில் புக்கான் அலைக்கொரு
கோல்தா நினக்குஅவள் யாராகும் எல்லா
வருந்தியாம் நோய்கூர நுந்தையை என்றும்
பருந்தெறிந் தற்ருகக் கொள்ளும்கொண் டாங்கே
தொடியும் முகிரும் படையாக நுந்தை
கடியுடை மார்பில் சிறுகண்ணும் உட்காள்
வடுவும் குறித்தாங்கே செய்யும் விடுவினி
அன்ன பிறவும் பெருமான் அவள்வயின்
துன்னுதல் ஓம்பித் திறவதின் முன்னினி
ஐயமில் லாதவர் இல்லொழிய எம்போலக்
கையாறு உடையவர் இல்லல்லால் செல்லல்
அமைந்தது இனிநின் தொழில்.'' (கலி. 82)

இது காதற்பரத்தையர்பாற் புதல்வன் செல்லாமற் சிறைத்தது.

அவன்வயிற் பிரிப்பினும் - தன்ஞெடு மைந்தனிடை உறவு நீக்கி அவனைத் தலைவஞெடு சார்த்துதற்கண்ணும்:

என்றது, எமக்கிவன் யாரென்று அயன்மை கூறுதலாம்.

உதாரணம்:

''மைபடுசென்னி'' என்னும் மருதக்கலியுள்;

''மறைநின்று தாமன்ற வந்துஈத் தனர்;
ஆயிஞயிழாய் தாவாத எற்குத் தவறுண்டோ காவாதுஈங்கு
ஈத்தை இவனையாம் கோடற்குச் சீத்தையாங்கு
அன்றி அதனைக் கடியவும் கைந்நீவிக்
குன்ற இறுவரைக் கோண்மா இவர்ந்தாங்குத்
தந்தை வியன்மார்பில் பாய்ந்தான் அறனில்லா
அன்பிலி பெற்ற மகன்'' (கலி. 86)

என்புழி ''அறனில்லா அன்பிலி பெற்ற மகன்'' எனவும், ''நின் மகன் ருயாதல் புரைவதா லெனவே'' என்புழி ''நின்மகன்'' எனவும் பிரித்தவாறு காண்க.

இன்ஞத் தொல்சூள் எடுத்தற்கண்ணும் - இன்ஞங்குப் பயக்குஞ் சூளுறவினைத் தலைவன் சூளுறுவலெனக் கூறு மிடத்தும் :

தலைவன் 'வந்தகுற்றம் வழிகெட' ஒழுகிக் களவிற் சூளுறு வான்வந்த ஏதம் நீக்கி, இக்காலத்துக் கடவுளரையும் புதல்வனை யுஞ் சூளுறுதலின் 'இன்ஞத சூள்' என்ருர். அது களவுபோலச் சூளுறுதலின் 'தொல்சூள்' என்ருர்.

உதாரணம் :

''ஒரூஉக்கொடி இயனல்லார்'' என்னும் மருதக்கலியுள்,

''வேற்றுமை என்கண்ஞேே ஓராதி தீதுஇன்மை
தேற்றக்கண்டு ஈயாய் தெளிக்கு :
இனித் தேற்றேம்யாம்,
தேர்மயங்கி வந்த தெரிகோதை அந்நல்லார்
தார்மயங்கி வந்த தவறஞ்சிப் போர்மயங்கி
நீயுறும் பொய்ச்சூள் அணங்காகின் மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு.'' (கலி. 88)

எனத் தலைவி எம்மேலே இப் பொய்ச்சூளால் வருங்கேடு வருமென மறுத்தவாறு காண்க.

காமக் கிழத்தியர் நலம் பாராட்டிய தீமையின் முடிக்கும் பொருளின்கண்ணும் - நலம்பாராட்டிய காமக்கிழத்தியர் தலைவி தன்னிற் சிறந்தாராகத் தன்னுன் நலம்பாராட்டப்பட்ட இற்பரத்தையர்மேல் தீமையுறுவரென முடித்துக்கூறும் பொருளின் கண்ணும் :

உ - ம்: "மடவ எம்மநீ இனிக்கொண் டோளே
தன்னெடு நிகரா என்னெடு நிகரிப்
பெருநலந் தருக்கும் என்ப விரிமலர்த்
தாதுண் வண்டினும் பலர்நீ
ஓதி ஒண்ணுதல் பசப்பித் தோரே." (ஐங்குறு. 67)

இதனுள் இப்பொழுது கிடையாதது கிடைத்ததாக வரைந்துகொண்ட பரத்தை தன்னெடு இளமைச்செவ்வி ஒவ்வா என்னையுந் தன்னேடொப்பித்துத் தன் பெரிய நலத்தாலே மாறுபடுமென்பவென அவள் நலத்தைப் பாராட்டியவாறும், நீ பசப்பித்தோர் வண்டு தாது உண்ட மலரினும் பலரெனத் தீமையின் முடித்தவாறுங் காண்க.

"அணிற்பல் லன்ன" (குறுந். 49) என்னும் பாட்டுக் கற்பாகலின் இதன்பாற்படும்.

(கொடுமையொழுக்கம் தோழிக்கு உரியவை வடுவறு சிறப்பிற் கற்பில் திரியாமைக் காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும் ஆவயின் வரூஉம் பல்வேறு நிலையினும்) கொடுமை ஒழுக்கம் தோழிக்கு உரியவை - பரத்தையிற் பிரிவும் ஏனைப் பிரிவுகளும் ஆகித் தலைவன்கண் நிகழுங் கொடுமையொழுக்கத்தில் தோழி கூறுதற்கு உரியளென மேற்கூறுகின்றவற்றைக் கேட்ட வழி ; வடுவறு சிறப்பிற் கற்பில் திரியாமை – எஞ்ஞான்றுங் குற்றமின்றி வருகின்ற பிறப்பு முதலிய சிறப்பிடத்துங் கற்பிடத்துந் திரிவுபடாதபடி; காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும் நிலையினும் - தோழி கூற்றினை வெகுளலும் மகிழ்தலும் அவளைப் பிரித்தலு பின்னும் அவள் கூற்றினைக் கேட்டற்கு விரும்புதலு மாகிய நிலையின்கண்ணும் ; ஆவயின் வரூஉம் நிலையினும் - அத்

தோழியிடத்துத் தலைவனைக் காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலுமாய் வரும் நிலையின்கண்ணும் ; பல்வேறு நிலையினும் - இக்கூறியவாறன்றிப் பிறவாற்ருய்ப் பல்வேறுபட்டு வரும் நிலையின்கண்ணும் :

அவள்வயினென்னது 'ஆவயி'னென்றார், தோழியும் பொரு ளென்பதுபற்றி.

உ - ம்: "இதுமற்று எவனோ தோழி துனியிடை
இன்னர் என்னும் இன்னுக் கிளவி
இருமருப் பெருமை ஈன்றணிக் காரான்
உழவன் யாத்த குழவியின் அகலாது
பாற்பெய் பைம்பயிர் ஆரும் ஊரன்
திருமனைப் பல்கடம் பூண்ட
பெருமுது பெண்டிரேம் ஆகிய நமக்கே." (குறுந். 181)

இது தோழி இன்னுக்கிளவி கூறியதனை இதுபொழுது கூறிப் பயந்த தென்னெனக் காய்ந்து கூறினாள்.

"பார்பக வீழ்ந்த வேருடை விழுக்கோட்டு
உடும்படைந் தன்ன நெடும்பொரி விளவின்
ஆட்டொழி பந்தில் கோட்டுமூக் கிறுபு
கம்பலத் தன்ன பைம்பயிர்த் தாஅம்
வெள்ளில் வல்சி வேற்றுநாட்டு ஆரிடைச்
சேறு நாமெனச் சொல்லச் சேயிழை
நன்றெனப் புரிந்தோய் நன்றுசெய் தனையே
செயல்படு மனத்தர் செய்பொருட்கு
அகல்வர் ஆடவர் அதுவதன் பண்பே."
(நற்றிணை, 24)

இது செய்தனையெனத் தலைவி உவந்து கூறியது.

"வண்டுபடத் ததைந்த கொடியிணர் இடையிடுபு
பொன்செய் புனையிழை கட்டிய மகளிர்
கதுப்பில் தோன்றும் புதுப்பூங் கொன்றைக்
கானம் கார்எனக் கூறினும்
யானோ தேறேன்அவர் பொய்வழங் கலரே."
(குறுந். 21)

இது கானங் காரெனக் கூறவும் வாராரென்றவழி அது கூறினும் யாறே தேறேனெனப் பிரிநிலை ஓகாரத்தாற் பிரிந்தது.

"யாங்கறிந் தனர்கொல் தோழி பாம்பின்
உரிநிமிர்ந் தன்ன உருப்பவிர் அமையத்து
இரைவேட் டெழுந்த சேவல் உள்ளிப்
பொறிமயிர் எருத்தில் குறுநடைப் பேடை
பொரிகாற் கள்ளி விரிகாய அங்கவட்டுத்
தயங்க விருந்து புலம்பக் கூஉம்
அருஞ்சுர வைப்பில் கானம்
பிரிந்துசேண் உறைதல் வல்லு வோரே."

(குறுந். 154)

இது, வல்லுவோர் என்னும் பெயர் கூறித் தோழி கொடுமை கூறியவழி அவனையே பிரிதல் வன்மை யாங்கறிந்தனரெனத் தலைவி வினவுதலின் அது பின்னுங் கேட்டற்கு அவாவியதாம்.

இனித் தோழியிடத்துத் தலைவனைக் காய்தல் முதலியன வருமாறு :

" நன்னலம் தொலைய நலமிகச் சாஅய்
இன்னுயிர் கழியினும் உரையல அவர்நமக்கு
அன்னையும் அத்தனும் அல்லரோ தோழி
புலவியது எவனோ அன்பிலங் கடையே." (குறுந். 93)

இது, காய்தல்.

" வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
பதைப்பத் ததைந்த நெய்தல் கழிய
ஓதமொடு பெயரும் துறைவற்குப்
பைஞ்சாய்ப் பாவை ஈன்றனென் யானே."

(ஐங்குறு. 155)

இது, பல்லாற்றானும் வாயில் நேராத தலைவியை மகப் பேற்றிற்கு உரிய காலங்கழிய ஒழுகா நின்றாயென நெருங்கிய தோழிக்கு யான் களவின்கண் மகப்பெற்றேனெனக் காய்ந்து கூறியது.

"கொடிப்பூ வேழம் தீண்டி அயல
வடுக்கொண் மாஅத்து வண்டளிர் நுடங்கும்
மணித் துறை ஊரன் மார்பே
பனித்துயில் செய்யு மின்சா யற்றே," (ஐங்குறு. 14)

இஃது, உவத்தல்.

"புதன்மிசை நுடங்கும் வேழ வெண்பூ
விசும்பாடு குருகில் தோன்றும் ஊரன்
புதுவோர் மேவலன் ஆகலின்
வறிதா கின்றுஎன் மடங்கெழு நெஞ்சே."
(ஐங்குறு. 17)

இது, பிரித்தல்.

"நாமவர் திருந்தெயிறு உண்ணவும் அவர்நமது
ஏந்துமுலை ஆகத்துச் சார்ந்துகண் படுப்பவும்
கண்சுடு பரத்தையின் வந்தோர்க் கண்டும்
ஊடுதல் பெருந்திரு உறுகெனப்
பெறல்அரு மையின் முயங்கி யோனே."

இது, பெட்டது.

"நீரார் செறுவின்" (கலி. 75) என்னும் மருதக்கலியும் அது.

இனிப் 'பல்வேறுநிலை' யாவன, தோழி பிரிவுணர்த்திய வழிச் செலவழுங்கக் கூறுவனவற்றின் வேறுபாடுகளும், பிரிந்துழி வழியருமை பிறர் கூறக் கேட்டுக் கூறுவனவும், தலைவனது செலவுக்குறிப்பு அறிந்து தானே கூறுவனவும், தூதுவிடக் கருதிக் கூறுவனவும், நெஞ்சினையும் பாணனையும் தூதுவிட்டுக் கூறுவனவும், வழியிடத்துப் புட்களை நொந்து கூறுவனவும், பிரிவிடையாற்றுளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலெனக் கூறுவனவும், அவன் வரவு தோழி கூறியவழி விரும்பிக் கூறுவனவும், கூறிய பருவத்தின் வாராது பின்னர் வந்தவனொடு கூடியிருந்து முன்னர்த் தன்னை வருத்திய குழலை மாலையிற் கேட்டுத் தோழிக்குக் கூறுதலும், தலைவன் தவறிலனெனக் கூறுவனவும், புதல்வனை நீங்காதொழுகிய தலைவன் நீங்கியவழிக் கூறுவனவும், காமஞ்சாலா விளமையோளைக் களவின்கண்

மணந்தமை அறிந்தேனெனக் கூறுவனவும், இவற்றின் வேறுபட வருவன பிறவுமாம்.

"அருளும் அன்பு நீக்கித் துணைதுறந்து
பொருள்வயின் பிரிவோர் உரவோ ராயின்
உரவோர் உரவோ ராக
மடவ மாக மடந்தை நாமே." (குறுந். 20)

இது, செலவழுங்கக் கூறியது.

"வெந்திறற் கடுவளி பொங்கர்ப் போந்தென
நெற்றுவிளை உழிஞ்சில் வற்ற லார்க்கும்
மலையுடை அருஞ்சுரம் என்பநம்
முலையிடை முனிநர் சென்ற வாறே." (குறுந். 39)

"எறும்பி அளையில் குறும்பல் சுனைய
உலைக்கல் அன்ன பாறை ஏறிக்
கொடுவில் எயினர் பகழி மாய்க்கும்
கவலைத்து என்பவவர் தேர்சென்ற ஆறே
அதுமற்று அவலம் கொள்ளாது
நொதுமற் கலுழும்இவ் வழுங்க லூரே." (குறுந். 12)

இவை, வழியருமை கேட்டவழிக் கூறியன.

"நுண்ணெழின் மாமைச் சுணங்கணி ஆகம்தம்
கண்ணொடு தொடுத்தென நோக்கியும் அமையார்என்
ஒண்ணுதல் நீவுவர் காதலர் மற்றவர்
எண்ணுவது எவன்கொல் அறியேன் என்னும்."
(கலி. 4)

இது, செல்வக் குறிப்பறிந்து தோழிக்குக் கூறியது கொண்டு கூறிற்று.

"பலர்புகழ் சிறப்பில்நுங் குரிசில் உள்ளிச்
செலவுநீ நயந்தனை யாயின் மன்ற
இன்னா வரும்படர் எம்வயிற் செய்த
பொய்வ லாளர் போலக்
கைவல் பாணவெம் மறவா தீமே." (ஐங்குறு. 473)

இது, தூதுவிடக் கருதிக் கூறியது.

"சூழ்கம் அம்மோ தோழிபாழ் பட்டுப்
பைதற வெந்த பாலை வெங்காட்டு
அருஞ்சுரம் இறந்தோர் தேஎத்துச்
சென்ற நெஞ்சம் ஈட்டிய பொருளே." (ஐங்குறு. 317)

இது, நெஞ்சினைத் தூதுவிட்டுக் கூறியது.

"மையறு சுடர்நுதல் விளங்கக் கறுத்தோர்
செய்யரண் சிதைத்த செருமிகு தானையொடு
கதழ்பரி நெடுந்தேர் அதர்படக் கடைஇச்
சென்றவர்த் தருகுவல் என்னும்
நன்ருல் அம்ம பாணனது அறிவே." (ஐங்குறு. 474)

இது, பாணனைத் தூதுவிட்டுக் கூறியது.

"புல்வீழ் இற்றிக் கல்லிவர் வெள்வேர்
வரையிழி அருவியில் தோன்று நாடன்
தீதில் நெஞ்சத்துக் கிளவி நம்வயின்
நயந்தன்று வாழி தோழி நாமும்
நெய்பெய் தீயின் எதிர் கொண்டு
தாமணந் தனையம் எனவிடுகந் தூதே." (குறுந். 106)

இது, தூதுகண்டு கூறியது.

"ஆம்பல் பூவின் சாம்பல் அன்ன
கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ
முன்றில் உணங்கன் மாந்தி மன்றத்
தெருவின் நுண்டாது குடைவன ஆடி
இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்
புன்கண் மாலையும் புலம்பும்
இன்றுகொல் தோழிஅவர் சென்ற நாட்டே." (குறுந். 46)

இது, சென்ற நாட்டு இவை இன்று கொலென்றது.

"வாரா ராயினும் வரினும் அவர்நமக்கு
யாரா கியரோ தோழி நீர
நீலப் பைம்போது உளரிப் புதல
பீலி ஒண்பொறிக் கருவிளை யாட்டி
நுண்மு ளீங்கைச் செவ்வரும் பூழ்த்த

வண்ணத் துய்ம்மலர் உதிரத் தண்ணென்று
இன்னது எறிவரும் வாடையொடு
என்ன யினள்கொல் என்ன தோரே.'' (குறுந். 110)

இது, பருவங்கண்டு அழிந்து கூறியது.

''உதுக்காண் அதுவே இதுவென் மொழிகோ
நேர்சினை இருந்த விருந்தோட்டுப் புள்ளினம்
தாம்புணர்ந் தமையில் பிரிந்தோர் உள்ளா
தீங்குரல் அகவக் கேட்டு நீங்கிய
ஏதிலாளர் இவண்வரின் போதில்
பொம்மல் ஓதியும் புனையல்
எம்முந் தொடாஅது என்குவ மன்னே.'' (குறுந். 191)

இது, காய்ந்து கூறியது.

''முதைப்புனங் கொன்ற ஆர்கலி உழவர்
விதைக்குறு வட்டி போதொடு பொதுளப்
பொழுதோ தான்வந் தன்றே மெழுகான்
தூதுலைப் பெய்த பகுவாய்த் தெண்மணி
மரம்பயில் இறும்பின் ஆர்ப்பச் சுரன்இழிபு
மாலை நனிவிருந்து அயர்மார்
தேர்வரும் என்னும் உரைவா ராதே.'' (குறுந். 155)

இது, பொழுதொடு தான் வந்தன்றெனப் பொழுதுகண்டு மகிழ்ந்து கூறினாள்.

''அம்ம வாழி தோழி சிறியிலை
நெல்லி நீடிய கல்காய் கடத்திடைப்
பேதை நெஞ்சம் பின்படச் சென்றோர்
கல்லினும் வலியர் மன்ற
பல்லிதழ் உண்கண் அழப்பிரிந் தோரே.'' (ஐங்குறு. 334)

இது, வன்புறை எதிரழிந்து கூறியது.

''அம்ம வாழி தோழி ஆவதும்
வல்லா கொல்லோ தாமே யவண
கல்லுடை நன்னாட்டுப் புள்ளினப் பெருந்தோடு
யாஅந் துணைபுணர்ந்து உறைதும்
யாங்குப் பிரிந்துஉறைதி என்னு மாறே.'' (ஐங்குறு. 333)

இது, புள்ளை நொந்து கூறியது.

"காதலர் உழைய ராகப் பெரிதுவந்து
சாறுகொள் ஊரில் புகல்வேன் மன்ற
அத்த நண்ணிய அங்குடிச் சீறூர்
மக்கள் போகிய அணிலாடு முன்றில்
புலம்பில் போலப் புல்லென்று
அலப்பென் தோழியவர் அகன்ற ஞான்றே."

(குறுந். 41)

இஃது, ஆற்றுவலெனக் கூறியது.

"நீகண் டனையோ கண்டார்க்கேட் டனையோ
ஒன்று தெளிய நசையின மொழிமோ
வெண்கோட் டியானை சோணை படியும்
பொன்மலி பாடலி பெறீஇயர்
யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே." (குறுந். 75)

இது, தலைவன் வரவை விரும்பிக் கூறியது.

"இம்மையால் செய்ததை இம்மையேயாம் போலும்
உம்மையாம் என்பவர் ஓரார்காண்—நம்மை
எளியர் என நினைந்த இன்குழலா ரேடி
தெளியச் சுடப்பட்ட வாறு." (திணை. நூற். 123)

இது, குழல் கேட்டுத் தோழிக்குக் கூறியது.

"பெருங்கடல் திரையது சிறுவெண் காக்கை
நீத்துநீர் இருங்கழி இரைதேர்ந்து உண்டு
பூக்கமழ் பொதும்பர்ச் சேக்கும் துறைவனொடு
யாத்தேம் யாத்தன்று நட்பே
அவிழ்த்தற்கு அரிதது முடிந்துஅமைந் தன்றே."

(குறுந். 313)

இது, தலைவன் தவறிலனென்று கூறியது.

"உடலினேன் அல்லேன் பொய்யாது உரைமோ
யார வண்மகிழ்ந் தானே தேரொடு
தளர்நடைப் புதல்வனை உள்ளிநின்
வளமனை வருதலும் வௌவி யோளே." (ஐங்குறு. 66)

இது, புதல்வனை நீங்கியவழிக் கூறியது.

"கண்டனெம் அல்லமோ மகிழ்நநின் பெண்டே
பலரொடு பெருந்துறை மலரொடு வந்த
தண்புனல் வண்டல் உய்த்தென
உண்கண் சிவப்ப அழுதுநின் றோளே." (ஐங்குறு. 69)

இது, காமஞ்சாலா விளமையோளைக் களவில் மணந்தமை அறிந்தேனென்றது.

வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇ - வாயில் தன் ஏதுவாகத் தலைவிக்கு வருங் கூற்று வகையோடு கூட்டி:

வாயில்களாவார் செய்யுளியலுட் கூறும் பாணன் முதலியோர். 'வகை' யென்றதனுன் ஆற்ருமையும் புதல்வனும் ஆடை கழுவு வாளும் பிறவும் வாயிலாதல் கொள்க.

"கொக்கினுக்கு ஒழிந்த தீம்பழம் கொக்கின்
கூம்புநிலை அன்ன முகைய ஆம்பல்
தூங்குநீர்க் குட்டத்துத் துடுமென வீழும்
தண்டுறை ஊரன் தண்டாப் பரத்தமை
புலவாய் என்றி தோழி புலவேன்
பழன யாமைப் பாசறைப் புறத்துக்
சுழனி காவலர் சுடுநந்து உடைக்கும்
தொன்றுமுதிர் வேளிர் குன்றூர் அன்னஎன்
நன்மனை நனிவிருந்து அயரும்
கைதூ இன்மையின் எய்தா மாறே." (நற்றிணை, 280)

இந் நற்றிணை தலைவனெடு புலவாமை நினக்கு இயல்போ வென்ற தோழிக்கு விருந்தாற் கைதூவாமையின் அவனை எதிர்ப் படப் பெற்றிலேனல்லது புலவேனே என்றவாறு.

"அன்னை இவனே இளமா ணக்கன்
தன்னூர் மன்றத் தென்னன் கொல்லோ
இரந்தூண் நிரம்பா மேனியொடு
விருந்தின் ஊரும் பெருஞ்செம் மலனே. (குறுந். 33)

இது, பாணன் சொல்வன்மைக்குத் தோற்று வாயில் நேர்ந்த தலைவி தோழிக்கு உரைத்தது;

"காண்மதி பாணநீ உரைத்தற்கு உரியை
துறைகெழு கொண்கன் பிரிந்தென
இறைகேம் எல்வளை நீங்கிய நிலையே." (ஐங்குறு. 140)

இது, பரத்தையிற் பிரிந்துழி இவன் நின் வார்த்தையே கேட்பனென்பது தோன்றப் பாணற்குத் தலைவி கூறியது.

"ஆடியல் விழவின் அழுங்கன் மூதூர்
உடையோர் பான்மையில் பெருங்கை தூவா
அறனில் புலத்தி எல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு
வாடா மாலை துயல்வர ஓடிப்
பெருங்கயிறு நாலும் இரும்பனம் பிணையல்
பூங்கன்ஆயம் ஊக்க ஊங்காள்
அழுதனள் பெயரும் அஞ்சில் ஓதி
நல்கூர் பெண்டின் சில்வளைக் குறுமகள்
ஊசல் உறுதொழில் பூசல் கூட்டா
நயனின் மாக்களொடு குழீஇப்
பயனின்று அம்மஇவ் வேந்துடை அவையே."
(நற்றிணை, 90)

இது பாணனைக் குறித்துக் கூறியது.

"நெய்யும் குய்யும் ஆடி மெய்யொடு
மாசுபட் டன்றே கலிங்கமும் தோளும்
திதலை மென்முலைத் தீம்பால் பிலிற்றப்
புதல்வற் புல்லிப் புனிறுநா றும்மே
வாலிழை மகளிர் சேரித் தோன்றும்
தேரோற்கு ஒத்தனெம் அல்லேம் அதனால்
பொன்புனை நரம்பின் இன்குரல் சீறியாழ்
எழாஅல் வல்லை ஆயினும் தொழாஅல்
1.[புரையோர் அன்ன புரையு நட்பின்
இளையோர் கூம்புகை மருளவோர் ஆங்குக்
கட்டம் காது விட்டாங்கு அமைத்துக்]
கொண்டுசெல் பாணநின் தண்டுறை ஊரனைப்
பாடுமனைப் பாடல் கூடாது நீடுநிலைப்

1. இம் மூவடிகளும் நற்றிணைப் பதிப்பில் இல்லை.

புரவியும் பூணிலை முனிகுவ
விரகில மொழியல்யாம் வேட்டதில் வழியே.''
(நற்றிணை, 380)

இது பாணனுக்கு வாயின் மறுத்தது.

''புல்லேன் மகிழ்ந புலத்தலும் இலனே
கல்லா யானைக் கடுந்தேர்ச் செழியன்
படைமாண் பெருங்குள மடைநீர் விட்டெனக்
காலணைந்து எதிரிய கணைக்கோட்டு வாளை
அள்ளலங் கழனி உள்வாய் ஓடிப்
பகடுசேறு உதைத்த புள்ளிவெண் புறத்துச்
செஞ்சா லுழவர் கோற்புடை மதரிப்
பைங்கால் செறுவின் அணைமுதற் புரளும்
வாணன் சிறுகுடி அன்ன என்
கோனேர் எல்வளை ஞெகிழ்த்த நும்மே. (நற்றிணை, 340)

இஃது, ஆற்ருமை வாயிலாகச் சென்றுழித் தலைவி கூறியது.

''வெள்ளாம் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
காலை யிருந்து மாலைச் சேக்கும்
தண்கடல் சேர்ப்பனொடு வாரான்
தான்வந் தனன்எங் காத லோனே.'' (ஐங்குறு. 157)

இது, வாயில் வேண்டி ஒழுகுகின்ருன் புதல்வன் வாயிலாக வருமெனக் கேட்டு அஞ்சிய தலைவி அவன் விளையாடித் தனித்து வந்துழிக் கூறியது.

''கூர்முண் முள்ளி'' என்னும் (26) அகப்பாட்டு ஆற்ருமை வாயிலாகச் சென்றுழித் தடையின்றிக் கூறியவாறு.

'மாருப் புண்போன் மாற்றச் சீற்றங் கனற்றப்' பின்னும் புலவி கூர்ந்து தலைவன் கேட்ப முன்னிலைப் புறமொழியாக யான் நோமென்னவும் ஒல்லாரென வலிதிற் கூறியவாறு காண்க.

''பூங்கட் புதல்வனைப் பொய்பல பாராட்டி'' (கலி. 79)
எனப் புதல்வனை வாயிலாகக் கொண்டு சென்றவாறு காண்க.

"நாடிநின் றூதாடித் துறைச்செல்லாள் ஊரவர்
ஆடைகொண்டு ஒலிக்குநின் புலத்திகாட்டு என்றுளோ
கூடியார் புனலாடப் புணையாய மார்பினில்
ஊடியார் எறிதர ஒளிவிட்ட அரக்கினை." (கலி. 72)

இஃது; ஆடை கழுவுவாளை வாயிலென்றது.

பிறவும் வேறுபட வருவனவெல்லாம் இதனாற் கொள்க.

கிழவோள் செப்பல் கிழவது என்ப - இப்பத்தொன்பதுங் கிழவோளுக்கு உரிமையுடைத்தென்று கூறுவர் ஆசிரியர், என்றவாறு.

முன்னர் நின்ற ஏழனுருபுகளைத் தொகுத்து இன்னதன் கண்ணும் இன்னதன்கண்ணுந் தலைவி செப்புதலை வாயிலின் வகையோடே கூட்டிக் கிழவோள் செப்பல் வாயிலின் வருஉம் வகையொடு தொகைஇ என மாறுக.

(வி-ரை) இத் தொடர்க்கு நச்சினார்க்கினியர் கூறியிருக்கும் விளக்கமும் உரையும் சிறிதும் பொருத்தமற்றதும் ஆசிரியர் கருத்தொடு படாததுமாம். தாம் வேண்டியவாறெல்லாம் உரை கூறித் தமிழ் மரபினைக் கெடுக்கும் தகைமை மறுத்தற்குரியதாம். அவனறிவாற்ற அறியுமாகலின் ஏற்றற்கண்ணும் என்பது - தலைவனது நினைவைத் தலைவி மிக அறியுமாகலின் அவனை உயர்த்துக் கூறுதற் கண்ணும் தலைவி கூற்று நிகழும். நிறுத்தற்கண்ணும் என்பது - தலைவனது பண்பினைத் தோழி கூறியவற்றால் தான் நிறுத்துக் கூறுதற்கண்ணும் தலைவி கூற்று நிகழும். உரிமை கொடுத்த கிழவோன் பாங்கின் பெருமையில் திரியா அன்பின் கண்ணும் என்பது - தலைவிக்கு உரிமையைக் கொடுத்த கிழவோன் மாட்டுப் பெருமையிற் திரியா அன்பின் கண்ணும் தலைவி கூற்று நிகழும் என இளம்பூரணர் உரை காண்பர்.

நின்ற சொல்லர் - என்றும் நிலைபெற்ற (பொய்யாத சொல்லை யுடைய) சொல்லையுடையர். புரைய - உயர்வுடையது. தாமரைத் தாது உயர்வும் சந்தனத் தாது இழிவும் உடையது என்பது நச்சினார்க்கினியர் கருத்தாகும்.

கருங்கோல் - கரித்தண்டினையுடைய, இழைக்கும் - செய்யும். புறத்து உறைதலின் - வெளியில் தங்குதலின்.

அனை மதுகையர் கொல் - அத்தகைய வலிமையுடையவரோ.

வாரல் - வாழுதற்குரிய, பயிர் - ஊது கொம்பு, அசுணம் - இசை உணரும் ஓர் பறவை.

களித்த - தழைத்த.

பக - பிளக்க, பாசடை - பசிய இலை, கழு - கழுக்கோல், தித்தி - தேமல்.

கூன் - வளைந்த, பொய்தல் - விளையாட்டு, கவவுக்கை - தழுவிய கை, சிறுபுறம் - முதுகுப்புறம். எங்கையர்க்கு - எம்தங்கையர்க்கு.

நோதக்காய் - பரத்தமையால் வெறுக்கத்தக்க; நொந்தீவார் - வெறுப்பார், தோற்றிய - ஊடல் உணர்த்த, இளையவர் - பரத்தையர்.

இகவாய் - பரத்தையர் குறிக் கொண்டதனைக் கடவாய்.

முனைஇய - வெறுத்த, காரான் - கரிய எருமை, பரிந்து - அறுத்து, தூம்பு-துளை, வாருற்று - வீழ்ச்சியுற்று, நூறும் - அழிக்கும்.

ஏமுறுதற்கு - இன்பமுறுதற்கு.

களித்த - முளைத்த, நவிலா - பயிலாத, செத்தனள் - ஒப்புமை கருதி, கரைய - குறைகூற, வானத்து அணங்கரும் கடவுள் - அருந்ததி.

அவ்வாய் - அழகிய வாய், மழலையின் - மழலைச் சொல்லைப் பேசுதலின், துயல்வர - அசைய, கைதூவா - கையொழியாத. எல்லிழாய் - ஒளியையுடைய அணிகளையுடையாய், ஏறுதிப்பாடியும் என்றற்கு - யாம் ஏறுதிப்பாடியிடத்தேம் என்ற தன்மைத் தாக. படிறு எருக்கி - வஞ்சனையால் வருத்தி.

நிலைப்பாலுள் - நிற்கின்ற நிலைகளின் கூற்றில், கன்றி - மாறுபாட்டில்பட்ட, பகுதி - கூறுபாடு, அது காவற்பாங்கில் பக்கமும் ஆங்கோர் பக்கமும்.

ஆகிய இரண்டிற்கும் ஆயினமையின் ஆகு பெயராயிற்று.

கண்ணி - கருதி, கடி - காவல், கனைதொறும் - செறியும் தொறும்.

கயம் - மென்மை, கோடுலர்ந்த - வீழ்ந்து கிடந்த.

வேரை - வேர்வையை உடைய, சுவல் - பிடர், புள்ளிகை - மகளிர் அணியும் காதணி, அசையினே - இழைத்தனே, மத்திகை - சாட்டை, சேதிகை - உழக்காலும் நாழிகையாலும் வண்ணம் தீட்டும் தொழில், வாதுவனுய் - குதிரை ஓட்டுபவனுய்.

கையொன்று - நடத்தையொன்று.

உறுவளி - பெருங்காற்று, ஆர்இற்று - காம்பற்று, போத்தந்த - போன, அடைமறை - இலையால் மறைந்த, சீத்தை - கைவிடத் தக்கவன், சிறைசெய்தற்கண்ணும் - தடுத்துக் கொள்ளுதற்கண்ணும், மணிபுரை - பவளமணி போன்ற, பல்காழ் - பலவடம்.

அலைக்கொரு கோல்தா - அடித்தற்கு ஒரு கோல்தா. இதற்கு முன்னுள்ள இரண்டு துறைகளுடன் இதனையும் கூட்டி உரை காண்பர் இளம்பூரணர். அது வருமாறு; தன் மாட்டு நின்ற மிகுதி யானும், அவன் மாட்டு நின்ற வேறுபாட்டானும் இன்னுத பழைய சூளுறவைத் தலைவி எடுத்த வழியும் கூற்று நிகழும்.

வேற்றுமை - மெய்வேறுபாடு, தேற்ற-தெளிவிக்க, தார் மயங்கி வந்த - பரத்தையரது மாலையை நின் மாலையாக மயங்கி அணிந்து வந்த, போர் மயங்கி - ஊடல் போரில் மயங்கி.

காமக்கிழத்தி நலத்தினைப் பாராட்டிய தீமையின் முடிக்கும் பொருளின் கண்ணும் கூற்று நிகழும் என உரை காண்பர் இளம் பூரணர்.

இருமருப்பு - பெரிய கொம்பு, பால்பெய் - பக்கத்தே விதைக்கப் பட்ட இன்னுக் கிளவியால் எவனே என இயைக்க. எவனே - என்ன பயனே.

பார்பக - நிலம் பிளவு படுமாறு, அடைந்தன்ன - செறிந்தாற் போன்ற. ஆட்டு ஒழி - விளையாட்டு ஒழிந்த. பந்தின் - பந்தைப் போல, கம்பளத்தன்ன - கம்பளம் விரித்தாற் போன்ற, வெள்ளில் வல்சி -விளாம்பழமாகிய உணவு.

ததைந்த - செறிந்து மலர்ந்த

உருப்பவிர் அமையம் - நன்பகற் காலத்து,

அத்தன் - தந்தை,

செத்தன - இறந்ததாக, பதைப்ப - அசைய

கொடிப்பூ - நீண்ட பூ, பனித்துயில் - இனிமையான துயில்.

புதல் - புதர், சிறுதூறு. விசும்பாடு குருகு - விண்ணில் நின்ற - சையும் குருகு, புதுவோர் - பரத்தையர்.

கண்சுடு பரத்தையின் - சினக்கின்ற பரத்தையிடத்தினின்றும். பெட்டது - மிகவும் விரும்பியது.

உரவோர் - அறிவுடையோர்.

கொங்கர் - மரக்கிளை, உழிஞ்சில் - வாகைமரம்.

அளையில் - புற்றைப்போல, உளைக்கல் - பட்டடைக்கல், மாய்க்கும் - தீட்டும்.

பைதர - பசுமைநீங்க

கதழ்பரி - விரைந்து செல்லும் குதிரை, அதர் - வழி, கடைஇ - செலுத்தி.

இற்றி - ஒரு வகை மரம், நெய்பெய்தீயின் - நெய் பெய்யப் பெற்ற தீயின் கிளர்ச்சி போன்ற; மணமகிழ்வோடு மணந்தனையம் - மணந்த காலத்துப் போன்றுள்ளேம்.

சாம்பல் - வாடிய பூ, உணங்கல் - காயவைத்திருக்கும் தானியம்.

உளரி - மலரச்செய்து, ஊழ்த்த - மலர்ந்த.

முதைப்புனம் - பழங்கொல்லை, கொன்ற - உழுத, இறும்பின் - குறுங்கட்டிடத்து.

வல்லா கொல்லோ - மாட்டாவோ, பெருந்தோடு - பெரிய தொகுதி.

சாறு கொல் - விழாவினைக் கொண்ட, அத்தம் - பாலைநிலம், புலம்புகல் - தனிமையுற்று இருக்கும் வீடு.

சோணை - சோணையாறு, பாடலி - ஒரு நகரம்.

உம்மையால் - மறுமைக்காம், குழலாள் - பரத்தையர். நம்மை எளியர் என்று நினைத்த பரத்தையர் இது பொழுது வருத்தமுறு

கின்றமையின் இம்மையில் செய்த வினையின் பயன் இம்மையிலேயே துய்ப்பர் என விளங்குகின்றது.

நீர்ப்பு நீர் - வெள்ளமாகப் பெருகிய நீர், யாத் தேம் - அன்பினால் பிணைப்புண்டேம், நட்புயாத்தன்று (அதனால்) நட்பமைந்தது.

உடலினேன் - பகைத்தேன், வவ்வியோள் - தடுத்தவள்.

வண்டல் - விளையாட்டு வகையானமைந்த சிற்றில்.

தீம்பழம் - இனிய மாங்கனி, கூம்புநிலை - ஒடுங்கியிருக்கும் நிலை, தூங்கு நீர் குட்டம் - நிறைந்த ஆழமுள்ள நீர், கைதூவின்மை - கைபொழியாமை.

விருந்தின் ஊரும் - விருந்தின் பொருட்டுச் செல்லும்.

இறைகேழ் - முன்கையில் பொருந்திய.

ஆடு இயல் - கூத்து இயன்ற, அழுங்கல் - ஒலி, தூவா-ஒழியாத, புலத்தி - ஆடை ஒளிப்பவள், புகர்ப்புகர் - சோற்றின் கஞ்சி, நல் கூர் பெண்டு - குறைவுபட்ட பெண்தன்மையுடைய.

குய் - நறும்புகை, புனிறு - முடைநாற்றம், எழால் - எழுப்ப.

காலணைந்து - கால்வாயை அணைந்து சென்று, சேறு உதைத்த புள்ளி - சேற்றை மிதித்தலால் தெறித்த சேற்றுப்புள்ளி, மதரி - செருக்குற்று, செறு - சேறு, அணைமுதல் - வரம்படியிலே.

செத்தன - இறந்ததாக, சேக்கும் - தூங்கும்.

ஒல்லார் - கைவிடார். (6)

தலைவி கூற்றிற்குரிய சிறப்பு விதி

148. புணர்ந்துடன் போகிய கிழவோள் மனையிருந்து
இடைச்சுரத் திறைச்சியும் வினையுஞ் சுட்டி
அன்புறு தக்க கிளத்தல் தானே
கிழவோன் செய்வினைக் கச்ச மாகும்.

இது, தலைவி கூற்றின்கட் படுவதோர் இலக்கணங் கூறுகின்றது.

(இ - ள்.) புணர்ந்து உடன் போகிய கிழவோன் மனை இருந்து - களவுக் காலத்துப் புணர்ந்து உடன் போகிய தலைவி கற்புக்காலத்து இல்லின்கண் இருந்து; இடைச்சுரத்து இறைச்சியும் அன்புறுதக்க வினையுஞ் சுட்டிக் கிளத்தல் தானே - தான் போகிய காலத்துக் காட்டின்கட் கண்ட கருப்பொருள்களையுந் தலைவன் தன்மேல் அன்பு செய்தற்குத்தக்க கருப்பொருளின் தொழில்களையுங் கருதிக் கூறுதல்தானே; கிழவோன் செய் வினைக்கு அச்சம் ஆகும் - தலைவன் எடுத்துக்கொண்ட காரியத் திற்கு முடித்தலாற்றான்கொலென்று அஞ்சும் அச்சமாம் (எ - று).

எனவே, அருத்தாபத்தியாற் புணர்ந்து உடன் போகாத தலைவி மனைக்கணிருந்து தலைவன் கூறக்கேட்டு அக்கருப் பொருள்கள் தன்மேல் அன்புறுதக்க வினைகளைக் கூறுதல் தலைவன் செய்வினைக்கு அச்சமாகாது வருவரெனத் துணிந்து கூறுதலாமென்றாராயிற்று.

"கான யானை தோல்நயந்து உண்ட
பொரிதா ளோமை வளிபொரு நெடுஞ்சினை
அலங்கல் உலவை ஏறி ஒய்யெனப்
புலம்புதரு குரல புறவுப்பெடை பயிரும்
அத்த நண்ணிய அங்குடிச் சீறூர்ச்
சேர்ந்தனர் கொல்லோ தாமே யாம்தமக்
கொல்லேம் என்ற தப்பல்
சொல்லாது அகறல் வல்லு வோரே." (குறுந். 79)

புலம்புதரு குரலவாய்ப் புறவினைப் பெடை அழைக்கும் வருத்தங் கண்டு வினைமுடியாமல் வருவரோவென் அஞ்சிய வாறு காண்க.

"அரிதாய வறனெய்தி' என்னும் (11) கலிப்பாட்டுத் தலைவன் அன்புறுதக்கன கூறக் கேட்ட தலைவி அவற்றைக் கூறிப் புனை நலம் வாட்டுநர் அல்லரென வரவு கருதிக் கூறிய வாறு காண்க. இதனுள் ஆற்றுவிக்குந் தோழி வருவர் கொல் லென ஐயுற்றுக் கூறலின்மையின் தோழி கூற்றன்மையும் உணர்க.

"புல்லுவிட் டிறைஞ்சிய பூங்கொடி தகைப்பன" (கலி. 3) என்ருற் போல்வன தலைவி கூற்ருய் வருவன உளவாயின் இதன் கண் அடக்குக.

(வி – ரை) அருத்தா பத்தி - சொல்லியது கொண்டு சொல்லா தவற்றை உணர்தல். களவுக்காலத்துத் தலைவனுடன் உடன் போக்குச் சென்றிருந்த தலைவி இறைச்சிப் பொருள்களையும், அன்பினல் இன்பமார்ந்திருக்கும் கருப்பொருள்களையும், தலைவனிடத்துக் கூறுவாளாயின் அது அவன் செய்கின்ற வினைக்கண் தனக் கேற்படும் அச்சத்தைக் குறிப்பதாகும். இவ்வாறு சொல்லவே புணர்ந்துடன் போகத் தலைவியாகின் இவ்விரண்டும் கூறின் தலைவன் விரைந்து வருவன் எனக் கருதுதற்குரிய குறிப்பாம் எனச் சொல்லாதவற்றை உணர்தலின் அருத்தாபத்தியாயிற்று.

தோல் - யாமரத்தின் பட்டை, பொரிதாள் - பொரிந்தஅடி, அலங்கல் - அசைதலையுடைய, உலவை - மரத்தின் உலர்ந்த கிளை. ஒல்லேம் - போதற்கு உடன்படேம். (7)

வாயில்களுக்கு உரிய கூற்றுக்கள்

149. தோழியுள் ளுறுத்த வாயில் புகுப்பினும்
ஆவயின் நிகழு மென்மனர் புலவர்.

இது தோழி முதலிய வாயில்கட்கு எய்தாத தெய்துவித்தது.

(இ - ள்.) தோழி உள்ளுறுத்த வாயில் புகுப்பினும் - தலைவனது செலவுக் குறிப்பு அறிந்து அவனைச் செலவழுங்குவித் தற்குத் தோழி யுள்ளிட்ட வாயில்களைத் தலைவி போகவிட்ட அக்காலத்து அவர் மேலன போலக் கூறும் கூற்றுக்களும்; ஆவயின் நிகழும் என்மனர் புலவர் - தலைவி அஞ்சினற்போல அவ்வச்சத்தின் கண்ணே நிகழுமென்று கூறுவர் புலவர் (எ - று).

"அறனின்றி யயல்தூற்றும்" (கலி. 3) என்னும் பாலைக் கலியுள் இறைச்சியும் வினையுமாகிய பூ முதலியன கூறியவாற்ருல் தலைவிக்கிரங்கி நீர் செலவழுங்குமெனக் கூறுவாள் "யாமிரப்பவு மெமகொள்ளா யாயினை" எனப் பிற வாயில்களையுங் கூட்டி உரைத்தவாறு காண்க. (8)

### தோழிக்குக் கூற்று நிகழும் இடம்

150. பெறற்கரும் பெரும்பொருள் முடிந்தபின் வந்த
தெறற்கரு மரபிற் சிறப்பின் கண்ணும்
அற்றமழி வுரைப்பினும் அற்ற மில்லாக்
கிழவோட் சுட்டிய தெய்வக் கடத்தினும்
சீருடைப் பெரும்பொருள் வைத்தவழி மறப்பினும்
அடங்கா வொழுக்கத் தவன்வயி னழிந்தோளை
அடங்கக் காட்டுதற் பொருளின் கண்ணும்
பிழைத்துவந் திருந்த கிழவனை நெருங்கி
இழைத்தாங் காக்கிக் கொடுத்தற் கண்ணும்
வணங்கியன் மொழியான் வணங்கற் கண்ணும்
புறம்படு விளையாட்டுப் புல்லிய [1]புகற்சியும்
சிறந்த புதல்வனை நேராது புலம்பினும்
மாணலந் தாவென வகுத்தற் கண்ணும்
பேணா வொழுக்க நாணிய பொருளினும்
[2]சூள்நயத் திறத்தாற் சோர்வுகண் டழியினும்
பெரியோ ரொழுக்கம் பெரிதெனக் கிளந்து
பெறுதகை யில்லாப் பிழைப்பினும் [3]அவ்வயின்
உறுதகை யில்லாப் புலவியுள் மூழ்கிய
கிழவோள்பா னின்று கெடுத்தற் கண்ணும்
உணர்ப்புவயின் வாரா வூடலுற் றோள்வயின்
உணர்த்தல் வேண்டிய கிழவோன்பா னின்று
தான்வெகுண் டாக்கிய தகுதிக் கண்ணும்
அருமைக் காலத்துப் பெருமை காட்டிய
எண்மைக் காலத் திரக்கத் தானும்
பாணர் கூத்தர் விறலிய ரென்றிவர்
பேணிச் சொல்லிய குறைவினை யெதிரும்

---

1. புகர்ச்சியுஞ், 2. சூள்வயின், 3. அவ்வழி எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

நீத்த கிழவனை நிகழுமாறு படீஇக்
காத்த தன்மையிற் கண்ணின்று பெயர்ப்பினும்
[1]பிரியுங் காலை யெதிர்நின்று சாற்றிய
மரபுடை யெதிரு முளப்படப் பிறவும்
வகைபட வந்த கிளவி யெல்லாம்
தோழிக் குரிய வென்மனார் புலவர்.

இது, முறையானே தோழிக்குரிய கூற்றுக் கூறுகின்றது.

(இ – ள்.) (பெறற்கு அரும் பெரும் பொருள் முடிந்த பின் வந்த தெறற்கு அரும் மரபிற் சிறப்பின்கண்ணும்) பெறற்கு அரும் பெரும்பொருள் முடிந்தபின் வந்த - தலைவனுந் தலைவியுந் தோழியும் பெறுதற்கரிதென நினைத்த பெரிய பொருளாகிய வதுவை வேள்விச் சடங்கான் முடிந்தபின்பு தோன்றிய, தெறற்கு அரும் மரபிற் சிறப்பின் கண்ணும் - தனது தெறுதற்கரிய மரபுகாரணத்தால் தலைவன் தன்னைச் சிறப்பித்துக் கூறுமிடத்தும்; தோழி கூற்று நிகழும்.

தலைவியையுந் தலைவனையும் வழிபாடாற்றுதலின் 'தெறற்கரு மரபின்' என்றார். தெறுதல் - அழன்றுநோக்குதல். சிறப்பு, இவளை நீ ஆற்றுவித்தலின் எம் உயிர் தாங்கினேம் என்றாற் போல்வன. அவை எம்பெருமானே அரிதாற்றிய தல்லது யான் ஆற்றுவித்தது உண்டோ வென்றானும் நின் அருளால் இவள் ஆற்றியதல்லது யான் ஆற்றுவித்தது உண்டோவென்றானுங் கூறுவனவாம்.

"அயிரை பரந்த அந்தண் பழனத்து
ஏந்தெழின் மலர தூம்புடைத் திரடாள்
ஆம்பல் குறுநர் நீர்வேட்டு ஆங்கிவள்
இடைமுலைக் கிடந்து நடுங்கல் ஆனீர்
தொழுதுகாண் பிறையில் தோன்றி யாநுமக்கு
அரியேம் ஆகிய காலைப்
பெரிய நோன்றனிர் நோகோ யானே." (குறுந். 178)

1. காலத்து எதிர் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

இதனுண் மூலேயிடைக் கிடந்தும் பனிக்கின்ற நீர் அரிய மாகிய காலத்து எங்ஙனம் ஆற்றினீரென யான் நோவாநின்றேன். இங்ஙனம் அருமை செய்தலால் தேற்றுதற்கு உரியேனுகிய என்னைச் சிறப்பித்துக் கூறல் ஆகாது என்றவாறு காண்க.

''பொங்குதிரை பொருத வார்மணல் அடைகரைப்
புன்கான நாவல் பொதிப்புற இருங்கனி
கிளைசெத்து மொய்த்த தும்பி பழஞ்செத்துப்
பல்கால் அலவன் கொண்டகோட்டு ஊர்ந்து
கொள்ளா நரம்பின் இமிரும் பூசல்
இரைதேர் நாரை எய்திய விடுக்கும்
துறைகெழு மாந்தை அன்ன இவள்நலம்
பண்டும் இற்றே கண்டிசிற் றெய்ய
உழையிற் போகாது அளிப்பினும் சிறிய
ஞெகிழ்ந்த கவின்நலம் கொல்லோ மகிழ்ந்தோர்
கட்கழி செருக்கத் தன்ன
காமம் கொல்லிவள் கண்பசந் ததுவே.'' (நற்றிணை, 35)

இதனுள் தலைவி கனியாகவுந் தும்பி தோழியாகவும் அலவன் தன்மேல் தவறிழைக்குந் தமராகவும் தலைவன் இரை தேர் நாரையாகவும் உள்ளுறையுவமங் கொள்வுழித் தலைவி பொருட்டு யாய்க்கு அஞ்சி யொழுகினேனை நீ காத்த தன்றி யான் ஆற்றுவித்தது உளதோவெனத் தலைவன் சிறப்பிற்கு எதிர் தோழி கூறியவாறு காண்க. 'பண்டும் இற்றே' என்றது பண்டையின் மிகவும் வருந்தினுளென்ருள். இவள் கண் நீண்டு பசந்தது. களவின்கண் நீங்காது அளியாநிற்கவுஞ் சிறிது கெட்ட அழகின் மிகுதியோ, கள்ளுண்டார்க்குக் கள் அறூஉங் காலத்துப் பிறந்த வேறுபாடுபோலுங் காம வேறுபாடோ, அவ்விரண்டும் அல்லவே, இஃது ஓர் அமளிக்கண் துயிலப்பெற்றும் வேதவிதிபற்றிக் கூட்டம் நிகழாமையாற் பிறந்த மிக்க வேறுபாடன்றோ? இதனை இவளே ஆற்றுவதன்றி யான் ஆற்றுவிக்குமாறென்னை என்ருளென்க.

அற்றம் அழிவு உரைப்பினும் – களவுக்காலத்துப்பட்ட வருத்தம் நீங்கினமை கூறினும்;

"எக்கர் ஞாழல் இகந்துபடு பெருஞ்சினை
வீயினிது கமழும் துறைவனை
நீயினிது முயங்குமதி காத லோயே" (ஐங்குறு. 148)

"எரிமருள் வேங்கை இருந்த தோகை
இழையணி மடந்தையில் தோன்று நாட
இனிதுசெய் தனையால் நுந்தை வாழியர்
நன்மனை வதுவை அயரஇவள்
பின்னிரும் கூந்தன் மலர்அணிந் தோயே"
(ஐங்குறு. 294)

என வரும்.

அற்றம் இல்லாக் கிழவோட் சுட்டிய தெய்வக் கடத்தினும் — களவொழுக்கம் புலப்பட ஒழுகுதல் இல்லாத தலைவியைத் தலைவன் வரைந்து கோடல் குறித்துப் பரவிய தெய்வம் அதனை முடித்தலின் அப்பரவுக்கடன் கொடுத்தல் வேண்டுமெனத் தலைவற்குக் கூறும் இடத்தும்:

உ - ம்: "நெஞ்சொடு மொழிகடுத்து அஞ்சுவர நோக்கும்
தாயவட்டு எறுவது தீர்க்க எமக்கெனச்
சிறந்த தெய்வத்து மறையுறை குன்ற
மறைந்து நின்று இறைஞ்சினம் பலவே
பெற்றனம் யாமே மற்றதன் பயனே."

'கிழவோற் சுட்டிய தெய்வக்கடம்' என்று பாடம் ஓதி,

"வாழி யாதன் வாழி அவினி
வேந்துபகை தணிக யாண்டுபல நந்துக
எனவேட் டோளே யாயே யாமே
மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத்
தண்டுதுறை ஊரன் வரைக
எந்தையும் கொடுக்க எனவேட் டேமே" (ஐங்குறு. 6)

என்பது உதாரணங் காட்டுவாரும் உளர்.

சீருடைப் பெரும்பொருள் வைத்தவழி மறப்பினும் - தலைமையுடைய இல்லறத்தைத் தலைவிமாட்டு வைத்த காலத்துத் தலைவன் அறஞ்செயற்கும் பொருள் செயற்கும் இசையுங் கூத்துமாகிய இன்பம் நுகர்தற்குந் தலைவியை மறந்து ஒழுகினும் :

உ - ம்: "கரும்பின் எந்திரம் களிற்றுஎதிர் பிளிறும்
தேர்வண் கோமான் தேனூ ரன்னஇவள்
நல்லணி நயந்துநீ துறத்தலின்
பல்லோர் அறியப் பசந்தன்று நுதலே." (ஐங்குறு. 55)

இதனுள், துறத்தலினெனப் பொதுவாகக் கூறினுள் அற முதலியவற்றைக் கருதுதலின்.

அடங்கா ஒழுக்கத்து அவன்வயின் அழிந்தோளை அடங்கக் காட்டுதற் பொருளின்கண்ணும் - புறத்து ஒழுக்கத்தை உடையனுகிய தலைவன்மாட்டு மனம் வேறுபட்ட தலைவியைப் புறத்து ஒழுக்கமின்றி நின்மேல் அவர் அன்புடையரென அவ்வேறுபாடு நீங்க நெருங்கிக் கூறுதலையுடைத்தாகிய பொருளின்கண்ணும்:

உ - ம்: "செந்நெல் செறுவில் கதிர்கொண்டு கள்வன்
தண்ணக மண்ணளைச் செல்லும் ஊரற்கு
எல்வளை ஞெகிழச் சாஅய்
அல்லல் உழப்பது எவன்கொல் அன்னுய்."
(ஐங்குறு. 27)

இதன் உள்ளுறையாற் பொருளுணர்க.

பிழைத்து வந்து இருந்த கிழவனை நெருங்கி இழைத்து ஆங்கு ஆக்கிக் கொடுத்தற்கண்ணும் - பரத்தையர் மனைக்கண் தங்கி வந்து அகனகர் புகுதாது புறத்திருந்த தலைவனை மிகக் கழறிச் சில மொழிகளைக் கூறி, இதனுனே தலைவி மனத்தின் கண் ஊடல்நீங்குந் தன்மை உளதாக்கிக் கூட்டும் இடத்தும்:

உ - ம்: "நகைநன்று அம்ம தானே இறைமிசை
மாரிச் சுதையின் ஈர்ம்புறத் தன்ன
கூரற் கொக்கின் குறும்பறைச் சேவல்
வெள்ளி வெண்டோடு அன்ன கயல்குறித்துக்
கள்ளார் உவகைக் கலிமகிழ் உழவர்
காஞ்சியங் குறுந்தறி குத்தித் தீஞ்சுவை
மென்கழைக் கரும்பின் நன்பல மிடைந்து
பெருஞ்செய் நெல்லின் பாசவல் பொத்தி
வருந்திக் கொண்ட வல்வாய்க் கொடுஞ்சிறை
மீதழி கடுநீர் நோக்கிப் பைப்பயப்

பார்வல் இருக்கும் பயங்கேம் ஊர
யாமது பேணின்றோ விலமே நீநின்
பண்ணமை நல்யாழ்ப் பாணனொடு விசிபிணி
மண்ணார் முழவின் கண்ணதிர்ந்து இயம்ப
மகிழ்துணைச் சுற்றமொடு மட்டு மாந்தி
எம்மனை வாரா யாகி முன்னாள்
நும்மனைச் சேர்ந்த ஞான்றை அம்மனைக்
குறுந்தொடி மடந்தை உவந்தனள் நெடுந்தேர்
இழையணி யானைப் பழையன் மாறன்
மாடமலி மறுகில் கூடல் ஆங்கண்
வெள்ளத் தானையொடு வேற்றுப்புலத்து இறுத்த
கிள்ளி வளவன் நல்லமர் சாஅய்க்
கடும்பரிப் புரவியொடு களிறுபல வௌவி
ஏதின் மன்னர் ஊர்கொளக்
கோதை மார்பன் உவகையில் பெரிதே''

(அகம். 346)

''கேட்டிசின் வாழியோ மகிழ்ந ஆற்றுற
மையல் நெஞ்சிற்கு எவ்வந் தீர
நினக்குமருந் தாகிய யானினி
இவட்குமருந்து அன்மை நோமென் நெஞ்சே.''

(ஐங்குறு. 59)

என வரும்.

வணங்கியன் மொழியான் வணங்கற்கண்ணும் - தாழும் இயல் பினையுடைய சொற்களால் தோழி தாழ்ந்து நிற்கும் நிலைமைக் கண்ணும் :

உ-ம் : ''உண்துறைப் பொய்கை வராஅல் இனம் இரியும்
தண்துறை ஊர தகுவகொல்—ஒண்டொடியைப்
பாராய் மனைத்துறந்தச் சேரிச் செலவதனை
ஊராண்மை ஆக்கிக் கொளல்'' (ஐந். எழு. 54)

என வரும்.

''பகலில் தோன்றும் பல்கதிர்த் தீயின்
ஆம்பலம் செறுவில் தேனூர் அன்ன

இவள் நலம் புலம்பப் பிரிய
அனைநலம் உடையளோ மகிழ்நநின் பெண்டே.''
(ஐங்குறு. 57)

இதுவும் அதன்பாற்படும்.

புறம்படு விளையாட்டுப் புல்லிய புகற்சியும் - பரத்தையரிடத்தே உண்டாம் விளையாட்டினைத் தலைவன் பொருந்திய மனமகிழ்ச்சிக் கண்ணும் :

விளையாட்டாவது யாறுங் குளனுங் காவும் ஆடிப் பதியிகந்து நுகர்தலாம்.

''பகுவாய் வராஅல் பல்வரி இரும்போத்துக்
கொடுவாய் இரும்பின் கோளிரை துற்றி
ஆம்பன் மெல்லடை கிழியக் குவளைக்
கூம்புவிடு பன்மலர் சிதையப் பாய்ந்தெழுந்து
அரில்படு வள்ளை ஆய்கொடி மயக்கித்
தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது
கயிறடு கதச்சேப் போல மதமிக்கு
நாட்கயம் உழக்கும் பூக்கேழ் ஊர
வருபுனல் வையை வார்மணல் அகன்துறைத்
திருமருது ஓங்கிய விரிமலர்க் காவின்
நறும்பல் கூந்தல் குறுந்தொடி மடந்தையொடு
வதுவை அயர்ந்தனை என்ப அலரே
கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழியன்
ஆலங் கானத்து அகன்றலை சிவப்பச்
சேரலன் செம்பியன் சினங்கெழு திதியன்
போர்வல் லியானைப் பொலம்பூண் எழினி
நாரரி நறவின் எருமை ஊரன்
தேங்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்
இருங்கோ வேண்மான் இயல்தேர்ப் பொருநன்என்
எழுவர் நல்வலம் அடங்க ஒருபகல்
முரசொடு வெண்குடை அகப்படுத்து உரைசெலக்
கொன்றுகளம் வேட்ட ஞான்றை
வென்றிகொள் வீரர் ஆர்ப்பினும் பெரிதே.'' (அகம். 36)

இதனுள் கொள்வா ரார்ப்பினும் பெரிதெனவே நாண் நீங்கிப் புலப்படுத்தலை மகிழ்ந்தவாறு காண்க.

சிறந்த புதல்வனை நேராது புலம்பினும் - யாரினும் சிறந்த புதல்வனை வாயிலாகக்கொண்டு சென்றுழி அவற்குந் தலைவிவாயில் நேராமல் தலைவன் வருந்தினும்:

உ-ம் : ''பொன்னொடு குயின்ற பன்மணித் தாலித்
தன்மார்பு நனைப்பத் தன்றலையும் இஃதோ
மணித்தகைச் செவ்வாய் மழலையம் கிளவி
புலர்த்தகைச் சாந்தம் புலர்தொறு நனைப்பக்
காணாய் ஆகலோ கொடிதே கடிமனைச்
சேணிகந்து ஒதுங்கு மாணிழை அரிவை
நீயிவன் நேரா வாயிற்கு நாணுந்
தந்தையொடு வருவோன் போல
மைந்தனொடு புகுந்த மகிழ்நன் மார்பே''

என வரும்.

மாண் நலம் தா என வகுத்தற்கண்ணும் - இவள் இழந்த மாட்சிமைப்பட்ட நலத்தைத் தந்து இகப்பினும் இகப்பாயெனத் தலைவனை வேறுபடுத்தற்கண்ணும் :

உ-ம் : ''யாரை எலுவ யாரே நீஎமக்கு
யாரையும் அல்லை நொதும லாளனை
யனைத்தால் கொண்கஎம் மிடையே நினைப்பில்
கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் குட்டுவன்
வேந்தடு களத்தின் முரசதிர்ந் தன்ன
ஓங்கற் புணரி பாய்ந்தாடு மகளிர்
அணிந்திடு பல்பூ மரீஇ ஆர்ந்த
ஆபுலம் புகுதரு பேரிசை மாலைக்
கடல்கெழு மாந்தை அன்னஎம்
வேட்டனை அல்லையான் அலந்தந்து சென்மே''

(நற்றிணை, 395)

என வரும்.

''நுண்ஞாண் வலையல் பரதவர் போத்தந்த
பன்மீன் உணங்கல் கவரும் துறைவனைக்

கண்ணினால் காண இயையுங்கொல் என்றேழி
வண்ணந்தா என்கம் தொடுத்து.'' (ஐந். எழு. 66)

இதுவும் அதன்பாற்படும்.

பேணு ஒழுக்கம் நாணிய பொருளினும் - பரத்தை தலைவியைப் பேணாது ஒழுகிய ஒழுக்கத்திற்குத் தலைவி நாணிய பொருளின் கண்ணும் : தலைவற்குத் தோழி கூற்று நிகழ்த்தும்.

உ - ம்: ''பொய்கை நீர்நாய்ப் புலவுநாறு இரும்போத்து
வாளை நாளிரை தேரும் ஊர
நாணினென் பெரும் யானே பாணன்
மல்லடு மார்பின் வலியுற வருந்தி
யெதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்
நிறைத்திரண் முழவுத்தோள் கையகத்து ஒழிந்த
திறன்வேறு கிடக்கை நோக்கி நற்போர்க்
கணையன் ஆணி யாங்கு மறையினள்
மெல்ல வந்து நல்ல கூறி
மையீர் ஓதி மடவோ யானுநின்
சேரி யேனே அயலில் ஆட்டியேன்
நுங்கை யாகுவென் நினக்கெனத் தன்கைத்
தொடுமணி மெல்விரல் தண்ணெனத் தைவர
நுதலும் கூந்தலு நீவிப்
பகல்வந்து பெயர்ந்த வாணுதற் கண்டே.''
(அகம். 386)

இதனுள், யான் நினக்குத் தோழியாவேனெனப் பரத்தை நீவிய பேணு ஒழுக்கத்திற்குத் தலைவி நாணியது கண்டு தான் நாணினேனென்று தலைவற்குத் தோழி கூறியவாறு காண்க.

இன்னுந் தலைவனது பேணு ஒழுக்கத்திற்குத் தலைவி நாணிய பொருளின்கண்ணுமெனவுங் கூறுக.

''யாயா கியளே மாஅ யோளே
மடைமாண் செப்பில் தமியள் வைகிய
பொய்யாப் பூவின் மெய்சா யினளே
பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்

இனமீன் இருங்கழி ஓத மல்குதொறும்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்
தண்ணம் துறைவன் கொடுமை
நம்முன் நாணிக் கரப்பா டும்மே.'' (குறுந். 9)

என வரும்.

இவை இரண்டும் பொருள்.

(சூள் நயத் திறத்தாற் சோர்வு கண்டு அழியினும்) நயத் திறத்தாற் சூள் சோர்வு கண்டு அழியினும் - கூடுதல் வேட்கைக் கூறுபாட்டால் தான் சூளுறக்கருதிய சூளுறவினது பொய்ம்மையைக் கருதித் தலைவி வருந்தினும்: தோழிக்குக் கூற்று நிகழும்.

உ - ம்: ''பகல்கொள் விளக்கோடு இராநாள் அறியா
வென்வேற் சோழர் ஆமூர் அன்ன இவள்
நலம்பெறு சுடர்நுதல் தேம்ப
எவன்பயம் செய்யுநீ தேற்றிய மொழியே.''
(ஐங்குறு. 56)

இதனுள் இவள் நுதல் தேம்பும்படி நீ தேற்றிய சொல்லெனவே சோர்வுகண்டு அழிந்தாளென்பது உணர்ந்தும் இப் பொய்ச்சூள் நினக்கு என்ன பயனைத் தருமெனத் தோழி தலைவனை நோக்கிக் கூறியவாறு காண்க.

''கோடுற நிவந்த'' (அகம். 266) என்னும் மணிமிடை பவளத்தைத் தோழிக் கூற்றாகக் காட்டுவாரும் உளர்.

(பெரியோர் ஒழுக்கம் பெரிது எனக் கிளந்து பெறுதகை இல்லாப் பிழைப்பினும்) பெரியோர் பெறுதகை இல்லாக் கிளந்து - நன்மக்கள் பெறுந்தகைமை இல்லறமாயிருக்குமென்றுஞ் சொல்லி; பெரியோர் ஒழுக்கம் பெரிதெனக் கிளந்து பிழைப்பினும் - நன்மக்கள் ஒழுகும் ஒழுக்கம் பெரிதாயிருக்குமென்றுஞ் சொல்லித் தான் தலைவனை வழிபாடு தப்பினும்: தோழிக்குக் கூற்று நிகழும்.

பெரியோரையுங் கிளந்தென்பதனையும் இரண்டிடத்துங் கூட்டுக.

உ - ம்: "வெள்ளி விழுந்தொடி மென்கருப்பு உலக்கை
வள்ளி நுண்ணிடை வயின்வயின் நுடங்க
மீன்சினை அன்ன வெண்மணல் குவைஇக்
காஞ்சி நீழல் தமர்வளம் பாடி
ஊர்க்குறு மகளிர் குறுவழி இறந்த
இருல் அருந்திய சிறுசிரல் மருதின்
தாழ்சினை உறங்கும் தண்துறை ஊர
விழையா வுள்ளம் விழையும் ஆயினும்
கேட்டவை தோட்டி யாக மீட்டாங்கு
அறனும் பொருளும் வழாஅமை நாடித்
தற்றக வுடைமை நோக்கி மற்றதன்
பின்னா கும்மே முன்னியது முடித்தல்
அனைய பெரியோர் ஒழுக்கம் அதனால்
அரிய பெரியோர்த் தேரும் காலை
நும்மோ ரன்னோர் மாட்டும் இன்ன
பொய்யொடு மிடைந்தவை தோன்றின்
மெய்யாண்டு உளதோ இவ் வுலகத் தானே."

(அகம். 286)

இதனுள் 'அற'னென்றது இல்லறத்தை; 'தற்றகவுடைமை நோக்கி' யென்றது தன்னால் அவ்வறனும் பொருளுந் தகுதிப் பாடுடையவாந் தன்மையைநோக்கி என்றவாறும்; 'முன்னிய' தென்றது புறத்தொழுக்கத்தை; 'பெரியோரொழுக்கமனைய' வென்றது பெரியோர் ஒழுக்கம் பெரிய வென்றவாறு.

இது முன்னர் நிகழ்ந்த பொய்ச்சூள்பற்றி நும்மனோர் மாட்டும் இன்ன பொய்ச்சூள் பிறக்குமாயின் இவ்வுலகத்து மெய்ச்சூள் இனி இன்றாம். அதனாற் பெரியோரைத் தமது ஒழுக்கத்தைத் தேருங் காலை அரியவாயிருந்தனவெனத் தலைவனை நோக்கித் தோழி கூறலின் அவனை வழிபாடு தப்பினாளாயிற்று. உள்ளுறையுவமம் இதற்கு ஏற்குமாறுணர்க.

அவ் வயின் உறுதகை இல்லாப் புலவியுண் மூழ்கிய கிழவோள்பால் நின்று கெடுத்தற்கண்ணும் - தலைவன் அங்ஙனம் பிறழ்ந்த இடத்து அவன் சென்று சேருந் தகைமை இல்லாமைக்குக்

காரணமாகிய புலவியின்கண் அழுந்திய தலைவிபக்கத்தானாய் நின்று அவள் புலவியைத் தீர்த்தற்கண்ணும் :

உ–ம் : "மானோக்கி நீயழ நீத்தவன் ஆனாது
நாணிலன் ஆயின் அலிதந்து அவன்வயின்
ஊடுதல் என்னோ இனி." (கலி. 87)

"உப்பமைந் தற்றால் புலவி யதுசிறிது
மிக்கற்றால் நீள விடல்." (குறள், 130-2)

"காலை எழுந்து கடுந்தேர் பண்ணி
வாலிழை மகளிர் மரீஇய சென்ற
மல்லல் ஊரன் எல்லினன் பெரிதுஎன
மறுவரும் சிறுவன் தாயே
தெறுவது அம்மவித் திணைப்பிறத் தல்லே" (குறுந். 45)

(உணர்ப்புவயின் வாரா ஊடல் உற்றோள்வயின் உணர்த்தல் வேண்டிய கிழவோன்பால் நின்று தான் வெகுண்டு ஆக்கிய தகுதிக் கண்ணும்) உணர்ப்புவயின் வாரா ஊடல் உற்றோள்வயின் - தலைவன் தெளிவிக்கப்படுந் தன்மைக்கணில்லாத ஊடல் மிகுத் தோளிடத்து ;

உணர்ப்புப் 'புணர்ப்புப்'போல் நின்றது.

உணர்த்தல் வேண்டிய கிழவோன்பால் நின்று - ஊடல் தீர்த் தலை விரும்பிய தலைவன்வயத்தாளாய் நின்று ; தான் வெகுண்டு ஆக்கிய தகுதிக்கண்ணும் - தான் தலைவியைக்கழறி அவள் சீற்றம் போந்தன்மை உண்டாக்கிய தகுதிக்கண்ணும் :

உ–ம் : "துறைமீன் வழங்கும் பெருநீர்ப் பொய்கை
அரிமலர் ஆம்பல் மேய்ந்த நெறிமருப்பு
ஈர்ந்தண் எருமைச் சுவல்படு முதுபோத்துத்
தூங்குசேற்று அள்ளல் துஞ்சிப் பொழுதுபடப்
பைந்நிண வராஅல் குறையப் பெயர்தந்து
குரூஉக்கொடிப் பகன்றை சூடி மூதூர்ப்
போர்ச்செறி மள்ளரிற் புகுதும் ஊரன்
தேர்தர வந்த தெரியிழை ஞெகிழ்தோள்
ஊர்கொள் கல்லா மகளிர்த் தரத்தரப்

பரத்தைமை தாங்கலோ இலன்என வறிதுநீ
புலத்தல் ஒல்லுமோ மனைகெழு மடந்தை
அதுபுலந்து உறைதல் வல்லி யோரே
செய்யோள் நீங்கச் சில்பதங் கொழித்துத்
தாமட்டு உண்டு தமிய ராகித்
தேமொழிப் புதல்வர் திரங்குமுலை சுவைப்ப
வைகுநர் ஆகுதல் அறிந்தும்
அறியார் அம்மஅஃது உடலு மோரே.'' (அகம். 316)

இது, தோழி தலைவியை வெகுண்டு ஆக்கியவாறு காண்க.

(அருமைக் காலத்துப் பெருமை காட்டிய எண்மைக் காலத்து இரக்கத்தானும்) எண்மைக் காலத்து - தாம் எளியராகிய கற்புக் காலத்திலே ; அருமைக் காலத்துப் பெருமை காட்டிய இரக்கத் தானும் - களவுக்காலத்துத் தமது பெருமையை உணர்த்திய வருத் தத்தின் கண்ணும் :

உ-ம் : ''வேம்பின் பைங்காய் என் தோழி தரினே
தேம்பூங் கட்டி என்றனிர் இனியே
பாரி பறம்பில் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கள் தண்ணிய தரினும்
வெய்ய உவர்க்கும் என்றனிர்
ஐய அற்றால் அன்பின் பாலே'' (குறுந். 196)

என வரும்.

பாணர் கூத்தர் விறலியர் என்று இவர் - பாணருங் கூத்தரும் விறலியருமென்று சொல்லுகின்ற இம் மூவரும்; பேணிச் சொல்லிய குறைவினை எதிரும் - விரும்பிக்கூறிய குறையுறும் வினைக்கு எதி ராகவும்: கூற்று நிகழும்.

'எதிரு' மென்றது அவர் வாயில்வேண்டிய வழித் தோழி அவர்க்கு மறுத்தலும் மறுத்தாள்போல நேர்தலுங் கூறியதாம்.

உ-ம் : ''புலைமகன் ஆதலில் பொய்ந்நின் வாய்மொழி
நில்லல் பாண செல்லினிப் பரியல்
பகல்எம் சேரி காணின்
அகல்வயல் ஊரன் நாணவும் பெறுமே.''

இது பாணர்க்கு வாயின் மறுத்தது.

உ - ம்: ''விளக்கின் அன்ன சுடர்விடு தாமரைக்
களிற்றுச் செவியன்ன பாசடை தயங்க
உண்துறை மகளிர் இரியக் குண்டுநீர்
வாளை பிறழும் ஊரற்கு நாளை
மகட்கொடை எதிர்ந்த மடங்கெழு பெண்டே
தொலைந்த நாவின் உலைந்த குறுமொழி
உடன்பட்டு ஓராத் தாயரோடு ஒழிபுடன்
சொல்லலை கொல்லோ நீயே வல்லைக்
கன்றுபெறு வல்சிப் பாணன் கையதை
வள்ளுயிர்த் தண்ணுமை போல
உள்யாதும் இல்லதோர் போர்வையம் சொல்லே.''
(நற்றிணை, 310)

இது விறலிக்கு வாயின் மறுத்தது. மறுப்பாள்போல் நேர்வ வந்துழிக் காண்க.

(நீத்த கிழவனை நிகழுமாறு படீஇக் காத்த தன்மையிற் கண்ணின்று பெயர்ப்பினும்) நீத்த கிழவனை - பரத்தையிற் பிரிந்து தலைவியைக் கைவிட்ட தலைவனை; நிகழுமாறு படீஇ - தானொழுகும் இல்லறத்தே படுத்தல்வேண்டி; காத்த தன்மையில் - புறத் தொழுக்கிற் பயனின்மை கூறிக் காத்த தன்மையினாலே; கண் இன்று பெயர்ப்பினும் - கண்ணோட்டமின்றி நீக்கினும்:

உ - ம்: ''மனையுறை கோழிக் குறுங்கால் பேடை
வேலி வெருகின் மாலை உற்றெனப்
புகுமிடன் அறியாது தொகுபுடன் குழீஇப்
பைதற் பிள்ளைக் கிளைபயிர்ந் தாஅங்கு
இன்னாது இசைக்கும் அம்பலொடு
வாரல் வாழியர் ஐயஎம் தெருவே.'' (குறுந். 139)

இதனுள் 'அம்பலொடு வார' லெனவே பன்னாள் நீத்தமையுங் கண்ணின்று பெயர்த்தமையுங் கூறிற்று. கோழி போலத் தாயர் மகளிரைத் தழீஇக்கொண்டாரென்றலிற் புறம் போயும் பயமின் றெனக் காத்த தன்மை கூறிற்று.

(பிரியுங் காலை எதிர்நின்று சாற்றிய மரபுடை எதிரும் உளப் படப் பிறவும்) பிரியுங் காலை எதிர்நின்று சாற்றிய - தலைவன்

கற்பிடத்துப் பிரியுங்கால் தெய்வத்தன்மையின்றி முன்னின்று வெளிப்படக் கூறிய; மரபுடை எதிரும் உளப்படப் பிறவும் - முறை யுடைத்தாகிய எதிர்காலமும் இறந்தகாலமும் உட்படப் பிறவற்றுக் கண்ணும்:

'எதிரும்' என்ற உம்மை, எச்சவும்மை. பிற வாவன தலைவன் வரவுமலிந்து கூறுவனவும், வந்தபின்னர் முன்பு நிகழ்ந்தன கூறு வனவும், வற்புறுப்பாள் பருவமன்றெனப் படைத்து மொழிவனவுந், தூது கண்டு கூறுவனவுந், தூது விடுவனவுஞ் சேணிடைப் பிரிந் தோன் இடைநிலத்துத் தங்காது இரவின் வந்துழிக் கூறுவனவும் நிமித்தங்காட்டிக் கூறுவனவும், உடன் சேறலை மறுத்துக் கூறு வனவும் பிறவுமாம்.

''பாஅல்அஞ்செவி'' என்னும் பாலைக்கலியுள்,

''பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட்டு
எந்நாளோ நெடுந்தகாய் நீசெல்வது
அந்நாள்கொண் டிறக்கும்இவள் அரும்பெறல் உயிரே.''
(கலி. 5)

இதனுட், 'புரிந்தனை' யென இறப்பும் 'இறக்கு' மென எதிரும் மரபில் தப்பாமல் வந்தவாறு காண்க.

''வேனில் திங்கள் வெஞ்சுரம் இறந்து
செலவயர்ந் தனையால் நீயே நன்று
நின்னயந்து உறைவி கடுஞ்சூல் சிறுவன்
முறுவல் காண்டலின் இனிதோ
இறுவரை நாடநீ விரைந்துசெய் பொருளே.''
(ஐங்குறு. 309)

இஃது எதிரது நோக்கிற்று.

''புறவணி நாடன் காதன் மடமகள்
ஒண்ணுதல் பசப்ப நீசெலில் தெண்ணீர்ப்
போதவிழ் தாமரை யன்னநின்
காதலம் புதல்வன் அழும்கனி முலைக்கே.'' (ஐங்குறு 424)

இதுவும் அது.

இனிப் 'பிற' வருமாறு:

''பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ
நெடுங்கால் கணந்துஉளம் புலம்புகொள் தெள்விளி

சுரஞ்செல் கோடியர் கதுமென இசைக்கும்
நரம்பொடு கொள்ளும் அத்தத் தங்கண்
கடுங்குரல் பம்பைக் கதநாய் வடுகர்
நெடும்பெரும் குன்ற நீந்தி நம்வயின்
வந்தனர் வாழி தோழி கையதை
செம்பொன் கழல்தொடி நோக்கி மாமகன்
கவவுக்கொள் இன்குரல் கேட்டொறும்
அவவுக்கொள் மனத்தேம் ஆகிய நமக்கே.'' (நற்றிணை,212)

இது தலைவிக்கு வரவுமலிந்தது.

''நீலத் தன்ன நீர்பொதி கருவின்
மாவிசும் பதிர முழங்கி ஆலியின்
நிலந்தண் ணென்று கானம் குழைப்ப
இனந்தேர் உழவர் இன்குரல் இயம்ப
மறியுடை மடப்பிணை தழீஇப் புறவில்
திரிமருப்பு இரலை பைம்பயிர் உகள
ஆர்பெயல் உதவிய கார்செய் காலை
நூல்நெறி நுணங்கிய கானவில் புரவிக்
கல்லெனக் கறங்குமணி இயம்ப வல்லோன்
வாய்ச்செல வணக்கிய தாப்பரி நெடுந்தேர்
ஈர்ம்புற இயங்குவழி அறுப்பத் தீந்தொடைப்
பையு ணல்யாழ் செவ்வழி பிறப்ப
இந்நிலை வாரா ராயின் தந்நிலை
எவன்கொல் பாண உரைத்திசில் சிறிதெனக்
கடவுள் கற்பின் மடவோள் கூறச்
செய்வினை அழிந்த மையல் நெஞ்சில்
துனிகொள் பருவரல் தீர அந்நோய்
இனிதுசெய் தனையால் வாழ்கநின் கண்ணி
வேலி சுற்றிய வால்வீ முல்லைப்
பொருந்திதழ் கமழும் விரிந்தொலி கதுப்பின்
இன்னகை இளையோள் கவவ
மன்னுக பெருமநின் மலர்ந்த மார்பே.'' (அகம். 314)

இது, முன்பு தலைவிக்கு நிகழ்ந்த ஆற்றாமையும் அது கண்டு தான் கலங்கியவாறுந் தலைவற்குக் கூறியது.

"மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை
கல்பிறங்கு அத்தம் சென்றோர் கூறிய
பருவம் வாரா அளவை நெரிதரக்
கொம்புசேர் கொடியிணர் ஊழ்த்த
வம்ப மாரியைக் காரென மதித்தே." (குறுந். 66)

இது, பருவம் அன்றெனப் படைத்து மொழிந்தது.

"எனநீ, தெருமரல் வாழி தோழிநம் காதலர்
பொருமுரண் யானையர் போர்மலைந்து எழுந்தவர்
செருமேம் பட்ட வென்றியர்
வருமென வந்தன்று அவர் வாய்மொழித் தூதே."
(கலி. 26)

இது, தூதுவந்தமை தலைவிக்குக் கூறியது.

"கைவல் சீறியாழ்ப் பாண நுமரே
செய்த பருவம் வந்துநின் றதுவே
எம்மின் உணரார் ஆயினும் தம்வயின்
பொய்படு கிளவி நாணலும்
எய்யார் ஆகுதல் நோகோ யானே." (ஐங்குறு. 472)

இது, குறித்த பருவத்துத் தலைவன் வாராதவழித் தூதாய் வந்த பாணற்குத் தோழி கூறியது.

தூதுவிட்டது வந்துழிக் காண்க.

"பதுக்கைத் தாய ஒதுக்கரும் கவலைச்
சிறுகண் யானை உறுபகை நினையாது
யாங்குவந் தனையோ பூந்தார் மார்ப
அருள்புரி நெஞ்சம் உய்த்தர
இருள்பொர நின்ற இரவி னானே." (ஐங்குறு. 362)

இது, சேணிடைப்பிரிந்து இரவின்வந்துழிக் கூறியது.

"ஆமா சிலைக்கு மணிவரை ஆரிடை
ஏமாண் சிலையார்க்கு இனமா இரிந்தோடும்
தாமாண்பில் வெஞ்சுரஞ் சென்றார் வரக்கூறும்
வாய்மாண்ட பல்லி படும்." (கைந்நிலை, 18)

இது நிமித்தங் காட்டிக் கூறியது.

இன்னும் அதனனே நமர் பொருள்வேண்டுமென்றார் அதற்கு யான் அஞ்சினேனெனக் களவின் நிகழ்ந்ததனைக் கற்பில் தலைவிக்குக் கூறுதலுங் கொள்க.

"கன்னவில் தோளான் கடிநாள் விலக்குதற்கு
என்னை பொருள்நினைந்தார் ஏந்திழாய்—பின்னர்
அமரேற்றுக் கொள்ளும் என்று அஞ்சினேன் அஞ்சார்
நமரேற்றுக் கொள்ளாத ஞான்று."

இன்னுந் தோழிகூற்றாய்ப் பிறவாற்றான் வருவனவெல்லாம் இதனான் அமைக்க.

"அன்னை வாழிவேண் டன்னை நம்மூர்ப்
பலர்மடி பொழுதின் நலமிகச் சாஅய்
நள்ளென வந்த இயல்தேர்ச்
செல்வக் கொண்கன் செல்வன் அஃ தூரே."

(ஐங்குறு. 104)

இது புதல்வற்பெற்றுழித் தலைவன் மனைக்கட்சென்ற செவிலிக்கு அறத்தொடு நின்று வதுவைகூட்டிய தோழி அவன் ஊர் காட்டிக் கூறியது.

வகைபட வந்த கிளவி எல்லாம் தோழிக்கு உரிய என் மனார் புலவர் - தோழிகூற்றாய்த் தலைவிகூற்றினுள் அடங்குவ தன்றித் தோழிக்கே கூறத்தகும் வேறுபாடு உண்டாகவந்த கிளவிகளெல்லாந் தோழிக்கு உரியவென்று கூறுவர் புலவர் (எ – று).

இச் சூத்திரத்துக்கண் ஏழனுருபும் அவ்வுருபு தொக்கு நின்று விரிந்தனவுஞ் செயினென்னும் வினையெச்சமும் உரிய வென்னுங் குறிப்புவினை கொண்டன. அவற்றை இன்னவிடத்தும் இன்னவிடத்தும் இன்னதுசெய்யினும் உரியவென்று ஏற்பித்து முடிக்க.

(வி - ரை) அயிரை - ஒருவகைமீன், தூம்புடை - துளையை யுடைய, குறுநர் - பறிப்போர், நோன்றனிர் - வருத்தங்களைப் பொறுத்துக் கொண்டவர்.

வார்மணல் - நேரிதாகிய மணல், நாவல் கனியை வண்டுகள் தம்மினமென்று கருத அவ்வண்டுகளை நண்டு பழமென்று கருத அவ்விரண்டிற்கும் ஏற்பட்ட பூசல் நாரை அங்கு எய்த நீங்கிற்று. கொண்ட கோட்கு ஊர்ந்து கொல்லா - நண்டு தான் கொண்ட கோட்பாட்டினின்றும் தாம் விலகிக் கொள்ள மாட்டாதனவாய், கள்கழி செருக்கு - கள் அற்ற காலத்துப் பிறந்த வேறுபாடு.

எக்கர் - கடற்கரை, வீ - மலர்.

எரிமருள் - நெருப்பையொத்த, அற்றம் - தம் களவினைப் பிறர் அறியுமாறு ஒழுகும் சோர்வு.

நந்துக - பெருகுக, முகைந்த - அரும்பிய.

கரும்பின் எந்திரம் - கரும்பாலை.

செறுவில் - வயலில், கள்வன் - நண்டு, நண்டு நெற்கதிரைக் கொண்டு தன் வளைக்குட் செல்லும் என்பதால், தலைமகனும் தான் செய்யும் வினை முடித்த பின் விரைந்து வந்து விடுவன் என உள்ளுறை காணலாம் ஆயினும், புறத்தொழுக்கம் பட நின்ற தலைவன் விரைந்து மீளுவன் எனக் கோடற்கு இப்பாட்டில் இடமில்லை.

இறைமிசை - இரப்பின் மேலுள்ள, மாரிச் சுதையின் - மழைக் காலத்துச் சுண்ணச் சாந்தின், ஈர்புறத்தன்ன - குளிர்ந்த புறத்தை யொப்ப, கூரல் கொக்கு - குளிர்ச்சியால் நடுங்குதலையுடைய கொக்கு, குறும்பறை - சிறிதாகப் பறக்கின்ற, குறுந்தற்குத்தி - குறிய துண்டுகளை நட்டு, அவல் பொத்தி - நீரைத் தேக்கி, கொடுஞ்சிறை - வளைந்த அணை, விசிப்பிணி - இறுகக் கட்டிய.

ஊராண்மை - அருஞ்செயலாக, அனைநலம் - அத்துணை நலம், புறம்படு - புறத்தே உண்டாகின்ற, ஈண்டுப்புறம் பரத்தையரிடத்ததாம். புறம்படு - புறப்பட்ட என உரை காண்பர் இளம்பூரணர்.

பகுவாய் - பிளந்தவாய், துற்றி - உண்டு, அரிப்படு - பின்னிய, வாங்க வாராது - இழுக்கவும் வாராது, கதச்சே - சினம் மிகுந்த ஏறு. நாட்கயம் - குளம், நார் - பண்ணுடை.

குயின்ற - செய்த, நனைப்பத்தன்தலையும் - நனைப்பதன் மேலும்.

எலுவ - தோழனே, நொதுமலாளனை - அயலானுயினை, மரீஇ ஆர்ந்த - பொருந்தி உண்ட.

நுண்ஞாண் - நுண்ணிதாகிய கயிற்றினையுடைய, போத்தந்த - பிடித்துக் கொண்டு வந்த.

இரும் போத்து - ஆண் நாய், எதிர்தலைக் கொண்ட - எதிர்ந்த. இவ்வுரை இளம்பூரணரைத் தழுவியதாம்.

மடைமாண் - மூட்டுவாய் செறிக்கப்பெற்ற, கரப்பு ஆடும் - மறைத்தலையுடைய சொற்களைச் சொல்லும்.

இளம் பூரணர் தலைமகன் சூளுற்ற சூளுறவில் சோர்வு கண்டு அழிந்து போயினும் தோழி கூற்று நிகழ்த்துவள் என உரை காண்பர்.

பகல்கோள் - ஒளியைச் செய்யும்.

தோழி கூற்றுகக் காட்டுவார் யாரெனத் தெரிந்திலது, பெரியோர் ஒழுக்கம் பெரிதாகுமெனச் சொல்லி தலைமகளைப் பொறுத்தகைமை யில்லாத பிழைப்பின் கண்ணும் தோழி கூற்று நிகழும் என இளம் பூரணர் உரை காண்பர்.

விழுத்தொடி - சிறந்த பூண், வள்ளி - கொடி, குறுவழி - குற்று மிடத்து, விறந்த - செறிந்த. கேட்டவை - கேட்ட கேள்வியறிவு, மகளிர்தமர் மணம் பாடும் இன்னிசை கேட்டு இரால் மீனையுண்ட சிறல்பறவை மருதமரநிழலில் இனிது உறங்கும் என்றமையால் பரத்தையர் நலனுண்ட தலைவனும், தலைவியின் இல்லறப் பாங்கைக் கேள்வியளவானே கேட்டு அப்பரத்தையரிடத்துத் துயில்கின்றுன் என உள்ளுறை உவமம் கொள்ளுமாறு அமைந்துள்ளது.

அவன் சென்று சேரும் தகைமை - தலைவன் தலைவியிடத்துச் சென்று கூறுதலுறும் தகைமை.

மாநோக்கி - விளி.

பண்ணி - ஏறுதற்கேற்ப அமைத்து, வாள்இழை - தூய அணி கலன்.

மரீஇய சென்ற-மருவுதற் பொருட்டுச்சென்ற, மல்லல் - வளம், எல்கினன் - (பரத்தையரை மருவுதலால் பொருந்திய) விளக்கத்தையுடையவன். மறுவரும் - மனம் சுழலும், தெருவது - துன்புறத் தக்கது, இத்தனை - இப் பெண் குலம்.

வழங்கும் - இயங்கும், அரிமலர் - விளங்கும் மலர், தூங்கு சேற்று - மிகுந்த சேற்று, ஊர்கோள் - ஊரில் பொருந்திய, இல்லா மகளிர் - தமக்கென ஒரு கணவனை ஆக்கிக் கொள்ளாத மகளிர்.

பாரி - கடையேழு வள்ளல்களில் ஒருவன், அன்பின்பால் - அன்பின் பகுதி.

பரியல் - வருந்தற்க.

குண்டுநீர் - ஆழமிக்கநீர், ஞாலேந்த - மெய்மையைக் கல்லாது ஒழிந்த, உலேந்த - நிலேகுலேந்த, குறுமொழி - தாழ்ந்த மொழி.

வெருகின் - காட்டுப்பூனை.

தலேவன் சேயிடைப் பிரியுங் காலத்து முன் நின்று சொல்லிய மரபுடை மாறுபாடு எனப் பொருளுரைப்பர் இளம்பூரணர். மரபிஞல் கூறுதலாவது குற்றேவல் முறையால் கூறுதல் என விளக்கமும் காண்பர். எனவே தலேவன் தலேவியை விடுத்து மிகத் தொலேவாகப் பிரிய நினைப்பின் தோழி தன் குற்றேவல் முறைமை பிழையாது அதனைத் தடுப்பள் என்பது கருத்தாகின்றது. எதிரும் - மாறுபாட்டுச்சொல் என்பது இவர் கருத்து. நச்சிஞர்க்கினியர் எதிர் காலமும் என உரைகண்டு அவ்வும்மையால் இறந்த காலத்தையும் தழுவி உரைப்பர். இது அத்துணைச் சிறப்பின்ரும்.

பொய்ந்நல்கள் புரிந்தனை - அன்பு காட்டுவன்போல பொய்யே நடித்தனை.

வேனில்திங்கள்-வேனிற்காலத்தையுடைய திங்களில், நின்னயந்துறைவி - நின்னை விரும்பி உறைகின்றதலேவி, கடுஞ்சூல் - கன்னிச்சூல் முதன் முதலாக உற்ற கரு. இருவரை -பெரியமலே.

அழும் இனிமூலக்கே – பாலிற்கு அவன் அழுவன். நீ பிரியின் அவள் இறந்துபடுவள். ஆதலின் அவன் அழுவன் என்பதாம்.

படுவலை - அமைத்த வலை, கனந்துள் - ஒரு பறவை. கவவுக் கொள் - அணைத்துக்கொள்கின்ற, அவவுக்கொள் - ஆசை கொள் கின்ற.

கருவின் - சூலினைக்கொண்டு, ஆலியின் - பெய்த நீரினால், இரலை - கலைமான், கால்நவில் - காற்றெனக் கூறத்தகும். ஒலி கதுப்பு - தழைந்த கூந்தல், கவவு - தழுவிக்கொள்ள.

மடவமன்ற - உறுதியாக அறியாமையுடையது. ஊழ்த்த - மலர்ந்த.

நாணலும் எய்யார் - நாணுதற்கும் அறியார்.

பதுக்கைத்தாய் - கற்குவியலையுடைத்தாய், ஒதுக்கறும் கவலை - போதற்கரிய கவர்த்த வழி.

ஆமா - காட்டுப்பசு, சிலைக்கும்-தம்முள் மாறுபடும். ஏ - அம்பு.

கடிநாள் - மணநாள், நமர் ஏற்றுக்கொள்ளாத ஞான்று அமர் ஏற்றுக் கொள்ளுமென அஞ்சினேன் என இயைக்க.

சாஅய் - மெலிந்து, ஒல்லென - விரைவாக. (9)

காமக்கிழத்தியர்க்குக் கூற்று நிகழும் இடம்

151\. புல்லுதன் மயக்கும் புலவிக் கண்ணும்
இல்லோர் செய்வினை யிகழ்ச்சிக் கண்ணும்
பல்வேறு புதல்வர்க் கண்டுநனி யுவப்பினும்
மறையின் வந்த மனையோள் செய்வினை
பொறையின்று பெருகிய பருவரற் கண்ணும்
காதற் சோர்விற் கடப்பாட் டாண்மையில்
[1]தாய்போல் தழீஇக் கழறியும் மனைவியைக்
காய்வின் றவன்வயிற் பொருத்தற் கண்ணும்
இன்னகைப் புதல்வனைத் தழீஇ இழையணிந்து
[2]பின்னர் வந்த வாயிற் கண்ணும்
மனையோ ளொத்தலில் தன்னோர் அன்னோர்
[3]மிகைபடக் குறித்த கொள்கைக் கண்ணும்

---

1\. தாய்போற் கழறித் தழீஇய மனைவியை, 2. பின்னை, 3. மிகையென எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

எண்ணிய பண்ணையென் றிவற்றெடு பிறவும்
கண்ணிய காமக் கிழத்தியர் மேன.

இது, காமக்கிழத்தியர் கூற்றெல்லாந் தொகுத்துக் கூறு கின்றது: காமக்கிழத்தியராவார் கடனறியும் வாழ்க்கையுடைய ராகிக் காமக்கிழமைபூண்டு இல்லறநிகழ்த்தும் பரத்தையர். அவர் பலராதலிற் பன்மையாற் கூறினர். அவர் தலைவனது இளமைப் பருவத்திற் கூடி முதிர்ந்தோரும், அவன் தலைநின்று ஒழுகப்படும் இளமைப்பருவத்தோரும் இடைநிலைப் பருவத்தோருங், காமஞ் சாலா இளமையோருமெனப் பல பகுதியாம். இவரைக் 'கண்ணிய காமக்கிழத்திய' ரெனவே கண்ணுத காமக்கிழத்தியரும் உள ராயிற்று. அவர் கூத்தும் பாட்டும் உடையராகிவருஞ் சேரிப் பரத்தையருங் குலத்தின்கண் இழிந்தோரும் அடியரும் வினைவல பாங்கினரும் பிறருமாம்.

இனிக் காமக் கிழத்தியரைப், பார்ப்பார்க்குப் பார்ப்பனியை யொழிந்த மூவரும், ஏனையோர்க்குத் தங்குலத்தரல்லாதோரும், வரைந்து கொள்ளும் பரத்தையருமென்று பொருளுரைப்பாரும் உளர். அவர் அறியார்: என்னை? சிறப்புடைத் தலைவியரொடு பரத்தையரையுங் கூட்டிக் காமக்கிழத்தியரென்று ஆசிரியர் சூத்திரஞ் செய்யின் மயங்கக்கூறலென்னுங் குற்றந் தங்குமாதலின். அன்றியுஞ் சான்றோர் பலருங் காமக்கிழத்தியரைப் பரத்தையராகத் தோற்றுவாய்செய்து கூறுமாறும் உணர்க.

(இ - ள்.) புல்லுதன் மயக்கும் புலவிக்கண்ணும் - தலைவன் தனது முயக்கத்தைத் தலைவியிடத்துந் தம்மிடத்தும் இடைவிட்டு மயக்குதலால் தலைவிக்கண் தோன்றிய புலவியிடத்தும்; காமக் கிழத்தியர் புலந்து கூறுப.

உ - ம்: "மண்கனை முழவொடு மகிழ்மிகத் தூங்கத்
தண்துறை ஊரன்எம் சேரி வந்தென
இன்கடுங் கள்ளின் அஃதை களிற்றெடு
நன்கலன் ஈயும் நாண்மகிழ் இருக்கை
அவைபுகு பொருநர் பறையின் ஆனது
கழறுப என்பஅவன் பெண்டிர் அந்தில்

கச்சினன் கழலினன் தேந்தார் மார்பினன்
வகையமை பொலிந்த வனப்பமை தெரியல்
சுரியலம் பொருநனைக் காண்டி ரோஎன
ஆதி மந்தி பேதுற்று இனையச்
சிறைபறைந்து உரைஇச் செங்குணக்கு ஒழுகும்
அந்தண் காவிரி போலக்
கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின் யானே.'' (அகம். 76)

இதனுள் எஞ்சேரி வந்தெனக் கழறுபவென்ப அவன் பெண்டிரென முன்னைஞான்று புல்லுதன்மயக்குதலால் தலைவி புலந்தவாறும் அஃதுகண்டு காமக்கிழத்தி கொண்டுகைவலிப்பலெனப் பெருமிதம் உரைத்தவாறுங் காண்க.

இது, பெருமிதங்கூறலின் இளமைப்பருவத்தாள் கூற்றாயிற்று.

''ஒண்டொடி ஆயத்து உள்ளுநீ நயந்து
கொண்டனை என்பவோர் குறுமகள்'' (அகம். 96)

எனக் காமஞ்சாலா இளமையோளைக் கூறிற்று.

இரட்டுற மொழிதலென்பதனாற் பரத்தையரிடத்துப் புலப்பட ஒழுகாது அவர் புல்லுதலை மறைத்தொழுகுதலாற் காமக் கிழத்தியர்க்குப் பிறக்கும் புலவிக்கண்ணும் அவர்க்குக் கூற்று நிகழுமெனவும் பொருள் கூறுக.

உ - ம்: ''கண்டேனின் மாயங் களவாதல் பொய்ந்நகா'' (கலி. 90) என்னும் மருதக்கலியுட் காண்க.

இல்லோர் செய்வினை இகழ்ச்சிக் கண்ணும் - இல்லிடத்திருந்த தலைவனுந் தலைவியும் ஊடியும் உணர்த்தியுஞ் செய்த தொழிலைக் கேட்டு இகழும் இகழ்ச்சிக்கண்ணும்:

உ—ம் : ''கழனிமா அத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉம் ஊரன்
எம்மிற் பெருமொழி கூறித் தம்மில்
கையும் காலும் தூக்கத் தூக்கும்
ஆடிப் பாவை போல
மேவன செய்யும் தன் புதல்வன் தாய்க்கே.'' (குறுந். 8)

"நன்மரம் குழீஇய நனைமுதிர் சாடிப்
பன்னாள் அரித்த கோயுடை வைப்பின்
மயங்குமழைத் துவலையின் மறுகுடன் பணிக்கும்
பழம்பன் நெல்லின் வேளூர் வாயில்
நறுவிரை தெளித்த நாறிணர் மாலை
பொறிவரி இனவண் டூதல கழியும்
உயர்பலி பெறூஉம் உருகெழு கதவம்
புனையிரும் கதுப்பில் நீகடுத் தோள்வயின்
அனையேன் ஆயின் அணங்குக என்னென
மனையோள் தேற்றும் மகிழ்நன் ஆயின்
யார்கொல் வாழி தோழி நெருநை
தார்பூண் களிற்றிற்று அலைப்புணை தழீஇ
வதுவை ஈரணிப் பொலிந்த நம்மொடு
புதுவது வந்த காவிரிக்
கோடுதோய் மலிர்நிறை ஆடி யோரே" (அகம். 166)

என வரும்.

இவையும் இளையோர் கூற்று. பிறவும் அன்ன.

பல்வேறு புதல்வர்க் கண்டு நனி உவப்பினும் - வெவ்வேறாகிய புதல்வரைத் தாங்கண்டு மிக மகிழ்ச்சி செய்யினும் :

'வேறுபல் புதல்வ' ரென்றார் முறையாற் கொண்ட மனைவியர் பலரும் உளராதலின்,

"ஞாலம் வறந்தீர" என்னும் மருதக்கலியுள்,

"அடக்கமில் போழ்தின்கண் தந்தைகா முற்ற
தொடக்கத்துத் தாயுழைப் புக்காற் கவளும்
மருப்புப்பூண் கையுறை யாக அணிந்து
பெருமா நகைமுகம் காட்டு என்பாள் கண்ணீர்
சொரிமுத்தம் காழ்சோர்வ போன்றன." (கலி. 82)

இது, முதிர்ந்தாள் உண்ணயந்து கூறியது.

"மற்றும், வழிமுறைத் தாயுழைப் புக்காற் கவளும்
மயங்குநோய் தாங்கி மகன் எதிர் வந்து
முயங்கினள் முத்தினள் நோக்கி நினைந்தே
நினக்கியாம் யாரேம் ஆகுதும் என்று
வனப்புறக் கொள்வன நாடி அணிந்தனள்." (கலி. 82)

இதனுள் நோய் தாங்கினளென இளமைப்பருவத்து மகிழ்ச்சியும் முதிர்ந்த பருவத்து மறவியுந் தோன்றக் கூருமையினனும் வழி முறைத்தா யென்றமையானும் இஃது இடைநிலைப் பருவத்தாள் கூற்று.

> ''அவட்குஇனி தாகி விடுத்தனன் போகித்
> தலைக்கொண்டு நம்மொடு காயுமற்று ஈதோர்
> புலத்தகைப் புத்தேளில் புக்கான்'' (கலி. 82)

என்றவழிப் 'புத்தே'ளென்றதுவுந் தலைநின்றொழுகும் இளையோளைக் கூறியது.

> ''தந்தை இறைத்தொடி மற்றிவன் தன்கைக்கண்
> தந்தாரியார் எல்லாஅ இது
> இஃதொன்று'' (கலி. 84)

என்றாற்போல அவள் கொடுப்பக் கொள்வனவுங் கொள்க.

(மறையின் வந்த மனையோள் செய்வினைப் பொறையின்று பெருகிய பருவரற்கண்ணும்) மறையின் வந்த - தலைவற்கு வேறோர் தலைவியோடு களவொழுக்கம் நிகழ்தலின் அவன் செய்திகளின் வேறுபாட்டால் தமக்குப் புலப்பட வந்த; மனையோள் செய்வினை - மனையோளாதற்குரியவள் தமர்பணித்தலிற் றைந்நீராடலும் ஆரு டலும் முதலிய செய்தொழில்களைச் செய்யுமிடத்து; பொறை இன்று பெருகிய பருவரற்கண்ணும் - இவள் தோற்றப்பொலிவால் தலைவன் கடிதின் வரைவனெனக் கருதிப்பொறுத்தலின்றி மிக்கவருத்தத்தின் கண்ணும் :

உ-ம் : ''வாளை வாளில் பிறழ நாளும்
பொய்கை நீர்நாய் வைகுதுயில் ஏற்கும்
கைவண் கிள்ளி வெண்ணி சூழ்ந்த
வயல்வெள் ஆம்பல் உருவ நெறித்தழை
ஐதகல் அல்குல் அணிபெறத் தைஇ
விழவில் செலீஇயர் வேண்டும் அன்னோ
யாணர் ஊரன் காணுந னாயின்
வரையா மையோ அரிதே வரையின்
வரைபோல் யானை வாய்மொழி முடியன்
வரைவேய் புரையு நற்றோள்
அளிய தோழி தொலையுந பலவே.'' (நற்றிணை, 390)

இதனுள், விழவிற்செல்கின்ற தலைவியைக் கண்டு காமக் கிழத்தி இவள் தோற்றப்பொலிவோடு புறம்போதரக் காணின் வரைவனெனவும், அதனான் இல்லுறைமகளிர் பலருந் தோள் நெகிழ்பவெனவும் பொருது கூறியவாறு காண்க.

(காதற் சோர்விற் கடப்பாட்டு ஆண்மையில் தாய்போல் தழீஇக் கழறி அம்மனைவியைக் காய்வு இன்று அவன் வயிற் பொருத்தற்கண்ணும்) காதற் சோர்வில் - தானுங் காய்தற்குரிய காமக்கிழத்தி தலைவன் தன்மேற் காதலை மறத்தலானும்; கடப் பாட்டாண்மையிற் சோர்வில் - அவற்கு இல்லொடு பழகிய தொல்வரற் கிழமையாகிய ஒப்புரவின்மையானும் ; தாய்போல் தழீஇக் கழறி - தலைவியைச் செவிலிபோல உடன்படுத்திக் கொண்டு தலைவனைக் கழறி ; அம்மனைவியைக் காய்வின்று அவன் வயிற் பொருத்தற்கண்ணும் - அத்தலைவியைக் காய்தலின்றாக்கித் தலைவனிடத்தே கூட்டுமிடத்தும் :

இது, துனிநிகழ்ந்துழித் தலைவனது தலைவளரிளமைக்கு ஒருதுணையாகி முதிர்ந்த காமக்கிழத்தி இங்ஙனங் கூட்டு மென்றார்.

உ - ம்: "வயல்வெள் ஆம்பல் சூடுதரு புதுப்பூக்
கன்றுடைப் புனிற்றா தின்ற மிச்சில்
ஓய்விடு நடைப்பகடு ஆரும் ஊரன்
தொடர்புநீ வெஃகினை யாயின் என்சொல்
கொள்ளன் மாதோ முள்ளெயிற் றோயே
நீயே பெருநலத் தகையே அவனே
நெடுநீர்ப் பொய்கை நடுநாள் எய்தித்
தண்கமழ் புதுமலர் ஊதும்
வண்டென மொழிப மகன்என் னாரே." (நற்றிணை, 290)

இதனுள் நீ இளமைச்செவ்வியெல்லாம் நுகர்ந்து புதல் வற்பயந்த பின்னர் உழுதுவிடு பகடு எச்சிலை அயின்றாற் போலப் பிறர் அவனை நுகர்ந்தமை நினக்கு இழுக்கன்றெனவும், அவனோடு கூட்டம் நெடுங்காலம் நிகழ்த்தவேண்டும் நீ அவள் அவனோடு கட்டில்வரை எய்தியிருக்கின்றாளென்று ஊரார் கூறுகின்ற சொல்லை என்னைப்போல வேறுபட்டுக்

கொள்ளாதே கொள்வது நின் இளமைக்கும் எழிற்கும் ஏலா தெனவும், அவனை வண்டெென்பதன்றி மகனென்னுராதலின் அவன் கடப்பாட்டாண்மை அதுவென்றுங் கூறினுள்.

இனி "என்சொற்கொள்ளன்மாதோ" என்பதற்கு என் வார்த்தையைக் கேட்டல் நினக்கு விருப்பமோ? விருப்பமாகில் யான் கூறுகின்றதனைக் கொள்க.

"ஈண்டுபெருந் தெய்வத் தியாண்டுபல கழிந்தெனப்
பார்த்துறைப் புணரி அலைத்தலில் புடைகொண்டு
மூத்துவினை போகிய முரிவாய் அம்பி
நல்லெருது நடைவளம் வைத்தென உழவர்
புல்லுடைக் காவில் தொழில்விட் டாங்கு
நறுவிரை நன்புகைக் கொடாஅர் சிறுவீ
ஞாழலொடு கெழீஇய புன்னையம் கொழுநிழல்
முழவுமுதல் பிணிக்கும் துறைவ நன்றும்
விழுமிதில் கொண்ட கேண்மை நொவ்விதில்
தவறுநன்கு அறியா யாயின் எம்போல்
ஞெகிழ்தோட் கலுழ்ந்த கண்ணர்
மலர்தீய்ந் தனையர் நின்னயந் தோரே."

(நற்றிணை, 315)

இதனுள் மூத்துவினை போகிய அம்பிபோலப் பருவஞ் சென்ற பிணிக்கப்பட்ட எம்மைப்போலாது இவள் இப்பருவத்தே இனையளாகற்பாலளோ மலர்ந்த செவ்வியான் முறைவீயாய்க் கழியாது இடையே எரிந்து கரிவுற்ற பூவினைப்போலவெனத் தலைவனுக்குக் காமக்கிழத்தி கூறியவாறு காண்க.

(இன் நகைப் புதல்வனைத் தழீஇ இழை அணிந்து பின்னர் வந்த வாயிற்கண்ணும்) இன்நகைப் புதல்வனைத் தழீஇ இழை அணிந்து - கண்டோர்க்கெல்லாம் இன்பத்தைப் பயக்கும் புதல்வனை எடுத்துப் பொலங்கலத்தாற் புனைந்துகொண்டு; பின்னர் வந்த வாயிற்கண்ணும் - பல வாயில்களையும் மறுத்த பின்னர் வாயிலாகக்கொண்டு புகுந்த வாயிற்கண்ணும்:

உ-ம்: "என்குறித் தனன்கொல் பாணநின் கேளே
வன்புறை வாயி லாகத் தந்த

பகைவரும் நகூஉம் புதல்வனை
நகுவது கண்டு நகூஉ மோரே.''

இதனுள் வன்புறை வாயிலாகிய புதல்வனைக் கண்டு நகுவாரைத் தனக்கு நகுவாரைப்போல நகாநின்ருனெனக் காமக் கிழத்தி கூறி வாயில்நேர்ந்தவாறு காண்க. 'பகைவரும் நகூஉ' மெனவே தான் புலக்கத்தகுந் தலைவியர் புதல்வனென்ருளாயிற்று.

(மனையோள் ஒத்தலில் தன்னேர் அன்னேர் மிகைபடக் குறித்த கொள்கைக்கண்ணும்) மனையோள் ஒத்தலில் - தானும் உரிமை பூண்டமைபற்றி மனையோளொடு தானும் ஒத்தாளாகக் கருதுதலின்; தன்னேர் அன்னேர் மிகைப்படக் குறித்த கொள்கைக்கண்ணும் - தன்னை ஒக்கும் ஏனை மகளிரின் தன்னை விசேடமுண்டாகக் குறித்துக்கொண்ட கோட்பாட்டின் கண்ணும்:

உ-ம் : ''புழற்காற் சேம்பின் கொழுமடல் அகலிலைப்
பாசிப் பரப்பில் பறழொடும் வதிந்த
உண்ணாப் பிணவின் உயக்கம் சொலிய
நாளிரை தரீஇய எழுந்த நீர்நாய்
வாளையோடு உழப்பத் துறைகலுழ்ந் தமையின்
தெண்கள் தேறல் மாந்திய மகளிர்
நுண்செயல் அங்குடம் இரீஇப் பண்பின்
மகிழ்நன் பரத்தைமை பாடி யவிழிணர்க்
காஞ்சி நீழல் குரவை அயரும்
தீம்பெரும் பொய்கைத் துறைகேழ் ஊரன்
தேர்தர வந்த நேரிழை மகளிர்
ஏசுப என்பஎன் நலனே அதுவே
பாகன் நெடிதுயிர் வாழ்தல் காய்சினக்
கொல்களிற்று யானை நல்கல் மாறே
தாமும் பிறரும் உளர்போல் சேறல்
முழவிமிழ் துணங்கை தூங்கும் விழவின்
யானவண் வாரா மாறே வரினே
சுடரொடு திரிதரு நெருஞ்சி போல
என்னொடு திரியேன் ஆயின் வென்வேல்
மாரி அம்பின் மழைத்தோல் சோழர்

வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை
ஆரியர் படையின் உடைகஎன்
நேரிறை முன்கை வீங்கிய வளையே.'' (அகம். 336)

இதனுள் யான் அவண் வாராமாறே எனத் தான் மனையோளைப்போல் இல்லுறைதல் கூறி யாண்டுச்செல்லிற் சுடரொடு திரியும் நெருஞ்சிபோல என மகளிரை யான் செல்வுழிச் செல்லுஞ் சேடியர்போலத் திரியும்படி பண்ணிக்கொள்வலெனக் கூறியவாறு காண்க.

எண்ணிய பண்ணை - தலைவற்குத் தகுமென்று ஆய்ந்த யாறுங் குளனும் காவும் ஆடிப் பதியிகந்து நுகர்வனபோல் வனவற்றுக்கண் தாமும் விளையாடுதற்கண்ணும்:

உ - ம்: ''கூந்தல் ஆம்பல் முழுநெறி அடைச்சிப்
பெரும்புனல் வந்த இருந்துறை விரும்பி
யாமஃது அயர்கம் சேறும் தானஃது
அஞ்சுவது உடைய ளாயின் வெம்போர்
நுகம்படக் கடக்கும் பல்வேல் எழினி
முனைஆன் பெருநிரை போலக்
கிளையொடு காக்கதன் கொழுநன் மார்பே.''
(குறுந். 80)

இதனுள் யாமஃதயர்கஞ் சேறும் என விளையாட்டுக் கூறினள்.

என்று இவற்றொடு பிறவும் - இக்கூறியவற்றின்கண்ணும், புதல்வற்கண்டு நனியுவப்பினுங் கூற்று நிகழுமென்று கூறப் பட்ட இவ்வெட்டோடே பிற கூற்றுக்களும்; கண்ணிய காமக் கிழத்தியர் மேன - இக்கருதப்பட்ட காமக் கிழத்தியரிடத்தன (எ - று).

கூற்றென்பது அதிகாரத்தான் வருவிக்க. ஒடுவென்றது, உருபு. கண்ணுதல் - ஒரு மனைத் தெருவின்கண் உரிமை பூண்டு இல்லறநிகழ்த்துவரென்று சிறப்புக்கருதுதல். 'பிறவு' மென்றதனால் தலைவனை என்னலந் தாவெனத் தொடுத்துக் கூறுவனவும், நின் பரத்தைமையெல்லாம் நின் தலைவிக்கு உரைப்பலெனக்

கூறுவனவுஞ், சேரிப்பரத்தையரொடு புலந்துரைப்பனவுந்; தலைவி கூற்றோடொத்து வருவனவும் பிறவாறு வருவனவுங் கொள்க.

''தொடுத்தென மகிழ்ந செல்லல் கொடித்தேர்ப்
பொலம்பூண் நன்னன் புனனாடு கடிந்தென
யாழிசை மறுகில் பாழி ஆங்கண்
அஞ்சல் என்ற ஆஅய் எயினன்
இகலடு கற்பின் மிஞிலியொடு தாக்கித்
தன்னுயிர் கொடுத்தனன் சொல்லியது அமையாது
தெறலரும் கடவுள் முன்னர்த் தேற்றி
மெல்லிறை முன்கை பற்றிய சொல்லிறந்து
ஆர்வ நெஞ்சம் தலைத்தலை சிறப்பநின்
மார்புதரு கல்லாய் பிறனா யினையே
இனியான் விடுக்குவென் அல்லேன் மந்தி
பனிவார் கண்ணள் பலபுலந்து உறையக்
கடுந்திறல் அத்தி ஆடணி நசைஇ
நெடுநீர்க் காவிரி கொண்டொளித் தாங்குநின்
மனையோள் வௌவலும் அஞ்சுவல் சினைஇ
ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்
வஞ்சி அன்னஎன் நலந்தந்து சென்மே.'' (அகம். 396)

இது காமக்கிழத்தி என்னலந் தாவென்றது.

''உள்ளுதொறு நகுவேன் தோழி வள்ளுகிர்
மாரிக் கொக்கின் கூரல கன்ன
குண்டுநீர் ஆம்பல் தண்துறை ஊரன்
தேங்கமழ் ஐம்பால் பற்றி என்வயின்
வான்கோல் எல்வளை வெளவிய பூசல்
சினவிய முகத்துச் சினவாது சென்றுநின்
மனையோட்கு உரைப்பல் என்றலின் முனையூர்ப்
பல்லா நெடுநிரை வில்லின் ஒய்யும்
தேர்வண் மலையன் முந்தைப் பேரிசைப்

புலம்பிரி வயிரியர் நலம்புரி முழவின்
மண்ணார் கண்ணின் அதிரும்
நன்ன ராளன் நடுங்களுர் நிலையே.'' (நற்றிணை, 100)

இது, மனையோட்கு உரைப்பலென்றலின் நடுங்கினானென்றது. ''கண்டேனின் மாயம்'' என்னும் மருதக்கலியுள்,

''ஆராக் கவவின் ஒருத்திவந்து அல்கற்றன்
சீரார் ஞெகிழஞ் சிலம்பச் சிவந்துநின்
போரார் கதவ மிதித்தது அமையுமோ
ஆயிழை யார்க்கும் ஒலிகேளா அவ்வெதிர்
தாழாது எழுந்துநீ சென்றது அமையுமோ
மாருள் சினைஇ அவள் ஆங்கே நின்மார்பின்
நாறிணர்ப் பைந்தார் பரிந்தது அமையுமோ
தேறிநீ தீயேன்அலேன் என்று மற்றவள்
சீறடி தோயா இறுத்தது அமையுமோ'' (கலி. 90)

எனச், சேரிப் பரத்தையராற் புலந்து தலைவனோடு கூறியவாறு காண்க. இன்னும் இதனானே,

''நீளிரும் பொய்கை இரைவேட்டு எழுந்த
வாளை வெண்போத் துணீஇய நாரைதன்
அடியறி வுறுதல் அஞ்சிப் பைப்பயக்
கடியிலம் புகூஉங் கள்வன் போலச்
சாஅய் ஒதுங்கும் துறைகேழ் ஊரனொடு
ஆவதாக இனிநான் உண்டோ
வருகதில் அம்மஎம் சேரிசேர
அரிவேய் உண்கண் அவன்பெண்டிர் காணத்
தாரும் தானையும் பற்றி ஆரியர்
பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்
தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்
மார்புகடி கொள்ளேன் ஆயின் ஆர்வுற்று
இரந்தோர்க்கு ஈயாது ஈட்டியோன் பொருள்போல்
பரந்து வெளிப்படா தாகி
வருந்துக தில்லயாய் ஓம்பிய நலனே.'' (அகம். 276)

இதனுட் பரந்து வெளிப்படாதாகி வருந்துக என்னலம் என்றமையிற் சேரிப்பரத்தையைப் புலந்து கூறுதன் முதலியனவுங் கொள்க. இன்னும் வேறுபட வருவனவெல்லாம் இதன்கண் அடக்குக.

(வி – ரை) பிறருரையாகக் கூறப்பட்டது இளம்பூரணர் உரையாம். புல்லுதலைக் கலக்கும் புலவி மாட்டும் காமக்கிழத்தியர் கூற்று நிகழும் என உரை காண்பர் இளம்பூரணர்.

மண்களை - செறித்து ஒலிக்கப்பட்ட, அஃதை - ஒரு வள்ளல். சிறை - அணை, கைவலித்தல் - கையால் பற்றிக் கொள்ளுதல்.

மாஅத்து - மாமரத்தினது, கதூஉம் - கவ்வி உண்ணும், ஆடி - கண்ணாடி.

நனைமுதிர் - கள்நிறைந்த, கோய் - கள்முகக்கும் கலம், ஊதல - ஊதாது, உரு - அச்சம், கடுத்தோள் - ஐயுறப்பெற்றாள்.

அடக்கமில்போழ்து - அறத்தின் வழியன்றி வேண்டியவாறு ஒழுகுங் காலத்து, தொடக்கத்துத்தாய் - பரத்தமை தொடங்கும் தாய், மருப்புப்பூண் - இடம் பொறித்த அணி, காழ் - முத்துவடம், சோர்வ போன்றன - அற்றுச் சொரிதலைப் போன்றன.

வழி முறைத்தாய் - தலைவற்கு இரண்டாவதும், மூன்றாவது மாக மணந்த தலைவி. மயங்கு நோய்தாங்கு - மயங்குதற்குக் காரண மாகிய காமநோயைப் பொறுத்துக் கொண்டு. முத்தினள் - முத்தமிட்டாளாய்.

புத்தேளிர் - புதியவளில்லத்தில்.

இறைத்தொடி - முன்கையிலுள்ள வளை.

வெண்ணி - ஓர் ஆறு, ஐது - மெல்லிது.

புனிற்று - ஈன்ற அணிமையையுடைய பசு, ஓய்நடை - ஓய்ந்த நடையினையுடைய.

பார்துறை - கரையை உடையதுறை, புடை கொண்டு - மோதப் பட்டு, அம்பி - தோணி.

குழல்கால் - உட்துளையுடைய தண்டு, உயக்கம் - வருத்தம், சொலிய - நீக்குதற்கு, இரீஇ - வைத்துவிட்டு, சுடரொடு திரிதல் -

கதிரவன் செல்லும் பக்கத்துத் தானும் செல்லுதல், வாராமாறே - வாராமையாலேயே.

முழுநெறி - முழுமையான பூ, அடைச்சி - செருகி, அஃது அயர்கம் - அவ்விளையாட்டுச் செய்தற்கு.

பொலம் - பொன், நன்னன், ஆய்எயினன், மிஞிலி இவர்கள் சிற்றரசர்கள். மந்தி - ஆதிமந்தி, அத்தி - ஆட்டனத்தி, ஆடுஅணி - நீர்விளையாடும் அழகு, பிணித்தோன் - சேரன்.

உகிர் - நகம், அலகு - மூக்கு, ஒய்யும் - செலுத்தும்.

ஆராக்கவவு - அடங்காத முயக்கு, அல்கல் - இரவு, ஞெகிழம் - சிலம்பு, போரார் - போர் பொருந்திய, பரிந்தது - பரித்தது.

உணீய - உண்ணும் பொருட்டு, கடியிலம் - காவல் பொருந்திய இல்லம். (10)

வாயில்கள் கூற்று நிகழ்த்துமாறு

152. கற்புங் காமமும் நற்பால் ஒழுக்கமும்
மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்
முகம்புகல் முறைமையிற் கிழவோற்குரைத்தல்
அகம்புகல் மரபின் வாயில்கட் குரிய.

இது, விருந்து முதலிய வாயில்கள் போலாது அகநகர்க்கட் புகுதற்குரிய வாயில்கள் கூற்று உணர்த்துகின்றது.

(இ - ள்.) கற்பும்–கணவன் முதலியோர் கற்பித்த நிலையில் திரியாத நல்லொழுக்கமும்; காமமும் – அன்பும்; நற்பால் ஒழுக் கமும் – எவ்வாற்றானுந் தங் குலத்திற்கு ஏற்றவாற்றான் ஒழுகும் ஒழுக்கமும், மெல் இயற்பொறையும் – வல்லென்ற நெஞ்சொடு பொறுக்கும் அவனைப்போலாது ஒரு தலையாக மெல்லென்ற நெஞ் சினராய்ப் பொறுக்கும் பொறையும்; நிறையும் – மறை புலப் படாமை நிறுக்கும் நெஞ்சுடைமையும்; வல்லிதின் விருந்து புறந் தருதலும் – வறுமையுஞ் செல்வமுங் குறியாது வல்லவாற்றான்

விருந்தினரைப் பாதுகாத்து அவர் மனமகிழ்வித்தலும்; சுற்றம் ஓம்பலும் – கொண்டோன் புரக்கும் நண்புடை மாந்தருஞ் சுற்றத் தாருங் குஞ்சர முதலிய காலேசங்களும் பல படை மாக்களும் உள்ளிட்ட சுற்றங்களைப் பாதுகாத்து அவை உண்டபின் உண்ட லும்; அன்னபிறவுங் கிழவோள் மாண்புகள் – அவைபோல்வன பிறவுமாகிய தலைவியுடைய மாட்சிமைகளை; முகம்புகன் முறைமை யிற் கிழவோற்கு உரைத்தல் – அவன் முகம்புகுதும் முறைமை காரணத்தால் தலைவற்குக் கூறுதல்; அகம்புகன் மரபின் வாயில் கட்கு உரிய – அகநகர்க்கட் புகுந்து பழகி அறிதன் முறைமை யினையுடைய வாயில்களுக்குரிய, என்றவாறு.

அன்னபிறவாவன, அடிசிற்றொழிலுங், குடிநீர்மைக் கேற்ற வகையான் தலைமகள் ஒழிந்த தலைமகளிரையும் மனமகிழ் வுறுத்தலுங், காமக்கிழத்தியர் நண்புசெய்து நன்கு மதிக்கப் படுதலும் போல்வன. புகலுதல், மகிழ்தல். செவிலி கூறுமை கொள்க, அவட்கு முகம்புகன் முறைமையின்மையின்.

உ - ம்: ''கடல்பாடு அவிந்து தோணி நீங்கி
நெடுநீர் இருங்கழிக் கடுமீன் கலிப்பினும்
வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்றினும்
மாணிழை நெடுந்தேர் பாணி நிற்பப்
பகலு நம்வயின் அகலா னாகிப்
பயின்றுவரு மன்னே பனிநீர்ச் சேர்ப்பன்
இனியே, மணப்பரும் காமம் தணப்ப நீந்தி
வாரா தோர் நமக் கியாஅர் என்னாது
மல்லன் மூதூர் மறையினை சென்று
சொல்லின் எவனோ பாண எல்லி
மனைசேர் பெண்ணை மடிவாய் அன்றில்
துணையொன்று பிரியினும் துஞ்சாக் காணெனக்
கண்ணிறை நீர்கொடு கரக்கும்
ஒண்ணுதல் அரிவையான் என்செய்கோ எனவே.''
(அகம். 50)

இதனுட் காமமிகுதியாற் கண் தாமே அழவுங் கற்பிற் கரக்குமெனத் தலைவி பொறையும் நிறையுந் தோழி பாணற்குக்

கூறினுள், அவன் தலைவற்கு இவ்வாறே கூறுவனெனக் கருதி. 'இனி' என்றதனுற் கற்புப் பெற்ரும்.

தலைவற்குக் கூறுவன வந்துழிக் காண்க.

'வாயி லுசாவே தம்முளு முரிய' (தொல். பொ. 512) என்பதனுல் தலைவற்கு உரையாமல் தம்முட் டாமே உசாவு வனவும் ஈண்டே கொள்க.

> "அணிநிற எருமை ஆடிய அள்ளல்
> மணிநிற நெய்தல் ஆம்பலொடு கலிக்கும்
> கழனி ஊரன் மகளிவள்
> பழன ஊரன் பாயலஇன் துணையே." (ஐங்குறு. 96)

இது, கற்புக் கூறியது.

"முளிதயிர் பிசைந்த" (குறுந். 167) என்பது அடிசிற் ருெழிலின்கண் மகிழ்ச்சி வாயில்கள் தம்முட் கூறியது.

> "கிழமை பெரியோர்க்குக் கேடின்மை கொல்லோ
> பழமை பயனேக்கிக் கொல்லோ—கிழமை
> குடிநாய்கர் தாம்பல பெற்ருருள் கேளா
> அடிநாயேன் பெற்ற அருள்." (திணை, நூற். 134)

பல வாயில்களை மறுத்த தலைவி தனக்கு வாயில் நேர்ந்தமை தோழிக்கு விறலி கூறியது.

(வி - ரை) வல்லென்ற நெஞ்சொடு பொறுக்கும் - காதல் முதலிய நோய்களைத் தலைவன் மிகவும் கடினப்பட்டுப் பொறுத்துக் கொள்வன் என்பதாம். நிறையெனப் படுவது மறை பிறரறியாமை என்னும் கலித் தொகையும்.

முகம் புகுதும் முறைமைக் காரணத்தால் - முகம் கொடுத்து மனமகிழக் கேட்குமாற்ருன்.

கடல் பாடு - கடலொளி, கலிப்பினும் - செருக்கித் திரியினும், பாணி நிற்ப - காலந் தாழ்த்து நிற்ப, மணப்பு அரும் காமம் - களவுக் காலத்துக் கூடுதற்கரிய வேட்கை ஒழிய, மறையினை சென்று மறைந்து சென்று, எல்லி - இரவில், பெண்ணை - பனை.

ஆடிய அள்ளல் - உழக்கிய சேறு, கலிக்கும் - தழைக்கும், கிழமை - உரிமை, நாய்கர் - தலைமக்கள். (11)

செவிலி கூற்று

153. கழிவினும் வரவினும் நிகழ்வினும் வழிகொள
நல்லவை யுரைத்தலும் அல்லவை கடிதலும்
செவிலிக் குரிய வாகு மென்ப.

இது, செவிலிகூற்று உணர்த்துகின்றது.

(இ - ள்.) கழிவினும் வரவினும் நிகழ்வினும் வழிகொள - மூன்றுகாலத்துந் தத்தங் குலத்திற்கு ஏற்கும்படியாக; நல்லவை உரைத்தலும்-முற்கூறிய கற்பு முதலிய நல்லவற்றைக் கற்பித்தலும்; அல்லவை கடிதலும் - காமநுகர்ந்த இன்பமாகிய கற்பிற்குத் தீயவற்றைக் கடிதலும்; செவிலிக்கு உரிய ஆகும் என்ப - செவிலித்தாய்க்கு உரியவாகுமென்று கூறுவர் புலவர் (எ - று).

''கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவாள்
உட்குடையாள் ஊராண் இயல்பினாள்—உட்கி
இடன் அறிந்து ஊடி இனிதின் உணரும்
மடமொழி மாதராள் பெண்.'' (நாலடி.. 384)

கட்கினியாள், இது காமம்; வகைபுனைவாள், இது கற்பு; உட்குடையாள், இஃது ஒழுக்கம்; ஊராண்மை, இது சுற்ற மோம்பல்; ஊடியுணர்தல், அல்லவைகடிதல்.

''நாலாறும் ஆறாய் நனிசிறிதாய் எப்புறனும்
மேலாறும் மேலுறை சோரினும்—மேலாய
வல்லாளாய் வாழுமூர் தற்புகழும் மாண்கற்பின்
இல்லாள் அமர்ந்ததே இல்.'' (நாலடி. 383)

என்னும் வெண்பா விருந்து புறந்தருதல் கூறியதுமாம்.

இனி 'ஆகு' மென்றதனானே செவிலி நற்றாய்க்கு உவந் துரைப்பனவுங் கொள்க.

''கானம் கோழிக் கவர்குரல் சேவல்
நுண்பொறி எருத்தில் தண்சிதர் உறைப்பப்
புதனீர் வாரும் பூநாறு புறவிறல்

சீறூ ரோளே மடந்தை வேறூர்
வேந்துவிடு தொழிலொடு செல்லினும்
சேர்ந்துவரல் அறியாது செம்மல் தேரே''
(குறுந். 242)

''மறியிடைப் படுத்த மான்பிணை போலப்
புதல்வன் நடுவணன் ஆக நன்றும்
இனிது மன்றஅவர் கிடக்கை முனிவின்றி
நீனிற வியலகம் கவைஇய
ஈனும் உம்பரும் பெறலருங் குரைத்தே''
(ஐங்குறு. 401)

''வாணுதல் அரிவை மகன்முலை ஊட்டத்
தானவள் சிறுபுறம் கவையினன் நன்றும்
நறும்பூம் தண்புறவு அணிந்த
குறும்பல் பொறைய நாடுகிழ வோனே''
(ஐங்குறு. 404)

இவை உவந்து கூறியன.

''பிரசம் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்திப்
புடைப்பில் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்
உண்ணென்று ஒக்குபு புடைப்பத் தெண்ணீர்
முத்தரிப் பொற்சிலம்பு ஒலிப்பத் தத்துற்று
அரிநரைக் கூந்தல் செம்முது செவிலியர்
பரீஇ மெலிந்தொழியப் பந்தர் ஓடி
ஏவன் மறுக்கும் சிறுவிளை யாட்டி
அறிவும் ஒழுக்கமும் யாண்டுணர்ந் தனள்கொல்
கொண்ட கொழுநன் குடிவறன் உற்றெனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்
ஒழுகுநீர் நுணங்கறல் போலப்
பொழுது மறுத்து உண்ணும் சிறுமது கையனே.''
(நற்றிணை, 110)

இது மனையறங் கண்டு மருண்டு உவந்து கூறியது.

"அடிசிற்கு இனியாளை அன்புடை யாளைப்
படுசொற் பழிநாணு வாளை — அடிவருடிப்
பின்தூங்கி முன்னுணரும் பேதையை யான் பிரிந்தால்
என்றூங்கும் கண்கள் எனக்கு"

என்னும் பாட்டுச் செவிலி கூற்றன்றாயினுந் தலைவன் மனையறங் கண்டு கூறியதன்பாற்படுமெனக் கொள்க.

(வி - ரை) இறந்த கால முதலியவற்றாற் கூறுதலாவது முன் புள்ளார் இவ்வாறு செய்து நன்மை பெற்றார், இவ்வாறு செய்து தீமை பெற்றார் எனவும், இப்பொழுது இன்னோர் இவ்வாறு செய்து பயன் பெறு நின்றாரெனவும், இவ்வாறு செய்தார் பின்பு நன்மை தீமை பெறுவர் எனவுங் கூறுதல் என விளக்கம் காண்பர் இளம்பூரணர்.

காதலன் காதல் வகை புனைவாள் - கணவன் விரும்புமாறு அணியணிவாள், உட்கு உடையாள் - அச்சமுடையவள், ஊராண் இயல்பினள் - பிறர்க்குதவும் தன்மையாள். இனிதின் உணரும் - இன்பமுண்டாக ஊடல் தீர்க்கும்.

எருத்தில் - கழுத்தில், சிதர் - நீர்.

கவையிய - சூழ்ந்த, ஈனும் - இவ்வுலகமும்.

பிரசம் - தேன், புடைப்பில் சுற்றும் - புடைப்பாகச் சுற்றிய, தத்துற்று - பாய்ந்து, பொழுது மறுத்துண்ணும் - ஒரு பொழுதின்றி ஒரு பொழுது உண்டிருக்கும்.

படுசொல் - உலகத்தார் புனைந்து கூறும் பழிச்சொல். (12)

அறிவர் கூற்று

154. சொல்லிய கிளவி யறிவர்க்கு முரிய.

இஃது அறிவரது கூற்றுக் கூறுகின்றது.

(இ – ள்.) முற்கூறிய நல்லவை யுணர்த்தலும் அல்லவை கடிதலுமாகிய கிளவி செவிலிக்கேயன்றி அறிவர்க்கு முரிய (எ - று).

என்றது, அறியாத தலைவியிடத்துச் சென்று அறிந்தார் முன்னுள்ளோர் அறம் பொரு ளின்பங்களாற் கூறிய புறப்புறச் செய்யுட்களைக் கூறிக் காட்டுவரென்பதாம்.

உ - ம்: ''தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை'' (குறள். 55)

''தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்'' (குறள். 56)

''மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தன் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.'' (குறள். 51)

இவை நல்லவையுணர்த்தல்.

''எறியென்று எதிர்நிற்பாள் கூற்றம் சிறுகாலை
அட்டில் புகாதாள் அரும்பிணி—அட்டதனை
உண்டி உதவாதாள் இல்வாழ்பேய் இம்மூவர்
கொண்டானைக் கொல்லும் படை'' (நாலடி. 363)

''தலைமகனின் தீர்ந்து ஒழுகல் தான்பிறரில் சேறல்
நிலைமையில் தீப்பெண்டிர்ச் சார்தல்—கலன் அணிந்து
வேற்றூர் புகுதல் விழாக்காண்டல் நோன்பெடுத்தல்
கோற்றொடியார் கோள்அழியு மாறு.'' (அறநெறி. 94)

இவை அல்லவைகடிதல். இவை அறிவர் கூற்றுதலிற் புறப் புறப் பொருளாயிற்றெனை உணர்ந்துகொள்க.

(வி – ரை) 'முன்வரு நீதியும், முயங்கியல் முறையும், பின்வரு நீதியும் பிறவும் எல்லாம் தெற்றெனக் கூறல் செவிலித் தாய்க்கும் முற்ற அறிவர்க்கும் உரியதாகும்' என வரும் அகப் பொருள் விளக்க நூற்பா இந்நூற்பாவையும் இதற்கு முன்னுள்ள நூற் பாவையும் தழுவியெழுந்ததாகும்.

எறியென்று - கணவற்குச் சினமூட்டி, சிறுகாலை - விடியற் காலத்து.

பிறரில்லத்திற்குச் செல்லுதலும், வேற்றூர் புகுதலும், விழாக் காண்டலும், நோன்பெடுத்தலும் தலைவனது கருத்தில் வழிச்செய் யின் தவரும். கோள் - கொள்கை ; கற்பு.

பூண்டல் - குழை போல்வன வற்றைப் பூணல், செரிதல் - கூந்தற்கண் மலர் செறிதல் போல்வன, ஓரான் வல்சி - ஒரு பசுவான் ஈட்டப்பட்ட உணவு. (13)

இதுவும் அது

155. இடித்துவரை நிறுத்தலு மவர தாகுங்
கிழவனுங் கிழத்தியு மவர்வரை நிற்றலின்.

இஃது அறிவர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ - ள்.) கிழவனுங் கிழத்தியும் அவர்வரை நிற்றலின் - தலைவனுந் தலைவியும் அவ்வறிவரது ஏவலைச்செய்து நிற்பராதலின் : இடித்துவரை நிறுத்தலும் அவரது ஆகும் - அவரைக் கழறி ஒரெல்லையிலே நிறுத்தலும் அவ்வறிவரது தொழிலாகும் (எ - று).

அஃது, உணர்ப்புவயின் வாராது ஊடிய தலைவிமாட்டு ஊடிநுனையும் உணர்ப்புவயின் வாராது ஊடிநுனையுங் கழறுப.

"உடுத்தும் தொடுத்தும் பூண்டும் செரீஇயும்
தழையணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி
விழவொடு வருதி நீயே இஃதோ
ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கைப்
பெருநலக் குறுமகள் வந்தென
இனிவிழ வாயிற்று என்னும் இவ்வூரே." (குறுந். 295)

இது, தலைவனைக் கழறியது.

"மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்." (குறுந். 52)

இது, தலைவியைக் கழறியது. (14)

புலவியும் ஊடலும் நிகழும் இடம்

156. உணர்ப்புவரை இறப்பினுஞ் செய்குறி
[பிழைப்பினும்
புலத்தலும் ஊடலுங் கிழவோற் குரிய.

இது, தலைவற்குப் புலவியும் ஊடலும் நிகழுமிடங் கூறுகின்றது.

(இ - ள்.) உணர்ப்புவரை இறப்பினும் - கற்பிடத்துத் தலைவி ஊடியவழி அவன் தேற்றத்தேறுமெல்லை இகந்தனளாயினும்; செய்குறி பிழைப்பினும் - களவின்கண் தலைவிசெய்த குறியைத் தானே தப்பினும்; புலத்தலும் ஊடலுங் கிழவோற்கு உரிய - உள்ளஞ் சிறிது வேறுபடுதலும் அவ்வேறுபாடு மிக்கு நீடுநின்று தேற்றியக்கால் அது நீங்குதலுந் தலைவற்குரிய (எ - று).

எனவே, கற்பிற்கும் புலத்தலும் ஊடலும் உரிய, களவிற்கும் புலத்தலும் ஊடலுமுரிய வென்றார். புலவியும் ஊடலுங் கற்பிற்கே பெரும்பான்மை நிகழ்தலிற் கற்பிற்கு அவை உரியவென்கின்றார். அவை களவிற்குஞ் சிறுபான்மை உரிமைபற்றிச் சேரக் கூறினர், சூத்திரச் சுருக்கம் நோக்கி.

''எவ்வி இழந்த வறுமையாழ்ப் பாணர்.'' (குறுந். 19)

இது கற்பிற் புலந்தது.

''தீதிலேம் என்று தெளிப்பவும் கைந்நீவி
யாதொன்றும் எங்கண் மறுத்தரவு இல்லாயின்''
(கலி. 81)

என்பது ஊடல். பிறஇடத்தும் ஊடுதல் அறிந்துகொள்க.

''கலந்தநோய் கைம்மிகக் கண்படா என்வயின்
புலத்தாயும் நீயாயின் பொய்யானே வெல்குவை''
(கலி. 46)

என்பது குறிபிழைத்துழிப் புலந்தது.

''குணகடல் திரையது பறைதபு நாரை.'' (குறுந். 128)

என்பதனுள் நாரை தெய்வங் காக்கும் அயிரை இரையை வேட்டாற்போல் நமக்கரியளாயினளை நீ வேட்டா யென்பதனாற் குறிபிழைத்துழி ஊடினமை கூறிற்று. பிறவும் இவ்வாறு வருவன உய்த்துணர்ந்து கொள்க.

(வி – ரை) புலவி அண்மைக் காலத்தது; ஊடல் அதனின் மிக்கது என வேறுபாடு காண்பர் இளம்பூரணர்.

தெளிப்பவும் - சூளுறலும், கைந்நீவி - கை கடந்து, மறுத்தரவு இல்லாயின் - துனியினின்றும் மீறுதல் இல்லையாயின். (15)

தோழி கூற்று நிகழ்த்தும் இடம்

157. புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்தும்
சொலத்தகு கிளவி தோழிக் குரிய.

இது, முன்னர்த் தலைவன் புலக்குமென்றார், அவ்விடத்துந் தோழியே கூற்று நிகழ்த்துதற்கு உரியளென்கின்றது.

(இ – ள்.) புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்தும் - தலைவன் தலைவியையுந் தோழியையும் அச்சுறுத்தற்குச் செய்கையாகச்செய்து கொண்டு புலத்தலும் அது நீட்டித்து ஊடலும் உடன் நிகழ்த்தியவழியும்; சொலத்தகு கிளவி தோழிக்கு உரிய- சொல்லத்தகும் பணிமொழி தோழிக்கு உரிய (எ – று).

எனவே, தலைவிகுறிப்பறிந்து தோழி கூறுதலன்றித் தலைவி தானே கூறப்பெறாளென்றவாறு, எனவே பாடாண்டிணைக் கைக்கிளையாயின் தலைவி கூறவும் பெறுமென்று கொள்க. உம்மை சிறப்பும்மை.

உ - ம்: ''தாயுயிர் வேண்டாக் கூருகிர் அலவன்
நரிதின்று பரிக்கும் ஊர யாவதும்
அன்பமுதல் உறுத்த காதல்
இன்றுஎவன் பெற்றனை பைந்தொடி திறத்தே''

''அலந்தாரை அல்லனோய் செய்தற்றால் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்'' (குறள். 1303)

என வரும்.

இவை கற்பில் தலைவி குறிப்பினால் தோழிகூற்று வந்தன.

''புலந்தாயு நீயாயில் பொய்யானே வெல்குவை''
(கலி. 46)

என்று களவில் தோழி கூறினாள் தலைவி குறிப்பினால்.

''கனைபெயல் நடுநாள்யான் கண்மாறக் குறிபெறாஅன்
புனையிழாய் என்பழி நினக்குரைக்கும் தான்என்ப
துனிநசைஇ வேட்கையான் மிசைபாடும் புள்ளில்தன்
அளிநசை ஆர்வுற்ற அன்பினேன் யானாக'' (கலி. 46)

எனத் தோழி சொல்லெடுப்பதற்குத் தலைவி சிறுபான்மை கூறுதலும் ஈண்டு உரியவென்றதனாற் கொள்க.

"யான்ஊடத் தான்உணர்த்த யான்உணரா விட்டதற்பின்
தானூட யானுணர்த்தத் தானுணரான்—தேனூறும்
கொய்தார் வழுதிக் குளிர்சாந்து அணியகலம்
எய்தாது இராக்கழிந்த வாறு."

(முத்தொள்ளாயிரம், 104)

இதனுள் யானுணர்த்தத் தானுணரானெனப் பாடாண் திணைக் கைக்கிளையுள் தலைவி கூறியது காண்க.

(வி – ரை) பரிக்கும் - உயிர் தாங்கும்.
கண் மாற - இடம் மாற, மிசை பாடும் புள் - வானம்பாடி. (16)

## இதுவும் அது

158. [1]பரத்தைமை மறுத்தல் வேண்டியுங் [2]கிழத்தி
மடத்தகு கிழமை உடைமை யானும்
அன்பிலை கொடியை என்றலும் உரியள்.

இது, சொல்லத்தகுங் கிளவியேயன்றிச் சொல்லத்தகாக் கிளவியுந் தோழி கூறுமென எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துகின்றது.

(இ - ள்.) பரத்தைமை மறுத்தல் வேண்டியும் - தலைவன் படிற்றுள்ளத்தாற் புறத்து ஒழுகும் ஒழுக்கத்தைப் போக்குதல் விரும்பியும்; கிழத்தி மடத்தகு கிழமை உடைமையானும் - தலைவி அவன் பரத்தைமை அறிந்தேயும் அவன் கூறியவற்றை மெய்யெனக்கொண்டு சீற்றங்கொள்ளாது ஒழுகும் மடனென்னுங் குணத்திற்கு ஏற்றன அறிந்தொழுகும் உரிமையுடையளாகிய எண்மையானும்; அன்பிலை கொடியை என்றலும் உரியள் - தலைவனை அன்பிலையென்றலுங் கொடியையென்றலுமுரியள் தோழி (எ - று).

கொடுமை கடையாயினார் குணம். களவினுள் தன்வயி னுரிமையும் அவன்வயிற் பரத்தைமையுங் கோடலின் இதற்குப் பரத்தைமை மறுத்தல் கொள்க.

---

1. பரத்தை, 2. கிழவி எனப் பாடங்கூறுவர் இளம்பூரணர்.

உ - ம்: ''கண்டவர் இல்லென உலகத்துள் உணராதார்
தங்காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளுள்
நெஞ்சறிந்த கொடியவை மறைப்பினும் அறிபவர்
நெஞ்சத்துக் குறுகிய கரியில்லை ஆகலின்
வண்பரி நவின்ற வயமான் செல்வ
நன்கதை அறியினு நயனில்லா நாட்டத்தால்
அன்பிலை எனவந்து கழறுவல் ஐயகேள்;

மகிழ்செய் தேமொழித் தொய்யில்சூழ் இளமுலை
முகிழ்செய முள்கிய தொடர்பவள் உண்கண்
அவிழ்பனி உரைப்பவும் நல்காது விடுவாய்
இமிழ்திரைக் கொண்க கொடியை காண்நீ;

இலங்கேர் எல்வளை ஏர்தழை அல்குல்
நலஞ்செல நல்கிய தொடர்பவள் சாஅய்ப்
புலந்தழப் புல்லாது விடுவாய்
இலங்குநீர்ச் சேர்ப்ப கொடியை காண்நீ;

எனவாங்கு, அனையள்என்று அளிமதி பெரும நின்னின்று
இறைவரை நில்லா வளையள் இவட்குஇனிப்
பிறையேர் சுடர்நுதல் பசலை
மறையச் செல்லுநீ மணந்தனை விடினே (கலி. 125)

என்னும் நெய்தற்கலி கைகோள் இரண்டிற்குங் கொள்க.

(வி – ரை) படிற்றுள்ளத்தால் - வஞ்சனை பொருந்திய உள்ளத்தால், எண்மையானும் - எளிமையானும்.

கரியில்லை - சான்றில்லை, வயமான் - வலிமையுடைய குதிரை, முள்கிய - கூடிய. (17)

தலைவி தோழியிடத்து அயன்மை கூறல்

159. அவன்குறிப் பறிதல் வேண்டியும் கிளவி
அகன்மலி ஊடல் அகற்சிக் கண்ணும்
வேற்றுமைக் கிளவி தோற்றவும் பெறுமே.

இது, தலைவிக்கு ஆவதோர் இலக்கணம் உணர்த்துகின்றது

(இ - ள்.) அவன் குறிப்பு அறிதல் வேண்டியும் - தோழி அன்பிலை கொடியையெனக் கேட்ட தலைவன் முனிந்த உள்ளத்த

ஞுங்கொல்லோ வென ஐயுற்று அவனது குறிப்பை அறிதல் வேண்டியும்; அகன்மலி ஊடல் அகற்சிக் கண்ணும்- தனது நெஞ்சில் நிறைந்துநின்ற ஊடல் கையிகந்து துனியாகிய வழி இஃது அவற்கு எவனுங்கொல்லென அஞ்சிய வழியும்; கிழவி வேற்றுமைக்கிளவி தோற்றவும் பெறும் - தலைவி தலைவனெடு அயன்மையுடைய சொல்லைத் தோற்றுவிக்கவும் பெறும் (எ - று).

உ - ம்: "நன்னலம் தொலைய நலமிகச் சாஅய்
இன்னுயிர் கழியினும் உரையல் அவர்நமக்கு
அன்னையும் அத்தனும் அல்லரோ
புலவியது எவனே அன்பிலங் கடையே." (குறுந். 93)

இதனுள் அவரை அன்பிலை கொடியையென்னுதி, அன்பில் வழி நின் புலவி அவரை என்செய்யும் அவர் நமக்கு இன்றியமை யாத எமரல்லரோவென இருவகையானும் அயன்மை கூறிய வாறு காண்க.

(வி – ரை) தலைவி தோழியொடு வேற்றுமையுடைய சொல்லை என்றிருத்தலே பொருத்தமாம். இந்நூற்பாவுக்குரிய எடுத்துக் காட்டாலும், அடுத்த நூற்பாவில், அங்ஙனம் தலைவி கண்ணும் தோழிகண்ணும் வேறுபாடு கண்டுழி என வரும் நச்சினர்க்கினியர் உரையானும் இவ்வுண்மையறியப்படும். இளம்பூரணர் உரை யாயின் தலைவி தலைவனெடு வேற்றுமையுடைய சொல்லைத் தோற்று விக்கவும் பெறும் என்று உரையிருப்பது பொருந்துவதாகும். அவர் தரும் எடுத்துக் காட்டால் அவ்வுண்மை போதரும். (18)

## பணிந்த கிளவி தலைவற்கும் உரித்தாதல்

160. காமக் கடப்பினுள் பணிந்த கிளவி
காணுங் காலைக் கிழவோற் குரித்தே
வழிபடு கிழமை யவட்கிய லான.

இது, தலைவி வேற்றுமைக்கிளவி தோற்றிய பின்னர்த் தலை வற்கு உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

(இ - ள்) காமக் கடப்பினுட் பணிந்த கிளவி - அங்ஙனந் தலைவி கண்ணுந் தோழிகண்ணும் வேறுபாடு கண்டுழித் தனக்குக்

காமங் கையிகந்துழித் தாழ்ந்துகூறுங் கூற்று; காணுங் காலை கிழவோற்கு உரித்தே - ஆராயும் காலத்துத் தலைவற்கு உரித்து; வழிபடு கிழமை அவட்கு இயலான - அவனை எஞ் ஞான்றும் வழிபட்டொழுகுதல் தலைவிக்கு இல்லறத்தோடு பட்ட இயல்பாகலான் (எ - று).

உ - ம்: "ஆயிழாய் நின்கண் பெறின்அல்லால் இன்னுயிர் வாழ் கல்லா

என்கண் எவனோ தவறு" (கலி. 88)

"கடியர்தமக்கு, யார்சொல்லத் தக்கார் மாற்று" (கலி. 88)

"நின்னணை கடக்கிற்பார் இயார்" (கலி. 81)

என்றாற்போல்வன கொள்க. (19)

'காணுங்காலை' என்றதனால் தலைவன் தலைவியெதிர் புலப்பது தன் தவறு சிறிதாகிய இடத்தெனவும், இங்ஙனம் பணிவது தன் தவறு பெரிதாகிய இடத்தெனவுங் கொள்க.

பணிமொழி தலைவிக்கும் உரித்தாதல்

161. அருண்முந் துறுத்த அன்புபொதி கிளவி
பொருள்பட மொழிதல் கிழவோட்கும்[1] உரித்தே.

இது, தலைவன் பணிந்து மொழிந்தாங்குத் தலைவியும் பணிந்து கூறுமென்கின்றது.

(இ - ள்.) அருள் முந்துறுத்த அன்பு பொதி கிளவி - பிறர் அவலங் கண்டு அவலிக்கும் அருள் முன் தோற்றுவித்த அவ்வருள் பிறத்தற்கு ஏதுவாகி எஞ்ஞான்றும் அகத்து நிகழும் அன்பினைக் கரந்து சொல்லுங் கிளவி; பொருள்பட மொழிதல் கிழவோட்கும் உரித்தே - பணிந்தமொழி தோற்றாது வேறோர் பொருள் பயப்பக்கூறுதல் தலைவிக்கும் உரித்து (எ - று).

வேறுபொருளாவது தலைவன் கூறியாங்குத் தானும் பணிந்து கூறுவாள், பணியாதே தன் நெஞ்சு தன்னையுங் கைகடந்து அவன் ஏவலைச் செய்ததென்றாற்போலக் கூறுதலுமாம்.

---

1. கிழவோட் குரித்தே என்பது இளம்பூரணர் பாடம்.

இது 'தன்வயிற் கரத்தலும் அவன்வயின் வேட்டலும்' (தொல். பொ. 11) எனப் பொருளியலுள் வழுவமைத்தற்கு இலக்கணம்.

"இணையிரண்டு" என்னும் மருதக்கலியுள்,

"மாசற மண்ணுற்ற மணியேசும் இருங்கூந்தல்
வீசேர்ந்து வண்டார்க்கும் கவின்பெறல் வேண்டேன்மன்
நோய்சேர்ந்த திறம்பண்ணி நின்பாணன் எம்மனை
நீசேர்ந்த இல்வினுய் வாராமல் பெறுகற்பின்"

(கலி. 77)

எனக் கூறிய தலைவி,

"கடைஇய நின்மார்பு தோயலம் என்னும்
இடையு நிறையும் எளிதோநிற் காணின்
கடவுபு கைத்தங்கா நெஞ்சென்னும் தம்மோடு
உடன்வாழ் பகையுடை யார்க்கு" (கலி. 77)

என்புழி நிற்காணிற் கடவுபு கைத்தங்கா நெஞ்செனவே அவன் ஆற்ருமை கண்டருளி நெஞ்சு ஏவல்செய்ததென வேருேர் பொருள் பயப்பக் கூறித் தன் அன்பினைக் கரந்தவாறு காண்க.

"கூர்முண் முள்ளி" (அகம். 26) என்பதனுட் "சிறுபுறங் கவையினன்" என அவன் வருந்தியது ஏதுவாகத் தான் மண் போன் ஞெகிழ்ந்தேனென அருண் முந்துறுத்தவாறும், இவை பாராட்டிய பருவமும் உளவென அன்புபொதிந்து கூறியவாறும், ஆண்டும் பணிந்தமொழி வெளிப்படாமல் நெஞ்சறைபோகிய அறிவினேற்கெனத் தன் அறிவினை வேருக்கி அதன்மேலிட்டுக் கூறியவாறுங் காண்க.

(வி – ரை) அருளைத் தோற்றுவிக்கும் அன்பு என்பது - அருளென்னும் அன்பின் குழவி என்பதனுனும் அறியலாம். தலைவன் தன் பணிந்த மொழியை வெளிப்படையாகக் கூறுவது போலத் தலைவி கூருள் என்பது கருத்து.

மண்ணுற்ற - கழுவுதலுற்ற. நோய் சேர்ந்த திறம் - நோதிறம் என்னும் பண், கடைஇய நின் மார்பு - என்னை நின் மேல் வீழ் வித்த மார்பு. இடையும் நிறையும் - தடுக்கின்ற நிறை தாமும், கடவுபு - செலுத்தி, கைத் தங்கா தன் எல்லைக்குட்படாத. (20)

ஈரிடத்தும் அலர் எழல்

162. களவும் கற்பும் அலர்வரை வின்றே

இதுவுந் தலைவிக்குந் தோழிக்கும் உரிய கூற்றுக் கூறுகின்றது.

(இ - ள்.) களவின்கண்ணுங் கற்பின்கண்ணும் அலரெழுகின்றதென்று கூறுதல் தலைவிக்குந் தோழிக்கும் நீக்குநிலைமையின்று (எ - று).

வரைவின்றெனப் பொதுப்படக் கூறினமையான் இருவரையுங் கொண்டாம். தலைவன் ஆங்குக் கூறுவனாயிற் களவிற் கூட்டமின்மையுங் கற்பிற் பிரிவின்மையும் பிறக்கும். 'ஒப்பக்கூற' லென்னும் உத்திபற்றிக் களவும் உடனோதினார் சூத்திரஞ் சுருங்குதற்கு.

'களவலராயினும்' (தொல். கள. 24) எனவும், 'அம்பலுமலரும்' (தொல். கள. 48) எனவுங் களவிற் கூறியவை அலராய் நிகழ்ந்தவழி வேறுசில பொருண்மை பற்றிக் கூறுதற்கு வந்தன. அவை அலர்கூறப் பெறுப என்றற்கு வந்தன வன்றென உணர்க.

உ - ம்: "கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று." (குறள். 1146)

இது களவு.

"வேதின வெரிநின் ஓதி முதுபோத்
தாறுசென் மாக்கள் புட்கொளப் பொருந்தும்
சுரனே சென்றனர் காதலர் உரனழிந்து
ஈங்குயான் தாங்கிய எவ்வம்
ஆங்கறிந் தன்றுஇவ அழுங்கல் ஊரே." (குறுந். 140)

இது கற்பு.

"கரும்பின் எந்திரம் களிற்றெதிர் பிளிறும்
தேர்வண் கோமான் தேனூர் அன்னஇவள்
நல்லணி நயந்துநீ துறத்தலில்
பல்லோர் அறியப் பசந்தன்று நுதலே." (ஐங்குறு. 55)

இது தோழி அலர் கூறியது.

(வி - ரை) புட்கொள - நிமித்தம் கொள்ள. (21)

அலரது பயன்

**163. அலரில் தோன்றுங் [1]காமத்திற் சிறப்பே.**

இஃது அலர் கூறியதனாற் பயன் இஃது என்கின்றது.

(இ - ள்.) அலரில் தோன்றுங் காமத்திற் சிறப்பே - இருவகைக் கைகோளினும் பிறந்த அலரால் தலைவற்குந் தலைவிக்குங் காமத்திடத்து மிகுதிதோன்றும் (எ - று).

என்றது, களவு அலராகியவழி இடையீட்டிற்கும் அஞ்சிய அச்சத்தான் இருவர்க்குங் காமஞ்சிறத்தலுங் கற்பினுட் பரத்தைமையான் அலர்தோன்றியவழிக் காமஞ்சிறத்தலும் அவள் வருந்துமென்று தலைவற்குக் காமஞ்சிறத்தலுந் தலைவன் பிரிவின் கட் டலைவிக்குக் காமஞ் சிறத்தலும் பிறவுமாம்.

உ - ம்: ''ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளும்இந் நோய்'' (குறள். 1147)

''நெய்யால் எரி நுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காம நுதுப்பேம் எனல்''

என்றாற்போல்வன கொள்க.

(வி - ரை) நுதுப்பேம் - அவிப்பேம். (22)

அலரால் தோன்றும் காமச் சிறப்பு

**164. கிழவோன் விளையாட் டாங்கும் அற்றே.**

இதுவுங் காமச்சிறப்பே கூறுகின்றது.

(இ - ள்.) கிழவோன் விளையாட்டு - தலைவன் பரத்தையர் சேரியுள் ஆடலும் பாடலும் கண்டுங் கேட்டும் அவருடன் யாறு முதலியன ஆடியும் இன்பம் நுகரும் விளையாட்டின் கண்ணும், ஆங்கும் அற்று - அப்பரத்தையரிடத்தும் அலரால் தோன்றுங் காமச் சிறப்பு (எ - று).

'ஆங்கும்' என்ற உம்மையான் ஈங்கும் அற்றெனக் கொள்க. தம்மொடு தலைவன் ஆடியது பலரறியாதவழி யென்றுமாம்.

1. காமத்து மிகுதி எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

பல ரறிந்தவழி அவனது பிரிவு தமக்கு இழிவெனப்படுதலின் அவர் காமச்சிறப்புடையராம். தலைவன் அவரொடு விளையாடிய அலர்கேட்குந்தோறுந் தலைவிக்குப் புலத்தலும் ஊடலும் பிறந்து காமச்சிறப்பெய்தும். ஆங்கும் ஈங்குமெனவே அவ்விருவ ரிடத்துந் தலைவன் அவை நிகழ்த்தினுகலின் அவற்குங் காமச் சிறப்பு ஒருவாற்ருற் கூறியவாருயிற்று. இது காமக்கிழத்திய ரல்லாத பரத்தையரொடு விளையாடிய பகுதியாகலின் வேறு கூறினர். காமக்கிழத்தியர் ஊடலும் விளையாடலுந் தலைவி ஊடலும் விளையாடலும் 'யாறுங் குளனும்' (தொல். பொ. 191) என்புழிக் கூறுப. அஃது அலரெனப்படாமையின் விளை யாட்டுக் கண்ணென விரித்த உருபு வினைசெய்யிடத்து வந்தது.

உ-ம் : "எஃகுடை எழில்நலத்து ஒருத்தியொடு நெருநை
வைகுபுனல் அயர்ந்தனை என்ப அதுவே
பொய்புறம் பொதிந்தயான் கரப்பவும் கையிகந்து
அலரா கின்ருல் தானே" (அகம். 116)

எனவும்,

"கோடுதோய் மலிர்நிறை ஆடி யோரே" (அகம். 166)

எனவும் தலைவியும் பரத்தையும் பிறர் அலர்கூறியவழிக் காமஞ் சிறந்து புலந்தவாறு காண்க. ஆண்டுப் பணிந்து கூறுங்காலும் விளையாடுங்காலுந் தலைவன் காமச்சிறப்புக் காண்க.

(வி - ரை) எஃகுடை - நுண்மையுடைய.
கோடு - தோய் - இரு கரையும் பற்றிச் செல்லும். (23)

வாயில்கட்குரிய மரபு

165. மனைவி தலைத்தாள் கிழவோன் கொடுமை
தம்முள ஆதல் வாயில்கட் கில்லை.

இது, வாயில்கட்கு உரிய இலக்கணங் கூறுகின்றது.

(இ - ள்.) மனைவி தாட்டலை - தலைவி எத்திறத்தானும் புலந்துழி அவளிடத்து; கிழவோன் கொடுமை - தலைவன் கொடுந்தொழில்களை; தம் உள ஆதல் - தம் உரைக்கண் உள வாக்கி உரைத்தல்; வாயில்கட்கு இல்லை - தோழி முதலிய வாயில் களுக்கில்லை (எ - று).

தாட்டலையென மாறுக. அது பாதத்திடத்தென்னுந் தகுதிச்சொல். அது வாயில்கள் கூற்ருய் வந்தது. உதாரணம் வந்துழிக் காண்க.

(வி - ரை) தாள்தலை - அடியிடத்து, மனைவியிடத் தென்னுது மனைவியின் அடியிடத்து என்றது தகுதிச் சொல்லாம். (24)

### இதுவும் அது

166. மனைவி முன்னர்க் கையறு கிளவி
மனைவிக் குறுதி உள்வழி யுண்டே.

இஃது எய்தியது இகந்துபடாமற் காத்தது; இன்னுழி யாயிற் பெறுமென்றலின்.

(இ - ள்.) மனைவி முன்னர்க் கையறு கிளவி - தலைவிமுன் னர்த் தலைவன் காமக்கடப்பினுற் பணியுந்துணையன்றி நம்மைக் கையிகந்தானெனக் கையற்றுக் கூறுங்கூற்று; மனைவிக்கு உறுதி உள்வழி உண்டே - புலந்துவருந் தலைவிக்கு மருந்தாய் அவன் கூடுவதோர் ஆற்றல் உறுதி பயக்குமாயின் அவ்வாயில்கட்கு உளதாம் (எ - று).

உ-ம் : "அறியா மையின் அன்னை அஞ்சிக்
குழையன் கோதையன் குறும்பைந் தொடியன்
விழவயர் துணங்கை தழூஉகம் செல்ல
நெடுநிமிர் தெருவில் கைபுகு கொடுமிடை
நொதும லாளன் கதுமெனத் தாக்கலின்
கேட்போர் உளர்கொல் இல்லைகொல் போற்றென
யாணது பசலை என்றனன் அதன்எதிர்
நாணிலை எலுவ என்றுவந் திசினே
செறுநரும் விழையும் செம்ம லோன்என
நறுநுதல் அரிவை போற்றேன்
சிறுமை பெருமையில் காணுது துணிந்தே."
(நற்றிணை, 50)

இதனுள், என்னறியாமையாலே அன்றாய் நின்னையஞ்சி யாங் கள்வன் துணங்கையாடுங் களவைக் கையகப் படுப்பேமாகச் செல்லாநிற்க, அவன் குழை முதலியவற்றை உடையனாய்த் தெருவுமுடிந்த இடத்தே எதிர்ப்பட்டானாக, அவ்வருளாமையின் யாணது என்கட் பசலையென்றானாக, அவனெதிரே என்சிறுமை பெரிதாகலான் ஆராயாதே துணிந்து நாணிலை எலுவ வந்தேனெனத் தோழி மெய்யானும் பொய்யானும் புனைந்துரைத்தவாறு காண்க. ஏனைய வாயில்கள் கூற்று வந்துழிக் காண்க.

இங்ஙனந் தலைவன் சிறைப்புறமாகக் கூறுவன 'அன்புதலைப் பிரிந்த கிளவி தோன்றின்' (தொல். பொ. 179) என்புழிக் கூறுதும்.

(வி - ரை) காமக் கடப்பினால் - காம மிகுதியால்.

தழூஉகம் - அகப்படுப்பேமாகி, கைபுகுகொடுமிடை - வேறொரு வழி வந்து புகுந்த வளைந்த விடத்தே; நொதுமலாளன் - தலைவன், தாக்கலின் - எதிர்ப்படலின், யாணது பசலை என்றனன் - என்னிடத்துப் பசலை அழகுடைத்து என்றேனாக, சிறுமை பெருமையின் - என் சிறுமை பெரிதாகலான். காணாது - ஆராயாது. (25)

இதுவும் அது

167. முன்னிலைப் புறமொழி எல்லா வாயிற்கும்
பின்னிலைத் தோன்றும் என்மனார் புலவர்.

இது, வாயில்கட்கு உரியதோர் பகுதி கூறுகின்றது.

(இ - ள்.) முன்னிலைப் புறமொழி - முன்னிலையாய் நிற்கின்ற தலைவனை நோக்கிப் பிறரைக் கூறுமாறு போலக் கூறுதல்; எல்லா வாயிற்கும் - பன்னிரண்டு வாயில்களுக்கும்; பின்னிலைத் தோன்றும் என்மனார் புலவர் - குறைவேண்டி முயலுங்கால் தோன்றுமென்று கூறுவர் புலவர் (எ - று).

உ - ம்: "உண்கடன் வழிமொழிந்து இரக்குங்கால் முகனும்தாம்
கொண்டது கொடுக்குங்கால் முகனும்வே றாகுதல்
பண்டும் இவ்வுலகத்து இயற்கை அஃதுஇன்றும்
புதுவ தன்றே புலனுடை மாந்திர்

தாயுயிர் பெய்த பாவை போல
நலனுடை யார்மொழிக்கண் தாவார்தாம் தந்நலம்
தாதுதேர் பறவையின் அருந்திறல் கொடுக்குங்கால்
ஏதிலார் கூறுவது எவனோநின் பொருள்வேட்கை''

(கலி. 21)

எனத் தலைவனை நோக்கி முன்னிலைப் புறமொழியாகக் கூறிற்று.

(வி - ரை) உண்கடன் - தானுண்ணுதற்குரிய கடன், வழி மொழிந்து - போற்றியுரை கூறி, தாய் - ஓவியம் தீட்டுவான், தாவார் - கெடார்.

கூத்தர்க்கு உரிய கூற்றுக்கள்

168. தொல்லவை யுரைத்தலும் நுகர்ச்சி [1]யேற்றலும்
பல்லாற் றானும் ஊடலில் [2]தணித்தலும்
உறுதி காட்டலும் அறிவுமெய் நிறுத்தலும்
ஏதுவின் உணர்த்தலுந் [3]துணிவு காட்டலும்
அணிநிலை யுரைத்தலுங் கூத்தர் மேன.

இது, கூத்தர்க்குரிய கிளவி கூறுகின்றது.

(இ - ள்.) தொல்லவை உரைத்தலும் - முன்பே மிக்கார் இருவர் இன்பம் நுகர்ந்தவாறு இதுவெனக் கூறலும்; நுகர்ச்சி ஏற்றலும் - நுமதுநுகர்ச்சி அவரினுஞ் சிறந்ததெனக் கூறலும்; பல் ஆற்றானும் ஊடலில் தணித்தலும் - இல்லறக்கிழமைக்கு இயல்பன்றென்றாயினும் இஃது அன்பின்மையா மென்றாயினுங் கூறித் தலைவியை ஊடலினின்று மீட்டலும்; உறுதிகாட்டலும் - இல்வாழ்க்கை நிகழ்த்தி இன்பநுகர்தலே நினக்குப் பொருளென்றலும்;

இனிக் கூறுவன தலைவற்குரிய : அறிவு மெய் நிறுத்தலும் - புறத்தொழுக்கம் மிக்க தலைவற்கு நீ கற்றறிந்த அறிவு இனி மெய்யாக வேண்டுமென்று அவனை மெய்யறிவின்கண்ணே நிறுத்

1. ஏத்தலும், 2. தகைத்தலும், 3. துணியக்காட்டலும் எனப் பாடங்கொள்வர் இடம்பூரணர்.

தலும்; ஏதுவின் உணர்த்தலும் - இக் கழிகாமத்தான் இழிவு தலைவருமென்றதற்குக் காரணங் கூறலும்; துணிவு காட்டலும் - அதற்கேற்பக் கழிகாமத்தாற் கெட்டாரை எடுத்துக்காட்டலும்; அணிநிலை உரைத்தலும் - முலையினுந் தோளினும் முகத்தினும் எழுதுங்காற் புணர்ச்சிதோறும் அழித்தெழுதுமாறு இதுவெனக் கூறலும்; கூத்தர் மேன - இவ்வெட்டுங் கூத்தரிடத்தன (எ - று).

கூத்தர், நாடகசாலையர். தொன்றுபட்ட நன்றுந் தீதுங் கற்றறிந்தவற்றை அவைக்கெல்லாம் அறியக்காட்டுதற்கு உரிய ராகலிற் கூத்தர் இவையும் கூறுபவென்றார். இலக்கியம் இக் காலத்திறந்தன.

> "பொருட்பொருளார் புன்னலம் தோயார் அருட்பொருள்
> ஆயும் அறிவின் அவர்." (குறள். 914)

இஃது, அறிவுமெய்ந்நிறுத்தது.

(வி - ரை) முன்னைய நான்கையும் தலைவியிடத்தும் பின்னைய நான்கையும் தலைவனிடத்தும் கூறுவதாகக் கூறிய திறம் அறியத் தக்கது. கூத்தற்குரிய கூற்று எட்டனையும், தலைவியிடத்துக் கூறுவ தாகவே இளம்பூரணர் பொருள் காண்பர். 'அவர் எல்லா நெறி யினானும் புனைந்துரைக்க வல்லாராதலான் அவர் மேலன என உரைத்தார். இவற்றிற்குச் செய்யுள் வந்த வழிக் கண்டு கொள்க. இந்நூல் வழக்குஞ் செய்யுளும் பற்றி நிகழ்தலின் இப்பொருண் மேல் வரும் வழக்குரை உதாரணமாம் என விளக்கமும் காண்பர் அவர். (27)

கூத்தர்க்கும் பாணர்க்கும் உரிய மரபு

169. நிலம்பெயர்ந் துறைதல் [1]வரைநிலை உரைத்தல்
கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை யுரிய.

இஃது, அதிகாரப்பட்ட கூத்தரோடு பாணர்க்கும் உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

(இ - ள்.) நிலம் பெயர்ந்து உறைதல் வரைநிலை உரைத் தல் - தலைவன் சேட்புலத்துப் பிரிந்துறைதலைத் தலைவிக்காக

---

1. அவள் நிலையுரைத்தல் எனப்பாடம் கொள்வர் இளம்பூரணர்.

வரைந்து மீளும் நிலைமை கூறுதல்; கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை உரிய - கூத்தர்க்கும் பாணர்க்கும் யாப்பமைந்தன உரிய (எ – று).

யாப்பமைதலாவது, தோழியைப்போலச் செலவழுங்கு வித்தல் முதலியன பெருராகலின், யாழெழீஇக் கடவுள் வாழ்த்தி அவளது ஆற்ருமை தோற்றும்வகையான் எண்வகைக்குறிப்பும்பட நன்னயப்படுத்துத் தலைவற்குக் காட்டல் போல்வன.

உ - ம்: "அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழிக்
காயாம் செம்மல் தாஅய்ப் பலவுடன்
ஈயன் மூதாய் வரிப்பப் பவளமொடு
மணிமிடைத் தன்ன குன்றம் கவைஇய
அங்காட்டு ஆரிடை மடப்பிணை தழீஇத்
திரிமருப்பு இரலை புல்லருந் துகள
முல்லை வியன்புலம் பரப்பிக் கோவலர்
குறும்பொறை மருங்கின் நறும்பூ அயரப்
பதவுமேயல் அருந்து மதவுநடை நல்லான்
வீங்குமாண் செருத்தல் தீம்பால் பிலிற்றக்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரு
மாலையும் உள்ளார் ஆயில் காலை
யாங்கா குவம்கொல் பாண என்ற
மனையோள் சொல்லெதிர் சொல்லல் செல்லேன்
செவ்வழி நல்யாம் இசையினென் பையெனக்
கடவுள் வாழ்த்திப் பையுண் மெய்ந்நிறுத்து
அவர்திறம் செல்வேன் கண்டனென் யானே
விடுவிசைப் புரவி வீங்குபரி முடுகக்
கல்பொருது இரங்கும் பல்லார் நேமிக்
கார்மழை முழக்கிசை கடுக்கும்
முனைநல் லூரன் புனைநெடுந் தேரே." (அகம். 14)

இதனுள், தலைவி இரக்கந்தோன்றக் கடவுள் வாழ்த்திப்பிரிந் தோர் மீள நினையாநின்றேனுக அவர் மீட்சி கண்டேனெனப் பாணன் கூறியவாறு காண்க.

கூத்தர் கூற்று வந்துழிக் காண்க.

(வி – ரை) தலைவிக்காக வரைந்து - தலைவிக்காக நீக்கி.

காயாம் செம்மல் - வாடிய காயாப்பூ, தாஅய் - பரந்துகிடக்க, ஈயல் மூதாய் - இந்திர கோபப் பூச்சி, பிணை - பெண்மான், இரலை– ஆண்மான், திரிமருப்பு - முறுக்கிய கொம்பு, பதவு - அறுகம்புல், செருத்தல் - மடி, பயிர்தல் - அழைத்தல்.

கோண்மாக்கள் - கொலை செய்யும் புலி முதலியன. (28)

இளையோர்க்கு உரிய கூற்றுக்கள்

170. ஆற்றது பண்புங் கருமத்து [1]வினைவும்
ஏவல் முடிவும் வினாவுஞ் செப்பும்
ஆற்றிடைக் கண்ட பொருளும் இறைச்சியும்
தோற்றஞ் சான்ற அன்னவை பிறவும்
இளையோர்க் குரிய கிளவி யென்ப.

இஃது, உழைக்குறுந்தொழிற்குங் காப்பிற்கும் (தொல். பொ. 171) உரியராகிய இளையோர்க்குரிய இலக்கணங் கூறுகின்றது.

(இ – ள்.) ஆற்றது பண்பும் - தலைவன் தலைவியுடனாயினுந் தானே யாயினும் போக்கு ஒருப்பட்டுழி வழிவிடற்பாலராகிய இளையோர் தண்ணிது வெய்து சேய்த்து அணித்தென்று ஆற்றது நிலைமை கூறுதலும்; கருமத்து வினைவும் - ஒன்றுகச் சென்று வந்து செய்பொருண் முடிக்குமாறு அறிந்து கூறுதலும்; ஏவல் முடிவும் - இன்னுழி இன்னது செய்க என்று ஏவியக்கால் அதனை முடித்துவந்தமை கூறலும்; வினாவும் - தலைவன் ஏவலைத் தாங் கேட்டலும்; செப்பும் - தலைவன் வினாவாத வழியும் தலைவிக்காகவாயினுஞ் செப்பத் தகுவன தலைவற்கு அறிவுகூறுதலும்; ஆற்றிடைக் கண்ட பொருளும் - செல்சுரத்துக் கண்ட நிமித்தம் முதலிய பொருள்களைத் தலைவர்க்குந் தலைவிக்கும் உறுதிபயக்குமாறு கூறலும்; இறைச்சியும் - ஆண்டு மாவும் புள்ளும் புணர்ந்து விளையாடுவனவற்றை அவ்விருவர்க்குமாயினுந் தலைவற்கேயாயினுங் காட்டியும் ஊறுசெய்யுங் கோண்

1. வினையும் என பாடங்கொள்வர் இளம்பூரணர்.

மாக்களை அகற்றியுங் கூறுவனவும்; தோற்றஞ் சான்ற அன்னவை பிறவும் - அங்ஙனம் அவற்குத் தோற்றுவித்தற்கமைந்த அவைபோல்வன பிறகூற்றுக்களும்; இளையோர்க்கு உரிய கிளவி என்ப - இளையோர்க்கு உரிய கூற்றென்று கூறுவர் ஆசிரியர் (எ - று).

தலைவியது செய்தி அறிந்துவந்து கூறுவனவும் பிற பொருளுணர்ந்து வந்துரைப்பனவும் ஒற்றர்கண் அடங்கும். ஏவன் முடிவிற்கும் இஃதொக்கும்.

'சான்ற' வென்றதனன் ஆற்றது பண்பு கூறுங்கால் இது பொழுது இவ்வழிச்சேறல் அமையாதென விலக்கலுங் கருமங் கூறுங்காற் சந்துசெய்தல் அமையுமெனக் கூறுதலும் போல்வன அமையாவாம். அவர் அவை கூறப்பெருராகலின்.

பிறவாவன, தலைவன் வருவனெனத் தலைவி மாட்டுத் தூதாய் வருதலும், அறிந்துசென்ற தலைவற்குத் தலைவி நிலை கூறுதலும், மீளுங்கால் விருந்து பெறுகுவள் கொல்லெனத் தலைவிநிலை யுரைத்தலும் போல்வன. இலக்கியம் வந்துழிக் காண்க.

உ - ம்: ''விருந்தும் பெறுகுநள் போலும் திருத்திழைத்
தடமென் பணைத்தோள் மடமொழி அரிவை
தளிரியல் கிள்ளை இனிதின் எடுத்த
வளராப் பிள்ளைத் தூவி அன்ன
வார்பெயல் வளர்த்த பைம்பயிர்ப் புறவில்
பறைக்கண் அன்ன நிறைச்சுனை தோறும்
துளிபடு மொக்குள் துள்ளுவன சாலத்
தொளிபொரு பொகுட்டுத் தோன்றுவன மாய
வளிசினை உதிர்த்தலின் வெறிகொள்பு தாஅய்ச்
சிரற்சிறகு ஏய்ப்ப வறற்கண் வரித்த
வண்டுண் நறுவீ துமித்த நேமி
தண்ணில மருங்கில் போழ்ந்த வழியுள்
நிரைசெல் பாம்பின் விரைபுநீர் முடுகச்
செல்லு நெடுந்தகை தேரே
முல்லை மாலை நகர்புகல் ஆய்ந்தே.'' (அகம். 324)

அவர்கள் தங்களுக்கு வளராப்பிள்ளை யென்றலுமாம்.

இது பெறுவளென்றது.

ஆற்றது பண்பும், ஆற்றிடைக்கண்ட பொருளும் இறைச்சியும் உடன்போக்கிலுங் கற்பிலுங் கூறுவனவாதலின் இச்சூத்திரங் கைகோள் இரண்டற்கும் பொதுவிதி.

(வி - ரை) தூவி - சிறகு, புறவு - காடு, மொக்குள் - நீர்க்குமிழி, தொளிபொரு பொகுட்டு தோன்றுவனமாய - சேற்றின்கண் பொருதலால் குமிழிகள் தோன்றுவனவாய் மறைய, வரித்த - கோலம் செய்த. (29)

இளையோர்க்கு உரிய இயல்பு

171. உழைக்குறுந் தொழிலுங் காப்பும் [1]உயர்ந்தோர்க்கு
நடக்கை எல்லாம் அவர்கட் படுமே.

இது முற்கூறியவற்றிற்கு உரியார் இங்ஙனஞ் சிறந்தாரென மேலதற்கோர் புறனடை.

(இ - ள்.) உழைக்குறுந் தொழிலும் காப்பும் உயர்ந்தோர்க்கு நடக்கை எல்லாம் - அவரிடத்து நின்று கூறிய தொழில் செய்தலும் போற்றீடு முதலிய பாதுகாவலும் பிறவும் உயர்ந்தோர்க்குச் செய்யுந் தொழிற்பகுதியெல்லாம்; அவர் கட்படும் - முற்கூறிய இளையோரிடத்து உண்டாம் (எ - று).

என இவ்விரண்டற்குமுரியர் அல்லாத புறத்திணையர் முற்கூறியவை கூறப்பெறுரென்பது பொருளாயிற்று.

(வி - ரை) உழை - இடம்; தலைவன் தலைவியரிடத்து, குறுந்தொழில் - கூறிய தொழில்; குற்றேவல், போற்றீடு - போற்றியுரைத்தல். (30)

---

1. உயர்ந்தோர் என்பது இளம்பூரணர் பாடம்.

தலைவனுக்கு உரிய பரத்தைமை நீங்கும் இடம்

172. பின்முறை [1]யாக்கிய பெரும்பொருள் வதுவைத்
தொன்முறை மனைவி எதிர்ப்பா டாயினும்
இன்னிழைப் புதல்வனை வாயில்கொண்டு புகினும்
[2]கிழவோ னிறந்தது நினைஇ யாங்கட்
கலங்கலு முரியன் என்மனார் புலவர்.

இது, மேல் அதிகாரப்பட்ட வாயில் பரத்தையிற் பிரிவொடும் பட்டதாகலின் அதுகூறி இனித் தலைவன் பரத்தைமை நீங்குமிடங் கூறிகின்றது.

(இ - ள்.) பின்முறை ஆக்கிய பெரும்பொருள் வதுவை - மூவகை வருணத்தாரும் முன்னர்த் தத்தம் வருணத்தெய்திய வதுவை மனைவியர்க்குப் பின்னர் முறையாற் செய்துகொள்ளப் பட்ட பெரிய பொருளாகிய வதுவை மனைவியரை; தொன்முறை மனைவி எதிர்ப்பாடாயினும் - பழையதாகிய முறைமையினையுடைய மனைவி விளக்கு முதலிய மங்கலங்களைக் கொண்டு எதிரேற்றுக்கோடற் சிறப்பினும்; இன் இழைப் புதல்வனை வாயில்கொண்டு புகினும் - இனிய பூண்களையணிந்து தொன்முறை மனைவி புதல்வனைக் கோலங்காட்டிய செல்வாள்போலப் பின்முறை வதுவையரிடத்து வாயிலாகக் கொண்டு செல்லினும்; கிழவோன் இறந்தது நினைஇ - தலைவன் இங்ஙனஞ் செய்கையுடைய இருவகைத் தலைவியரையுங் கைவிட்டுப் பரத்தைமை செய்து ஒழுகியவற்றை நினைந்து; ஆங்கட் கலங்கலும் உரியன் என்மனார் புலவர் - அப்பரத்தையர்கண் நிகழ்கின்ற காதல் நிலை குலைந்து மீளுதலும் உரியன் எனக் கூறுவர் புலவர் (எ - று).

உம்மை எதிர்மறையாகலான் மீளாமையும் உரித்தாயிற்று; என்னை; இளமைப்பருவங் கழியாத காலத்து அக்காதன் மீளாதாகலின். பெரும்பொருளென்றார், வேதநூல் அந்தணர்க்குப் பின்முறை வதுவை மூன்றும் அரசர்க்கிரண்டும் வணிகர்க் கொன்றும் நிகழ்த்தல்வேண்டுமெனக் கூறிற்றென்பது உணர்த்து தற்கு.

---

1, 2, ஆகிய என்பதும், இறந்ததுணைய கிழவோன் ஆங்கன் என்பதும் இளம்பூரணர் பாடலின்.

இனி, மகப்பேறு காரணத்தாற் செய்யும் வதுவையென்றுமாம். 'ஆக்கிய' வென்றதனானே வேளாளர்க்கும் பின்முறைவதுவை கொள்க. தொன்மனைவியென்றது 'முறை' யென்றதனானே அவரும் பெருஞ்சிறப்புச்செய்து ஒரு கோத்திரத்தராய் ஒன்றுபட்டொழுகுவரென்பது கூறினர். இங்ஙனந் தொன்முறையார் பின்முறையாரை மகிழ்ச்சிசெய்தமை கண்டு இத்தன்மையாரை இறந்தொழுகித் தவறுசெய்தேமே யென்றும் பின்முறையார் அவர் புதல்வரைக் கண்டு மகிழ்ச்சி செய்து வாயில் நேர்ந்த குணம்பற்றி இவரை இறந்தொழுகித் தவறு செய்தேமேயென்றும் பரத்தைமை நீங்குவனென்றார். 'புகினு' மெனவே பிறர்மனைப் புதல்வரென்பது பெற்றாம். தொன்முறை மனைவி எதிர்பட்டதற்கு இலக்கியம் வந்துழிக்காண்க.

இனிப் பரத்தைமையிற் பிரிவொழிந்து மனைக்கண் இருந்ததற்கு,

உ - ம்: "மாதர் உண்கண் மகன்விளை யாடக்
காதலில் தழீஇ இனிதிருந் தனனே
தாதார் பிரசம் உரலும்
போதார் புறவின் நாடுகிழ வோனே." (ஐங்குறு. 406)

இன்னும் இவ்வாறு வருவன பிறவும் உய்த்துணர்ந்து கொள்க.

(வி – ரை) பின்முறையாக்கிய பெரும் பொருள் வதுவை – முதல் முறையன்றி இரண்டாம் முறையாகப் பெரும் பொருளாய வதுவையால் கொள்ளப்பட்ட மனைவி; இல்முறையாக்கிய பெரும் குலக்கிழத்தி என உரை காண்பதே பொருத்தமாம். இனவுணர்வுக்கு இலக்காகி உரைப்பனவெல்லாம் ஆசிரியர் கருத்தொடு வருவதன்றாம். (31)

புலவியிடத்துத் தலைவிக்கு உரிய மரபு

173. தாய்போற் கழறித் தழீஇக் கோடல்
ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப
கவவொடு மயங்கிய காலை யான.

இது, தலைவி புலவி கடைக்கொள்ளுங் காலம் உணர்த்துகின்றது.

(இ – ள்.) தாய்போற் கழறித் தழீஇக் கோடல் - பரத்தையிற் பிரிவுநீங்கிய தலைவன் தன்னினும் உயர்ந்த குணத்தின ளெனக் கொள்ளுமாற்றான் மேல்நின்று மெய்கூறுங் கேளிராகிய தாயரைப்போலக் கழறி அவன் மனக்கவலையை மாற்றிப் பண்டு போல மனங்கோடல்; ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப - ஆராய்ந்த மனையறம் நிகழ்த்துங் கிழத்திக்கும் உரித் தென்று கூறுப; கவவொடு மயங்கிய காலையான - அவன் முயக் கத்தால் மயங்கிய காலத்து (எ – று).

என்றது, தலைவன் தவற்றிற்கு உடம்பட்டுக் கலங்கினமை கண்ட தலைவி அதற்கு ஆற்றாது தன் மனத்துப் புலவியெல்லாம் மாற்றி இதற்கொண்டும் இனையை யாகலெனத் தழீஇக் கொண் டமை கூறிற்று. தலைவன் தன் குணத்தினும் இவள் குணம் மிகுதிகண்டு மகிழவே தலைவி தன்னைப் புகழ்ந்த குறிப்பு உடைய ளென்பதூஉங் கொள்க.

(வி – ரை) காமக்கிழத்தி மாட்டுத்தாய் போற் கழறித் தழீஇக் கோடல் மனைக் கிழத்திக்கும் உரித்து கவவால் வருத்தமுற்ற காலத் தென்றவாறு; அஃதாவது புலவாவழி என உரை காண்பர் இளம்பூரணர். எனினும் இந் நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் உரையே சிறப்புடைத்தாம். (32)

### தலைவியின் குணநலன்

174. அவன் [1]சோர்பு காத்தல் கடனெனப் படுதலின்
மகன்தாய் உயர்புந் தன்னுயர் பாகுஞ்
செல்வன் பணிமொழி இயல்பாக லான.

இதுவுந் தலைவி குணச்சிறப்புக் கூறுகின்றது.

(இ – ள்.) அவன் சோர்பு காத்தல் கடன் எனப் படுதலின்- தான் நிகழ்த்துகின்ற இல்லறத்தால் தலைவற்கு இழுக்கம் பிறவா மற் பாதுகாத்தல் தலைவிக்குக் கடப்பாடென்று கூறப்படுதலால்; மகன் தாய் உயர்பும் தன் உயர்பு ஆகும் - மகன் தாயாகிய மாற்றாளைத் தன்னின் இழிந்தாளாகக் கருதாது தன்னோடு ஒப்ப

1. சோர்வு எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

உயர்ந்தாளாகக் கொண்டொழுகுதல் தனது உயர்ச்சியாம்; செல்வன் பணிமொழி இயல்பு ஆகலான - தலைவன் இவ்வா ரொழுகுகவென்று தமக்குப் பணித்த மொழி நூலிலக்கணத்தான் ஆன மொழியாகலான் (எ – று).

ஈண்டு 'மகன்ரு' யென்றது பின்முறையாக்கிய வதுவை யாளை. இன்னும் அவன் சோர்பு காத்தல் தனக்குக் கடனென்று கூறப்படுதலாலே முன்முறையாக்கிய வதுவையாளைத் தம்மின் உயர்ந்தாளென்றும் வழிபாடாற்றுதலும் பின்முறை வதுவை யாளுக்கு உயர்பாஞ் செல்வன் பணித்த மொழியாலென்றவாறு. ஈண்டு 'மகன்ரு' யென்றது உயர்ந்தாளை, உய்த்துக்கொண்டுணர்த லென்னு முத்தியால் இவை யிரண்டும் பொருள். 'செல்வ' னென்ருர், பன்மக்களையுந் தன்னுணை வழியிலே இருத்துந் திரு வுடைமைபற்றி. இவை வந்த செய்யுள்கள் உய்த்துணர்க.

(வி - ரை) இந் நூற்பாவிற்கு உய்த்துக் கொண்டு உணர் தலால் ஈருரை கூறுகின்ருர் நச்சினுர்க்கினியர். ஒன்று, முதல் மனைவி பின் வந்த மனைவியைத் தன்னெடு ஒப்பக்கருதி ஏற்றுக் கொள்ளுதல். இரண்டு, இரண்டாவது மனைவி முதல் மனைவியைத் தன்னெடு ஒப்பக் கருதி ஏற்றுக் கொள்ளுதல். இவ்வாறு இவர்கள் கருதுதற்குத் தலைவனின் பணி மொழியே காரணமென்பது. இவ் விரு உரையுள் முன்னையது இளம்பூரணர் உரையைத் தழுவிய தாம். எனினும் இவ்விருவர் உரையும் ஆசிரியர் கருத்தொடு பட்டதன்று. மேலும் ஆராயத் தக்கது. (33)

பாசறைச் செலவு தலைவியுடன் இல்லை

175. எண்ணரும் பாசறைப் [1]பெண்ணொடு புணரார்.

இஃது எய்தியது விலக்கிற்று; 'முந்நீர் வழக்கம்' (தொல். அகத். 34) என்பதனுற் பகைதணிவினைக்குங் காவற்குங் கடும் பொடு சேறலாமென்று எய்தியதனை விலக்கலின்.

(இ – ள்.) எண் அரும் பாசறை - -போர் செய்து வெல்லு மாற்றை எண்ணும் அரிய பாசறையிடத்து; பெண்ணொடு

1. பெண்ணொடும் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

புணரார் - தலைவியரொடு தலைவனைக்கூட்டிப் புலநெறிவழக்கஞ் செய்யார் (எ – று).

இரவும் பகலும் போர்த்தொழின் மாருமை தோன்ற அரும் பாசறை யென்ருர்.

''நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்
சிலரொடு திரிதரும் வேந்தன்
பலரொடு முரணிய பாசறைத் தொழிலே''
(பத்து. நெடுநல். 186, 188)

எனவும்,

''ஒருகை பள்ளி ஒற்றி ஒருகை
முடியொடு கடகம் சேர்த்தி நெடிதுநினைந்து''
(பத்து. முல்லை. 75. 76)

எனவும் வருவனவற்ருன் அரிதாக உஞற்றியவாறு காண்க.

இனிக் காவற்பிரிவுக்கு முறைசெய்து காப்பாற்றுதலை எண்ணுமெனப் பொருளுரைக்க.

(வி – ரை) முந்நீர் வழக்கம் மகடூ வோடு இல்லை என்ற நூற்பாவின் கருத்தையும், இந்நூற்பாவின் கருத்தையும் தழுவியே நம்பியகப் பொருள் ஆசிரியர் 'குலமட மாதரொடு கலமிசைச் சேறலும், பாசறைச் சேறலும் பழுதென மொழிப' என்றனர். கடும் பொடு - தலைவி முதலாய சுற்றத்தொடு, உஞற்றியவாறு - முயன்ற வாறு. (34)

அடியோர்க்கும் வினைவலர்க்கும் உரிய மரபு

176. புறத்தோர் ஆங்கண் [1]புரைவ தென்ப.

இஃது எய்தியது இகந்துபடாமற் காத்தது.

(இ – ள்.) புறத்தோர் ஆங்கண் - அடியோரும் வினைவல பாங்கிஞேருமாகிய அகப்புறத்தலைவருடைய பாசறையிடத் தாயில்; புரைவது என்ப – அவரைப் பெண்ணெடு புணர்த்துப் புலனெறி வழக்கஞ் செய்தல் பொருந்துவது என்று கூறுவர் ஆசிரியர் (எ – று).

---

1. புணர்வதாகும் எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

இப்பாசறைப்பிரிவை வரையறுப்பவே ஏனைப் பிரிவுகளுக்குப் புணர்த்தலும் புணராமையும் புறத்தோர்க்கு வரைவின்றாயிற்று.

(வி – ரை) புணர்வதாகும் எனப் பாடம் கொண்டு பாசறைக் கண் தாதியரும் கணிகையரும் ஆய புறப் பெண்டிர் புணர்ச்சி பொருந்துவதாகும் என உரை காண்பர் இளம்பூரணர். (35)

### பார்ப்பார்க்கு உரிய கூற்று

177. காமநிலை யுரைத்தலும் தேர்நிலை யுரைத்தலும்
கிழவோன் குறிப்பினை [1]யெடுத்தனர் மொழிதலும்
ஆவொடு பட்ட நிமித்தங் கூறலும்
செலவுறு கிளவியும் செலவழுங்கு கிளவியும்
அன்னவை பிறவும் பார்ப்பார்க் குரிய.

இது, பார்ப்பார்க்குரிய கிளவி கூறுகின்றது.

(இ – ள்.) காமநிலை உரைத்தலும் - தலைவனது காமமிகுதி கண்டு இதன் நிலை இற்றென்று இழித்துக் கூறுவனவும்; தேர் நிலை உரைத்தலும் - அங்ஙனங் கூறி அவன் தேருமாறு ஏதுவும் எடுத்துக்காட்டுங் கூறலும்; கிழவோன் குறிப்பினை எடுத்தனர் மொழிதலும் - தலைவன் தாழ்ந்தொழுகியவற்றை அவன் குறிப் பான் அறிந்து வெளிப்படுத்தி அவற்கே கூறுதலும்; ஆவொடு பட்ட நிமித்தம் கூறலும் - வேள்விக்கபிலை பாற்பயங்குன்றுத லானுங், குன்றாது கலநிறையப் பொழிதலானும் உளதாய நிமித் தம் பற்றித் தலைவற்கு வரும் நன்மை தீமை கூறுதலும்; செலவுறு கிளவியும் - அவன் பிரியுங்கால் நன்னிமித்தம்பற்றிச் செலவு நன்றென்று கூறுதலும்; செலவு அழுங்கு கிளவியும் - தீயநிமித் தம்பற்றிச் செலவைத் தவிர்த்துக் கூறுதலும்; அன்ன பிறவும் - அவைபோல்வன பிறவும்; பார்ப்பார்க்கு உரிய - அந்தணர்க்கு உரிய (எ – று).

'தேர்நிலை' யென்றதனால் தேர்ந்து பின்னும் கலங்கினுங் கலங்காமல் தெளிவுநிலை காட்டலுங் கொள்க.

'அன்னபிறவும்' என்றதனான், அறிவர் இடித்துக் கூறியாங்குத் தாமும் இடித்துக் கூறுவனவும், வாயிலாகச் சென்று கூறுவனவுந்,

1. எடுத்துக் கூறலும் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

தூதுசென்று கூறுவனவுங் கொள்க. 'மொழிந்த பொருளோ டொன்ற அவ்வயின் மொழியா தததனை முட்டின்று முடித்தல் (தொல். பொருள். 666) என்பதனுற் களவியலிற் கூறுதனவும் ஈண்டே கூறினர். அஃது இப்பேரறிவு உடையையாயின் இனை யையாதற்பாலை யல்லையெனக் காமநிலை யுரைத்தலும் கற்பினுள் ''இல்லிருந்து மகிழ்வோற் கில்லையாற் புகழ்'' (சிற்றட்டகம்) எனத் தலைவன் நினையுமாற்ருற் காமநிலை யுரைத்தலும் அடங் கிற்று. ஏனையவற்றிற்கும் இருவகைக் கைகோளிற்கும் ஏற்பன கொணர்ந்து ஒட்டுக. 'பார்ப்பான் பாங்கன்' (தொல். பொருள் 501) என உடன் கூறினமையிற் பாங்கற்கும் ஏற்பன கொள்க. இவை யெல்லாந் தலைச்சங்கத்தாரும் இடைச்சங்கத்தாருஞ் செய்த பாடலுட் பயின்றபோலும். இக்காலத்தில் இலக்கியமின்று. பாங்கன் கூறுவன 'நோய்மருங் கறிநரு' ளடக்கிக்கொண்டு எடுத்து, மொழியப்படுதலன்றிக் கூற்று அவண் இன்மை உணர்க.

அது,

''வேட்டோர் திறத்து விரும்பியநின் பாகனும்
நீட்டித்தாய் என்று கடாம்கடுந் திண்தேர்
பூட்டு விடாஅ நிறுத்து'' (கலி. 66)

எனவும் வரும்.

இன்னும் சான்ருேர் கூறிய செய்யுட்களில் இதுபோல வருவன பிற அனைத்தும் உய்த்துணர்ந்து கொள்க.

(வி – ரை) தேர்நிலை உரைத்தலும் - ஆராய்ச்சி நிலையால் கூறுதலும் என உரை காண்பர் இளம்பூரணர். தலைவனது தேர் செலவுற்ற நிலை அல்லது வருதலுற்ற நிலை ஆகியவற்றைக் கூறுதலும் என உரை காண்டல் பொருந்துவதாகும்.

வேட்டோர் - நீ விரும்பிஞேர், பூட்டுவிடா கடுந்திண்டேர் - குதிரையைப் பூட்டுதலினின்றும் விடாத கடிய திண்ணிய தேரினை, கடாம் - அது நிற்குமிடத்துச் செலுத்தும், நிறுத்து - ஆதலின் அவ்வாறு பிரியக் கருதும் நிலையை நிறுத்துவாயாக. இது செல வழுங்கு வித்தலாம். (36)

வாயில்கட்குரிய மரபு

178. எல்லா வாயிலும் இருவர் தேஎத்தும்
புல்லிய மகிழ்ச்சிப் பொருள என்ப.

இது, வாயில்களின் இலக்கணங் கூறுகின்றது.

(இ – ள்.) எல்லாவாயிலும் - பார்ப்பான் முதலிய வாயில்க ளெல்லாம்; இருவர் தேஎத்தும் புல்லிய - தலைவன் கண்ணுந் தலைவி கண்ணும் பொருந்திய; மகிழ்ச்சிப் பொருள என்ப - மனமகிழ்ச்சிப் பொருளினை நிகழ்த்துதலைத் தமக்குப் பொருளாகவுடையர் (எ - று)

எனவே, [1]வெகுட்சி கூறப்பெறுராயிற்று. 'புல்லிய' என்றதனானே விருந்தும் புதல்வரும் ஆற்றுமையும் வாயிலாகுப என்று கொள்க. வாயில்கள் "தோழி தாயே" (தொல். பொருள். 193) என்பதனுட் கூறுப. உதாரணம் வந்துழிக் காண்க.

(வி – ரை) எனவே வெகுட்சிப் பொருண்மை கூறப் பெரு என்பர் இளம்பூரணர். அதுவே பொருத்தமாதலின், ஈண்டு வெகுட்சி கூறப் பெருராயிற்று எனத் திருத்தத் தக்கது. (37)

இதுவும் அது

179. அன்பு தலைப்பிரிந்த கிளவி [2]தோன்றில்
சிறைப்புறங் குறித்தன்று என்மனார் புலவர்.

இது, மகிழ்ச்சிப்பொருளன்றி வாயில்கள் இவ்வாறுங் கூறப் பெறுவர் என்றலின் எய்திய திகந்துபடாமற் காத்தது.

(இ – ள்.) அன்பு தலைப்பிரிந்த கிளவி தோன்றில் - அன்பு இருவரிடத்தும் நீங்கிய கடுஞ்சொல் அவ்வாயில்களிடத்துத் தோன்றுமாகில்; சிறைப்புறங் குறித்தன்று என்மனார் புலவர் - ஒருவர்க்கொருவர் சிறைப்புறத்தாராகக் கூறல்வேண்டுமென்று கூறுவர் புலவர் (எ – று).

'தோன்றி' னென்பது படைத்துக்கொண்டு கூறுவரென்பதாமாகலின். 'குறித்தன்று' என்பது 'போயின்று' என்பது போல றகரம் ஊர்ந்த குற்றியலுகரம். "அறியாமையின்" என்னும் (50)

1. மகிழ்ச்சி என்பது முன்னைய பதிப்புக்களில் உள்ள பாடம்.
2. தோன்றின் எனப் பாடங் கூறுவர் இளம்பூரணர்.

நற்றிணைப்பாட்டும் உதாரணமாம். அது சிறைப்புறமாகவுங் கொள்ளக் கிடந்தமையின்.

(வி – ரை) குறித்தன்று - குறித்தது, போயின்று - போயது. (38)

தலைவி தலைவனிடத்துத் தற்புகழ்தல் ஆகாதெனல்

180. தற்புகழ் கிழவி கிழவன்முன் கிளத்தல்
எத்திறத் தானுங் கிழத்திக் கில்லை
முற்பட வகுத்த இரண்டலங் கடையே.

இது, தலைவியிலக்கணங் கூறுகின்றது.

(இ – ள்.) தற்புகழ் கிளவி கிழவன்முன் கிளத்தல் - தன்னைப் புகழ்ந்துரைத்தலைக் கிழவன் முன்னர்ச் சொல்லுதல்; எத்திறத் தானுங் கிழத்திக்கு இல்லை - நனிமிகு சீற்றத்துனியினும் தலைவிக்கு இல்லை; முற்பட வகுத்த இரண்டலங்கடையே - முன்பு கூறுபடுத் தோதிய 'தாய்போற் கழறித் தழீஇக் கோடலும்' (தொல். பொருள் 173) அவன் சோர்புகாத்தற்கு மகன்ரு யுயர்பு தன்னுயர் பாதலும்' (தொல். பொருள். 174) அல்லாதவிடத்து (எ – று).

கிழத்திக்கில்லையென முடிக்க. அவ்விரண்டிடத்துந் தனது குணச்சிறப்பைக் குறிப்பால் தலைவன்முன்னே புகழ்வாள்போல ஒழுகினுளென் றுணர்க.

இனி 'முற்படவகுத்த இரண்டு' என்பதற்கு 'இரத்தலுந் தெளித்தலும்' (தொல். அகத். 41) என அகத்திணையியலுட் கூறியனவென்றுமாம். தலைவன் முன்னர் இல்லையெனவே அவன் முன்னர் அல்லாதவிடத்துப் புகழ்தல் பெற்ரும். அவை காமக் கிழத்தியரும் அவர்க்குப் பாங்காயினுருங் கேட்பப் புகழ்தலாம்.

எ - டு: ''பேணுதகு சிறப்பில் பெண்ணியல் பாயினும்
என்னொடு புரையுநள் அல்லள்
தன்னொடு புரையுநர்த் தான்அறி குநளே''

எனம் பதிற்றுப்பத்தில் வந்தது.

(வி – ரை) முற்பட வகுத்த இரண்டு என்பதற்கு இரண்டா வதாகக் கூறப்பட்ட உரை இளம்பூரணருடையதாம். காட்டப்

பெற்ற எடுத்துக்காட்டு இப்பொழுதுள்ள பதிற்றுப்பத்துப் பாடல் களுள் இல்லை. அகப் பொருள் தழுவிய தாய் இருத்தலின் அந் நூற்கண் இருத்தற்கு இயலுமா என்பது ஆராயத் தக்கது. (39)

### தலைவன் தன்னைப் புகழும் இடம்

181. கிழவி முன்னர்த் தற்புகழ் கிளவி
கிழவோன் வினைவயின் உரிய என்ப.

இது, தலைவன் தன்னைப் புகழ்ந்துரைக்கும் இடம் இன்னுழி என்கின்றது.

(இ – ள்.) கிழவி முன்னர்க் கிழவோன் தற்புகழ் கிளவி - தலைவிமுன்னர்த் தலைவன் தன்னைப் புகழ்ந்து கூறுங் கூற்று; வினைவயின் உரிய என்ப - காரியங்களை நிகழ்த்துங் காரணத்திடத்து உரியவென்று கூறுவர் ஆசிரியர் (எ – று).

அக்காரணமாவன, கல்வியுங், கொடையும், பொருள்செயலும், முற்றப்பட்டோனை முற்றுவிடுத்தலுமாகிய காரியங்களை நிகழ்த்துவலெனக் கூறுவன. இவ் வாள்வினைச் சிறப்பை யான் எய்துவலெனத் தன்னைப் புகழவே அதுபற்றித் தலைவி பிரிவாற்று தல் பயனுயிற்று.

"இல்லென இரந்தோர்க்குஒன்று ஈயாமை இளிவென"
(கலி. 1)

என்றவழி யான் இளிவரவு எய்தேனென்றலிற் புகழுக்குரியேன் யானேயெனக் கூறியவாறு காண்க. ஏனையவும் வந்துழிக் காண்க.
(40)

### பார்ப்பனர்க்குரிய கூற்றுக்கள் பாங்கனுக்கும் உரித்தாதல்

182. மொழியெதிர் மொழிதல் பாங்கற் குரித்தே.

இது, மேற் பார்ப்பார்க்குரியன பாங்கற்குமாமென எய்துவித் ததனை ஒருமருங்கு மறுக்கின்றது.

(இ – ள்.) மொழியெதிர் மொழிதல்-பார்ப்பானைப்போலக் காம நிலை உரைத்தல்போல்வன கூறுங்கால் தலைவன் கூறிய மொழிக்கு எதிர் கூறுதல்; பாங்கற்கு உரித்து - பாங்கனுக்கு உரித்து (எ – று).

இது களவிற்கும் பொது: அது பாங்கற்கூட்டத்துக் காண்க. கற்பிற் புறத்தொழுக்கத்துத் தலைவன் புகலாமற் கூறுவன வந்துழிக் காண்க. 'உரித்'தென்றதனால் தலைவன் இடுக்கண் கண்டுழி எற்றினான் ஆயிற்றென அவன் மொழிக்கு முன்னே வினாதலுங் கொள்க.

(வி - ரை) தலைவன் கூறியவழி எதிர் கூறுதல் பாங்கர்க்கு உரித்து என்றவாறு, எதிர் கூறுதலாவது மாறுபடக் கூறுதல், அவை களவுக் காலத்துக் கழறலும், கற்புக் காலத்துப் பரத்தையிற் பிரிவிற்கு உடன்படாது கூறலும் இவை போல்வனவும் என உரை காண்பர் இளம்பூரணர். (41)

### பாங்கற்கு உரிய மரபு

## 183. குறித்தெதிர் மொழிதல் அஃகித் தோன்றும்.

இதுவும் பாங்கற்குரியதோ ரிலக்கணங் கூறுகின்றது.

(இ - ள்.) குறித்து எதிர்மொழிதல் - தலைவன் குறிப்பினை அவன் கூறாமல் தான் குறித்துணர்ந்ததற்கு எதிர்மொழி கொடுத்தல், அஃகித் தோன்றும் - சுருங்கித் தோன்றும். (எ - று).

அவன் குறிப்பறிந்து கூறல் சிறுவரவிற்றெனவே 'காம நிலை யுரைத்தல்' (தொல். பொ. 177) என்னுஞ் சூத்திரத்தின்கட் கூறிய 'ஆவொடு பட்ட நிமித்தம்' ஆயின் பார்ப்பான் கூறக் கேட்டுத் தான் கூறவும்பெறுமெனவும்; ஏனையவுங் கிழவன் கூறாமல் தானே கூறவும்பெறுமெனவுங் கூறியவாறாற்று.

(வி - ரை) பார்ப்பான் கூறக் கேட்டுத் தான் கூறவும் பெறும் என ஈண்டுக் கூறுதற்கு யாதோரியையும் இன்று. (42)

### தலைவன் வற்புறுத்திப் பிரியும் இடம்

## 184. துன்புறு பொழுதினும் எல்லாங் கிழவன்
## வற்புறுத் தல்லது சேறல் இல்லை.

இது முன்னர்க் 'கிழவி முன்னர்' (தொல். பொ. 181) என்பதனாற் குறிப்பினான் ஆற்றுவித்துப் பிரிதல் அதிகாரப்பட்டதனை ஈண்டு விளங்கக்கூறி வற்புறுத்துமென்கின்றது.

(இ - ள்.) துன்பு உறு பொழுதினும் - உணர்த்தாது பிரிந்து தலைவி துன்பம் மிக்க பொழுதினும்; உம்மையான் உணர்த்திப் பிரிந்து துன்பம் மிகாத பொழுதினும்; எல்லாம் - சுற்றமுந் தோழியும் ஆயமுந் தலைமகள் குணமாகிய அச்சமும் நாணமும் மடனுமாகிய வற்றையெல்லாம்; கிழவன் வன்புறுத்து அல்லது சேறல் இல்லை - தலைவன் வலியுறுத்து அல்லது பிரியான் (எ - று).

எனவே, இவற்றை முன்னர் நிலைபெறுத்திப் பின்னர்ப் பிரியு மாயிற்று. சொல்லாது பிரியுங்கால், 'போழ்திடைப் படாமன் முயங்கியும்' அதன்றலைத் 'தாழ்கதுப் பணிந்து முளை எயிற் றமிழ் தூறும் தீ நீரைக் கள்ளினு மகிழ்செய்யு மெனவுரைத்தும் (கலி, 4) இவை முதலிய தலையளிசெய்து தெருட்டிப் பிரிய அவை பற்றுக் கோடாக ஆற்றுதலின் அவள் குணங்கள் வற்புறுத்துவன ஆயின.

இனி உலகத்தார் பிரிதலும் ஆற்றியிருத்தலுமுடையரென உலகியலாற் கூறலும் பிரிவுணர்த்திற்றேயாம். இனிப் பிரிவினை விளக்கக்கூறி ஆற்றியிருவென்றலும் அவற்றை வற்புறுத்தலாம்.

"யாந்தமக்கு ஒல்லேம் என்ற தப்பல்
சொல்லாது அகறல் வல்லு வோரே." (குறுந். 79)

இது சொல்லாது பிரிதல்.

"அரிதாய அறனெய்தி" (கலி. 11) இது சொல்லிப் பிரிதல்.

(வி - ரை) களவுக் காலத்துத் துன்புறு பொழுதினும், கற்பின் கண் எல்லாப் பிரிவினும் தலைவன், தலைவியை வற்புறுத்தியல்லது சேறலில்லை என உரை காண்பர் இளம்பூரணர். இதுவே ஆசிரியர் கருத்தொடு பட்டதாம். (43)

### செலவிடை அழுங்கலின் பயன்

185. செலவிடை அழுங்கல் செல்லாமை யன்றே
வன்புறை குறித்தல் தவிர்ச்சி யாகும்.

இது செலவழுங்கலும் பாலையா மென்கின்றது.

(இ - ள்.) செலவிடை அழுங்கல் செல்லாமை அன்றே - தலைவன் கருதிய போக்கினை இடையிலே தவிர்ந்திருத்தல் பிரிந்து போதல் ஆற்றாமைக்கன்று; வன்புறை குறித்தல் தவிர்ச்சி

ஆகும் - தலைவியை ஆற்றுவித்துப் பிரிதற்குத் தவிர்ந்த தவிர்ச்சி யாகும். (எ – று).

செலவழுங்கி ஆற்றுவிக்க அவள் ஆற்றியிருத்தல் இப்பிரிவிற்கு நிமித்தமாதலிற் பாலையாயிற்று.

> "மணியுரு இழந்த அணியழி தோற்றம்
> கண்டே கடிந்தனம் செலவே ஒண்தொடி
> உழைய மாகவும் இனைவோள்
> பிழையலள் மாதோ பிரிதும்நாம் எனினே" (அகம். 5)

> "களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்
> இழந்த நாடு தந்தன்ன
> வளம்பெரிது பெறினும் வாரலன் யானே."
> (அகம். 19)

இவை வன்புறைகுறித்துச் செலவழுங்குதலிற் பாலையாயிற்று.

(வி – ரை) தலைவன் வினைவயிற் பிரிதலைத் தலைவியின் ஆற்றாமைக் கண்டு மாற்றிவைப்பானன்றிப் பிரியாதிருப்பான் அல்லன் என்பது கருத்தாகும்.

மணி - பவளமணி, உழையமாகவும் – அருகிலிருப்பவும், இனைவோள் - வருந்துவோள். (44)

## தலைவனின் அடக்கம்

186. கிழவி நிலையே வினையிடத் துரையார்
வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்.

இஃது, அகத்திணையியலுட் 'பாசறைப் புலம்பலும்' (தொல். அகத். 41) என்றார் ஆண்டைப்புலம்பல் இன்னுழியாகாது இன்னுழியாமென வரையறை கூறுகின்றது.

(இ – ள்.) கிழவி நிலையே வினையிடத்து உரையார் - தலைவியது தன்மையை வினைசெய்யாநிற்ற லாகியவிடத்து நினைந்து கூறினாகச் செய்யுள் செய்யப்பெறார்; வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும் - வெற்றி நிகழுமிடத்துந் தான்குறித்த பருவம் வந்துழியுந் தூதுகண்டுழியும் வருத்தம் விளங்கிக் கூற்றுத் தோன்றிற்றாகச் செய்யுள் செய்ப (எ – று).

உரையரெனவே நினைத்தலுள தென்பதூஉம், அது போர்த் திறம்புரியும் உள்ளத்தாற் கதுமென மாயுமென்பதூஉங் கொள்க. வினையிடம், வினைசெய்யிடம். காலத்து மென்னும் எச்சவும்மை தொக்குநின்றது. [1]அன்றி அங்ஙனம் பாடங் கூறலும் ஒன்று.

உ - ம்: ''வேளாப் பார்ப்பான் வாளரம் துமித்த
வளைகளைந்து ஒழிந்த கொழுந்தின் அன்ன
தளைபிணி அவிழாச் சுரிமுகிழ்ப் பகன்றை
சிதரலம் துவலை தூவலின் மலரும்
தைஇ நின்ற தண்பெயல் கடைநாள்
வயங்குகதிர் கரந்த வாடை வைகறை
விசும்புரி வதுபோல் வியலிடத்து ஒழுகி
மங்குன் மாமழை தென்புலம் படரும்
பனியிரும் கங்குலும் தமியள் நீந்தித்
தம்மூ ரோளே நன்னுதல் யாமே
கடிமதில் கதவம் பாய்தலில் தொடிபிளந்து
நுதிமுக மழுங்கிய மண்ணைவெண் கோட்டுச்
சிறுகண் யானை நெடுநா ஒண்மணி
கழிபிணிக் கறைத்தோல் பொழிகணை உதைப்பத்
தழங்குகுரன் முரசமொடு மயங்கும் யாமத்துக்
கழித்துறை செறியா வாளுடை எறுழ்த்தோள்
இரவுத்துயில் மடிந்த தானை
உரவுச்சின வேந்தன் பாசறை யேமே'' (அகம். 24)

இதனுட் கணையுதைப்ப முரசொடு மயங்கும் யாமத்துத் துயின் மடிந்து வாளுறைச்செறியாத் தானையையுடைய வேந்தனெனவே வென்றிங்காலங் கூறியவாறுங் கிழவிநிலை உரைத்தவாறுங் காண்க.

பருவங்கண்டுந் தூதுகண்டுங் கூறியவை 'பாசறைப் புலம் பலும்' (தொல். அகத். 41) என்புழிக் காட்டினும்.

(வி - ரை) வேளாப்பார்ப்பான் - வேள்வி செய்யாதபார்ப்பான். வாளரம் - வாள் அரத்தால், கொழுந்து - சங்கின்தலை, மண்ணை - மழுமட்டை. (45)

1. உம்மை கொடாது கூறலே இளம்பூரணர் பாடமாகும்.

### தலைவன் தலைவியோடு இயைந்திருக்குமாறு

187. பூப்பின் புறப்பா டீராறு நாளும்
நீத்தகன் றுறையார் என்மனார் புலவர்
பரத்தையிற் பிரிந்த காலை யான.

இது, பரத்தையிற் பிரிவின்கண் தலைவற்குந் தலைவிக்கும் உரியதோர் இலக்கணங் கூறுகின்றது.

(இ - ள்.) பரத்தையிற் பிரிந்த காலை யான - பரத்தையிற் பிரிந்த காலத்தின்க ணுண்டான; பூப்பின் நீத்து - இருதுக் காலத்தின்கட் சொற்கேட்கும் அணுமைக்கண் நீங்கியிருந்து; புறப் பாடு ஈராறு நாளும் அகன்று உறையார் என்மனார் புலவர் - அவ் விருதுக்காலத்தின் புறக்கூறுகிய பன்னிரண்டு நாளும் இருவரும் பிரிந்துறையாரென்று கூறுவர் புலவர் (எ - று).

என்றது பூப்புத்தோன்றிய மூன்றுநாளுங் கூட்டமின்றி அணுக விருந்து அதன் பின்னர்ப் பன்னிரண்டு நாளுங் கூடியுறைப என்ற தாம்.

தலைவியும் தலைவனும் துனித்தும் இருத்தலிற் 'பிரிந்துறையா' ரெனப் பன்மையாற் கூறினர்.

இனிப், பூப்பின் முன்னறுநாளும் பின்னறு நாளுமென்றும், பூப்புத்தோன்றிய நாள் முதலாகப் பன்னிரண்டு நாளுமென்றும், நீத்தல் தலைவன்மேல் ஏற்றியும், அகறலைத் தலைவிமேல் ஏற்றியும் உரைப்பாருமுளர். பரத்தையிற் பிரிந்தகாலத்துண்டான பூப் பெனவே, தலைவி சேடியர் செய்ய கோலங் கொண்டு பரத்தையர் மனைக்கட்சென்று தலைவற்குப் பூப்புணர்த்துதலுங் கொள்க. இது,

"அரத்தம் உடீஇ அணிபழுப்புப் பூசிச்
சிரத்தையால் செங்கழுநீர் சூட்டிப்—பரத்தை
நினைநோக்கிக் கூறினு நீமொழியல் என்று
மனைநோக்கி மாண விடும்." (திணை. நூற் 144)

தோழி செவ்வணியணிந்து விட்டமை தலைவன் பாங்காயினர் கூறியது.

இக்காலத்தின்கண் வேறுபாடாக வருவனவெல்லாம் ஈண்டு அடக்கிக் கொள்க.

பூப்புப்புறப்பட்ட ஞான்றும் மற்றைநாளுங் கருத் தங்கில் அது வயிற்றில் அழிதலும், மூன்ருநாள் தங்கில் அது சில் வாழ்க்கைத்தாகலும் பற்றி முந்நாளுங் கூட்டமின்றென்ருர். கூட்ட மின்றியும் நீங்காதிருத்தலிற் பரத்தையிற் பிரிந்தானெனத் தலைவி நெஞ்சத்துக்கொண்ட வருத்தம் அகலும். அகல வாய்க்குங் கரு மாட்சிமைப்படுமாயிற்று. இது மகப்பேற்றுக் காலத்திற்குரிய நிலைமை கூறிற்று. இதனுற் பரத்தையிற் பிரியுநாள் ஒரு திங்க ளிற் பதினைந்தென்ருராயிற்று. உதாரணம் வந்துழிக் காண்க. ''குக்கூ'' (குறுந். 157) என்பதனைக் காட்டுவாருமுளர்.

(வி - ரை) பழுப்பு - அரிதாரச்சாந்து, சிரத்தையால் - அன் பினுல்.

குக்கூ என்பதனைக் காட்டுவார் யாரெனத் தெரிந்திலது. (46)

காலவரையறை இல்லாத பிரிவுகள்

188. வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது.

இஃது 'ஓதலுந் தூதும்' (தொல். அகத். 26) என்னுஞ் சூத்திரத்திற் கூறிய ஓதற்பிரிவிற்குக் காலவரையறை யின்றென் பதூஉம் அவ்வோத்து இதுவென்பதூஉம் உணர்த்துகின்றது.

(இ - ள்.) கல்வி வேண்டிய யாண்டு இறவாது - துறவறத் திணைக்கூறும் வேதாந்த முதலிய கல்வி வேண்டிய யாண்டைக் கடவாது; மூன்று இறவாது - அக்கல்வியெல்லாம் மூன்றுபதத்தைக் கடவாது (எ - று).

இறவாதென்பதை இரண்டிடத்துங் கூட்டுக. மூன்று பதமா வன அதுவென்றும் நீயென்றும் ஆனுயென்றுங் கூறும் பதங்களாம். அவை பரமுஞ் சீவனும் அவ்விரண்டும் ஒன்ருதலும். ஆதலின் இம்மூன்று பதத்தின் கண்ணே தத்துவங்களைக் கடந்த பொருளை உணர்த்தும் ஆகமங்களெல்லாம் விரியுமாறு உணர்ந்துகொள்க. இது மூன்று வருணத்தார்க்குங் கூறினுர். ஏனைய வேளாளரும் ஆகமங்களானும் அப்பொருளைக் கூறிய தமிழானும் உணர்தல் 'உயர்ந்தோர்க் குரிய' (தொல். அகத். 31) என்பதனுன் உணர்க. இஃது இல்லறம் நிகழ்த்தினுர் துறவறம் நிகழ்த்துங் கருத்தினராக வேண்டுதலின் காலவரையறை கூருராயினுர்.

முன்னர்க்காட்டிய "அரம்போ ழவ்வளை" (அகம். 125) என்னும் பாட்டினுட் 'பானுட் கங்குலின் மூனிய வலைத்தி – கடவுளர் சான்ற செய்வினை மருங்கிற் - சென்றோர் வல்வரின் ஓடுவை' என்றது இராப்பொழுது அகலாது நீட்டித்ததற்கு ஆற்ருளாய்க் கூறிய ளென்று உணர்க.

(வி - ரை) விரும்பப்பட்ட கல்விக்கண் பிரியும்காலம் மூன்றி யாண்டின் மிகாது. எனவே ஓர்யாண்டும் ஈராண்டும் ஆம் என உரை காண்பர் இளம்பூரணர். இவ்வுரையைப் பின்பற்றியே நம்பி யகப்பொருள் ஆசிரியர் 'ஓதற்பிரிவுடைத்து ஒரு மூன்றியாண்டே' எனக் கூறுவாராயினர். இவ்வுரையே ஆசிரியர் கருத்தொடுபட்ட தாம். மூன்று பதம் எனக் கொண்டு விளக்கும் உரையும் இது மூன்று வருணத்தார்க்கும் கூறினர் எனத் தரும் விளக்கமும் நச்சினர்க்கினியர் தம் மதிவழிநின்று கூறியனவேயாம். (47)

பகைவயிற் பிரிதற்கு உரிய கால வரையறை

189. வேந்துறு தொழிலே யாண்டின தகமே.

இது, வரையறையுடைமையிற் பகைவயிற் பிரிவிற்கு வரை யறை கூறுகின்றது.

(இ – ள்.) வேந்து உறு தொழிலே - இருபெரு வேந்தருறும் பிரிவும், அவருள் ஒருவற்காக மற்றொரு வேந்தனுறும் பிரிவும்; யாண்டினது அகமே - ஓர் யாண்டினுட்பட்டதாம் (எ – று).

'வேந்துறுதொழி' லென்பதனை இரட்டுறமொழித லென்பத ஞன் வேந்தனுக்கு மண்டிலமாக்களுந் தண்டத்தலைவரு முதலியோர் உறும் பிரிவும் யாண்டினதகமெனவும் பொருளுரைக்க. 'தொழி' லென்றது அதிகாரத்தாற் பிரிந்து மீளும் எல்லையை. அது, 'நடுவு நிலைத் திணையே நண்பகல் வேனிலொடு' (தொல். அகத். 9) என் பதனுற் பிரிவிற்கோதிய இருவகைக் காலத் துள்ளும் முதற் கணின்ற சித்திரைத் தொடங்கித் தையீருகக் கிடந்த பத்துத் திங்க ளுமாம். இனிப் பத்தென்றது யாண்டென்றதனுற், 'பின்பனி தானும்' (தொல். அகத். 10) என்பதனுற் கொண்ட சிறப்பில்லாத பின்பனிக்குரிய மாசிதொடங்கித் தையீருகயாண்டுமுழுவதூஉங் கொள்ளக்கிடந்ததேனும் அதுவும் பன்னிரு திங்களுங்கழிந்த

தன்மையின் யாண்டினதகமாமா றுணர்க. இதற்கு இழிந்த எல்லை வரைவின்மையிற் கூறுராயினர்; அது.

"இன்றே சென்று வருவது நாளைக்
குன்றிழி அருவியின் வெண்டேர் முடுக" (குறுந். 189)

எனச் சான்றோர் கூறலின்.

"நிலநாவில் திரிதரூஉம் நீண்மாடக் கூடலார்
புலநாவில் பிறந்தசொல் புதிதுஉண்ணும் பொழுதன்றோ
பலநாடு நெஞ்சினேம் பரிந்துநாம் விடுத்தக்கால்
சுடரிழாய் நமக்குஅவர் வருதும்என்று உரைத்ததை." (கலி. 34)

இது, பின்பனியிற் பிரிந்து இளவேனிலுள் வருதல் குறித்த லின் இருதிங்கள் இடையிட்டது.

"கருவிக் காரிடி யிரீஇய
பருவ மன்னவர் வருதும்என் றதுவே." (அகம். 139)

இது, கார்குறித்து வருவலென்றலின் அறுதிங்கள் இடை யிட்டது.

'வேளாப் பார்ப்பான்' (அகம். 24) என்பது "தைஇ நின்ற தண்பெயர் கடைநாட் பனியிருங் கங்குல்" என்றலின் யாண்டென்ப தூஉம், அது கழிந்ததன்மையின் அஃது அகமெனவும் பட்டதென் பதூஉம் தலைவன் வருதுமென்று காலங் குறித்ததற் கொத்த வழக் கென்றுணர்க. காவற்பிரிவும் வேந்துறுதொழிலெனவே அடங் கிற்று, தான்கொண்ட நாட்டிற்குப் பின்னும் பகையுளதாங்கொ லென்று உட்கொண்டு காத்தலின்.

(வி - ரை) வேந்தர்க்குற்றவழி தூது, காவல் அவ்வழிப் பிரிவிற்கும் ஆண்டினது அகமே காலம்; எனவே அறுதிங்கள் முத்திங்கள் எல்லாம் கொள்ளப்படும் என உரை காண்பார் இளம் பூரணர். இவ்வுரையே பொருத்தமுடைத்தாம்.

நிலநாவில் - நிலத்தினுள்ளார்தம் நாவில், திரிதரூஉம் - வழங்கும். புலனாவில் - அறிவினையுடையோர் சான்றோர் நாவில்.

கருவிக்கார் - தொகுதியை உடைய மேகம், இரீஇய - கொண்ட பருவம்மன் - பருமன்றோ (48)

## ஏனைப் பிரிவுகளுக்கும் கால வரையறை இல்லை

190. ஏனைப் பிரிவும் அவ்வயின் நிலையும்.

இஃது எஞ்சிய பிரிவிற்கு வரையறை கூறுகின்றது.

(இ - ள்.) ஏனைப் பிரிவும் அவ்வயின் நிலையும் - கழிந்து நின்ற தூதிற்கும் பொருளிற்கும் பிரிந்து மீளும் எல்லையும் யாண்டினதகம் (எ - று).

உ - ம்: "மண்கண் குளிர்ப்ப வீசித் தண்பெயல்
பாடுலந்து அன்றே பறைக்குரல் எழிலி
புதன்மிசைத் தளவின் இதன்முள் செந்நனை
நெடுங்குலைப் பிடவுமோடு ஒருங்குபிணி அவிழக்
காடே கம்மென்று அன்றே அவல
கோடுடைந்து அன்ன கோடல் பைம்பயிர்ப்
பதவின் பாவை முனைஇ மதவுநடை
அண்ணன் நல்லேறு அமர்பிணை தழீஇத்
தண்ணறல் பருகித் தாழ்ந்துபட் டனவே
அனையகொல் வாழி தோழி மனைய
தாழ்வின் நொச்சி சூழ்வன மலரும்
மௌவன் மாச்சினை காட்டி
அவ்வளவு என்றார் ஆண்டுச்செய் பொருளே."
(அகம். 23)

இது, பொருட்பிரிவின்கட் கார்குறித்து ஆறு திங்கள் இடையிட்டது.

"நெஞ்சு நடுக்குற" (கலி. 24) என்னும் பாலைக்கலியுள் "நடுநின்று செய்பொருண் முற்றுமள வென்றார்" என்றலின் எத்துணையும் அணித்தாக மீள்வலென்றதாம். இவற்றிற்குப் பேரெல்லை வந்த செய்யுள் வந்துழிக் காண்க.

(வி - ரை) தூதில் பிரிவை முன்னைய நூற்பாவில் கொண்டமையின் ஏனைப் பிரிவு என்பதற்குப் பொருள் வயிற் பிரிவு மட்டுமே கொண்டனர் இளம்பூரணர். ஏனைப் பிரிவு என ஒருமைச் சொல்லாயிருத்தலின் இதுவே பொருந்துவதாம்.

மண்கண் - மண்ணிடம், பறைக்குரல் - முரசொலி, இதல்முட் செந்நனை - சிவலின் முட்போன்ற சிவந்த அரும்பு, அவல - பள்ளங் களில் உள்ள, பதவின் பரவை—அறுகம்புல்லின் கிழங்கு, அவ்வளவு— அது மலரும் கால அளவு.

நெரிதந்த சிறை - நெரிந்திருக்கும் கரை. (49)

தலைவர்க்கு உரிய மரபு

191. யாறுங் குளனுங் காவும் ஆடிப்
பதியிகந்து நுகர்தலும் உரிய வென்ப.

இது, தலைவற்குங் காமக்கிழத்தியர்க்குந் தலைவியர்க்கும் உரிய தோர் மரபு கூறுகின்றது.

(இ – ள்.) யாறும் குளனும் காவும் ஆடி - காவிரியுந் தண் பொருனையும் ஆன்பொருனையும் வையையும் போலும் யாற்றிலும், இருகாமத்திணையேரி (பட்டினப். 39) போலுங் குளங்களிலுந், திரு மருதந்துறைக் காவேபோலுங் காக்களிலும் விளையாடி; பதி இகந்து நுகர்தலும் உரிய என்ப - உறைபதியைக் கடந்துபோய் நுகர்ச்சியெய்துதலுந் தலைவற்குங் காமக்கிழத்தியர்க்குந் தலைவி யர்க்கும் உரிய (எ - று).

ஏற்புழிக்கோடலால், தலைவியர்க்குச் சிறுபான்மையென்றுணர்க.

''கதிரிலை நெடுவேல் கடுமான் கிள்ளி
மதில்கொல் யானையின் கதழ்வுநெரி தந்த
சிறையழி புதுப்புனல் ஆடுகம்
எம்மொடும் கொண்மோஎன் தோள்புரை புணையே.''
(ஐங்குறு. 78)

இது, காமக்கிழத்தி நின் மனைவியோடன்றி எம்மொடு புனை கொள்ளின் யாமாடுதுமென்று புனலாட்டிற்கு இயைந்தாள் போல மறுத்தது.

''வயன்மலர் ஆம்பல் கயிலமை நுடங்குதழைத்
திதலை அல்குல் துயல்வரும் கூந்தல்
குவளை உண்க ணேஎர் மெல்லியன்
மலரார் மலிர்நிறை வந்தெனப்
புனலாடு புணர்துணை ஆயினள் எமக்கே.'' (ஐங்குறு. 72)

இது, தலைவி புலவிநீங்கித் தன்னொடு புனலாடல்வேண்டிய தலைவன், முன் புனலாடியதனை அவள் கேட்பத் தோழிக் குரைத்தது.

"வண்ண வொண்டொழை" (ஐங்குறு. 73) "விசும்பிழி தோகை" (ஐங்குறு. 74) இவையும் அது. "புனவளர் பூங்கொடி" என்னும் மருதக்கலியுள்,

"அன்ன வகையால்யான் கண்ட கனவுதான்
நன்வாயாக் காண்டை நறுநுதால் பன்மாணும்
கூடிப் புணர்ந்தீர் பிரியன்மின் நீடிப்
பிரிந்தீர் புணர்தம்மின் என்பன போல
அரும்பவிழ் பூஞ்சினை தோறும் இருங்குயில்
ஆனுது அகவும் பொழுதினுன் மேவர
நான்மாடக் கூடன் மகளிரும் மைந்தரும்
தேனிமிர் காவில் புணர்ந்திருந்து ஆடுமார்
ஆனு விருப்போடு அணியயர்ப காமற்கு
வேனில் விருந்தெதிர் கொண்டு" (கலி. 92)

என்னுஞ் சுரிதகத்துக் காவில் புணர்ந்திருந்தாட நீயுங் கருதெனத் தலைவன் தலைவிக்குக் கூறியவாறு காண்க.

(வி – ரை) கயில் அமை - மூட்டுவாயமைந்த அணி.

காண்டை - காண்பாய். (50)

துறவு நிகழ்த்துதற்கு உரிய காலம்

192. காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே.

இது, முன்னர் இல்லறநிகழ்த்திய தலைவனுந் தலைவியும் பின்னர்த் துறவற நிகழ்த்தி வீடுபெறுப என்கின்றது.

(இ – ள்.) கிழவனும் கிழத்தியும் - தலைவனுந் தலைவியும்; சுற்றமொடு துவன்றி அறம்புரி மக்களொடு - உரிமைச்சுற்றத்

தோடே கூடிநின்று இல்லறஞ்செய்தலை விரும்பிய மக்களோடே; சான்ற காமங் கடைக்கோட்காலை - தமக்கு முன்னரமைந்த காமத் தினையுந் தீதாக உட்கொண்ட காலத்திலே; சிறந்தது ஏமஞ் சான்ற பயிற்றல் - அறம்பொருளின்பத்திற் சிறந்த வீட்டின்பம் பெறுதற்கு ஏமஞ்சான்றவற்றை அடிப்படுத்தல்; இறந்ததன் பயனே - யான் முற்கூறிய இல்லறத்தின் பயன் (எ - று).

'சான்றகாமம்'என்றார், நுகர்ச்சியெல்லாம் முடிந்தமைதோன்ற. இது கடையாயினர் நிற்கும் நிலையென்று உரைத்தற்குக் 'கடை' யென்றார். ஏமஞ்சான்றவர்வன, வானப் பிரத்தமுஞ் சன்னியாசமும்; எனவே, இல்லறத்தின்பின்னர் இவற்றின்கண்ணே நின்று பின்னர் மெய்யுணர்ந்து வீடுபெறுப என்றார். இவ்வீடுபேற்றினை இன்றி யமையாது இவ்வில்லற மென்பது இதன் பயன்.

இது காஞ்சியாகாதோ வெனின், ஆகாது; [தங்குறிப்பினு னன்றி நிலையாமை தானே வருவதுதான், சிறந்து நிலைபெற்று நிற்குமெனச் சான்றோர் கூறுதலும், அது தானேவந்து நிற்றலுங் காஞ்சி; இஃது அன்னதன்றிச் சிறந்த வீட்டின்ப வேட்கையால் தாமே எல்லாவற்றையும் பற்றறத் துறத்தலின் அகப்பொருட் பகுதியாம்.] இதனானே, இவ்வோத்தினுட் பலவழியுங் கூறிய காமம், நிலையின்மையின்மேல் இன்பத்தை விளைத்தே வருதலிற் காஞ்சியாகாமை யுணர்க.

உ - ம்: "அரும்பெறல் கற்பின் அயிராணி அன்ன
பெரும்பெயர்ப் பெண்டிர் எனினும்—விரும்பிப்
பெறுநசையால் பின்னிற்பார் இன்மையே பேணும்
நறுநுதலாள் நன்மைத் துணை." (நாலடி. 381)

இதனுள், அருந்ததியைப்போலுந் தமக்குப் பெரும் பொருள் களை நச்சுதலாலே இரப்பாரது வறுமையே விரும்பிப் பாதுகாத்து, அவர்க்கு வேண்டுவன கொடுக்கும் மகளிர், நாஞ் செல்கின்ற வானப்பிரத்த காருகத்திற்குத் துணையாவரெனத் தலைவன் கூறவே, தலைவியும் பொருள்களிற் பற்றற்றாளாய் யாமுந் துறவறத்தின் மேற் செல்வாமெனக் கூறியவாறு காண்க. பிறவும் வந்துழிக் காண்க.

(வி - ரை) நிலையாமை கருதித் துறத்தல். இருமை வகை தெரிந்து ஈண்டறம் பூணல் காஞ்சியின் பாற்படும். இஃது அன்னதன்றித்தம் வேட்கை தீர்ந்தபின் தானே வீடு பேற்றிற்கு முயல்வது. இது இவ்வகைப் பொருட் பகுதியின் பாற்படும். இல்லறம் துறவறம் என இருநெறியே தமிழ் மரபிற்கு உரிய தாதலின் வானப் பிரஸ்தம் கோடல் வேண்டுவதின்ரும். கடைக் கோட்காலை - இன்ப நுகர்வில் முடிந்தமைந்த பொழுது; எனவே கடையென்பது இன்ப நுகர்வின் இறுதியைக் குறிப்பது. கடையா யிஞர் நிலைகுறித்தலின் என்றல் பொருத்தமின்ரும்.

காருகம் - இல்லறம், வானப் பிரஸ்தம் - இல்லைவிட்டு வனத் தின்கண் சென்று தீயோம்பி மனையாள் வழிபடத் தவம் செய்து வாழும் நிலை. (51)

வாயில்களாவார்

193. தோழி தாயே பார்ப்பான் பாங்கன்
பாணன் [1]பாடினி யிளையர் விருந்தினர்
கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்
யாத்த சிறப்பின் வாயில்க ளென்ப.

இது, வாயில்களைத் தொகுத்து அவருந் துறவிற்கு உரியராவர் என்கின்றது.

(இ – ள்.) தோழி - அன்பாற் சிறந்த தோழியும்; தாய் – அவளேபோலுஞ் செவிலியும்; பார்ப்பான் - அவரின் ஆற்றலுடைய பார்ப்பானும்; பாங்கன் - அவரேபோலும் பாங்கனும்; பாணன் - பாங்குபட்டொழுகும் பாணனும்; பாடினி - தலைவி மாட்டுப் பாங்கா யொழுகும் பாடினியும்; இளையர் - என்றும் பிரியா இளையரும்; விருந்தினர் - இருவரும் அன்பு செய்யும் விருத்தினரும்; கூத்தர் - தலைவற்கு இன்றியமையாக் கூத்தரும்; விறலியர் - தாமே ஆடலும் பாடலும் நிகழ்த்தும் விறலியரும்; அறிவர் - முன்னே துறவுள்ளத் தராகிய அறிவரும்; கண்டோர் - அவர் துறவு கண்டு கருணை செய்யுங் கண்டோரும்; யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப - இந்தத்

1. பாட்டி என பாடங்கொள்வர் இளம்பூரணர்.

தலைவனுந் தலைவியும் பெற்ற துறவின்கண்ணே மனம் பிணிப்புண்ட சிறப்பினையுடைய வாயில்களென்று கூறுவர் ஆசிரியர் (எ – று).

என்றது, இவர் அத்துறவிற்கு இடையூறாகாது முன் செல்வர், தாமும் அவரைப் பிரிவாற்றுமையி னென்பதாம் இதனைக் 'கற்புங் காமமும்' (தொல். கற். 11) என்னுஞ் சூத்திரத்து முன்னுக வாயில்களைத் தொகுத்துக்கூறிய சூத்திரமாக வைத்தல் பொருத்த முடைத்தேனும் 'யாத்த சிறப்பி' னென்று துறவுநோக்குதலின் இதன்பின் வைத்தார். இதற்குக் கோப்பெருஞ்சோழன் துறந்துழிப் பிசிராந்தையாரும் பொத்தியாரும் போல்வார் துறந்தாரென்று கூறும் புறச்செய்யுட்கள் உதாரணம் (எ – று).

(வி–ரை) இவ்வாயில்கள் கற்பிற்குரியராவர் என்ற அளவிலேயே இளம்பூரணர் பொருள் காண்பர். எனினும் இவர் துறவிற்கும் உறுதுணையாவார் எனக் கூறியது முற்நூற்பாவின் இயைபு கருதியாம்,

இந்நூற்பாவையும் அடுத்த நூற்பாவையும் காமம் சான்ற எனத் தொடங்கும் 192 வது நூற்பாவின் முன் வைத்தல் பொருத்தமாம். (52)

வினைவயிற் பிரிந்தோன் மீண்டு வருமாறு

194. வினைவயிற் பிரிந்தோன் மீண்டுவரு காலை
இடைச்சுர மருங்கில் தவிர்தல் இல்லை
உள்ளம் போல உற்றுழி யுதவும்
புள்ளியற் கலிமா வுடைமை யான.

இது பிரிந்து மீளுங்காற் செய்யத்தகுவதோர் இயல்பு கூறுகின்றது.

(இ – ள்.) வினைவயின் பிரிந்தோன் மீண்டு வருகாலை – யாதானுமோர் செய்வினையிடத்துப் பிரிந்தோன் அதனை முடித்து மீண்டுவருங் காலத்து; இடைச் சுர மருங்கில் தவிர்தல் இல்லை - எத்துணைக்காதம் இடையிட்டதாயினும் அவ்விடையின்கணுண் டாகிய வருவழியிடத்துத் தங்கிவருதலில்லை; உள்ளம்போல உற்றுழி உதவும் - உள்ளஞ் சேட்புலத்தை ஒருகணத்திற் செல்லுமாறுபோலத் தலைவன் மனஞ் சென்றுற்றவிடத்தே ஒரு

கணத்திற்சென்று உதவிசெய்யும்; புள் இயல் கலிமா உடைமையான - புட்போல நிலந்தீண்டாதசெலவினையுடைய கலித்த குதிரையை யுடையனுதலான் (எ - று).

தேருங் குதிரையாலல்லது செல்லாமையிற் குதிரையைக் கூறினர். இஃது இடையில் தங்காது, இரவும்பகலுமாக வருதல் கூறிற்று. இதனை மீட்சிக்கெல்லை கூறிய சூத்திரங்களின்பின் வையாது, ஈண்டுத் துறவு கூறியதன் பின்னர் வைத்தார், இன்ப நுகர்ச்சியின்றி இருந்து அதன்மேல் இன்பமெய்துகின்ற நிலை யாமைநோக்கியும், மேலும் இன்பப் பகுதியாகிய பொருள் கூறுகின்றதற்கு அதிகாரப்படுத்தற்கு மென்றுணர்க.

உ - ம்: "வேந்துவினை முடித்தக் காலைத் தேம்பாய்ந்து
இனவண்டு ஆர்க்கும் தண்ணம் புறவின்
வென்வேல் இளையர் இன்புற வலவன்
வள்புவலித்து ஊரின் அல்லதை மூள்ளூன்றின்
முந்நீர் மண்டிலம் ஆதி ஆற்றா
நன்னால்கு பூண்ட கடும்பரி நெடுந்தேர்
வாங்குசினை பொலிய ஏறிப் புதல
பூங்கொடி அவரைப் பொய்யதள் அன்ன
உள்ளில் வயிற்ற வெள்ளை வெண்மறி
மாழ்கி அன்ன தாழ்பெரும் செவிய
புன்தலைச் சிறாரோ டுகளி மன்றுழைக்
கவையிலை யாரின் அங்குழை கறிக்கும்
சீறூர் பல்பிறக்கு ஒழிய மாலை
இனிதுசெய் தனையால் எந்தை வாழிய
பனிவார் கண்ணள் பலப்புலந்து உறையும்
ஆய்தொடி அரிவை கூந்தல்
போதுகுரல் அணிய வேய்தந் தோயே."

(அகம். 104)

இதனுள் வினைமுடித்த காலைத் தேரிளையர் செவ்விக்கேற்ப ஊராது கோலூன்றின் உலகிறந்தன செவ்விக்குப் பற்றாத குதிரைத்தேரேறி இடைச்சுரத்தில் தங்காது மாலைக்காலத்து வந்து பூச்சூட்டினை இனிதுசெய்தனை எந்தை வாழிய எனத் தோழி கூறியவாறு காண்க.

"இருந்த வேந்த னருந்தொழின் முடித்தென" என்னும் அகப்பாட்டினுள்,

"புரிந்த காதலொடு பெருந்தேர் யானும்
ஏறியது அறிந்தது அல்லது வந்தவாறு
நனியறிந் தன்றோ இலனே ... ... ...
... ... ... ... ... ... ...
இழிமின் என்றநின் மொழிமருண் டிசினே
வான்வழங்கு இயற்கை வளிபூட் டினையோ
மானுரு வாகநின் மனம்பூட் டினையோ
உரைமதி வாழிநீ வலவ." (அகம். 384)

என உள்ளம்போல உற்றுழி உதவிற்றெனத் தலைவன் கூறிய வாறு காண்க.

(வி – ரை) கலித்த - செருக்கிய.

வலவன் - பாகன், வள்பு - கடிவாளம். முள் - தாற்றுக்கோல், நால்கு - நான்கு, அதள் - தோள், ஆர் – ஆத்தி, வேய்தந்தோய் - பூச்சுட்டியோய். (53)

கற்பியல் முற்றிற்று.

# 5. பொருளியல்

## பொருளமைப்பு

இருதிணை ஐம்பாற்குரிய சொற்களில் சில தத்தம் பொருளுணர்த்தாது வேறுபட்டு இசைப்பினும், பொருளதிகாரத்தில் முன்னர்க் கூறிய பொருள்களில் சில பிறழ்ந்திசைப்பினும் பொருளாம் என இவ்வியல் கூறலின் இது பொருளியலாயிற்று.

தலைவன் தலைவியுள்ளிட்டோர்:

துன்பமும் இன்பமும் ஆகிய இருவகை நிலைக்களத்தையும் தனக்கு உரித்ததாகக்கொண்ட காமம் சிறந்து நிற்குங்கால் நகை முதலிய எண்வகை மெய்ப்பாடும்தோன்ற, தம் மன அறிவையும் பொறி அறிவையும் வேறுபட நிறுத்தி, அஃறிணைப் பொருள்களை உறுப்புடையது போலவும், மறுத்துரைப்பது போலவும் தன் நெஞ்சொடு கூட்டிக்கூறுதலும், மறு மாற்றம் சொல்ல இயலாத பொருள்களாகிய பறவை விலங்கு முதலியவற்றோடு அவை தம் மொடு பேசுவனவாகவும் தாம் கூறும் செயலைச் செய்வனவாகவும் கூறுதலும், அப்பொருள்களுக்குற்ற வருத்தங்கள் தமக்குற்ற வருத்தங்களாகவே அவற்றொடு கூறலும், தலைவன் தலைவியர்க் குரியவாம். தலைவியர்க்குக் காமம் சிறக்குங்கால் கனவிலும் மேற் கூறிய செயல்கள் நிகழும். தலைவன் தலைவியுடன் உடன் போயக் கால் செவிலிக்கும் அவ்வாறு கனவு நிகழும். மேற்கூறியவாறு பேசும் நிலைமை செவிலி நற்றாய்க்கும் உரியவாம். தலைவியின் உயிர், நாண், மடம் ஆகிய மூன்றையும் நற்றாய், செவிலி, தோழி, தலைவன் ஆகிய நால்வரும் காத்தற்குரியவராவர்.

தலைவி:

தலைவனின் பிரிவால் தன்மேனி பசந்து வருந்துங்காலைத் தன் உறுப்புகளை உணர்வுடையது போல் வைத்து அவற்றொடு உரை யாடுதலும் தலைவிக்கு உரியதாம். தலைமகன் பிரிவினால் தன் உடம்பும் உயிரும் வாடிய போதும் இவை இவ்வாறு வருந்தக் காரணம் யாதோ எனத்தலைவி கேட்பின் அல்லது தலைவன் இருக்கு

மிடத்திற்குத் தான் செல்லல் தலைவிக்கு உரிய மரபில்லை. பிரிவில் தன் நெஞ்சமே துணையாக இருக்கும் தலைவி அதனொடு உரையாடவும் செய்வள். தன்னிடத்தே தலைவன் புறத்தொழுக்கம் இன்று எனப் பொய் கூறுமிடத்தும், அங்ஙனம் கரந்து கூறும் தலைவனைத் தாம் விரும்பும் இடத்தும் தலைவி தன் மடனழிய நிற்பள்.

வரைதல் வேட்கைக்குரிய கூற்றுக்கள்:

இராப்பொழுதும், அக்காலத்து வழியும், அவ்விடத்துள்ள காவலும் ஆகிய மூன்றினாலும் தலைவனுக்கு வரும் குற்றத்தை எடுத்துக்காட்டலும், அக்காலத்துத் தலைவன் வருதற்கு இரவுக்குறி நேர்ந்ததன் வாயிலாகத்தானே காரணமாயினேன் எனக்கூறுதலும், புணர்ச்சி இடையீடு படுதலால் தலைவிக்கு வரும் இடையூற்றைக் கூறுதலும், இரவினும் பகலினும் தலைவனை வருமாறு கூறுதலும், அவனை வாரற்க எனக் கூறுதலும், களவில் வரும் தீங்கைப் பிறர் மேல் வைத்துக்கூறுதலும் ஆகிய கூற்றுக்கள் தலைவன் மீதுள்ள அன்பின்மையாலோ, அன்றி அவனிடத்துள்ள ஆண்மையைக் குறைத்து மதிப்பிடுவதாலோ அல்ல. தலைவன் விரைந்து வரைந்து கொள்ள வேண்டும் என்னும் கருத்தால் கூறுவனவாம்.

தலைவிக்குரிய ஒழுகலாறுகளுள் சில:

களவுக்காலத்துத் தலைவனுடன் இடைவிடாது இன்பம் நுகர்தலோடு வரைந்து கொண்டு இல்லறம் நிகழ்த்த வேண்டும் என்னும் உரிமையை வேண்டினும், தலைவன் பிரிதலாலாய அச்சம் தனக்கு உளது ஆதலின் அம்பலும் அலரும் தம் களவை வெளிப் படுத்தும் என அஞ்சிய அச்சத்தானும், பிறர் தன்னை அயிர்த்து நோக்கும் காரணத்தால் தனக்கு உளதாய துன்பத்தினாலும், தலைவி தலைவனுடன் உடன் போக வேண்டும் என்றும், தன்னை அவன் விரைய வரைய வேண்டும் என்னும் கருத்தும் உண்டாகும்.

கற்புக்காலத்துப் பரத்தையர் பிரிவால் தலைவன் தலைவியரிடத்து வருத்தம் மிகும்பொழுது தோழியும் அறிவரும் அதனைத் தீர்க்க வேண்டி அவர்தம் வாழ்க்கை தமக்கு வருத்தம் தருவதாகக் கூறுவதும் உண்டு. கற்புக்காலத்தில் புலவிக்கண் மனைவி உயர்வும்

கிழவோன் பணிவும் நிகழ்தல் இயற்கை. கற்புக்காலத்துத் தலைவன் தலைவி ஆகிய இருவரும் ஒருவரையொருவர் வேட்கை மிகுதியால் புகழ்ந்து கூறுதலும் உண்டு.

தலைவன் தலைவியை மிகுதியாகப் பாராட்டுவானாயின் அது, தான் பொருள்வயிற் பிரிதற்கு இவள் இடையூறு ஆவளோ என நினையும் அச்சத்தையும், தான் பொருள்வயிற் பிரிதற்கு இருத்தலையும் தலைவிக்கு உணர்த்தும்.

கற்பு வழிப்பட்ட தலைவி பரத்தையைப் புகழ்ந்து கூறினாளாயினும் அவள் உள்ளத்தே ஊடல் உளதாகும்.

தலைவி பிறிதொரு தலைவியினுடைய குணங்களைத் தலைவனிடம் கூறி அதனால் அவன் எத்தன்மையனாயிருக்கின்றான் எனக் குறிப்பின் உணர்த்தலும் உண்டு.

தோழி:

தலைவி தன் களவொழுக்கத்தினை தமர்க்கு அறிவுறுத்தல் வேண்டும் என வேண்டினல்லது தோழி தானாக அறத்தொடு நிற்பாள் அல்லள். அவ்வாறு தலைவி வேண்டுவதையும் தோழி உய்த்துணர்ந்தே தெரிவாள். அவள் அறத்தொடு நிற்கும் நிலை எழுவகைப்படும். தலைவனை எளியன் எனக்கூறியும், அவனை உயர்த்திக்கூறியும், அவன் வேட்கையை மிகுத்துக் கூறியும், தலைவியும் தோழியும் வெறியாட்டிடத்தும், பிரிவிடத்தும் சில கூறுங்கால் தானும், பிறருடன் உரையாடியும், தாம் பொழிற்கண் விளையாடுமிடத்துத் தலைவன் களிறும் புலியும் போல்வன காத்துத் தம்மைக் கைக்கொண்டான் எனவும், பூத்தந்தும், தழைதந்தும் தமக்கு மகிழ்வு தந்தான் எனவும் காரணம் கூறியும், தலைவன் தலைவியர் இருவரும் தாமே எதிர்ப்பட்டார் யான் அதை அறிந்திலேன் எனக்கூறியும், இவ்வாறி படைத்துக் கூறாது உண்மையைப் பட்டாங்குக் கூறியும் தோழி அறத்தொடு நிற்பாள். அடக்கமும், மறை புலப்படுத்தாது நிறுத்தும் உள்ளமும், மனக்கோட்டமின்மையும், அறிவுடைமையாகச் சொல்லலும், உள்ளக் கருத்து அறிதல் அருமையும் தலைவிக்குரிய வாகலின் தலைவியின் களவொழுக்கத்தினைப் பிறர் அறியாமலேயே தோழி முதலானோர் வைத்துக்கொள்வர். தலைவிக்கு வரும் வருத்தத்தைப் பாதுகாத்தற்

குரிய கடப்பாடு தோழிக்குண்டு. ஆதலின் தோழி பேரறிவுடையாளாயிருப்பள்.

தலைவிக்கும் தோழிக்குமுரிய மரபு:

எம் சுற்றத்தார் நின்னொடு வரைவு நேராமைக்குக்காரணம் பொருள்வேண்டியேயாம் எனத் தோழி கூறலும் மரபாம். இவ்வாறு கூறல் தலைவனிடத்து இருக்கும் அன்பிற்கும், தம் குடிமைக்குரிய அறத்திற்கும், தனக்கு இன்றியமையாது வேண்டப் படும் இன்பத்திற்கும், நாணத்திற்கும் ஓராற்ருன் இழுக்காமேனும் தான் காவல் மிகுதியால் வருந்துதலின் அவ்வாறு தலைவியின் சார்பில் தோழி கூறுதலும் அறனும். தலைவன் பிரியக் கருதிய விடத்துத் தோழியும் தலைவியும் நீ செல்லுமிடம் செல்லுதற்கரிய பாலையாகும் எனக்கூறுதலும் மரபாம்.

தன்னிடத்து இரந்து குறை வேண்டிய தலைவனைச் சேட் படுத்தலும், நும் கட்டத்தினை யாம் முன் அறிவன் என மெய் கூறுதலும், தலைவன் வரைந்து கோடற்காகச் சில பொய்களைக் கூறுதலும், தலைவனிடத்து நகையாடிக் கூறுதலும், வேறு பல வாற்ருன் புனைந்துரைத்தலும் தோழிக்கு இயல்பாம். அவள் தலைவியையும் தலைவனையும் அவ்வப்போது பாராட்டிக் கூறுவாள்.

தோழி தலைவியின் உறுப்புக்களைத் தன்னுறுப்பாகக் கூறிக் கொள்ளுதல்:

தோழி தலைவியின் உறுப்பைத் தன்னுடைய உறுப்பாய்க் கூறிக்கொள்ளுதல் தந்தையுடைய பொருள் மக்களுக்காகும் தாய வழியதன்று. அன்றி அவள் கொடுப்பக் கொண்டதுமன்று. தன் பணிக்காகப் பெற்றதும் அன்று. வலிந்து கொள்ளப் பட்டதும் அன்று. ஆயினும் அவ்வாறு கூறிக்கொள்ளும் உரிமை தோழிக்கு உளதாம்.

அடியோர்பாங்கும் வினைவலர்பாங்கும்:

தன் மனத்து வேட்கையைத் தலைவியர் எதிர்ப்பட்ட பொழுது வெளிப்படக் கூறிக்கொள்ளுதல் கைக்கிளை பெருந்திணைக்குரிய இவ்விரு சாரார் மாட்டே உளவாம்.

சில மரபுகள்:

களவுக் காலத்தில் தலைவன் யானை, தேர், குதிரை முதலிய ஊர்திகளில் இவர்ந்து வருதலும் உண்டு. உண்டற் தொழிலை நிகழ்த்துதற்குரிய அல்லாத பொருளை உண்டன போலக் கூறலும் மரபாம். அவ்வாறே உண்ணப்படுதற்குரிய அல்லாத பொருளை உண்ணப்பட்டது போலக் கூறுவதும் மரபாம்.

உலக வழக்கத்திற்குப் பொருத்தமில்லாத கூற்றுக்கள் ஒரோ வழி தம் வாழ்க்கைக்குப் பயன்பட வருமாயின் அவற்றையும் ஏற்றல் தவறில்லை. இது பொறை தீர்ந்த நன்மை பயக்குமெனின் பொய்மையும் வாய்மையிடத்து எனக் கூறுவது போல்வதாம். மேற்கூறியவாறு உலக வழக்கிற்குப் பொருந்தாத கூற்றுக்களை ஒரோ வழிக் கூறலாமாயினும் அது தலைவியின் நாண் நீங்காமைக்கு ஏதுவாக அமைதல் வேண்டும்.

தலைவியும் தோழியும் தலைவனை எல்லா எனக்கூறுதலும் மரபாம். ஒரோவழித் தலைவன் தலைவியையும் பாங்கனையும் கூட அச்சொல்லான் சொல்லல் உண்டு.

அகப்பொருளில் தலைவன் தலைவி என ஒருமையில் கூறப் பெறினும் அவ்வாறு இருப்பார் பலராம். இன்பம் என்பது எல்லா உயிர்க்கும் பொதுவாம். அவ்வின்பத்தை அவ்வவ் வுயிரும் ஆணும் பெண்ணுமாய்க் கூடி நுகரும். தலைவன் பரத்தையரிடத்துப் பிரிவதால் தலைவி ஊடுவதும் அது தீர்க்கத் தலைவன் வாயில்களைத் துணையாகக் கொள்ளுதலும் நான்கு வகை வருணத்தார்க்கும் உண்டு. இவ்வொழுக்கம் மருத நிலத்திற்கே உரித்தாம்.

தலைவன், தலைவி, தோழி ஆகியோர்க்குரிய மரபு:

இன்பம் மிகுதற்குக் காரணமான கூற்று நிகழ்ந்துழி இம் மூவரும் ஒருவர்க்கொருவர் மாறுபடக் கூறுதலும் உண்டு.

தலைவிக்குரியதோர் மரபு:

பரத்தையரும் பிற தலைவியரும் தலைவனால் பெற்ற வருத்தத்தைத் தன்னிடத்துக் கூற அதனை உண்மையாக உணர்ந்த தலைவி, அதனை உடன் தலைவன் இடத்துக்கூறுமல் அவனிடத்துக்

கூடி மகிழ்ந்தும் புலத்தல் செய்தும் அமைந்தவழி அதன் பின்னரே கூறுவாள்.

தலைவனும் தலைவியும்:

தலைவனால் அனுப்பப்படும் வாயில்களிடத்து இவர்கள் அவனது கொடுமைகளை வெளிப்படையாகவும் கூறுவர்.

இறைச்சி:

இறைச்சியாவது கருப்பொருளைக் கொண்டு தாம் கூறும் கருத்தை வெளிப்படையாகக் கூறாது அப்பொருளின் புறத்தே புலப் படுமாறு கூறுவதாகும். அதனை நுண்ணறிவுடையோரே உணர இயலும்.

தலைவி பிரிவாற்றாது வருந்தும் காலத்துத் தோழி அக்கருப் பொருள்களுள் தலைவன் அன்பு செய்தற்குத் தகுவனவற்றைக் கூறித் தலைவியை ஆற்றுமாறு வற்புறுத்தலும் உண்டு.

உள்ளுறை உவமம்:

இது ஐந்து வகைப்படும்.

1. உடனுறை; நிலத்துடன் இருக்கும் கருப்பொருள்களால் பிறிதொரு பொருள் விளங்க மறைத்துக் கூறுவது.

2. உவமம்: கருப்பொருளால் கொள்ளும் உள்ளுறை உவமமும் ஏனை உவமமும் இதன்கண் அடங்கும்.

3. சுட்டு: ஒன்று நினைந்து ஒன்று சொல்வது.

4. நகை: நகையாடுமாற்றான் ஒன்று நினைந்து ஒன்று கூறுவது.

5. சிறப்பு: ஏனை உவமம் உள்ளுறை உவமத்திற்குச் சிறப்புக் கொடுத்து நிற்பது.

மேற்கூறிய ஐவகை உள்ளுறை உவமத்தானும் தலைவியும், தோழியும் கூற்று நிகழ்த்துழி இன்பச்சிறப்பாக அதனைத் தலைவன் ஏற்பான். தலைவியும் தோழியும் தலைவனுக்குத் தீங்கு வருமென

அஞ்சி அவனை வாழ்த்துதலும், தம்மை அவன் வஞ்சித்தானாகக் கூறலும், அவன் ஆண்மையிடத்துப் பழி கூறுதலும் உண்டு.

சினம், பேதமை, பொருமைக்குறிப்பு, வறுமை ஆகிய நான்கும் காதற் சிறப்பை எடுத்துரைக்கும் ஆற்றான் தலைவிக்கும் தோழிக்கும் உரியவாகக் கூறுதலும் உண்டு. தோழி தலைவியை 'அன்னை' என்றலும், தலைவி தோழியை 'அன்னை' என்றலும், இருவரும் தலைவனை என்னை என்றலும் மரபாம்.

கண்ணுக்குப் புலனாகாத பொருள்கள்:

ஒப்பு – தலைவனுக்கும் தலைவிக்கும் உரிய ஒற்றுமை.

உரு – அச்சம்.

வெறுப்பு – செறிவு.

கற்பு – தன்கணவனைத் தெய்வம் என்று உணர்வதொரு மேற்கோள்.

ஏர் – வளர்ச்சி.

எழில் – அங்ஙனம் வளர்ந்தமைந்த பருவத்தும் இது வளர்ந்து மாறியதன்றி இன்னும் வளரும் என்பது போன்று காட்டுதல்.

சாயல் – ஐம்பொறியால் நுகரும் மென்மை.

நாண் – செய்யத்தகாதவற்றிற்கு உள்ளம் ஒடுங்குதல்.

மடன் – பிறர் அறிவுறுத்த ஏற்றுக்கொண்டவற்றைப் பின் மறக்காதிருத்தல்.

நோய் – நோதல்.

வேட்கை – பொருள்கள் மேல் தோன்றும் பற்றுள்ளம்.

நுகர்வு – இன்ப துன்பங்களை நுகரும் நுகர்ச்சி.

இப்பொருள்களையெல்லாம் மனவுணர்வால் மட்டுமே உணர இயலும்.

அறம், பொருள், இன்பங்களின் நுகர்வு தேவருலகத்திற்கும் இவ்வுலகத்திற்கும் ஒப்பச் சொல்வதாம். ஆதலின் அப்பொருள்களும் உள் பொருள்களேயாம்.

---

# 5. பொருளியல்

இருவகை வழுவமைதி

195. இசைதிரிந் திசைப்பினும் இயையுமன் பொருளே
அசைதிரிந் தியலா என்மனார் புலவர்.

இவ்வோத்துப் பொருளிலக்கணம் உணர்த்தினமையிற் பொருளியலென்னும் பெயர்த்தாயிற்று.

ஏனை ஓத்துக்களும் பொருளதிலக்கணமன்றே உணர்த்தின, இதற்கிது பெயராயவாறென்னை யெனின்; சொல்லதிகாரத்திற் கூறிய சொற்களை மரபியலில் இருதிணை ஐம்பா லியனெறி வழாமைத் திரிபில் சொல்லென்பாராதலின் அவை ஈண்டுத் தம் பொருளை வேறுபட்டிசைப்பினும் பொருளாமெனவும், இப் பொருளதிகாரத்து முன்னர்க்கூறிய பொருள்களிற் பிறழ்ந்திசைப் பனவும் பொருளாமெனவும் அமைத்துச், சொல்லுணர்த்தும் பொருளுந் தொடர் மொழியுணர்த்தும் பொருளும் ஒருங்கே கூறலிற் பொருளியலென்றார்.

இச் சூத்திரம் இவ்வோத்தின்கண் அமைக்கின்ற வழுவமைதி களெல்லாஞ் சொற்பொருளின் வழுவமைதியும் பொருளின் வழுவமைதியுமென இருவகைய என்கின்றது.

(இ - ள்.) இசை திரிந்து இசைப்பினும் - சொற்கள் தத்தம் பொருளுணர்த்தாது வேறுபட்டிசைப்பினும்; அசை திரிந்து இயலா இசைப்பினும் - இவ்வதிகாரத்துள் யாத்த பொருள்கள் நாடக வழக்கும் உலகியல் வழக்குமாகிய புலனெறி வழக்கிற் றிரிந்து இயன்றிசைப்பினும்; மன் பொருள் இயையும் என்மனார் புலவர் - அவை மிகவும் பொருளேயாய்ப் பொருந்துமென்று தொல்லாசிரியர் கூறுவர் (எ - று). அதனால் யானும் அவ்வாறு கூறுவலென்றார்.

சொல்லாவது எழுத்தினான் ஆக்கப்பட்டுப் பொருளறி வுறுக்கும் ஓசையாதலின் அதனை இசையென்றார்; இஃது ஆகு பெயர். அசைக்கப்பட்டது – அசையென்பதும் ஆகுபெயர்.

'நோயுமின்பமும்' (தொல். பொ. 196) என்பதனுள் 'இருபெயர் மூன்று முரிய வாக' என்பதனால் திணை மயங்குமென்றும், 'உண்டற் குரிய வல்லாப் பொருளை' (தொல். பொ. 213) என்றும் பிறண்டுஞ் சொல் வேறுபட்டுப் பொருளுணர்த்துதலும், இறைச்சிப்பொருண் முதலியன நாடக வழக்கின் வழீஇயவாறுந், 'தேரும் யானையும்' (தொல். பொரு. 212) 'அறக்கழிவுடையன' (தொல். பொரு. 218) 'தாயத்தி னடையா' (தொல். பொரு. 221) என்னுஞ் சூத்திர முதலியன உலகியல்வழக்கின் வழீஇயவாறுங் கூறி, அவ்வழு அமைக்கின்றவாறு மேலே காண்க. புறத்திணையியலுட் புறத்திணை வழுக்கூறி அகப்பொருட்குரிய வழுவே ஈண்டுக் கூறுகின்றதென் றுணர்க.

'இயலா' என்றதனால் 'என்செய்வாமென்றவழி'ப் பொன் செய்வாம் (குறிஞ்சிக்கலி. 24) என்றாற்போல வினாவிற் பயவாது இறைபயந்தாற் போல நிற்பனவுங்கொள்க. இன்னும் அதனானே செய்யுளிடத்துச் சொற்பொருளானன்றித் தொடர்பொருளாற் பொருள் வேறுபட இசைத்தலுங்கொள்க. அது சூத்திரத்துஞ் செய்யுளுள்ளும் பொருள் கூறுமாற்றா னுணர்க.

(நவி – ரை) சொல்லதிகாரத்தில் கூறப்பட்ட சொற்கள் தம்மியல் நெறிக்கு மாறாகப் பொருள்படினும் அவை பொருளாம் எனவும், இப்பொருளதிகாரத்தில் கூறப்படும் பொருள்கள் தம் மியல் நெறிக்கு மாறாக ஏற்கப்படினும் பொருளாம் எனவும் இவ் வியல் கூறுதலின் 'பொருளியல்' ஆயிற்று. எனவே சொல்லுக்கும் பொருளுக்கும் உரிய வழுவமைதிகளை இவ்வியல் கூறுகின்றது என்பது கருத்தாயிற்று. இளம்பூரணர் "இதனை ஒழிபியல் எனினும் இழுக்காது, அகப்பொருள், புறப்பொருள் என்பன இரண்டு பொருண்மையினும் எஞ்சி நின்றன கூறினமையின்" என இவ்வியல் பற்றி விளக்கங் காண்பர்.

இசை - இசைக்கப்படுவது; அவ்வாறு இசைக்கப்படும் சொல்லிற் காயினமையின் இது தொழிலாகுபெயராம். அசைத்தல் - யாத்தல்; அவ்வாறு யாக்கப்பட்ட பொருளுக்காயினமையின் அதுவும் தொழி லாகுபெயராம். மேற்கூறிய சொல்லும் பொருளும் தம்மியல் பினின்றும் வேறுபட்டவரினும் ஏற்றுக் கொள்ளுதற்குரியனவே

என்பது நச்சினார்க்கினியர் இந்நூற்பாவிற்குத்தரும் பொருளாகும். இயலா - இயன்று.

வினவில் பயவாது – வினவிற்கு உரிய விடையாகாது. இறை - விடை.

சொல்லொடு சொல் தொடர்புபடும் வாய்பாட்டால் தொடராது பிறிதோர் வாய்பாட்டால் தொகுப்பினும் பொருள் தொடர்பு உண்டாயின் பொருள் இயையும்வழி அச்சொற்கள் திரியாது நின்ற நிலையே பொருள்படும் எனப் பொருள் கூறி ''கார்விரி கொன்றை'' எனத் தொடங்கும் அகநானூற்றுக் கடவுள் வாழ்த்தை இதற்கு எடுத்துக்காட்டாகக் காட்டுவர் இளம்பூரணர். (1)

முற்கூறிய இரு வகையானும் பொருள் வேறுபட்டு வழுவி அமைதல்

196. நோயும் இன்பமும் இருவகை நிலையிற்
காமங் கண்ணிய மரபிடை தெரிய
எட்டன் பகுதியும் விளங்க வொட்டிய
உறுப்புடை யதுபோ லுணர்வுடை யதுபோல்
மறுத்துரைப் பதுபோல் நெஞ்சொடு புணர்த்துஞ்
சொல்லா மரபின் அவற்றொடு கெழீஇச்
செய்யா மரபில் தொழிற்படுத் தடக்கியும்
அவரவ றுறுபிணி [1]தமபோலச் சேர்த்தியும்
அறிவும் புலனும் வேறுபட நிறீஇ
இருபெயர் மூன்றும் உரிய வாக
உவம வாயிற் படுத்தலும் [2]உவமமோ
டொன்றிடத் திருவர்க்கும் உரியபாற் கிளவி.

இது, முற்கூறிய இருவகையானும் பொருள்வேறுபட்டு வழீஇ யமையுமாறு கூறுகின்றது.

(இ - ள்.) நோயும் இன்பமும் இருவகை நிலையிற் காமம் கண்ணிய மரபிடை தெரிய - துன்பமும் இன்பமுமாகிய இரண்டு

1. தமபோற் 2. உவமம் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

நிலைக்களத்துங் காமங் கருதின வரலாற்று முறைமையிடம் விளங்க; எட்டன் பகுதியும் விளங்க - நகை முதலிய மெய்ப்பாடு எட்டனுடைய கூறுபாடுந் தோன்ற; அறிவும் புலனும் வேறுபட நிறீஇ இரு பெயர் மூன்றும் உரியவாக - மனவறிவும் பொறியறிவும் வேறுபட நிறுத்தி அஃறிணை யிருபாற்கண்ணும் உயர்திணை மூன்றுபொருளு முரியவாக; அவரவர் ஒட்டிய உறுப்புடையதுபோல் உணர்வுடையது போல் மறுத்துரைப்பது போல் நெஞ்சொடு புணர்த்தும் - கூறுகின்ற அவரவர் தமக்குப் பொருந்திய உறுப்பெல்லாம் அதுவுடையது போலவும் உணர்வுடையது போலவும் மறுமாற்றந்தருவது போலவும் தந்நெஞ்சொடு புணர்த்துச்சொல்லியும்; சொல்லாமரபின் அவற்றொடு கெழீஇச் செய்யாமரபிற் றொழிற்படுத்து அடக்கியும் - வார்த்தை சொல்லாமுறைமையுடையனவாகிய புள்ளும் மாவும் முதலியனவற்றோடே அவை வார்த்தை கூறுவனவாகப் பொருந்தி அவை செய்த லாற்றாத முறைமையினையுடைய தொழிலினை அவற்றின் மேலே ஏற்றியும்; உறுபிணி தமபோலச் சேர்த்தியும் - அச்சொல்லா மரபினனவ உற்ற பிணிகளைத் தம் பிணிக்கு வருந்தின போலச் சார்த்திக்கூறியும்; உவமம் ஒன்றிடத்து உவமவாயிற் படுத்தலும் - அம்மூவகைப் பொருளை உவமஞ்செய்தற்குப் பொருந்து மிடத்து உவமத்தின் வழியிலே சார்த்திக் கூறுதலும்; இருவர்க்கும் உரிய பாற் கிளவி - அத்தலைவர்க்குந் தலைவியர்க்குமுரிய இலக் கணத்திற் பக்கச்சொல் (எ - று).

தெரிய விளங்க உரியவாகப் புணர்த்தும் அடக்கியுஞ் சேர்த்தும் அவற்றைப் படுத்தலும் இவ்விருவர்க்குமுரிய பாற்கிளவியென முடிக்க. 'அவரவ' ரென்கின்றார் அகத்திணையியலுட் பலராகக் கூறிய தலைவரையுந் தலைவியரையும். 'இருவ' ரென்றதும் அவ ரென்னுஞ் சுட்டு. நெஞ்சென்னும் அஃறிணையொருமையைத் தெரிய விளங்கத் தலைவன் கூறும்வழி உயர்திணையாண்பாலாகவுந் தலைவி கூறும்வழி உயர்திணைப்பெண்பாலாகவும் பன்மையாற் கூறும்வழிப் பன்மைப்பாலாகவுங் கொள்க. என்றுஞ்சொல்லா மரபின வற்றையும் உயர்திணைப் பாலாக்கியும் அவற்றைத் தமபோலச் சேர்த்திக் கூறுபடுத்து உயர்திணை முப்பாலாக்கியுங் கூறுபவென வழுவமைத்தார். இருவகை நிலைக்களத்து எட்டனையுஞ் சேர்க்கப் பதினாறும். அவற்றை நெஞ்சொடு சேர்க்கப் பலவாமென்றுணர்க.

"உண்ணுமையின்" என்னும் (123) அகப்பாட்டினுள்,

"இறவொடு வந்து கோதையொடு பெயரும்
பெருங்கடல் ஓதம் போல
ஒன்றில் கொள்ளாய் சென்றுதரு பொருட்கே."

என்றவழி "அழிதக வுடைமதி வாழிய நெஞ்சே" என்றதனுன் நிலையின்ருகுதியென நெஞ்சினை உறுப்புடையதுபோலக் கழறி நன்குரைத்தவாறும் ஓதத்தையும் நெஞ்சையும் உயர்திணையாக்கி உவமவாயிற்படுத்தவாறுங் காண்க.

"கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை அன்ன பின்னகம் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாள்நுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்தோள் பெறநசைஇச் சென்றஎன் நெஞ்சே."
(அகம். 9)

இஃது, உறுப்புடையதுபோல் உவந்துரைத்தது.

"அன்றவ ணொழிந்தன்று மிலையே" என்னும் (19) அகப் பாட்டினுள்,

"வருந்திணை வாழிஎன் நெஞ்சே பருந்திருந்து
உயாவிளி பயிற்றும் யாவுயர் நனந்தலை
உருள்துடி மகுளியின் பொருள்தெரிந்து இசைக்கும்
கடுங்குரல் குடிஞைய நெடும்பெரும் குன்றம்
எம்மொடு இறத்தலும் செல்லாய் பின்னின்று
ஒழியச் சூழ்ந்தனை யாயின் தவிராது
செல்லினிச் சிறக்கநின் உள்ளம்."

என அறிவுடையதுபோல் அழுகைப்பற்றிக் கூறிற்று.

"பூவில் வறுந்தலை போலப் புல்லென்
றினைமதி வாழிய நெஞ்சே." (குறுந். 19)

என்றது உணர்வுடையதுபோல் வெகுளிபற்றிக் கூறிற்று.

"... ... ... ... ...
உள்ளம் பிணிக்கொண்டோள் வயின் நெஞ்சம்
செல்லல் தீர்க்கம் செல்வாம் என்னும்
செய்வினை முடியாது எவ்வம் செய்தல்
எய்யா மையோடு இளிவுதலைத் தரும்என
உறுதி தூக்கத் தூங்கி அறிவே
சிறிதுநனி விரையல் என்னும் ஆயிடை
ஒளிறேந்து மருப்பில் களிறுமாறு பற்றிய
தேய்புரிப் பழங்கயிறு போல
ஈவது கொல்என் வருந்திய உடம்பே."

(நற்றிணை. 284)

இஃது, உணர்வுடையதுபோல இளிவரல் பற்றிக் கூறியது.

"ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்எனச்
செய்வினை கைம்மிக எண்ணுதி அவ்வினைக்கு
அம்மா அரிவையும் வருமோ
எம்மை உய்த்தியோ உரைத்திசின் நெஞ்சே."

(குறுந். 63)

இது, மறுத்துரைப்பதுபோல நெஞ்சினை இளிவரல்பற்றிக் கூறியது.

"பின்னின்று துரக்கும் நெஞ்சம் நின்வாய்
வாய்போல் பொய்ம்மொழி எவ்வம்என் களைமா."

(அகம். 3)

என்பதும் அது.

"விசும்புற நிவந்த" (அகம். 131) என்பதனுள்,

"வருக என்னுதி யாயின்
வாரேன் நெஞ்சம் வாய்க்கநின் வினையே."

என்பது, மறுத்துரைப்பதுபோற் றறுகண்மைபற்றிய பெருமிதங் கூறிற்று. ஏனை அச்சமும் மருட்கையும்பற்றியன தலைவன் கூற்று வந்துழிக் காண்க. இவை நெஞ்சை ஆண்பாலாகக் கூறியன.

''மன்றுபாடு அவிந்து'' (அகம். 128) என்பதனுள் ''நெஞ்சம்.... தளரடி தாங்கிய சென்ற தின்றே'' என்பது உறுப்புடையது போல் அழுகைபற்றிக் கூறியது.

''குறுநிலைக் குரவின்'' (நற்றிணை, 56) என்பது உறுப்பும் உணர்வுமுடையதுபோல இளிவரல்பற்றிக் கூறியது.

''அறியவும் பெற்ருயோ அறியாயோ மடநெஞ்சே.''
(கலி. 123)

இஃது, உணர்வுடையதுபோல் நகைபற்றிக் கூறியது.

''கோடெழில் அகலல்குல் கொடியன்னூர் முலைமூழ்கிப்
பாடழி சாந்தினன் பண்பின்றி வரினெல்லா
ஊடுவேன் என்பேன்மன் அந்நிலையே அவர்காணில்
கூடுவேன் என்னும்இக் கொள்கையில் நெஞ்சே.''
(கலி. 67)

இது மறுத்துரைப்பதுபோல் உவகைபற்றிக் கூறியது.

''அவர்நெஞ்சு அவர்க்காதல் கண்டும் என்நெஞ்சே
நீயெமக்கு ஆகா தது.'' (குறள். 1291)

இஃது, இளிவரல் பற்றி மறுத்துக் கூறியது. ஏனைய வந்துழிக் காண்க. இவை நெஞ்சினைத் தலைவி பெண்பாலாகக் கூறியன. இவை துன்பமும் இன்பமும் நிலைக்களமாகக் காமங் கண்ணிய மரபிடைத் தெரிய வந்தன.

''கானலும் கழருது கழியும் கூருது
தேனிமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியாது
ஒருநீ அல்லது பிறிதுயாதும் இலனே
இருங்கழி மலர்ந்த கண்போல் நெய்தல்
கமழிதழ் நாற்றம் அமிழ்தென நசைஇத்
தண்தா தூதிய வண்டினம் களிசிறந்து
பறைஇய தளரும் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமால் அலவ.'' (அகம். 170)

இது சொல்லா மரபின சொல்லுவனவாக அழுகைபற்றிக் கூறியது. இவை உயர்திணையுமாயிற்று.

"கொங்குதேர் வாழ்க்கை ........" (குறுந். 2)

என்பது உவகைபற்றிக் கூறியது.

"போர்தொலைந்து இருந்தாரைப் பாடெள்ளி நகுவார்போல்
ஆரஞர் உற்றாரை அணங்கிய வந்தாயோ."
(கலி. 120)

இது, செய்கையில்லாத மாலைப்பொழுதினைச் செய்யா மரபில் தொழிற்படுத்தடக்கி உவமவாயிற்படுத்தது.

"தொல்லூழி தடுமாறி" (கலி. 129) என்பதனுள்,

"பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கடல்
தூவறத் துறந்தனன் துறைவன்என்று அவன்திறம்
நோய்தெற உழப்பார்கண் இமிழ்தியோ எம்போலக்
காதல்செய்து அகன்றாரை உடையையோ நீ;
மன்றிரும் பெண்ணை மடல்சேர் அன்றில்
நன்றறை கொன்றனர் அவர்எனக் கலங்கிய
என்துயர் அறிந்தனை நரறியோ எம்போல
இன்துணைப் பிரிந்தாரை உடையையோ நீ;
பனியிருள் சூழ்தரப் பைதலம் சிறுகுழல்
இனிவரின் உயருமன் பழிஎனக் கலங்கிய
தனியவர் இடும்பைகண்டு இனைதியோ எம்போல
இனியசெய்து அகன்றாரை உடையையோ நீ;".

எனக் கடலும் அன்றிலுங் குழலும் உற்ற பிணியைத் தம் பிணிக்கு வருந்தினவாகச் சேர்த்தி உயர்திணையாக்கி உவமவாயிற்படுத்த வாறு காண்க.

'ஒன்றிடத்' தென்றார் வேண்டியவாறு உவமங்கோட லாகா தென்றற்கு. பகுதியைப் 'பால்கெழு கிளவி' (தொல். பொரு. 5) என மேலும் ஆளுப. 'காமங்கண்ணிய' என்றதனாற் கைக்கிளையும் பெருந்திணையுமாகிய காமத்திற்கு வருவனவுங் கொள்க.

"சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி பெறுந்துணையும்
நின்றதுகொல் நேர்மருங்கில் கையூன்றி—முன்றின்
முழங்கும் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்கு
உழந்துபின் சென்றஎன் நெஞ்சு." (முத்தொள்.)

இது, கைக்கிளைக்கண் உறுப்புடையதுபோல் அவலம்பற்றி நெஞ்சினைக் கூறியது.

"ஓங்கெழில் கொம்பர் நடுவிது எனப்புல்லும்
காந்தட்கு இவரும் கருவிளம் பூக்கொள்ளும்
மாந்தளிர்க் கையில் தடவரும் மாமயில்
பூம்பொழில் நோக்கிப் புகுவனபின் செல்லும்
தோள்எனச் சென்று துளங்கொளி வேய்தொடும்
நீள்கதுப்பு இஃதுஎன நீரறல் உட்புகும்
வாளொளி முல்லை முகையை முறுவல்என்று
ஆள்வலி மிக்கான் அஃதுஅறி கல்லான்."

என்றாற்போல் உயர்திணையாக உவமவாயிற்படுத்த பெருந்திணையாய் வருவனவுங் காண்க. இஃது அவலம்.

(வி - ரை) பக்கச் சொல் - இலக்கணத்திற்கு உரித்தல்லாத சொல்.

இரவு - இருள்மீன், கோதை - மகளிர் அணிந்தமாலை, ஓதம் - நீர்ப்பெருக்கு. நெஞ்சை நோக்கி நீ ஓதம்போல இருதலைப்பட நிற்கின்றாய் எனக் கூறினமையின், ஓதத்தையும் உயர்திணையாக்கி உரைத்தவாராயிற்று.

கவியா – கவித்து, புதையா – புதைத்து; பிடிக்கை – பெண் யானையது துதிக்கை, பின்னகம் - கூந்தல், தைவர - பொருந்த, மிடைந்த - செறிந்த, நசைஇ - விரும்பி.

உயாவிளி - வருத்தத்தோடு கூடிய கூப்பிடு, யா - யாமரம், முகுளி - ஓசை, குடிஞை - ஆந்தை, சூழ்ந்தனை - கருதினை.

இனைமதி - வருந்துவாய்.

செல்லல் - வருத்தம், எவ்வம் - வருத்தம், எய்யாமை - அறியாமை, தூக்க - ஆராய, தேய்புரி - தேய்ந்தபுரிகளையுடைய.

கைம்மிக - மிகுதியாக, அம்மா அரிவை - அழகியமாமை நிறத்தையுடைய தலைவி.

துரக்கும் - தூண்டும், வாய்போல் - உண்மையைப்போல, களைமா - போக்குவோம்.

கோடு - பக்கமுயர்ந்த, எல்லா - தோழியே!

பறைஇய - புறப்பதற்கு, அலவ - நண்டே

பாடு எள்ளி - பெற்ற தோல்வியை இகழ்ந்து, ஆரஞர் - பொறுத்தற்கரிய துன்பம்.

பாடு - ஒலி, தூஅற - பற்றுக்கோடு நீங்க, நன்று அறை கொன்றனர் - பிறர் செய்த நன்மையை மறந்தவர், நரறியோ - ஒலிக்கின்றாயோ, பைதல் - வருத்தம்.

செவ்வி - பார்த்தற்குரியகாலம், மருங்கில் - இடையில், மாறற்கு - பாண்டியற்கு.

நடு - இடை, வேய் - மூங்கில், கொம்பர் இடைக்கும், காந்தள் கைக்கும், கருவிளம்பூ கண்ணிற்கும், மாந்தளிர் உடற்கும், மாமயில் சாயற்கும், மூங்கில் தோளுக்கும், நீரறல் கூந்தற்கும், முல்லை பல்லுக்கும் உவமையாம்.

அறிவும் புலனும்... ''உவமவாயில் படுத்தலும்'' அறிவையும் அறியப்படும் பொருளையும் வேறுபட நிறுத்தி இருவகைப்பட்ட பெயரும் மூவகைப்பட்ட பொருட்கும் உரித்தாக உவமம் பொருந்துமிடத்து உவம வாயிற்படுத்தலும் என உரை கண்டு, வேறுபட நிறுத்தலாவது—தத்தம் நிலைமையொழிய; இருபெயராவது—உவமைப்பெயரும் உவமிக்கும் பெயரும், மூன்றும் உரியவாகும் என்பது - தொழிலும் பண்பும் பயனும் என விளக்கங் காண்பர் இளம்பூரணர். (2)

முன்னைய நிலைகள் கனவின்கண்ணும் வருதல்

197. கனவும் உரித்தால் அவ்விடத் தான.

இது, மேற்கூறிய நிலைமைகள் கனவின்கண்ணும் நிகழுமெனப் பகுதிக்கிளவி கூறுகின்றது.

(இ - ள்.) அவ்விடத்தான -முன்னர் வழுவமைத்த நிலைமையின்கண்ணே வந்தன; கனவும் உரித்தால் - கனவும் உரித்தாயிருந்தது முந்து நூற்கண் (எ - று).

எனவே, யானுங் கூறுவலென்றார்.

"அலந்தாங்கு அமையலேன் என்றானைப் பற்றிஎன்
நலந்தாரா யோஎனத் தொடுப்பேன் போலவும்
கலந்துஆங் கேஎன் கவின்பெற முயங்கிப்
புலம்பல் ஓம்பென அளிப்பான் போலவும்;

"முலையிடைத் துயிலும் மறம்தீத் தோய்என
நிலையழி நெஞ்சத்தேன் அழுவேன் போலவும்
வலையுறு மயிலின் வருந்தினை பெரிதுஎனத்
தலையுற முன்னடிப் பணிவான் போலவும்."
(கலி. 128)

இவற்றுள், தன்னெஞ்சினை உறுப்பும் உணர்வும் மறுத்துரைத்தலு முடையதாகக் கூறியவாறும், ஆங்கு எதிர் பெய்துகொண்ட தலைவன் உருவும் உறுப்பும் உணர்வும் மறுத்துரைத்தலு முடையதாகச் செய்யாமரபின செய்ததாகக் கூறியவாறும், அவை உயர் திணையாகக் கூறியவாறும், பிறவுமுணர்க.

"இன்னகை இனையம் ஆகவும் என்வயின்
ஊடல் யாங்குவந் தன்றுஎன யாழநின்
கோடேந்து புருவமொடு குவவுநுதல் நீவி
நறுங்கதுப்பு உளரிய நன்னர் அமையத்து
வறுங்கை காட்டிய வாயல் கனவின்." (அகம். 39)

என வருவனவுங் கொள்க.

(வி - ரை) அலந்தாங்கு - பிரிந்தவிடத்து, அமையலேன் - வாழேன், தொடுப்பேன் - வளைப்பேன், மறம் தீத்தோய் - மறந்தாய், வலையுறுமயிலின் - வலையிடை அகப்பட்ட மயிலைப்போல.

எதிர்பெய்து கொண்ட - தனக்கு முன்னிலைப் படுத்திக் கொண்ட

இன்னகை - இனிய நகையினையுடையாய்; இனையமாகவும் -

யாம் இங்ஙனம் வருந்தியிருப்பவும், கோடுஏந்து - பக்கமுயர்ந்த, நன்னர் அமையத்து - நல்லபொழுதில், வாயல் - உண்மையல்லாத.

மேற்கூறியவாற்ருல் காமம் இடையீடுபட்டுழிக் கனுக்காண்டலும் உரித்து என்றும், இது தலைமகற்கும் தலைமகட்கும் உரித்தென்றும் இளம்பூரணர் கூறுவர். (3)

களவின்கண் கனவு செவிலிக்கும் உரித்து

198. தாய்க்கும் உரித்தாற் போக்குடன் கிளப்பின்.

இது முற்கூறிய கனவு களவின்கட் செவிலிக்கு முரித்தென வழுவமைக்கின்றது.

(இ - ள்.) உடன்போக்குக் கிளப்பின் - உடன்போக்கின்கட் கூறின்; தாய்க்கும் உரித்தால் - அக்கனவு செவிலிக்கும் உரித்தாயிருந்தது முந்து நூற்கண் (எ – று).

தோழி உடன்பட்டுப் போக்குதலானும் நற்ருய் ''நற்பாற்பட்டனள்'' என்று வருதலானுந் ''தாயெனப்படுவோள் செவிலியாகும்'' (124) என்பதனுனுஞ் செவிலியைத் தாயென்ருர். தலைவி போகாமற் காத்தற்குரியளாதலானும் அவளை என்றும் பிரியாத பயிற்சியானுஞ் செவிலிக்குக் கனவு உரித்தாயிற்று.

''காய்ந்துசெலற் கனலி'' (அகம். 55) என்பதனுட் ''கண்படைபெறேன் கனவ'' என்றவாறு காண்க.

(வி – ரை) நற்பாற்பட்டனள் - தலைவி தலைவனெடு கூடி அறநெறிப்பட்டனள்.

கண்படை - கண்துயில், கனவ - புலம்ப.

இளம்பூரணர் தாய்க்கும் என்பதற்கு நற்ருய்க்கும் என உரைகாண்பர். (4)

நால்வர்க்கும் உரிய பக்கச்சொல்

199. [1]பால்கெழு கிளவி நால்வர்க்கு முரித்தே.

இஃது, எய்தாத தெய்துவித்து வழுவமைக்கின்றது.

---

1. இதனையும் அடுத்த நூற்பாவையும் இணைத்து ஒரே நூற்பாவாகக் கொள்வர் இளம்பூரணர்.

(இ – ள்.) பால்கெழு கிளவி-இலக்கணத்திற் பக்கச் சொல்; நால்வர்க்கும் உரித்து - தோழியும் செவிலியும் நற்றுயும் பாங்கனு மென்னும் நால்வர்க்கும் உரித்தாம். (எ – று).

மேல் 'இருவர்க்கு முரிய பாற்கிளவி' (196) என்றலின் தலைவனையுந் தலைவியையும் ஆண்டே கூறலின் ஈண்டு இந்நால் வருமென்றே கொள்க.

"தருமணல் கிடந்த பாவைஎன்
அருமக ளேஎன முயங்கினள் அழுமே." (அகம். 165)

இது, நற்றுய் மணற்பாவையைப் பெண்பாலாகக்கூறித் தழீஇக்கொண்டழுதலிற் பால்கெழு கிளவியாயிற்று.

"தான்தாயாக் கோங்கம் தளர்ந்து முலைகொடுப்ப
ஈன்றுய்நீ பாவை இருங்குரவே – ஈன்றுள்
மொழிகாட்டாய் ஆயினும் உள்ளெயிற்றுள் சென்ற
வழிகாட்டாய் ஈதென்று வந்து." (திணை, நூற். 65)

என்பது செவிலி குரவை வழிகாட்டென்றலிற் பால்கெழு கிளவி யாயிற்று. ஏனையிரண்டும் மேல்விலக்குப.

(வி – ரை) பக்கச் சொல் - பகுதிச் சொல்; இலக்கணமல்ல வாயினும் இலக்கணமுடையவாகக் கூறும் சொல்.

அருமகளே - வேண்டிப்பெற்றவளே!

நால்வர் : தலைவி, தோழி, நற்றுய், செவிலி என்பர் இளம் பூரணர். (5)

## இறந்தது காத்தல்

200. நட்பின் நடக்கை ஆங்கலங் கடையே.

இஃது, இறந்தது காத்தது.

(இ – ள்.) ஆங்கு - அந்நால்வரிடத்து; நட்பின் நடக்கை அலங்கடை - நட்பின் கண்ணே ஒழுகுதலல்லாத அவ்வீரிடத்தும் பால்கெழு கிளவி உரித்து (எ – று).

எனவே, நட்புச்செய் தொழுகுந் தோழிக்கும் பாங்கனுக்கும் 'பால்கெழு கிளவி' இன்றென்றுர் எனக்கொள்க.

(வி - ரை) நட்பின் நடக்கை ஆங்கலங்கடையே - தலைவியொடு தோழி ஒழுகும் ஒழுக்கம் அவ்வழி அல்லாதவிடத்து என உரை காண்பர் இளம்பூரணர்.

அவ்வீரிடத்தும் - நற்றாய் செவிலி ஆகிய இருவரிடத்தும், மேல்நால்வருக்கும் உரித்தென்றார் ஈண்டு அவருள் இருவரை விலக்கலின் இறந்தது காத்தலாயிற்று. (6)

தலைவியது வேறுபாட்டை நீக்குதற்கு உரியோர்

201. உயிரு நாணு மடனு மென்றிவை
செயிர்தீர் சிறப்பின் நால்வர்க்கும் உரிய.

இது, தலைவிக்குத் தலைவனாற் பிறப்பதோர் வேறுபாடு தோன்றியவழி அதனைப் பரிகரித்தற் குரியோர் இவரென வழு வமைக்கின்றது.

(இ – ள்.) உயிரும் நாணும் மடனும் என்றிவை - உயிரும் நாணும் மடனுமென்று கூறப்பட்ட இவை மூன்றும்; செயிர்தீர் சிறப்பின் நால்வர்க்கும் உரிய - குற்றந் தீர்ந்த தலைமையினையுடைய நற்றாய்க்குஞ் செவிலிக்குந் தோழிக்குந் தலைவற்கு முரிய (எ – று).

உம்மை ஐயமாதலின் தலைவனை யொழிந்த மூவர்க்குமுரிய என்றாராயிற்று. என்றது தலைவன் இவற்றைக் களவிலுங் கற்பிலுங் காத்தலும் வரைவிடைவைத்துப் பிரிந்தும் பரத்தையிற் பிரிந்துங் காவாமையுமுடைய னென்பது கூறிற்று. அவை எழு வகையால் (தொல். பொரு. 207) தோழி அவற்றைக் காத்து அறத் தொடு நிற்ப, அதனைச் செவிலி உட்கொண்டு அவற்றைக் காத்து நற்றாய்க்கு அறத்தொடு நிற்ப, அவளும் அவற்றை உட்கொண்டு காத்தற்கு அறத்தொடு நிற்றலும், உடன்போயது அறனென நற்றாய் கோடலுஞ் செவிலி பிறரை வரைகின்றானோ வெனத் தோழியை வினவலும் பிறவுமாம். உதாரணம் முன்னர்க் காட்டிய வற்றுட் காண்க.

இனி உம்மையை முற்றும்மையாக்கி உயிர் முதலிய தலைவி யுறுப்பினை உறுப்புடைத்தாகவும் மறுத்துரைப்பதாகவும் கூறப் பெறுதென்றார்.

(வி – ரை) பரிகரித்தற்குரியோர் - நீக்குதற்குரியோர், உம்மை- நால்வர்க்கும் என்றவிடத்துள்ள உம்மை. இதனை ஐயவுவமை

யாக்கியும், முற்றும்மையாக்கியும் கூறும்பொருள் அத்துணைச் சிறப்புடைத்தன்று. இளம்பூரணர், இது மேற்சொல்லப்பட்ட நால்வர்க்கும் (தலைவி, தோழி, நற்றாய், செவிலி) உரியதோர் பொருண்மை உணர்த்திற்று என்றும், செயிர்தீர் சிறப்பின் என்ற மையான் ஏனையோர் போலாது இவர் நால்வரும் ஒரு நீர்மையர் என்று கொள்க என்றும், இதனாற் சொல்லியது என்னையெனின், இந்நால்வரும் ஆக்கமுங்கேடும் ஒருவர்மாட்டு வந்துழித் தமக் குற்றது போல் நினைப்பராதலான் ஒருவரையொருவர் இன்றி யமையாது ஓருயிர் போல்வர் என்றும், நாணமும், மடனும் நால் வர்க்கும் ஒக்குமாகலான் அவலமாகிய வழியும் வருத்தம் ஒக்கும் என்றும் விளக்கங் காண்பர். (7)

தலைவியது வருத்தம் மிகுந்தவிடத்து நிகழுமாறு

202. [1]வண்ணம் பசந்து புலம்புறு காலை
[2]உணர்ந்த போல உறுப்பினைக் கிழவி
புணர்ந்த [3]வகையிற் புணர்க்கவும் பெறுமே.

இது, வருத்தமிக்கவழி இவையும் ஆம் என்கின்றது.

(இ - ள்.) வண்ணம் பசந்து புலம்பு உறுகாலை - மேனி பசந்து தனிப்படருறுங் காலத்து; கிழவி உறுப்பினை உணர்ந்த போல - தலைவி தனது உறுப்பினை அறிந்தனபோல; புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே - பொருந்தின கூற்றாற் சொல்ல வும் பெறும் (எ - று).

''கேலலன் நமக்குஅவன் குறுகன்மின் என மற்றுஎம்
தோளொடு பகைபட்டு நினைவாடு நெஞ்சத்தேம்.''
(கலி. 68)

''நாணில மன்றஎம் கண்ணே நாணேர்பு
.........பிரிந்திசினோர்க் கழலே.'' (குறுந். 35)

''தணந்தநாள் சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள்.'' (குறள். 1233)

என வரும்.

---

1. வண்ணந் திரிந்து புலம்புங்காலை, 2. உணர்ந்தது, 3. வகையால் எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

காதும் ஓதியும் முதலியன கூறப்பெறு; கண்ணுந் தோளும் முலையும் போல்வனப் புணர்க்கப்படுமென்றற்குப் 'புணர்ந்தவகை' யென்றார். இதனானே இவற்றைத் தலைவன்பாற் செலவுவர வுடையனபோலக் கூறலுங்கொள்க.

"கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவைஎன்னைத்
தின்னும் அவர்க்காண லுற்று." (குறள். 1244)

எனக் கண்ணினைச் செல்வனவாகக் கூறினாள்.

(வி – ரை) கேள் அலன் - (தலைவன்) நமக்குறவுடையவனல்லன். இது தோள்களை நோக்கி அவனொடு முயங்கண்மின் எனக்கூறியது.

தணந்தநாள் - பிரிந்த நாள், மணந்தநாள் - கூடியநாள், வீங்கிய - பருத்த.

தின்னும் - தின்பன போன்று நலியச் செய்யும். (8)

தலைவிக்கு உரியதோர் வழுவமைதி

203. உடம்பும் உயிரும் [1]வாடியக் காலும்
என்னுற் றனகொல் இவையெனின் [2]அல்லது
கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை.

இது, தலைவனொடு வேறுபட்டுழிப் பிறப்பதோர் வழுவமைதி கூறுகின்றது.

(இ – ள்.) உடம்பும் உயிரும் வாடியக்காலும் - தன் உடம்பும் உயிருந் தேய்ந்து கூட்டமின்றி இருந்தகாலத்தும்; இவை என் உற்றன கொல் எனின் அல்லது - இவை என்ன வருத்தமுற்றன கொலென்று தனக்கு வருத்தமில்லதுபோலக் கூறினல்லது; கிழத்திக்குக் கிழவோற் சேர்தல் இல்லை - தலைவிக்குத் தலைவனைத் தானேசென்று சேர்தல் இருவகைக் கைக்கோளினுமில்லை (எ – று).

இது, காதல்கூரவுங் கணவற்சேராது வஞ்சம்போன்றொழுகலின் வழுவாயினும் அமைக்க (எ - று).

---

1. வாடியக் கண்ணும், 2. அல்லதைக் எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

"எற்றோ வாழி தோழி முற்றுபு
கறிவளர் அடுக்கத்து இரவின் முழங்கிய
மங்குல் மாமழை வீழ்ந்தெனப் பொங்குமயிர்க்
கலைதொட இழுக்கிய பூநாறு பலவுக்கனி
வரையிழி அருவி உண்துறைத் தரூஉம்
குன்ற நாடன் கேண்மை
மென்றோள் சாய்த்தும் சால்பீன்று அன்றே."

(குறுந், 90)

என்பதனுட் கேண்மை தோளை மெலிவித்தாயினும் எனக்கு அமைதியைத் தந்தது; யான் ஆற்றவுந் தாம் மெலிதல் பொருந்தாதது எத்தன்மைத்தெனத் தலைவி தோழிக்குக் கூறியவாறு காண்க 'கலைதீண்ட வழுக்கி வீழ்ந்த பழத்தை யருவி பின்னும் பயன்படுத்து நாடன்' என்றதனானே அலரால் நஞ்சுற்றத்திற் பிரிந்தேமாயினும் அவன் நம்மை வரைந்துகொண்டு இல்லறஞ் செய்வித்துப் பயன்படுத்துவ னென்பதாம்.

"கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்க துடைத்து. (குறள். 1173)

இதுவும் அது.

"ஓஒ இனிதே எமக்கு இந்நோய் செய்தகண்
தாஅம் இடர்ப்பட் டன. (குறள். 1176)

இதுவும் இதன்பாற்படும். இனி,

"இனிப்புணர்ந்த எழில்நல்லார் இலங்கெயிறு உரூஅலின்
நனிச்சிவந்த வடுக்காட்டி நாணின்றி வரின்எல்லா
துனிப்பேன்யான் என்பேன்மன் அந்நிலையே அவற்காணில்
தனித்தே தாழும்இத் தனியி நெஞ்சே." (கலி. 67)

இதனுள், யான் துனித்தல்வல்லேன், என் நெஞ்சிற்குத் தன்றன்மை யென்பதொன்றில்லை, ஈதென்னென்றலின் அவ்வாறு காண்க.

(வி – ரை) இருவகைக் கைகோள் - களவு கற்பு ஆகியன.

முற்றுபு - சூலுற்று முற்றிய, கறி - மிளகு, கலை - ஆண்குரங்கு, இழுக்கிய - நழுவிய, உண்துறை- நீர் உண்ணும் துறை, சாய்த்தும்- மெலிவித்தும், சால்பு ஈன்றன்று - அமைதியைத் தந்தது.

கதுமென - விரைந்து.

எழில் நல்லார் - பரத்தையர், எல்லா - தோழியே! துனிப்பேன் - ஊடல் கொள்வேன். தனியில் நெஞ்சு - தனிமையால் மனத்தைந் தனக்கு உரித்தாக்குதலில்லாத நெஞ்சு. (9)

இதுவும் அது

204. ஒருசிறை நெஞ்சமோ டுசாவுங் காலை
உரிய தாகலும் உண்டென மொழிப.

இதுவும் அது,

(இ - ள்.) ஒருசிறை - தன் உள்ளத்து நின்ற தலைவனை யொழியப்போந்துநின்ற; நெஞ்சமொடு உசாவுங்காலை - தானுந் தன் நெஞ்சமும் வேருகநின்று கூட்டத்திற்கு உசாவுங் காலம்; உரியதாகலும் உண்டென மொழிப - தலைவிக்குரித்தாகலும் உண்டென்று கூறுவர் புலவர் (எ - று).

உம்மையால் தோழியுடன் உசாவுங்காலமும் உண்டு என்று கொள்க. உம்மை எச்சவும்மை. இது தலைவனை வேறுபடுத்துத் தானும் நெஞ்சமும் ஒன்ருய் நின்று உசாவுதலின் வழுவா யமைந்தது. இது யாண்டு நிகழுமெனின் இவனெடு கூடாமையின் இவன் ஆற்ருனவனென்ருனும் 'உணர்ப்புவயின்வாராவூடற்' கட் (தொல். பொ. 150) புலக்குமென்ருனும் பிறவாற்ருனுமென்ருனும் உசாவும்.

"மாண மறந்துள்ளா நாணிலிக்கு இப்போர்
புறஞ்சாய்ந்து காண்டைப்பாய் நெஞ்சே உறழ்ந்திவனைப்
பொய்ப்ப விடேஎம் எனநெருங்கில் தப்பினேன்
என்றுஅடி சேர்தலும் உண்டு." (கலி. 89)

என வரும்.

"பகலே பலரும் காண நாண்விட்டு
அகல்வயல் படப்பை அவனூர் வினவிச்
சென்மோ வாழி தோழி." (நற். 365)

இது, தோழியோடு உசாவியது.

(வி – ரை) ஒருசிறை - ஒரு பக்கமும்; தலைவனை நீங்கிய ஒரு பக்கம், உசாவல் - வினவல், உணர்ப்புவயின் வாரா ஊடல் - தலைவன் தன்தவறின்மை கூறி ஊடல் நீங்க வேண்டியும் அதற்குத் தணியாதிருக்கும் ஊடல்.

மாண மறந்து - யான் மாட்சிமைப்பட இருக்கு மாறன்றி என்னை மறந்து. காண்டைப்பாய் - காண்பாய். இப்போர் - இவ் வூடல்போர். படப்பை - தோட்டம், சென்மோ - செல்வோமோ. (10)

## மடமை அழியும் இடம்

205. தன்வயின் கரத்தலும் அவன்வயின் வேட்டலும்
அன்ன இடங்கள் அல்வழி யெல்லாம்
மடனொடு நிற்றல் கடனென மொழிப.

இது, பெண்டிர்க்கியல்பாகிய மடமை யழிவதோர் வழுவ மைக்கின்றது.

(இ – ள்.) தன்வயின் கரத்தலும் - தலைவன் தலைவியிடத்தே புறத்தொழுக்க மின்றென்று பொய்கூறலும்; அவன் வயின் வேட்டலும் - அங்ஙனங் கரந்துகூறிய தலைவன்கட் டலைவி விரும்பு தலும்; அன்ன இடங்கள் அல்வழி எல்லாம் - ஆகிய அவை போலும் இடங்களல்லாத இடத்தெல்லாம்; மடனொடு நிற்றல் கடன் என மொழிப - தலைவி மடமையுள்ளாகி நிற்றல் கடப்பா டென்று கூறுவர் புலவர் (எ – று).

எனவே, இவ்வீரிடத்தும் மடனழிதலுடைளென வழுவ மைத்தார். அது "குதிரை வழங்கிவருவல்" (கலி. 96) என்று அவன் கரந்தவழி, அதனை மெய்யெனக் கோடலன்றே மடமை, அங்ஙனங்கொள்ளாது அறிந்தேன் குதிரை தானெனப் பரத்தை யர்கட் டங்கினையெனக் கூறுதலின் இது மடனழிந்த வழுவமைதி யாயிற்று.

"கவவுக்கை ஞெகிழ்ந்தமை போற்றி மதவுநடைச்
செவிலி கைஎன் புதல்வனை நோக்கி
நல்லோர்க்கு ஒத்தனிர் நீயிர் இஃதோ
செல்வர்க்கு ஒத்தனம் யாம்என மெல்லஎன்
மகன்வயிற் பெயர்தந் தேனே." (அகம். 26)

என்றவழி, மனத்துநிகழ்ந்த வேட்கையை மறைத்து வன்கண்மை செய்து மாறினமையின் அதுவும் மடனழிந்து வழுவாகியமைந்தது. அன்ன இடமென்றதனால்,

''யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று.'' (குறள். 1314)

என்றாற்போல' மடனழிய வருவனவுங்கொள்க.

(வி - ரை) கவவுக்கை - அணைத்தலை விடாதகை, மதவுநடை- மெல்லிய நடை, நல்லோர்க்கு - பரத்தையர்க்கு.

அவள்வயின் வேட்டலும் எனப் பாடங் கொண்டு தலைமகள் மாட்டுப் புணர்ச்சி வேட்கை தோற்றிய வழியும் எனப் பொருள் காண்பர் இளம்பூரணர். (11)

## தோழி அறத்தொடு நிற்குமாறு

206. அறத்தொடு நிற்குங் காலத் தன்றி
அறத்தியல் மரபிலள் தோழி யென்ப.

இது, தலைவியால் தோழிக்கு வருவதோர் வழுவமைக்கின்றது.

(இ - ள்.) அறத்தொடு நிற்குங் காலத்தன்றி - தலைவி இக் களவினைத் தமர்க்கறிவுறுத்தல் வேண்டுமென்னுங் கருத்தினளாகிய காலத்தன்றி; தோழி அறத்தியன் மரபிலளென்ப - தோழி அறத்தினியல்பாகத் தமர்க்குக் கூறும் முறைமையிலளென்று கூறுவர் புலவர் (எ - று).

காலமாவன நொதுமலர்வரைவும் வெறியாட்டெடுத்தலும் முதலியன. தலைவி களவின்கண்ணே கற்புக்கடம் பூண்டு ஒழுகுகின்றாளை நொதுமலர் வரைவைக் கருதினார் என்பதூஉம், இற்பிறந்தார்க்கேலாத வெறியாட்டுத் தம்மனைக்கண் நிகழ்ந்ததூஉந் தலைவிக்கிறந்துபாடு பிறக்குமென்று உட்கொண்டு அவை பிறவாமற் போற்றுதல் தோழிக்குக் கடனாதலின் இவை நிகழ்வதற்கு முன்னே தமர்க்கறிவித்தல் வேண்டும்; அங்ஙனம் அறிவியாதிருத்தலின் வழுவாயமைந்தது.

''இன்றுயாண் டையனோ தோழி குன்றத்துப்
பழங்குழி அகழ்ந்த கானவன் கிழங்கின்

கண்ணகன் தூமணி பெறூஉ நாடன்
அறிவுகாழ்க் கொள்ளும் அளவைச் சிறுதொடி
எம்மில் வருகுவை நீயெனப்
பொம்மல் ஓதி நீவி யோனே.'' (குறுந். 379)

இது, நொதுமலர் வரைவுகூறி உசாவி அறத்தொடு நின்றது

''கடவுள் கற்சுனை அடையிறந்து அவிழ்ந்த
நாடன், மான்புதர வந்த படர்மலி யருநோய்
நின்னணங்கு அன்மை அறிந்தும் அண்ணாந்து
கார்நறுங் கரும்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்
கடவுளாயினும் ஆக
மடவைமன்ற வாழிய முருகே.'' (நற்றிணை. 34)

இது, வெறியாட்டெடுத்தவழி அறத்தொடு நின்றது.

''அகவன் மகளே அகவன் மகளே
இன்னும் பாடுக பாட்டே அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே.'' (குறுந். 23)

இது, கட்டுக்காணிய நின்றவிடத்து அறத்தொடு நின்றது.

அதுவும் வெறியாட்டின்கண் அடங்கும். தலைவிக்குக் குறிப்பினு மிடத்தினுமல்லது வேட்கை நெறிப்பட வாராமையிற் சின்னாள் கழித்தும் அறத்தொடு நிற்பாளாகலானுஞ் செவிலியும் நற்றாயுங் கேட்டபொழுதே அறத்தொடு நிற்பராகலானும் ஆண்டுவழுவின்று.

(வி – ரை) கண்ணகல் - இடமகன்ற, காழ்கொள்ளும் அளவை - முதிர்கின்ற பருவத்தில், பொம்மல் ஓதி - செறிந்த கூந்தல். (12)

அறத்தொடு நிலையின் வகை

207. எளித்தல் ஏத்தல் வேட்கை யுரைத்தல்
கூறுதல் [1]உசாதல் ஏதீடு தலைப்பாடு
உண்மை செப்புங் கிளவியொடு [2]தொகைஇ
[3]அவ்வெழு வகைய என்மனார் புலவர்.

1. உசா அதல், 2. தொகைஇய, 3. ஏழுவகைய எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

இதுவும் அவ்வறத்தொடு நிலை இணைத்தென்கின்றது.

(இ – ள்.) எளித்தல் - தலைவனை எளியனாகக் கூறுதல்; ஏத்தல் - அவனை உயர்த்துக் கூறல்; வேட்கை உரைத்தல் - அவனது வேட்கை மிகுத்துரைத்துக் கூறல்; கூறுதல் உசாதல் – தலைவியுந் தோழியும் வெறியாட்டிடத்தும் பிரிவிடத்துஞ் சில கூறுதற்கண்ணே தாமும் பிறருடனேயும் உசாவுதல்; ஏதீடு - ஒருவன் களிறும் புலியும் நாயும் போல்வன காத்து எம்மைக் கைக்கொண்டானெனவும் பூத்தந்தான் தழைதந்தானெனவும் இவை முதலிய காரணமிட்டுணர்த்தல்; தலைப்பாடு - இருவருந் தாமே எதிர்ப்பட்டார் யான் அறிந்திலேனெனக் கூறுதல்; உண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ - என்று அவ்வாறனையும் படைத்துமொழியாது பட்டாங்கு கூறுதலென்னுங் கிளவியோடே கூட்டி; அவ் எழுவகைய என்மனார் புலவர் - அத்தன்மைத்தாகிய ஏழு கூற்றையுடைய அறத்தொடு நிற்றலென்று கூறுவர் புலவர் (எ – று).

'அவ்வெழுவகைய' என்றதனால் உண்மை செப்புங்கால் ஏனை யாறுபொருளினுட் சில உடன்கூறி உண்மைசெப்பலும் ஏனைய கூறுங்காலுந் தனித்தனி கூறாது இரண்டு மூன்றும் உடனே கூறுதலுங் கொள்க.

உ - ம்; ''எல்லும் எல்லின்று அசைவுபெரிது உடையேன்
மெல்லிலைப் பரப்பின் விருந்துண்டு யானும்இக்
கல்லென் சிறுகுடித் தங்கின்மற்று எவனோ
எனமொழிந் தனனே ஒருவன்.'' (அகம். 110)

என்பது எளித்தல்.

''பகன்மாய் அந்திப் படுசுடர் அமையத்து
அவன்மறை தேஎ நோக்கி மற்றிவன்
மகனே தோழி என்றனள்.'' (அகம். 48)

என்பது ஏத்தல்.

''பூணாகம் உறத்தழீஇப் போதந்தான்.'' (கலி. 39)

என்பது வேட்கையுரைத்தல்.

''முருகயர்ந்து வந்த முதுவாய் வேலன்
சினவல் ஓம்புமதி வினவுதல் உடையேன்
பல்வேறு உருவில் சில்லவிழ் மடையொடு
சிறுமறி கொன்றிவள் நறுநுதல் நீவி
வணங்கினை கொடுத்தி யாயின் அணங்கிய
விண்டோய் மாமலைச் சிலம்பன்
ஒண்தார் அகலமும் உண்ணுமோ பலியே.''

(குறுந். 362)

இது வேலனொடு கூறுதலுசாதல். கூறுதற்கண் உசாதலென விரிக்க.

''வாடாத சான்றோர் வரவெதிர் கொண்டிராய்க்
கோடாது நீர்கொடுப்பது அல்லது—கோடா
எழிலும் முலையும் இரண்டிற்கும் முந்நீர்ப்
பொழிலும் விலையாமோ போந்து.''

(திணை, நூற். 15)

இதுவும் உசாதலாய் அடங்கும்.

''உரவுச் சினம்செருக்கித் துன்னுதொறும் வெகுளும்
முளைவாள் எயிற்ற வள்ளுகிர் ஞமலி
திளையாக் கண்ண வளைகுபு நெரிதர
நடுங்குவனம் எழுந்து நல்லடி தளர்ந்தியாம்
இடும்பைகூர் மனத்தே மருண்டு புலம்படர
மாறுபொருது ஓட்டிய புகல்வின் வேறுபுலத்து
ஆகாண் விடையின் அணிபெற வந்துஎம்
அலமரல் ஆயிடை வெரூஉதல் அஞ்சி
மெல்லிய இனிய மேவரக் கிளந்துஎம்
ஐம்பால் ஆய்கவின் ஏத்தி ஒண்தொடி
அசைமென் சாயல் அவ்வாங் குந்தி
மடமதர் மழைக்கண் இளையீர் இறந்த
கெடுதியும் உடையேன் என்றனன்.''

(குறிஞ்சிப்பாட்டு, 130-142)

என நாய் காத்தவாறும்,

"கணைவிடு புடையூக் கானம் கல்லென
மடிவிடு வீளையர் வெடிபடுத்து எதிரக்
கார்ப்பெயல் உருமில் பிளிறிச் சீர்த்தக
இரும்பிணர்த் தடக்கை இருநிலம் சேர்த்திச்
சினந்திகழ் கடாஅம் செருக்கிமரம் கொல்பு
மையல் வேழம் மடங்கலின் எதிர்தர
உய்விடம் அறியேன் ஆகி ஒய்யெனத்
திருந்துகோல் எல்வளை தெளிர்ப்ப நாணுமறந்து
விதுப்புறு மனத்தேம் விரைந்தவற் பொருந்திச்
சூருறு மஞ்ஞையின் நடுங்க வார்கோல்
உடுவுறு பகழி வாங்கிக் கடுவிசை
அண்ணல் யானை அணிமுகத்து அழுத்தலில்
புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந்து இழிதரப்
புள்ளி வரிநுதல் சிதைய நில்லாது
அயர்ந்துபுறங் கொடுத்த பின்னர் நெடுவேள்
அணங்குறு மகளிர் ஆடுகளம் கடுப்பத்
திண்ணிலைக் கடம்பின் திரளரை வளைஇய
துளையறை மாலையில் கைபிணி விடேஎம்
நுரையுடைக் கலுழி பாய்தலின் உரவுத்திரை
அருங்கரை வாழையின் நடுங்கப் பெருந்தகை
அஞ்சில் ஓதி அசையல் எனையதூஉம்
அஞ்சல் ஓம்புநின் அணிநலம் காக்கஎன
மாசறு சுடர்நுதல் நீவி நீடுநினைந்து
என்முக நோக்கி நக்கனன்........."

(குறிஞ்சிப் பாட்டு, 160–183)

எனக் களிறு காத்தவாறும், புனலுள் எடுத்தவாறுங் காண்க.

"புலிபுலி என்னும் பூசல் தோன்ற
.........நிற்றந் தோனே." (அகம். 48)

இது, புலிகாத்தற்கு வந்தானென இட்டுரைத்தது.

"அன்னாய் வாழிவேண்டு அன்னை என்னை
தானு மலைந்தான் எமக்குந் தழையாயின
பொன்வீ மணிஅரும் பினவே
என்ன மரங்கொல்வர் சாரல் அவ்வே." (ஐங்குறு. 201)

இது, தோழி தழைதந்தானென அறத்தொடு நின்றது.

"சுள்ளி சுனைநீலம் சோபா லிகைசெயலை
அள்ளி அளகத்தின் மேலாய்ந்து—தெள்ளி
இதனால் கடியொடுங்கா ஈர்ங்கடா யானை
உதனால் கடிந்தான் உளன்." (திணை, நூற். 2)

இதனுள் அளகத்தின் மேலாய்ந்தெனவே பூத்தந்தமை கூறினாள்.

"பிறிதொன்று இன்மை அறியக் கூறிக்
கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வ நோக்கிக்
கடுஞ்சூள் தருகுவல் நினக்கே." (அகம். 110)

இது தலைப்பாடு.

"நேரிறை முன்கை பற்றி நுமர்தர
நாடறி நன்மணம் அயர்கம் சின்னாள்
கலங்கல் ஓம்புமின் இலங்கிழை யீரென
ஈர நன்மொழி தீரக் கூறித்
துணைபுணர் ஏற்றின் எம்மொடு வந்து
துஞ்சா முழவின் மூதூர் வாயில்
உண்டுறை நிறுத்துப் பெயர்ந்தனன் அதற்கொண்டு
அன்றை அன்ன விருப்போடு என்றும்
இரவரன் மாலையன் மேவரு தோறும்
காவலர் கடுகினும் கதநாய் குரைப்பினும்
நீதுயில் எழினும் நிலவுவெளிப் படினும்
வேய்புரை மென்தோள் இன்றுயில் என்றும்
பெறாஅன் பெயரினும் முனிய லுறாஅன்
இளமையின் இகந்தன்றும் இலனே."
(குறிஞ்சிப் பாட்டு, 231-244

எனவும்,

"வளமையில் தன்நிலை திரிந்தன்றும் இலனே."
(குறிஞ்சிப் பாட்டு, 245)

எனவும்,

"கன்மழை பொழிந்த அகன்கண் அருவி
ஆடுகழை அடுக்கத்து இழிதரு நாடன்
பெருவரை அன்ன திருவிறல் வியன்மார்பு

முயங்காது கழிந்த நாளிவண்
மயங்கிதழ் மழைக்கண் கலுழும் அன்னாய்.''
(ஐங்குறு. 220)

என வருவன உண்மை செப்பல்.

''காமர் கடும்புனல்'' (கலி. 39) என்பதனுள் இரண்டு வந்தன. பிறவுமன்ன.

(வி - ரை) எளித்தல் முதலிய எழுவகையினையும் விளக்குங் கால், ஏதீடு தலைப்பாடு என்பதனை ஒன்றாக்கிக் கூறுவர் இளம் பூரணர். நச்சினார்க்கினியர், கூறுதல் உசாதல் என ஒன்றாகக் கூறியதனை இளம்பூரணர் இரண்டாகப் பிரித்து உரைப்பர். எளித்தல், ஏத்தல், கூறுதல், உசாதல் என்பவற்றிற்கு இளம்பூரணர் தரும் விளக்கம் அறியத்தக்கது. எளித்தல் - தலைவன் நம்மாட்டு எளியனென்று கூறுதல்: அதனது பயம் மகளுடைத்தாயர் தம்வழி ஒழுகுவார்க்கு மகட்கொடை வேண்டுவராதலான், எளியனென்பது கூறி அறத்தொடு நிற்கப்பெறும். ஏத்தல் - தலைவனை உயர்த்துக் கூறுதல். அது மகளுடைத்தாயர் 'தலைவன் உயர்ந்தான்' என்ற வழி மனமகிழ்வராகலின், அவ்வாறு கூறப்பட்டது என்பது. கூறுதலாவது - தலைவியைத் தலைவற்குக் கொடுக்க வேண்டு மென்பது கூறுதல். உசாவுதல் - வெறியாட்டும் கழங்கும் இட்டு உரைத்துழி வேலனோடாதல் பிறரோடாதல் தோழி உசாவுதல். ஏதீடு தலைப்பாடு - யாதானும் ஓர் ஏதுவை இடையிட்டுக் கொண்டு தலைப்பட்டமை கூறுதல்.

எல்லும் எல்லின்று - பகலும் ஒளியிழந்தது. அசைவு - தளர்ச்சி.

படுசுடர் - ஞாயிறு மறையும் பொழுது.

பூண் ஆகம் - அணி அணிந்த இவள் (தலைவி) மார்பு.

முதுவாய் - அறிவு வாய்ந்த, சில் அவிழ் - சில சோற்றை யுடைய, மடை - பலி, மறி - ஆட்டுக்குட்டி.

வாடாத - குறைவுபடுதலில்லாத, கோடாது - மாறுபடாது. முந்நீர் பொழில் - கடல் சூழ்ந்த இவ்வுலகம்.

திளையாக் கண்ண - இமையாக் கண்கள், அவ்வாங்கு உந்தி - அழகிய வளைந்த கொப்பூழ், இறந்த கெடுதியும் - இவ்விடத்தே வந்த மான் யானை முதலிய பொருள்களை இழந்து நிற்கின்றேன்.

துணை அறைமாலை - ஒப்புச் சொல்லுதற்கரிய மாலை, உரவுத்திரை - அச்சம் பொருந்திய அலை, சோபாலிகை - அடம்பு, செயலை - அசோகு, இதனால் - பரனால், உதனால் - மொட்டம்பினால்.

பிறிதொன்று இன்மை - தலைவியின் வேறுபாட்டிற்குப் பிறிதொரு காரணமின்மையை, கடுஞ்சூள் - கடிய உறுதிமொழி, இரவரல் மாலையன் - இரவுக்குறியில் வரும் இயல்பினன், இகந்தன்றுமிலன் - கடத்தலுமிலன், வளமையில் - செல்வச் செருக்கால், தன்னிலை - தன்தகுதி.

ஆடுகழை - அசைகின்ற மூங்கில்.

இரண்டு - ஏதீடும் உண்மை செப்பலும். (13)

## தோழி அறத்தொடு நிற்குமாறு

208. உற்றுழி அல்லது சொல்லல் இன்மையின்
அப்பொருள் வேட்கைக் 1கிழவியின் உணர்ப.

இது, மேலதற்கோர் புறனடை.

(இ - ள்.) உற்றுழி அல்லது சொல்லல் இன்மையின் - தலைவியர்க்கு ஏதமுற்ற இடத்தன்றித் தோழி அவ்வாறு மறை புலப்படுத்துக் கூறுளாதலின்; அப்பொருள் வேட்கைக்கிழவியின் உணர்ப - அம்மறை புலப்படுத்துதல் விருப்பத்தைத் தலைவியர் காரணத்தால் தோழியர் உணர்வர் (எ - று).

'உணர்வ'ரென்று உயர்திணைப் பன்மையாற் கூறவே தலைவியருந் தோழியரும் பலரென்றார். 'கிழவி' யென்றாரேனும் "ஒருபாற் கிளவி" (தொல். பொ. 222) யென்பதனாற் பன்மையாகக் கொள்க. உயிரினுஞ் சிறந்த நாணுடையாள் (113) இது புலப்படுத்தற்கு உடப்படுதலின் வழுவாயமைந்தது.

"மற்று
இன்னுயிர் கழிவ தாயினும் நின்மகள்
ஆய்மலர் உண்கண் பசலை
காம நோய்எனச் செப்பா தீமே." (அகம். 52)

என்றாற்போல்வனவே இலக்கணமென்பது மேலிற்சூத்திரத்தாற் கூறுப.

---

1. கிளவியின் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

(வி - ரை) நச்சினார்க்கினியர் இந்நூற்பாவிற்குக் கூறும் உரை 206வது நூற்பாவிலேயே பெறப்படும். ஆதலின் இந்நூற் பாவிற்கு இளம்பூரணர் கூறும் உரையே பொருத்தமுடைத்தாம். காமம் மிக்க வழி யல்லது சொல் நிகழ்ச்சியின்மையின் தலைமகள் தான் கருதிய பொருண்மேல் வேட்கையைத் தலைமகள் தன்னானே யறிவர் என உரை கண்டு இதனாற் சொல்லியது அறத்தொடு நிற்பதன் முன்னம் செவிலி குறிப்பினான் உணரும் என விளக்கமும் தருவர் அவர். (14)

## பெண்பாற் குரிய குணங்கள்

209. செறிவும் நிறைவுஞ் செம்மையுஞ் செப்பும்
அறிவும் அருமையும் பெண்பா லான.

இது, மறைபுலப்படாமல் ஒழுகுதல் இலக்கணமென்றற்கும் மறைபுலப்படுத்துதல் வழுவென்றற்குங் கூறுகின்றது.

(இ - ள்.) செறிவும் - அடக்கமும்; நிறைவும் - மறைபுலப் படாமல் நிறுத்தும் உள்ளமும்; செம்மையும் - மனக்கோட்ட மின்மையும்; செப்பும் - களவின்கட் செய்யத் தகுவன கூறலும்; அறிவும் - நன்மைபயப்பனவுந் தீமை பயப்பனவும் அறிவித்தலும்; அருமையும் - உள்ளக்கருத்தறிதலருமையும்; பெண்பாலான - இவையெல்லாம் பெண்பாற்குக் காரணங்கள் (எ - று).

இவையுடையளெனவே மறைபுலப்படுத்தற்கு உரியளல்ல ளென்பதூஉம் அதனைப் புலப்படுத்தலின் முற்கூறியன வழுவமைத் தனவுமாயிற்று. இவை வருஞ்சூத்திரத்திற்கும் ஒத்தலிற் சிங்க நோக்கு.

(வி - ரை) இக்குணங்கள் தலைவியிடத்து நிலைபெற்றிருத்த லான் தலைவியின் களவினைச் சிறிது சிறிதாகவும் குறிப்பாகவும் வெளிப்படுத்த வேண்டும். இதைப் போன்றே அவளது வரைதல் வேட்கையையும் அவள் தன்னாலோ அன்றித் தோழியாலோ குறிப் பாகவே கூறப்பெறும். எனவே இந்நூற்பா முற்கூறிய அறத்தொடு நிற்றற்கும், பிற்கூற இருக்கும் வரைதல் வேட்கைக்கும் சிங்க நோக்காக வமைந்ததாம். சிங்க நோக்கு - சிங்கம் தான் செல்லு கின்றபொழுது முன்னும் பின்னும் பார்த்துச் செல்லும். அதைப்

போன்றே இந்நூற்பா அமைந்திருத்தலின் அந்நோக்காயிற்று. இளம்பூரணர் இதனைச் சொல்லியது மேற்சொல்லிய அறத்தொடு நிலைவகையும் இனிக்கூறுகின்ற வரைவு கடாதற் பகுதியும் உண்மை வகையானும் புனைந்துரை வகையானும் கூறுங்கால் இவை பேதையராகிய பெண்டிர்க்கு இயைபாமோ என ஐயுற்றார்க்குக் கூறப்பட்டது என இந்நூற்பாவின் பயன் கூறுவர். இது அத்துணைச் சிறப்பின்றும். (15)

வரைதல் வேட்கைப் பொருளன.

210. பொழுதும் ஆறுங் காப்புமென் றிவற்றின்
வழுவின் ஆகிய குற்றங் காட்டலும்
தன்னை யழிதலும் [1]அவணா றஞ்சலும்
இரவினும் பகலினும் [2]நீவரல் என்றலும்
கிழவோன் தன்னை வாரல் என்றலும்
நன்மையுந் தீமையும் பிறிதினைக் கூறலும்
புரைபட வந்த அன்னவை பிறவும்
வரைதல் வேட்கைப் பொருள என்ப.

இதுவும் தோழிக்குந் தலைவிக்கும் உரியனவாகிய வழுவமைக்கின்றது.

(இ - ள்.) பொழுதும் ஆறும் காப்பும் என்றிவற்றின் வழுவின் ஆகிய குற்றங் காட்டலும் - இராப்பொழுதும் அக்காலத்துவழியுங் கண்ணுறும் இடத்துள்ள காவலுமென்று கூறப்பட்டவை மூன்றினது பழையமுறையிற் பிறழுதலால் தலைவர்க்குளதாகிய குற்றத்தை யுணர்த்தலும்;

இவை தலைவர்க்கு அச்சம் உளவாகக் கருதுதலும் அவனால் நிகழும் இன்பத்தைத் துன்பமாகக் கருதுதலும் உடையனவாயிற் றேனும் அன்புபற்றிக் கூறலின் அமைந்தது. அப்பொழுதில் தலைவனது செலவுவரவு நிகழ்ந்துழியே இக்குற்றங் காட்டுவதென்று கொள்க.

---

1. அவணா, 2. நீவா எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

"மன்றுபாடு அவிந்து.........." (அகம். 128)

என்பது பொழுதுவழுவுதலிற் குற்றங்காட்டியது.

"ஈர்ந்தண் ஆடையை எல்லி மாலையை
சேர்ந்துவீழ் கதுப்பினுள் செய்குறி நீவரின்
ஒளிதிகழ் ஞெகிழியர் கவணையர் வில்லர்
களிறென ஆர்ப்பவர் ஏனல்கா வலரே." (கலி. 52)

இது, காப்பினுன் வழுவுணர்த்தியது.

தன்னை அழிதலும் - அவன் அக்காலத்து அவ்வழியில் தனியே வருதற்கு யான் ஏதுவாயினேன் எனத் தன்னை அழிவுபடுத் துரைத்தலும்:

"நீதவறு உடையையும் அல்லை நின்வயின்
ஆனு அரும்படர் செய்த
யானே தோழி தவறுடை யேனே." (அகம். 72)

அவன் வரவினை உவவாது துன்பங்கூர்தல் வழுவாயினும், அதுவும் அவன்கண் அன்பாதலின் அமைத்தார்.

அவன் ஊறு அஞ்சலும் - அவ்வழியிடத்துத் தலைவற்கு வரும் ஏதமஞ்சுதலும்:

"அஞ்சுவல் வாழி ஐய ஆரிருள்
கொங்கியர் ஈன்ற மைந்தின்
வெஞ்சின உழுவை திரிதரும் காடே."

இஃது, அவனைப் புலிநலியுமென்று அஞ்சியது.

"ஒருநாள் விழுமம் உறினும் வழிநாள்
வாழ்குவள் அல்லள்என் தோழி." (அகம். 18)

என்பதும் அது.

ஆறின்னுமையாவது விலங்குமுதலியவற்றான் வரவிற்கு இடையீடு நிகழுமென் றஞ்சுதல். இதனுல் எளித்தலின் வேருயிற்று. இது நன்கு மதியாமையின் வழுவாயினும் அன்புமிகுதியான் அமைத்தார்.

இரவினும் பகலினும் நீ வரல் என்றலும் - இராப்பொழுதின் கண்ணும் பகற்பொழுதின்கண்ணுந் தலைவனைக் குறியிடத்து வருக வெனத் தோழி கூறலும்:

"வல்வில் இளையரொடு எல்லிச் செல்லாது
சேர்ந்தனை செலினே சிதைகுவது உண்டோ
பெண்ணை ஓங்கிய வெண்மணல் படப்பை
அன்றில் அகவும் ஆங்கண்
சிறுகுரல் நெய்தல்எம் பெருங்கழி நாட்டே." (அகம். 120)

எனவும்,

"பூவேய் புன்னையந் தண்பொழில்
வாவே தெய்ய மணந்தனை செலற்கே." (அகம். 240)

எனவும் வரும்.

களவு அறிவுறுமென்று அஞ்சாது வருவவென்றலின் வழுவேனுந் தலைவி வருத்தம் பற்றிக் கூறலின் அமைத்தார்.

கிழவோன்றன்னை வாரல் என்றலும் - தோழியுந் தலைவியுந் தலைமை செய்துகொண்டு தலைவனை வாரற்க என்று கூறுதலும்:

தலைமை வழுவேனும் அன்பான் அமைத்தார்.

"இரவு வாரல் ஐய விரவுவீ
அகலறை வரிக்கும் சாரல்
பகலும் பெறுதிஇவள் தடமென்தோளே" (கலி. 49)

இஃது, இரவுவாரலென்றது.

"பகல்வரில் கவ்வை அஞ்சுதும்." (அகம். 118)

என்றது பகல்வாரலென்றது.

"நல்வரை நாட நீவரின்
மெல்லிய லோரும் தான்வா ழலளே." (அகம். 112)

இஃது, இரவும் பகலும் வாரலென்றது.

நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும் - பிறிதோர் பொருண்மேல் வைத்து நன்மையுந் தீமையுந் தலைவற்கேற்பக் கூறலும்:

"கழிபெரும் காதலர் ஆயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்" (அகம். 111)

எனப் பிறர்மேல் வைத்துத் தலைவனை அறிவுகொளுத்தினமையின் வழுவாயமைந்தது.

"பழியொடு வருஉம் இன்பம் வெஃகார்"

எனவே புகழொடு வருஉம் இன்பம் வெஃகுவரெனக் கொள்ள வைத்தலின் நன்மையுந் தீமையும் பிறிதின்மேல் வைத்துக் கூறிற்றும்.

புரைபட வந்த அன்னவை பிறவும் - வழுப்படவந்த இவை போல்வன பிறவும் :

அவை ஊடற்கணின்றியுந் தலைவனைக் கொடியனென்றலும் நொதுமலர் வரைகின்றாரென்றலும் அன்னை வெறியெடுக்கின்றா ளென்றலும் பிறவுமாம்.

"பகையில்நோய் செய்தான்" (கலி. 40)

என்பது ஊடற்கணின்றிக் கொடியனென்றது.

"திணையுண் கேழ லிரிய" என்னும் (119) நற்றிணையுள்,

"யாவது முயங்கல் பெறுகுவன் அல்லன்
புலவி கொளீஇயர்தன் மலையினும் பெரிதே."

இது, நொதுமலர் வரைவு சிறைப்புறமாகக் கூறியது.

"கடம்பும் களிறும் பாடித் தொடங்குபு
தோடும் தொடலையும் கைக்கொண் டல்கலும்
ஆடின ராதல் ஆக நன்றே." (அகம். 137)

என்பது தலைவர்க்கு வெறியாட்டுணர்த்தியது.

வரைதல் வேட்கைப் பொருள என்ப - தலைவன் வரைந்து கோடற்கண் நிகழும் விருப்பத்தைத் தமக்குப் பொருளாகவுடைய என்றவாறு.

என்றது, வழுப்படக் கூறினும் வரைவுகாரணத்தாற் கூறலின் அமைக்க வென்றவாறும்.

(வி – ரை) மன்று - அம்பலம், பாடவிந்து - ஒலி அடங்கி, இது, பொழுதும் ஆறும் வழுவியமைக்கு எடுத்துக்காட்டாம்.

ஈர்ந்தண் - ஈரமான ஆடை, எல்லி - அழகாகப் புனைந்த, ஞெகிழியர் - கையின்கண் கொள்ளியை உடையவர்.

ஆனு அரும்படர் - நீங்காத அரிய துன்பம்.

உழுவை - புலி.

விழுமம் - துன்பம்.

எளித்தல் முற்கூறிய அறத்தொடு நிலை எழுவகையுள் ஒன்று. ஆண்டுத் தலைவனை எளியனென்றது தலைமகள் தமர் மருது மணங் கோடற்காம். ஈண்டு விலங்கு முதலியவற்றுன் தலைவற்கு வரும் தீங்கிற்கு அஞ்சுதல், வரைவு கடாதற்கு உரிய குறிப்பேயன்றி அவன் வீரத்தில் ஐயம் உளதான குறிப்பன்றும்.

எல்லி - இரவு, சேர்ந்தனை செலினே - தங்கிச் சென்றால். பெண்ணை - பனைமரம், சிறுகுரல் - சிறிய பூங்கொத்து.

விரவுவீ - பலவகைப் பூக்கள், அகல்அறை - அகன்ற பாறை, வரிக்கும் - இருக்கும்.

கவ்வை - அலர்.

அறிவு கொளுத்தினமை - அறிவுறுத்தியமை.

பகையில் நோய் - மருந்தில்லாத நோய்.

கேழல் அகப்படுமாறு வைத்த பொறியுள்ளே புலிபடுமென்றது இத் தலைவன் ஏற்றுக் கொள்ள விரும்பியும் இவன் பாணித் தமையின் இவனினுஞ் சிறந்த தோன்றலொருவன் வரையக் கருதி வந்துளனென வேற்று வரைவு கூறியறிவுறுத்தியதாம் என வரும் நற்றிணையுரையால் நொதுமலர் வரைவு கூறியமை அறியலாம்.

கடம்பும் களிறும் பாடி - முருகனுக்குரிய கடம்பு மாலையும் அவனது ஊர்தியாகிய பிணிமுகம் என்னும் யானையையும் வாழ்த்தி, தோடு - பனந்தோடு.

இவையெல்லாந் தோழி கூற்றினுள் கூறப்பட்டன. ஆயின் ஈண்டோதியது என்னையெனின்; அவை வழுப் போலத் தோற்றும் என்பதனைக் கடைப்பிடித்து அன்பிற்கு மாறுகாது ஒரு பயன்பட

வந்ததென உணர்த்துதல்பயன் என்க. நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும் என்பது நாடும் ஊரும் இல்லுங் குடியும் என ஆண்டோதப்பட்டது. இவை வரைதல் வேட்கைப் பொருளவாமாறும் ஆண்டுக்காட்டப்பட்ட உதாரணத்தான் உணர்க என விளக்கம் தருவர் இளம்பூரணர். (16)

கைக்கிளை பெருந்திணைக்கு உரிய வழுவமைதி

211. வேட்கை மறுத்துக் கிளந்தாங் குரைத்தல்
மரீஇய மருங்கின் உரித்தென மொழிப.

இது, நடுவணைந்திணையல்லாத கைக்கிளை பெருந்திணைக்கட் படுவதோர் வழுவமைக்கின்றது.

(இ – ள்.) வேட்கை மறுத்து - தம் மனத்து வேட்கையை மாற்றி; ஆங்குக் கிளந்து உரைத்தல் - இருவரும் எதிர்ப்பட்ட விடத்துத் தாம் ஆற்றின தன்மையைப் புலப்படக்கூறி ஒருவர் ஒருவர்க்கு அறிவித்தல்; மரீஇய மருங்கின் உரித்தென மொழிப – புலனெறி வழக்கஞ்செய்து மருவிப்போந்த கைக்கிளை பெருந் திணைக்கண் உரித்தென்று கூறுவர் ஆசிரியர் (எ – று).

'கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்' (தொல். அகத். 1) என அவை இருமருங்கும் நிற்றலின் ஈண்டு மருங்கென்றார்.

''தமக்குஇனி தென்று வலிதில் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று.'' (கலி. 62)

இஃது, அடியோர் தலைவராயவழித் தலைவி வேட்கை மறுத் துணர்த்தியது.

''எறித்த படைபோன் முடங்கி மடங்கி
நெறித்துவிட் டன்ன நிறையேரால் என்னைப்
பொறுக்கல்லா நோய்செய்தாய் பொறீஇ நிறுக்கல்லேன்
நீநல்கின் உண்டென் உயிர்.'' (கலி. 94)

''உழுந்தினும் துவ்வாக் குறுவட்டா நின்னின்
இழிந்ததோ கூனின் பிறப்பு.'' (கலி. 94)

இவை, அடியோர் தலைவராக வேட்கை மறுத்துணர்த்தியது. பெருந்திணை.

ஏனை வினைவலபாங்கினோர்க்கு வந்துழிக் காண்க. இவை கைகோளிரண்டன்கண்ணும் வழங்குதல் சிறுபான்மையுரித்தென்று அகத்திணைக்கட் கூறலின் வழுவமைத்தார். 'ஒன்றெனமுடித்த' லான் மரீஇயவாறு ஏனையவற்றிற்குங் கொள்க.

> ''புள்ளிக் கள்வன் புனல்சேர் பொதுக்கம்போல்
> வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயிறு உற்றனவும்
> ஒள்ளிதழ் சோர்ந்தநின் கண்ணியும் நல்லார்
> சிரறுபு சீறச் சிவந்தநின் மார்பும்
> தவறுதல் சாலாவோ கூறு.'' (கலி. 88)

எனவும்,

> ''குதிரையோ வீறியது.'' (கலி. 96)

எனவும் வருவனவும் பிறவும் இழிந்தோர் கூற்றை உயர்ந்தோர் கூறுவன; அவையும் அமைத்துக் கொள்க.

(வி - ரை) மேலை நூற்பாவில் கூறிய வரைதல் வேட்கையைத் தலைவியும் தோழியும் மேற்கூறியவாறு குறிப்பாகத் தலைவனிடத்துக் கூறாது வெளிப்படையாகவே உள்ளவாறு கூறுதலும் பொருந்தும் என இந்நூற்பாவிற்கு உரை காண்பர் இளம்பூரணர். மரீஇய மருங்கு - மருவிய பக்கம்; களவொழுக்கம் நீட்டித்த இடம். எனவே களவு நீட்டித்த விடத்துத் தமக்குரிய வரைதல் வேட்கையை வெளிப்படையாகக் கூறுதலும் பொருந்தும் என்பது அவர்தம் கருத்தாகும். இவ்வியல் தொடக்கத்திலிருந்தே தொடர்ந்து ஐந்திணை பற்றிய வழுவமைதியே கூறிவருதலானும் இந் நூற்பாவை அடுத்து மேலும் அப்பொருண்மையையே தொடர்தலானும் இடையே இந்நூற்பாவில் கைக்கிளை பெருந்திணைக்குரிய வழுவமைத்தார் எனக் கூறும் நச்சினார்க்கினியர் உரையினும் இளம்பூரணர் உரையே சிறப்புடைத்தாம்.

இன்னா செய்வது - வலிதில் புணர முயல்வது.

எறித்த படை - கலப்பையில் தைத்த படைவாள், நெறித்து விட்டன்ன - முறித்து விட்டாற் போன்ற, நிறையோர் - நிறைந்த அழகு.

உழுந்தினும் துவ்வா - உழுந்தை விட உயராத. நச்சினார்க்கினியர் வேறாகக் கூறுவர்.

புள்ளிக் கள்வன் - புள்ளிகளையுடைய நண்டு, சேர்பு ஒழுக்கம் - (நண்டு) நடந்ததனாலாகிய சுவடு. (17)

களவொழுக்கத்திற்குரிய வழுவமைதி

212. தேரும் யானையும் குதிரையும் பிறவும்
ஊர்ந்தனர் இயங்கலும் உரியர் என்ப.

இது, களவொழுக்கத்துக்கு மறுதலையாயதோர் வழுவமைக்கின்றது.

(இ - ள்) தேர் முதலியவற்றையும் பிற ஊர்திகளையும் ஏறிச் சென்று கூடுதலையும் உரியர் தலைவரென்று கூறுவர் புலவர் (எ - று).

'பிற' வாவன கோவேறுகழுதையுஞ் சிவிகையும் முதலியனவாம். இது செல்வக் குறைபாடின்மை கூறுதலான் அமைந்தது.

"குறியின்றிப் பன்னாள்நின் கடுந்திண்தேர் வருபதம்கண்டு
எறிதிரை இமிழ்கானல் எதிர்கொண்டாள் என்பதோ
அறிவனர் உழந்தேங்கி ஆய்நலம் வறிதாகச்
செறிவளை தோளூர இவளைநீ துறந்ததை." (கலி. 127)

"நிலவுமணல் கொட்குமோர் தேருண்டு எனவே."
(அகம். 20)

எனவும்,

"கடுமான் பரிய கதழ்பரி கடைஇ
நடுநாள் வரூஉம்." (நற். 149)

எனவும்,

"கழிச்சுறா எறிந்த புண்தாள் அத்திரி
நெடுநீர் இருங்கழிப் பரிமெலிந் தசைஇ." (அகம். 120)

எனவும் வரும்.

ஏனைய வந்துழிக் காண்க.

உம்மையான், இளையரோடு வந்து தனித்துக் கூடுதலுங் கொள்க.

''வல்வில் இளையரோடு எல்லிச் செல்லாது
சேர்ந்தனை செலினே சிதைகுவது உண்டோ.''
(அகம். 120)

என்றாற்போல்வன கொள்க.

இதனானே உடன்போக்கிலும்,

''கடுங்கண் காளையொடு நெடுந்தேர் ஏறி
கோள்வல் வேங்கை மலைபிறக் கொழிய
வேறுபல் அருஞ்சுரம் இறந்தனள் அவளெனக்
கூறுமின் வாழியோ ஆறுசென் மாக்கள்
நற்றோள் நயந்துபா ராட்டி
எற்கெடுத் திருந்த அறனில் யாய்க்கே.'' (ஐங்குறு. 385)

எனத் தேர் முதலிய ஏறிப்போதலுங் கொள்க.

(வி - ரை) இவற்றுள் முன்னைய இரண்டு எடுத்துக்காட்டு களும் தேரில் வருதற்கும், மூன்றாவது குதிரையில் வருதற்கும், நான்காவது கோவேறு கழுதையில் வருதற்கும் உரியவாம். புண் தாள் அத்திரி - புண்பட்ட கால்களையுடைய கோவேறு கழுதை.

கோள்வல் வேங்கை - கொல்லுதலில் வல்ல புலி, பிறக்கு ஒழிய - பிற்பட, இறந்தனள் - கடந்தனள், எற்கெடுத்து - எனக்கு மணம் நேருதலை மறுத்து. இதனால் சொல்லியது பெரியார் இவ்வாறு செய்வார் எனவும் கூறியவாறும் எனக் கருத்துரை கூறுவர் இளம்பூரணர். (18)

சொல் வழுவமைதி

213. உண்டற் குரிய அல்லாப் பொருளை
உண்டன போலக் கூறலும் மரபே.

இது, சொல்வேறுபட்டுப் பொருளுணர்த்தும் வழுவமைக்கின்றது.

(இ - ள்.) உண்டற்கு உரிய அல்லாப்பொருளை - உண்டற் றொழிலை நிகழ்த்துதற்குரிய அல்லாத பொருளை; உண்டன போலக் கூறலும் மரபே - அத்தொழிலை நிகழ்த்தினவாகப் புலனெறி வழக்கஞ் செய்தலும் மரபு (எ - று).

அது,

''பசலையால் உணப்பட்டுப் பண்டைநீர் ஒழிந்தக்கால்'' (கலி. 15)
என வரும்.

இதன்கட் சொல்வழுவன்றிச் செய்யா மரபிற் ருெழிற்படுத்து அடக்கலும் அமைத்தார்.

இன்னும் உய்த்துக்கொண்டுணர்த (666) லென்பதனுன் உண்ணப்படுதற்குரிய அல்லாத பொருளதனைப் பிறர் உண்ணப் பட்டதுபோலக் கூறலும் மரபாமென்பது பொருளாகக் கொள்க. அவை,

''தோள்நலம் உண்டு துறக்கப் பட்டோர்
வேள்நீர் உண்ட குடையோர் அன்னர்;
நல்குநர் புரிந்து நலனுணப் பட்டோர்
அல்குநர் போகிய ஊரோர் அன்னர்;
கூடினர் புரிந்து குணனுணப் பட்டோர்
சூடினர் இட்ட பூவோர் அன்னர்.'' (கலி. 23)

என வரும். பிறவுங் கொள்க.

உம்மையாற் பிற தொழில்பற்றி வருவனவுங் கொள்க.

''கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவைஎன்னைத்
தின்னும் அவர்க்காண லுற்று.'' (குறள். 1244)

''புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு.'' (குறள். 1187)

''வருத்தின், வான்ருேய் வற்றே காமம்.''

என்ருற்போல்வனவுங் கொள்க.

(வி – ரை) உண்டல் என்பது உயிரினங்கள் பலவும் நிகழ்த்து தற்குரிய தொழிலாம். ஈண்டு அத்தொழிற்கு உரித்தல்லாத பசலை உண்டது என்றல் செய்யாதனவற்றைச் செய்ததாகக் கூறுவதாம். உயிரினங்கள் பலவும் உண்ணுதற்குரிய பொருள் ஒவ்வொன்றி ருப்பினும் தோள்நலம் என்பது உண்ணப்படுதற்குரிய பொருளன் ரும். அங்ஙனமாகவும் உண்ணப்படும் பொருள்போல் கூறுதல் வழுவமைதியாம்.

வேண்நீர் உண்ட குடையோரன்னர் - தண்ணீர் வேட்கை யாலே கோலித்தண்ணீர் குடிக்கப்பட்ட எச்சிலால் பயன்படாத குடையோலையை ஒப்பர். அல்குநர் போகிய - குடியிருப்பார் போகிய, ஊரோர் - பாழும் ஊரை.

தின்னல், அள்ளிக் கொள்ளுதல், ஏன்தோய்தல் ஆகியன முறையே கண், பசப்பு, காமம் ஆகியவற்றிற்குரிய தொழிலன்றும். அங்ஙனமாகவும் இங்ஙனம் கூறுதல் வழுவமைதியாம். (19)

தோழிக்கு உரியதோர் வழுவமைதி

214. [1]பொருளென மொழிதலும் வரைநிலை யின்றே
காப்புக் கைம்மிகுத லுண்மை யான.

இது, களவின்கண் தோழிக் குரியதோர் வழுவமைக்கின்றது.

(இ - ள்.) பொருள் எனமொழிதலும் வரைநிலை இன்றே - எமர் வரைவு நேராமைக்குக் காரணம் பொருள் வேண்டியெனத் தோழி கூறலும் நீக்குநிலைமையின்று; காப்புக் கைம்மிகுதல் உண்மையான - காவல் மிகுதியால் தலைவிக்கு வருத்தம் கை கடத்தல் உண்டாகையால் (எ - று).

உம்மையாற் பொருளேயன்றி ஊருங் காடும் மலையும் முதலியன வேண்டுவர் என்றலுங் கொள்க.

"சான்றோர் வருந்திய வருத்தமும் நுமது
வான்றோய் வன்ன குடிமையும் நோக்கித்
திருமணி வரன்றும் குன்றம் கொண்டிவள்
வருமுலை ஆகம் வழங்கின் நன்றே
அஃதான்று,
அடைபொருள் கருதுவிர் ஆயிற் குடையொடு
கழுமலம் தந்த நற்றேர்ச் செம்பியன்
பங்குனி விழவின் வஞ்சியோடு
உள்ளி விழவின் உறந்தையும் சிறிதே." (பக். 131)

இதனுட் பொருள் விரும்பியவாறுங் குன்றம் விரும்பியவாறுங் காண்க. அடைபொருள், இவள் நும்பால் அடைதற்குக் காரண மாகிய பொருளென்க.

(வி - ரை) வரன்றும் - தோன்றும். (20)

---

1. இதனையும் அடுத்த நூற்பாவையும் இணைத்து ஒரே நூற்பாவாகக் கொள்வர் இளம்பூரணர்.

மேலதற்கோர் புறனடை

215. அன்பே அறனே இன்பம் நாணொடு
துறந்த ஒழுக்கம் பழித்தன் றாகலின்
ஒன்றும் வேண்டா காப்பி னுள்ளே.

இது, தோழி பொருளென மொழிதற்குத் தலைவியும் உடன் பட்டு நிற்றற்குரிய ளென்றலின் மேலதற்கோர் புறனடை.

(இ – ள்.) காப்பினுள் - காவல் மிகுதியால் தலைவிக்கு வருத்தம் நிகழ்ந்தவிடத்து; அன்பே அறனே இன்பம் நாணொடு துறந்த ஒழுக்கம் - தலைவன்கண் நிகழும் அன்புங் குடிப்பிறந்தோர் ஒழுகும் அறனுந் தமக்கின்றியமையா இன்பமும் நாணும் அகன்ற ஒழுகலாறு; பழித்தன்று ஆகலின் ஒன்றும் - பழியுடைத்தன்று ஆகையினாலே புலனெறிவழக்கிற்குப் பொருந்தும்; வேண்டா - அவற்றை வழுவாமென்று களையல் வேண்டா (எ – று).

எனவே, பொருளென மொழிதல் தலைவிக்கும் உடன்பாடென்று அமைத்தாராயிற்று.

(வி – ரை) இதனையும் மேலை நூற்பாவையும் ஒரே நூற்பா வாகக் கொண்ட இளம்பூரணர் கூறும் உரை வேருகும். அது வருமாறு:- பொருள்வயிற் பிரிதல் வேண்டும் எனக் கூறுதலும் கடியப்படாது, தலைமகளைத் தமர் காக்குங்காவல் மிகுதியுள்ள வழி இவை நீங்கப்பெறும்.

இதனுற் சொல்லியது அன்பையும், அறத்தையும், இன்பத் தையும் நினைத்து வருந்தப்பெருன் எனவும், நாணத்தைக் கை விட்டுத் தமர் கொடுக்குமாறு முயல வேண்டும் என்பதூஉம் கூறிய வாரும். இவை ஒருவழித் தணத்தற்கண் நிகழ்வன. (21)

தோழிக்கும் தலைவிக்கும் உரியதோர் வழுவமைதி

216. சுரமென மொழிதலும் வரைநிலை யின்றே.

இது, தோழிக்குந் தலைவிக்கு முரியதோர் வழுவமைக் கின்றது.

(இ – ள்.) தலைவன் பிரியக் கருதியவழித் தோழியுந் தலைவியும் நீ போகின்றவிடம் எல்லாவற்ருனும் போதற்கரிய நிலமெனக் கூறி விலக்குதலும் நீக்குநிலைமையின்று (எ – று).

உ - ம்: "இடுமுள் நெடுவேலி போலக் கொலைவர்
கொடுமரம் தேய்த்தார் பதுக்கை நிரைத்த
கடுநவை ஆராற்று அறுசுனை முற்றி
உடங்குநீர் வேட்ட உடம்புயங் கியானை
கடுந்தாம் பதிபாங்குக் கைதெறப் பட்டு
வெறிநிரை வேருகச் சாரச் சாரலோடி
நெறிமயக்கு உற்ற நிரம்பாநீ டத்தம்
சிறுநனிநீ துஞ்சி ஏற்பினும் அஞ்சும்
நறுநுதல் நீத்துப் பொருள்வயிற் செல்வோய்
உரனுடை உள்ளத்தை (கலி. 12)

எனச் சுரமெனக் கூறினுள்.

தலைவியுந் தோழியாற் கூற்று நிகழ்த்தும்.

சூத்திரம் பொதுப்படக் கிடத்தலின் தலைவி உடன்போகக் கருதியவழித் தலைவனுஞ் சுரமெனக் கூறுதல் கொள்க.

"எல்வளை எம்மொடு நீவரின் யாழநின்
மெல்லியல் மேவந்த சீறடித் தாமரை
அல்லிசேர் ஆயிதழ் அரக்குத்தோய்ந்து அவைபோலக்
கல்லுறின் அவ்வடி கறுக்குந அல்லவோ" (கலி. 13)

என வரும்.

(வி - ரை) கொடுமரம் - வில், தேய்த்தார் - கொல்லப்பட்டவர், பதுக்கை - (கொல்லப்பட்டவரது உடல்களை மறைத்திருக்கும்) இலைக்குவியல், ஆர்ஆறு - நிறைந்தவழி, கடும்தாம் பதிபாங்கு - துதிக்கை வெம்மை மிகுந்த இடத்தில் பதியப் பெற்றதால் அவ் விடத்து, வெறிநிரை - ஒழுங்குபட்ட யானைத்திரள், நிரம்பா - தொலையாத, இவ்வாறு கூறியவள் தோழியாம்.

சூத்திரம் சுரமென மொழிதல் எனப் பொதுப்பட உள்ளதே யன்றி இன்னார் மொழிதல் என விதந்து கூறவில்லை. எனவே

தலைவன் சுரமெனக் கூறுதல் உண்டு எனக் கூறுகிறார் நச்சினார்க்கினியர். இது இளம்பூரணர் கருத்தாம். தலைமகன் பொருள்வயிற் பிரியும் வழி உடன்போக்குக் கருதிய தலைமகட்கு யான் போகின்ற நெறி கல்லுங் கரடுமாகிய சுரம் எனக்கூறுதலும் நீக்கப்படாது என்றவாறு. இதனாற் சொல்லியது காப்பு மிகுதிக்கண் வருத்த முறுந் தலைமகளை உடன்கொண்டு போதல் தக்கது என்பார்க்கு நெறியருமை கூறிவிலக்கவும் பெறும் என்பது அவர்தரும் விளக்கமாகும். (22)

### உலக வழக்குச் செய்யுள் வழக்காமாறு

217. [1]உயர்ந்தோர் கிளவியும் வழக்கொடு புணர்தலின்
வழக்குவழிப் படுத்தல் செய்யுட்குக் கடனே.

இது, முன்னர் உலகியல் வழக்கென்றது செய்யுட்காமென்று அமைக்கின்றது.

(இ - ள்,) உயர்ந்தோர் கிளவியும் வழக்கொடு புணர்தலின்- உயர்ந்த மக்கள் கூறுங்கூற்றும் வேதநெறியோடு கூறுதலின்; வழக்கு வழிப்படுத்தல் செய்யுட்குக் கடனே - அவ்வழக்கினது நெறியிலே நடத்தல் செய்யுட்கு முறைமை (எ – று).

'வழக்கெனப் படுவது' (தொல். பொ. 648) என்னும் மரபியற் சூத்திரத்தான் வழக்கு உயர்ந்தோர் கண்ணதாயிற்று. அவர் அகத்தியன் முதலியோரென்பது பாயிரத்துட் கூறினாம். அவை சான்றோர் செய்யுளுட் காண்க. இதனை மேலைச் சூத்திரத்திற்கும் எய்துவிக்க.

(வி – ரை) உயர்ந்தோர் - அறிவானும் சீலத்தானும் உயர்ந்தோர். அத்தகையாரின் கூற்றையே சான்றோர் செய்யுளாக்குவர் என்பது கருத்து. வழக்கு என்பதற்கு வேத நெறியோடு எனக் கூறல் வேண்டாதது ஒன்றாம். இதனானே மேலதிகாரத்திற் கூறிய சொல்லும் இவ்வதிகாரத்திற் கூறுதற்கியன்ற பொருளும் வழக்கொடு புணர்ந்தனவே செய்யுட்கண் வருவன; புணராதன செய்யுட்கண் வரப் பெரு என்றவாறாம். இன்னும் இந்நூலகத்து அகப்பொருளாகவும் புறப்பொருளாகவும் எடுத்தோதப்பட்டதன்றி உயர்ந்தோர் வழக்கொடு பொருந்தி வருவனவெல்லாம் செய்யுட்குப்

1. உயர்ந்தோர் கிளவி என்பது இளம்பூரணர் பாடம்.

பொருளாகப் புணர்க்க என எஞ்சிய துணர்த்தியவாறுமாம். உயர்ந்தோர் வழக்கென்றமையானும், அறமும் பொருளுமின்பமும் கெடாமல் மூன்றிலொன்று பயப்பக் கூறுதல் கொள்க என உரையும் விளக்கமும் காண்பர் இளம்பூரணர். (23)

### அகப்பொருட்கு உரியதோர் வழுவமைதி

218. அறக்கழிவு உடையன [1]பொருட்பயம் படவரின்
வழக்கென வழங்கலும் பழித்தன் றென்ப.

இஃது, உலகியல் வழக்கன்றிப் பொருள் கூறினும் அமைக வென்றது.

(இ - ள்.) அறக்கழிவு உடையன - உலகவழக்கத்திற்குப் பொருத்தமில்லாத கூற்றுக்கள்; பொருட்பயம் படவரின் - அகப் பொருட்குப் பயமுடைத்தாக வருமாயின்; வழக்கென வழங்கலும் - அவற்றை வழக்கென்றே புலனெறி வழக்கஞ் செய்தலும்; பழித் தன்று என்ப - பழியுடைத்தன்றென்று கூறுவாராசிரியர் (எ - று).

தலைவன் குறையுற்று நிற்கின்றவாற்றைத் தோழி தலைவிக்குக் கூறுங்கால் தன்னை அவன் நயந்தான்போலத் தலைவிக்குக் கூறுவனவும், "பொய்யாக வீழ்ந்தே னவன்மார்பின்" (கலி. 37) எனப் படைத்து மொழிவனவும், தலைவி 'காமக் கிழவ னுள்வழிப் படுதலும்' 'தாவி னன்மொழி கிளத்தலும்' (தொல். பொரு. 115) போல்வன பிறவும் அறக்கழிவுடையனவாம். தலைவி தனக்கு மறை புலப்படுத்தாது வருந்துகின்ற காலத்து அதனைத் தனக்குப் புலப் படுவித்துக்கொண்டே அவளை ஆற்றுவித்தற்பொருட்டு அறக்கழி வுடையன கூறலின் அவை பொருட்குப் பயன்தந்தனவாம்.

"நெருந லெல்லை யேனற் றோன்றி" (அகம். 32) என்பதனுட்,

"சிறுபுறம் கவையின னாக அதற்கொண்டு
இகுபெயன் மண்ணின் ஞெகிழ்பஞர் உற்றஎன்
உள்ளவன் அறிதல் அஞ்சி உள்ளில்
கடிய கூறிக் கைபிணி விடாஅ"

---

1. பொருட்பயன்வரினே என்பதூஉம் பழித்ததென்ப என்பதூஉம் இளம்பூரணரின் பாடங்களாம்.

எனத் தலைவன் தன்னை நயந்தானென இவள் கொண்டாள் கொல்லெனத் தலைவி கருதுமாற்றால் தோழி கூறவே தலைவி மறை புலப்படுத்துவளென்பது பயனாயிற்று.

"கயமலர்உண்கண்ணாய் அங்க ணுடைய னவன்" (கலி. 37) என்பதனுள் "மெய்யறியா தேன்போற் கிடந்தேன்" என்புழி முன்னர் மெய்யின் வழிநிலை பிழையாமனின்று பின்னர்ப் பொய்யாக வழிநிலை பிழைத்துக் கூறியது வழுவேனும் இவளுந் தலைவனும் இவ்வாறே செறிந்தமை யுணர்த்தலின் மறைபுலப்படுத்துங் கருத்தினளாந் தலைவியென்பது பயனாம்.

"மள்ளர் குழீஇய விழவினானும்" (குறுந். 31) "அருங்கடியன்னை" (நற்றிணை, 365) "பாம்பு மதனழியும் பானாள் கங்குலும், அரிய வல்லமன் இகுளை" (அகம். 8) என்பனவற்றுள் தலைவி தேடிச் சென்றதுஞ் செல்வாமென்றதுஞ் சிறைப்புறமாக வரைவுகடாயது. அறப்பயன் தருதலின் அறக்கழிவுடைய வேனும் அமைந்தன.

இது, 'பல்வேறு கவர்பொருள் நாட்டத்தான்' (தொல். பொரு. 114) அறக்கழிவுடையனவுங் கூறப்பெறுமென்றமைப்பது பெரும்பான்மை. இஃது அதிகாரத்தாற் றோழிக்குந் தலைவிக்குங் கொள்க.

(வி – ரை) சிறுபுறம் கவையினாக - முதுகை அகத்தொடு பொருந்தத் தழுவினாக, இகுபெயல் மண்ணின் - மழை பெய்தமையால் நெகிழ்ந்த மணலைப் போல, உள் - உள்ளம், உள்ளில் - மனத்தொடு படாத.

வழிநிலை - தோழி தலைவிக்குச் செய்யும் வழிபாட்டு நிலை.

இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் தரும் உரையும் விளக்கமும் வேறாம்: அது வருமாறு

அறத்திற் கழிவுடையன பொருட்குப் பயன்படவரின் அதனை வழக்கென்று வழங்குதலும் பழித்த தென்றவாறு.

பொருளாவது அகப்பொருளும் புறப் பொருளும். அறத்திற் கழிவு வரும் அகப் பொருளாவது பிறன் மனைக்கூட்டம்.

பொருட்பயன் வருதலாவது அவராலே பொருள் பெறுதல்: அவ்விடத்து இன்பமும் பொருளும் பயப்பினும் அதனை வழங்கு

தலும் பழிக்கப்பட்ட தென்றவாறு. உம்மை முற்றும்மையாகலான் வழக்கென்று உரையற்க என்றவாறு.

''எனைத் துணையராயினும் என்னாம் தினைத் துணையும்
தேரான் பிறனில் புகல்'' என வரும், (குறள். 144)

புறப் பொருட்கண் அறக்கழிவுடையன பகைவர் தேஎத்து நிரை கோடலும் அழித்தலும் போலப் பொருட்பயன் காரணத்தான் நட்டோர் தேஎத்துஞ் செயல். இவையும் பொருள்பயப்பினும் வழக்கென வழங்குதலாகா என்றவாறு. இதுவும் ஓர் முகத்தான் நீதி கூறியவாறு

''பழிமலைந் தெய்திய ஆக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை'' என வரும். (24)

மேலதற்கோர் புறனடை

219. மிக்க பொருளினுட் பொருள்வகை புணர்க்க
நாணுத்தலைப் பிரியா நல்வழிப் படுத்தே.

இது, மேல் அறக்கழிவுடைத்தாயினும் அது பொருட் பயம்படுமென்றார், அப்பொருளினை இது வென்றலின் மேலதற்கோர் புறனடை.

(இ - ள்.) மிக்க பொருளினுள் - முன்னர் அகப்பொருட்குப் பயம்படவரினென்று வழுவமைத்த பொருளின் கண்ணே; நாணுத்தலைப் பிரியா நல்வழிப் பொருள்வகை படுத்துப் புணர்க்க - தலைவியது நாண் அவளிடத்து நின்று நீங்காமைக்குக் காரணமாகிய நன்னெறியாகிய பொருட்கூறுபாடுகளை உள்ளடக்கிப் படுத்துக் கூறுக (எ - று).

''நெருநல் எல்லை'' (அகம். 32) என்பதனுள், நெருநல் யான் காக்கின்ற புனத்துவந்து ஒரு தலைவன் தன் பெருமைக்கேலாச் சிறுசொற் சொல்லித் தன்னை யான் வருத்தினேனாகக் கூறி என்னை முயங்கினான், யான் அதற்கு முன் னெகிழ்ந்த மனநெகிழ்ச்சி அவனறியாமல் மறைத்து வன்சொற்சொல்லி நீங்கினேன், அவ்வழி என் வன்கண்மையாற் பிறிதொன்று கூறவல்லனாயிற்றிலன், அவ்வாறு போனவன் இன்று நமக்குத் தோலாத் தன்மையின்மையினின்றும் இளிவந்தொழுகுவன், தனக்கே தந்தோள் உரிய

வாகலும் அறியானுய் என்னைப் பிறநிலைமுயலுங் கண்ணேட்டமு முடையவனை நின் ஆயமும்யானும் நீயுங் கண்டு நகுவோமாக, நீ அவன் வருமிடத்தே செல்வாயாக, எனக் கூறியவழி; எம் பெருமானை இவள் புறத்தாற்றிற் கொண்டாள் கொல்லோவெனவும், அவன் தனக்கு இனிய செய்தனவெல்லாம் என் பொருட்டென்று கொள்ளாது பிறழக்கொண்டாள் கொல்லோவெனவுந் தலைவி கருது மாற்ருனே கூறிஞளெனினும் அதனுள்ளே இவளெனக்குச் சிறந்தாளென்ப துணர்தலின் என் வருத்தந் தீர்க்கின்றிலை யென்ருன் எனவும், அதற்கு முகமஞக இவளைத் தழீஇக்கொண்ட தன்றி இவள் பிறழக்கொண்ட தன்மை அவன் கணுளதாயின் இவளைக் குறிப்பறியாது புல்லானெனவும், இவ்வொழுகலாறு சிறிதுணர்தலில் இக்குறைமுடித்தற்கு மனஞெகிழ்ந்தாளெனவும், அவனை என்னேடு கூட்டுதற்கு என்னை வேறுநிறுத்தித் தானும் ஆயமும் வேறுநின்று நகுவேமெனக் கூறிஞளெனவும், தலைவி நாண் நீங்காமைக்குக் காரணமாகிய பொருளை உள்ளடக்கிப் புணர்த்துக் கூறியவாறு காண்க. இதனுள் அறக்கழிவான பொருள் புலப்படவும், ஏனைப்பொருள் புலப்படாமலுங் கூருக்கால் தலைவியது மறையை வெளிப்படுத்திஞளாமாதலின் அதனை 'மிக்கபொரு' ளென்ருர். ஏனையவற்றிற்கும் உட்பொருள் புணர்த்தவாறுணர்ந்து பொருளுரைத்துக்கொள்க.

(வி – ரை) தோலாத் தன்மை - யாவர்க்கும் தோற்காத தன்மை. பிற நிலை முயலும் - பின்னின்று இரக்கும். புறத்தாற்றில்- புறவொழுக்கம் கொண்டவஞக.

அகப் பொருட்கண் நாண் நீங்காத நல்வழிக்கண் படுத்துப் பொருள்வகைப் புணர்க்க எனவே அறம் முதலாயின வழுவின்ருயினும் நாண் அழிய வரும் பொருண்மை புணர்த்தற்க என இந் நூற்பாவிற்கு விளக்கம் காண்பர் இளம்பூரணர். (25)

சொல் பற்றி வரும் வழுவமைதி

220. முறைப்பெயர் [1]மருங்கிற் கெழுதகைப் பொதுச்சொல்
நிலைக்குறி மரபின் இருவீற்றும் உரித்தே.

1. மருங்கினற் எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

இது, கிழவன் கிழத்தி பாங்கன் பாங்கியென்னு முறைப் பெயராகிய சொற்பற்றிப் பிறந்ததோர் வழுவமைக்கின்றது.

(இ – ள்.) முறைப்பெயர் மருங்கிற் கெழுதகைப் பொதுச் சொல் - முறைப்பெயரிடத்து இருபாற்கும் பொருந்தின தகுதியை யுடைய எல்லா வென்னுஞ் சொல்; நிலைக்கு உரி மரபின் இரு வீற்றும் உரித்தே - புலனெறிவழக்கிற்குரிய முறைமையினனே வழுவாகாது ஆண்பாற்கும் பெண்பாற்கும் ஒப்ப உரியதாய் வழங்கும் (எ - று).

'கெழுதகை' யென்றதனனே தலைவியுந் தோழியும் தலைவனைக் கூறியதே பெரும்பான்மையென்றுந் தலைவன் தலைவியையும் பாங்கனையும் கூறுதல் சிறுபான்மை வழுவமைதியென்றுங் கொள்க.

உ - ம்: ''அதிர்வில் படிறுஎருக்கி வந்தென் மகன்மேல்
முதிர்பூண் முலைபொருத ஏதிலாள் முச்சி
உதிர்துகள் உக்கநின் ஆடைஒலிப்ப
எதிர்வளி நின்றாய்நீ செல்;
இனி எல்லா'' (கலி. 81)

எனத் தலைவியைத் தலைவன் விளித்துக்கூறலின் வழூவாயமைந்தது.

''எல்லாநீ,
முன்னத்தான் ஒன்று குறித்தாய்போல் காட்டினை
நின்னின் விடாஅ நிழல்போல் திரிதருவாய்
என்நீ பெறாத தீதென்'' (கலி. 61)

எனத் தோழி தலைவனை விளித்துக்கூறலின் வழுவாய்மைந்தது.

''எல்லா இஃதொத்தன்'' (கலி. 61) என்பது பெண்பால் மேல் வந்தது. ஏனைய வந்துழிக் காண்க. பொதுச்சொல்லென்ற தனனே எல்லா எலா எல்ல எலுவ எனவுங் கொள்க.

''எலுவ சிறாஅர்'' (குறுந். 129) என வந்தது. ''யாரை யெலுவ யாமே'' (நற்றிணை, 395) எனத் தலைவனைத் தோழி கூறினள்.

எலுவியென்பது பாலுணர்த்தலின் ஆராயப்படா.

(வி – ரை) எலுவி என்னுஞ் சொல் வழக்கு உண்மை ஆராயத் தக்கது. கெழுதகைப் பொதுச் சொல்லாகிய எல்லா என்பது காமப் பொருளாகத் தோற்றுதலால் சொல்லதிகாரத்தில் ஓதாது ஈண்டு ஓதப்பட்டது என்பர் இளம்பூரணர். (26)

தலைவி உறுப்பைத் தோழி தன்னுறுப்பாகக் கருதல்

221. தாயத்தின் அடையா ஈயச் செல்லா
வினைவயின் தங்கா வீற்றுக் கொளப்படா
எம்மென வரூஉங் கிழமைத் தோற்றம்
[1]அல்லா வாயினும் புல்லுவ உளவே.

இது, தோழி தலைவியுறுப்பினைத் தன்னுறுப்பாகக் கூறப்பெறு மென வழுவமைக்கின்றது.

(இ - ள்.) தாயத்தின் அடையா-தந்தையுடைய பொருள் களாய் மக்களெய்துதற்குரிய பொருள்களிற் சேராதனவுமாய்; ஈயச் செல்லா - அறமும் புகழுங் கருதிக்கொடுப்பப் பிறர்பாற் செல்லா தனவுமாய்; வினைவயின் தங்கா - மைந்தரில்லாதார்க்கு மைந்தர் செய்வன செய்து பெறும் பொருளில் தங்காதனவுமாய்; வீற்றுக் கொளப்படா - வேறுபட்டானொருவன் வலிந்து கொள்ளப்படா தனவுமாய்; எம்மென வரூஉங் கிழமைத் தோற்றம் - எம்முடைய வென்று தோழி கூறப் புலனெறி வழக்கிற்குப் பொருந்திவரும் உரிமையையுடைய உறுப்புக்கள்; அல்லாவாயினும் புல்லுவ உளவே - வழுவாயினும் பொருந்துவனவுள (எ - று).

உறுப்புக் கட்புலனாதலின் தோற்றமென்றார். எனவே, உறுப் பொழிய இந்நான்கும் எம்மெனக் கூறலாகாவென்றார்.

"ஒருநாள்என், தோள்நெகிழ் புற்ற துயரால்
துணிதந்தோர்" (கலி. 37)

எனவும்,

"என்தோள் எழுதிய தொய்யிலும்" (கலி. 18)

எனவும் தலைவி தோளினை என்தோள் என்றாள்.

---

1. அல்ல வாயினும் எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

''தன்கால் அரியமை சிலம்பு கழீஇப் பன்மாண்
வரிப்புனை பந்தொடு வைகிய செல்வோள்
இவைகாண் தோறும் நோவா மாதோ.'' (நற். 12)

''நெய்தல் இதமுண்கண்,
நின்கண்ணாக என் கண் மன.'' (கலி. 39)

என்பனவும் இதன்கண்அடங்கும். 'உள'வென்றதனாற் சிறுபான்மை தலைவி கூறுவனவுங்கொள்க. அவை,

''என்னொடும் நின்னொடும் சூழாது'' (அகம். 128)

எனவும்,

''நின்கண்ணால் காண்பென்மன் யான்'' (கலி. 39)

எனவும் வரும்.

(வி - ரை) இவையிரண்டும் தோழி தலைவியின் கால் கண் ஆகிய உறுப்புக்களைத் தன்னுறுப்புகளாகக் கூறியமைக்கு எடுத்துக் காட்டாம்.

வினைவயின் தங்கலாவது உழவு முதலியவற்றான் வருதல் எனவும், வீற்றுக் கொளப் படுதலாவது பகையினால் வந்தது கோடல் எனவும் பொருள் காண்பர் இளம்பூரணர். இந்நான்கு வகையானல்லது ஒருவற்குப் பொருள் வருமாறில்லை யென்பது அறியத்தக்கது. ஒரு முகத்தான் பொருள் தேடுவார் திறன் கூறினருமாம் எள இளம்பூரணர் கூறுவதும் அறியத்தக்கது. (27)

பால் வழுவமைதி

222. ஒருபாற் கிளவி [1]யெனைப்பாற் கண்ணும்
வருவகை தானே வழக்கென மொழிப.

இஃது, 'ஒன்றே வேறே' (தொல். பொ. 93) என்னுஞ் சூத்திரத்து 'ஒத்த கிழவனும் கிழத்தியும்' என்ற ஒருமை பன்மைப் பாலாய் உணர்த்துகவென வழுவமைத்தது.

1. ஏனைப்பாற்கண்ணும் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

(இ - ள்.) ஒருபாற் கிளவி - 'ஒத்த கிழவனுங் கிழத்தியும்' என்றவழி ஆணொருமையும் பெண்ணொருமையும் உணர்த்தி நின்ற சொற்களை ஆசிரியரும் அவ்வாறு ஆண்டாரேனும் அவ்வொருமைச் சொற்கள்; எனைப்பாற்கண்ணும் வருவகை தானே - நால்வகைக் குலத்துத் தலைவரையுந் தலைவியரையும் உணர்த்தும் பன்மைச் சொற்கண்ணேநின்று பன்மைப் பொருள் உணர்த்திவருங் கூறுபாடுதானே; வழக்கென மொழிப - உலகவழக்கென்று சொல்லுவர் ஆசிரியர் (எ – று).

இதனாற் பயன் உலகத்து ஒருநர்க்கண்ணும் ஒரோவொரு குலத்தின்கண்ணுந் தலைவருந் தலைவியரும் பலரேனும் அவர்களை யெல்லாங் கூறுங்காற் கிழவனுங் கிழத்தியுமென்று ஒருமையாற் கூறுவதன்றி வேறோர் வழக்கின்றென்பதுபற்றி முதனூலாசிரியர் அங்ஙனஞ் சூத்திரஞ் செய்தலின், யானும் அவ்வாறே சூத்திரஞ் செய்தேனாயினும், அச்சொற் பலரையும் உணர்த்துமென வழு வமைத்தாராயிற்று. ஒருவனோடு பலர் கூட்டமுங் கோடற்கு எனைப் பாலென்று ஒருமையாற் கூறுது 'எனைப்பா' லெனப் பன்மையாற் கூறினார். இதனால் சொல்வழுவும் பொருள்வழுவும் அமைத்தார். 'ஒத்த கிழவனுங் கிழத்தியும்' (93) என்ற ஒருமையே கொள்ளின் அன்னாரிருவர் இவ்வுலகத்துள்ளாரன்றி வேறாக நாட்டிக்கொள்ளப் பட்டாரென்பதுபட்டு இஃது உலக வழக்கல்லாததோர் நூலுமாய் 'வழக்குஞ் செய்யுளும்' (தொல், பாயிரம்) என்பதனோடு மாறுகோடலேயன்றிப் 'பரத்தை வாயினால்வர்க்கு முரித்தே' (தொல். பொ. 224) என்றாற்போல்வன பிற சூத்திரங்களும் வேண்டாவாமென் றுணர்க.

(பி – ரை) இந் நூற்பாவிற்கு இளம்பூரணர் ஒரு பக்கத்துக் கூறிய பொருண்மை ஒழிந்த பக்கத்துக்கண்ணும் வருவகை தான் வழக்கு நெறி என உரை கண்டு மனையோள் மாட்டும், காமக் கிழத்தி மாட்டும் நிகழும் புணர்ச்சியும் பிரிவும் ஊடலும் பரத்தையர் மாட்டும் நிகழும் என விளக்கம் காண்பர். சேனாவரையர் ஒரு பாலுக்குக் கூறப்பட்ட பொருண்மை ஏனைப் பாற்கண்ணும் வரும் என உரை கண்டு நஞ்சுண்டான் சாம் என்ற வழி ஏனைய நாற் பாலுக்கும் அது பொருந்தும் என விளக்கம் காண்பர். (28)

இன்பம் என்பது

223. எல்லா வுயிர்க்கும் இன்ப மென்பது
தானமர்ந்து வரூஉம் மேவற் றாகும்.

இது, மேலதற்கோர் புறனடை.

(இ – ள்.) இன்பம் என்பது தான் - அறனும் பொருளும் ஒழிய இன்பமென்று கூறப்படுவதுதான்; எல்லா உயிர்க்கும் அமர்ந்து வரூஉம் - மக்களுந் தேவரும் நரகரும் மாவும் புள்ளும் முதலிய எல்லாவுயிர்களுக்கும் மனத்தின்கண்ணே பொருந்தித் தொழிற்பட வருமாயினும்; மேவற்றாகும் - ஆணும்பெண்ணுமென அடுக்கிக் கூறலுடைத்தாய் நுகர்ச்சி நிகழும் (எ – று).

'மேவற்றாகு' மென்றார்; என்பது ஆணும்பெண்ணுமாய்ப் போக நுகர்ந்து வருதலின் ஒருவனும் ஒருத்தியுமே இன்ப நுகர்ந்தா ரெனப்படாது அவ்வின்பம் எல்லாவுயிர்க்கும் பொதுவென்பதூஉம் அவை இருபாலாய்ப் புணர்ச்சி நிகழ்த்துமென்பதூஉங் கூறிய தாயிற்று. அறனும் பொருளும் எல்லா உயிர்க்கும் நிகழா, மக்கட்கே சிறந்துவருமென்றாராயிற்று.

(வி – ரை) எல்லா வுயிர்க்கும் இன்ப மென்பது தான் மனம் பொருந்திவரும் விருப்பத்தையுடைத்து என்றவாறு. எனவே மனம் பொருந்திய வழிப் பரத்தையர் மாட்டும் இன்பமுளதாகும் எனவும் பொருந்தாதவழி மனைவியர் மாட்டும் இன்பமின்றாம் எனவும் விளக்கம் காண்பர் இளம்பூரணர். (29)

ஊடலும் உணர்த்தலும்

224. பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே
நிலத்திரி பின்றஃ தென்மனார் புலவர்.

இது, தலைவர்க்குரிய தலைவியர் பலருந் தலைவன் பரத்தைமை காரணமாக ஊடற்குரியரென்பதூஉம் அவரிடத்து வாயில் சேறற் குரியரென்பதூஉங் கூறி வழுவமைக்கின்றது.

(இ – ள்.) பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்து - தலைவன் பரத்தைமையால் தலைவிக்குத் தோன்றிய ஊடல் தீர்த்தற்குரிய

வாயிலை அவர்பாற்செலுத்தல் நான்கு வருணத்தார்க்கும் உரித்து; அஃது நிலத்திரிபு இன்று என்மனர் புலவர் - அவ்வொழுக்கம் பெரும்பான்மை மருதநிலத்தினின்றுந் திரிந்துவருதல் இன்றென்று கூறுவர் புலவர் (எ - று).

'பரத்தைவாயி'லென்றது குதிரைத்தேர்போல நின்றது. இதனாற் பயன் அந்தணர்க்கு நால்வரும் அரசர்க்கு மூவரும் வணிகர்க்கு இருவருமாகிய தலைவியர் ஊடற்குரியரென்பதூஉம் அவர்பால் தத்தந் தலைவர் ஊடறீர்த்தற்குரிய வாயில் விடுவரென்பதூஉம், அவர் வாயின் மறுத்தலும் நேர்தலும் உடையரென்பதூஉம் ஏனைப் பரத்தையர்க்கு வாயில்விடுதல் இன்றென்பதூஉங் கூறிய வாறாயிற்று.

'ஒருபாற் கிளவி' (தொல். பொ. 222) என்பதனால் ஒரோவோர் குலத்துத் தலைவருந் தலைவியரும் அடங்குமாறுணர்க. உதாரணம் முற்காட்டியவற்றுட் காண்க.

ஒருவனும் ஒருத்தியுமாகி இன்பநுகர்ந்து இல்லற நிகழ்த்து தலே சிறந்ததென்றற்கு இங்ஙனம் பலராதல் வழுவென்று அதனை அமைத்தார்.

(வி - ரை) குதிரைத்தேர் - குதிரையால் இழுக்கப்படும்தேர். இங்கு உருபும் பொருளும் தொக்கது போலப் பரத்தை வாயில் என்றவிடத்தும் பரத்தமையால் தோன்றிய ஊடலைத் தீர்த்தற்குரிய வாயில் எனப் பொருள் பட்டு உருபும் பொருளும் தொக்கதாம். வருணம் குறித்து அவ்வருணத்தவருக்கு இத்துணைத் தலைவியர் உளர் என வரையறுத்திருப்பது வேண்டாத தொன்றும். நிலத்திரிபு என்பதற்கு மருத நிலத்தினின்றும் திரிந்து வருதல் இன்று எனப் பொருள் கூறுவதும் அத்துணைச் சிறப்பின்றும். இளம்பூரணர் இதற்குக் கூறும் உரை சிறப்புடைத்தாம். அது வருமாறு:-

பரத்தையர் மாட்டு வாயில் விடுதல் நான்கு வருணத்தார்க்கும் உரித்து; அவ்வழிப் பிரியும் பிரிவு நிலம் பெயர்தல் இல்லை என்ற வாறு.

எனவே, தன்னூரகத்துஞ் சார்ந்தவிடத்தும் கொள்க. நால் வர்க்கும் உரித்து என்றமையான் நான்கு வருணத்துப் பெண் பாலார்க்கும் அளவொடு ஊடப்பெறுப என்றவாறுமாம். (30)

தலைவியிடத்துக் களவின்கண் நிகழும் வழுவமைதி

225. ஒருதலை உரிமை வேண்டியும் மகடூஉப்
பிரித லச்சம் உண்மை யானும்
அம்பலும் அலருங் களவுவெளிப் படுக்குமென்று
அஞ்ச வந்த ஆங்கிரு வகையினும்
நோக்கொடு வந்த இடையூறு பொருளினும்
போக்கும் வரைவும் மனைவிகண் தோன்றும்.

இது, களவின்கண் தலைவியின்கண் நிகழ்வதோர் வழுவமைக் கின்றது.

(இ – ள்.) உரிமை ஒருதலை வேண்டியும் - இடைவிடாது இன்பநுகர்தலோடு இல்லறநிகழ்த்தும் உரிமையை உறுதியாகப் பெறுதலை விரும்புதலானும்; பிரிதல் அச்சம் மகடூஉ உண்மை யானும் - ஆள்வினைக்குறிப்புடைமையின் ஆண்மக்கள் பிரிவரென்று அஞ்சும் அச்சம் மகளிர்க்குண்டாகையினுலும்; ஆங்கு அம்பலும் அலரும் களவு வெளிப்படுக்கும் என்று அஞ்ச வந்த இருவகையினும். அக்களவொழுக்கத்திடத்தே அம்பலும் அலரும் இக்களவைப்புலப் படுக்குமென்று அஞ்சும்படி தோன்றிய இருவகைக் குறிப்பானும்; நோக்கொடு வந்த இடையூறு பொருளினும் - பிறர் தன்னை அயிர்த்துநோக்கும் நோக்கங் காரணமாக வந்த கூட்டம் இடை. யூறுற்ற காரியத்தினுலும்; மனைவிக்கண் போக்கும் வரைவும் தோன்றும் - தலைவியிடத்தே உடன்போக்கும் வரையக்கருதுதலு! ந் தோன்றும் (எ – று).

''வழையமலடுக்கத்து'' (அகம். 328) என்பதனுள் ''முகந்து கொண் டடக்குவம்'' என இடைவிடாது இன்பநுகர விரும்பிய வாறும் உள்ளுறையான் இல்லறம் நிகழ்த்த விரும்பியவாறுங் காண்க.

உன்னம் கொள்கையொடு உளம்கரந்து உறையும்
அன்னை சொல்லும் உய்கம் என்னதூஉம்
ஈரம் சேரா இயல்பின் பொய்மொழிச்
சேரியம் பெண்டிர் கௌவையும் ஒழிகம்
... ... ... ... ...
நம்மொடு ஒராங்குச் செலவமர்ந்தனரால் இன்றே.
(அகம். 65)

என்பது அம்பலும் அலரும் அஞ்சிப் போக்குடன்பட்டது.

"ஆறு தலைக்கும் அறனில் அன்னை
தானே இருக்க தன்மனை யானே." (குறுந். 262)

இஃது, இடையூறு பொருளின்கட் போக்குடன்பட்டது.

ஏனைய முன்னர்க் காட்டியவற்றுட் காண்க.

'ஒன்றித் தோன்றுந் தோழி மேன' (தொல். பொ, 39) என்பதனுல் தோழிக்கும் இவையுரியவென்று கொள்க.

உடன்போக்குக் கருதுதலுந் தலைவன் தான் வரையாமல் தலைவி விரும்புதலும் வழுவாய் அமைந்தன.

(வி – ரை) நோக்கொடு வந்த இடையூறு பொருளினும் - தலைமகன் வரவு பார்த்திருந்த வழி வந்த இடையூருகிய பொருளின் கண்ணும்; அவையாவன தாய் துஞ்சாமை, நிலவு வெளிப்படுதல் முதலியன என விளக்கம் காண்பர் இளம்பூரணர்.

இப்பாடற்கண் "சாயல் மார்பு......முகந்து கொண்டு அடக்கு வம்" என வரும் தொடர் உளது. அதற்கு இவ்வாறு உரை காணுகிருர். இப்பாடற்கண், மடப்பிடி, மழைதவல் சிலம்பில் கடுஞ்சூல் ஈன்று, கழைதின் யாக்கை விழைகளிறு தைவர, வாழையம் சிலம்பில் துஞ்சும், சாரல் நாடன் சாயன் மார்பே, என வரும் பகுதி உள்ளுறை பெறுவதற்குரிய பகுதியாகும்.

அம்பல் - சிலரறிந்தது; வாயை முகிழ்த்து உணர்த்துவது. அலர் - பலரறிந்தது; வாயைத் திறந்து வெளிப்படக் கூறுவது.

இதன்கண் அன்னை அலைத்தல் இடையூருயிற்று. (31)

தோழிக்கும் அறிவர்க்கும் உரியதோர் வழுவமைதி

226. வருத்த மிகுதி சுட்டுங் காலை
உரித்தென மொழிப வாழ்க்கையுள் இரக்கம்.

இது, கற்புக்காலத்துத் தோழிக்கும் அறிவர்க்கும் உரியதோர் வழுவமைக்கின்றது.

(இ - ள்.) வருத்தமிகுதி சுட்டுங்காலை - தோழியும் அறிவரும் பரத்தையிற் பிரிவால் தலைவர்க்குந் தலைவியர்க்குந் தோன்றிய வருத்தமிகுதியைத் தீர்க்கக் கருதிக் கூற்று நிகழ்த்துங் காலத்து; வாழ்க்கையுள் இரக்கம் உரித்தென மொழிப - அவரது இல் வாழ்க்கை நிகழ்ச்சிக்கண்ணே தமக்கு வருத்தந்தோன் றிற்றாகக் கூறுதலும் உரித்தென்று கூறுவராசிரியர் (எ - று).

"நீர்நீ டாடில் கண்ணும் சிவக்கும்
ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும்
தணந்தனை ஆயினெம் இல்லுய்த்துக் கொடுமோ
அந்தண் பொய்கை எந்தை எம்மூர்க்
கடும்பாம்பு வழங்கும் தெருவில்
நடுங்களுர் எவ்வம் களைந்த எம்மே." (குறுந். 354)

இதனுள் 'இல்லறத்தினை நீ துறந்தாயாயின் எம்மை எம்மூர்க் கண்ணே விடுக'வெனத் தனக்கு வருத்தந்தோன்றிற்றாகத் தோழி கூறியவாறு காண்க.

"உடுத்தும் தொடுத்தும் பூண்டும் செரீஇயும்
தழையணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி
விழவொடு நின்றாய் நீயே இஃதோ
ஓரா வல்சிச் சீரில் வாழ்க்கைப்
பெருநலக் குறுமகள் வந்தென
இனிவிழ வாயிற்று என்னும்இவ் வூரே." (குறுந். 295)

இதனுள் ஓரா"வல்சி"யொடு முன்னர் நிகழ்த்திய வாழ்க்கை இவள் வந்தாளாகப் புறத்து விளையாடும் விழவுளதாயிற்றென்று இவ்வூர் கூறுநிற்குஞ் செல்வம் இவளை நெகிழ்ந்தாற் பழைய தன்மையாமென்று அறிவர் இரங்கிக் கூறியவாறு காண்க.

"துறைமீன் வழங்கும்" (அகம். 316) என்பதனுள்,

"அதுபுலந்து உறைதல் வல்லி யோரே"

எனப் புலவியால் நின் இல்வாழ்க்கை குறைபடுமெனத் தோழி கூறியவாறு காண்க.

இன்னும் உய்த்துக்கொண்டுணர்தலென்பதனுல் ஏனைப் பிரிவால் நிகழும் வருத்தமிகுதியைக் குறித்தவிடத்து உயிர் வாழ்க்கையின் இரக்கமுரித்தென மொழிப என்றும் பொருள் கூறிச்,

"செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை." (குறள். 1151)

எனவும்,

"அன்பு அற மாறியாம் உள்ளத் துறந்தவள்
பண்பும் அறிதிரோ என்று வருவாரை
என்திறம் யாதும் வினவல் வினவில்
பகலின் விளங்குநின் செம்மல் சிதையத்
தவலரும் செய்வினை முற்றுமல் ஆண்டோர்
அவலம் படுதலும் உண்டு" (கலி. 19)

எனவும் வருவன பிறவும் கொள்க.

(வி - ரை) ஆர்ந்தோர் - பல முறையும் உண்டவர். இல் உய்த்துக் கொடுமோ - வீட்டிற்கு அழைத்துச்சென்று விடுவாயாக.

ஆயமொடு - பரத்தையர் கூட்டமொடு. ஓர் ஆன் வல்சி - ஒரு பசுவினுல் உளதாய வருவாயால். புறத்து விளையாடும் - பரத்தையரொடு கூடி விளையாடும். உய்த்துக்கொண்டு உணர்தலாகக் கூறப்படும் உரையும் எடுத்துக்காட்டுகளும் இளம்பூரணருடையவாம்.

பகலின் விளங்கும் நின் செம்மை - ஞாயிறு போன்று விளக்கம் அமைந்த நின் தலைமை. (32)

கற்பினுள் தலைவற்கும் தலைவிக்கும் உரியதோர் வழுவமைதி

227. மனைவி உயர்வுங் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியு ளுரிய.

இது, கற்பினுள் தலைவற்குந் தலைவிக்கும் எய்தியதோர் வழு வமைக்கின்றது.

(இ - ள்) புலவியுள் மனைவி உயர்வும் - புலவிக் காலத்துத் தலைவன் பணிந்துழி உட்கும் நாணுமின்றித் தலைவி அதனை ஏற்றுக்கோடலும்; கிழவோன் பணிவும் - தலைவன் தலைமைக்கு மாறாகத் தலைவியைப் பணிதலும்; நினையுங்காலை உரிய - ஆராயுங் காலை இருவர்க்குமுரிய (எ – று).

உ - ம்: ''வலையுறு மயிலின் வருந்தினை பெரிதுஎனத்
தலையுற முன்னடிப் பணிவான் போலவும்
கோதை கோலா இறைஞ்சி நின்ற
ஊதையம் சேர்ப்பனை அலைப்பேன் போலவும்.''
(கலி. 128)

இது, முன்னே தலைவி மனத்து நிகழ்தலுண்மையிற் கனவிலுங் கண்டாளென்றுணர்க.

''தப்பினேன் என்றடி சேர்தலும் உண்டு'' (கலி. 89)

என்பதும் அது.

'நினையுங்காலை' யென்றதனால் தோழியுயர்வுங் கிழவோன் பணிமொழி பயிற்றலுங் கொள்க.

''ஒன்று, இரப்பான்போல் இளிவந்தும் சொல்லும் உலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையும் உடையன்
வல்லாரை வழிபட்டு ஒன்றறிந் தான்போல்
நல்லார்கண் தோன்றும் அடக்கமும் உடையன்
இல்லோர் புன்கண் ஈகையில் தணிக்க
வல்லான் போல்வதோர் வண்மையும் உடையன்
அன்னான் ஒருவன்தன் ஆண்டகை விட்டுஎன்னைச்
சொல்லும்சொல் கேட்டீ சுடரிழாய் பன்மாணும்.''
(கலி. 47)

இதனுள் தலைவன் இரந்துரைத்தவாறுந் தான் அதனை ஏற்றுக் கொண்டவாறுங் காண்க.

இச்சூத்திரம் புலவிக்கே கூறினர். ஊடற்குந் துனிக்குங் 'காமக்கடப்பின்' (தொல். பொ. 160) என்பதனுட் கூறினரென வுணர்க.

(வி - ரை) ஊதையம் சேர்பன் — குளிர்காற்று உடைய அழகிய நெய்தல் நிலத்தலைவன்.

மதுகை - வலிமை. புன்கண் - வறுமை.

இஃது ஈண்டுக்கூறியதென்னை? காமக்கடப்பினுட் பணிந்த கிளவி (கற்பியல் 19)யென மேற்கூறப்பட்டதாலெனின், ஆண்டுக் கூறியது ஊடல் புலவிதுனியென மூன்றிற்கும் பொதுப்பட நிற்றலின், இது புலவிக்கே உரித்தென்னுஞ் சிறப்பு நோக்கிக் கூறியவாறு என வேறுபாடு காண்பர் இளம்பூரணர். (33)

கற்பினுள் தலைவனும் தலைவியும் புகழ்தல்

228. நிகழ்தகை மருங்கின் வேட்கை மிகுதியிற்
புகழ்தகை வரையார் கற்பி னுள்ளே.

இது, கற்புக்காலத்துத் தலைவற்குந் தலைவிக்கும் உரியதோர் வழுவமைக்கின்றது.

(இ - ள்.) கற்பினுள் - கற்புக்காலத்து; தகைநிகழ் மருங்கின்- ஒருவர்க்கொருவர் மனத்து நிகழுமிடத்து; வேட்கை மிகுதியிற் புகழ் தகை வரையார் - வேட்கைமிகுதியாலே அதனைப் புகழ்ந் துரைக்குந் தகைமையினை ஆசிரியர் இருவருக்கும் நீக்கார் கொள்வர் (எ - று).

"ஆக வனமுலை அரும்பிய சுணங்கின்
மாசில் கற்பின் புதல்வன் தாய்என
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றி." (அகம் 6)

இது, புலவிக்கண் தலைவன் புகழ்ந்தது.

"அணைமருள் இன்துயில் அம்பணைத் தடமென்றோள்
துணைமலர் எழில்நீலத்து ஏந்தெழின் மலருண்கண்
மணமௌவல் முகையன்ன மாவீழ் வான் நிரைவெண்பல்

மணநாறும் நறுநுதன் மாரிவீழ் இருங்கூந்தல்
அலர்முலை ஆகத்து அகன்ற அல்குல்
சிலநிரை வால்வளைச் செய்யா யோஎனப்
பலபல கட்டுரை பண்டையிற் பாராட்டி
இனிய சொல்லி இன்னுங்குப் பெயர்ப்பது
இனியறிந் தேன்அது துனியா குதலே.'' (கலி. 14)

இது போக்கின்கண் தலைவன் புகழ்ந்தது.

''அரிபெய் சிலம்பின்.'' (அகம். 6)

என்பதனுள் ''ஏந்தெழின் ஆகத்துப் பூந்தார் குழைய'' என்பது தலைவி புலவிக்கட் புகழ்ந்தது.

''நிரைதார் மார்பன் நெருநல் ஒருத்தியொடு'' (அகம். 66)

என்பதும் அது.

'தகை' எனப் பொதுவாகக் கூறலிற் குணத்தைக் கூறலுங் கொள்க.

''நாலாறுமாறாய்'' (நாலடி. 383) எனவும்,

''நின்ற சொல்லர் நீடுதோன் றினியர்'' (நற். 1)

எனவும் வரும்.

குற்றேவனிலையளாகிய தலைவியைத் தலைவன் புகழ்தலாலும் பெருநாணினளாகிய தலைவி கணவனைப் பிறரெதிர் புகழ்தலானும் வழுவாயிற்று.

(வி – ரை) மாயப்பொய்மொழி - வஞ்சனையுடைய பொய்மை யானமொழி. சாயினைப்பயிற்றி - ஒரு பக்கமாகப் பாராட்டி.

மௌவல் - முல்லை, மாவீழ்வான் - வண்டுகள் விரும்புதற்கு ஏதுவாகிய, மாரிவீழ் - மேகம் விரும்புகின்ற, துனி - வெறுப்பு.

இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் களவுக்காலத்து நலம் பாராட்டிய தலைமகன் கற்புக்காலத்தும் தலைவியின் எழில் நலத்தைப் பாராட்டுவன் என உரை காண்பர். தகை - அழகு என்பர் அவர். (34)

### இறைச்சியின் இலக்கணம்

229. [1]இறைச்சி தானே பொருட்புறத் ததுவே.

இது, தலைவிக்குந் தோழிக்கு முரியதோர் வழுவமைக்கின்றது. இறைச்சியாவது உள்ள பொருள் ஒன்றனுள்ளே கொள்வதோர் பொருளாகலானும் செவ்வன் கூறப்படாமையானும் தலைவன் கொடுமை கூறும்வழிப் பெரும்பான்மை பிறத்தலானும் வழுவாயிற்று.

(இ – ள்.) இறைச்சிதானே - கருப்பொருட்கு நேயந்தான்; பொருட் புறத்ததுவே - கூறவேண்டுவதோர் பொருளின் புறத்தே புலப்பட்டு அதற்கு உபகாரப்படும் பொருட்டன்மையுடையதாம் (எ – று).

"இலங்கு மருவித்தே இலங்கு மருவித்தே
வானின் இலங்கு மருவித்தே தானுற்ற
சூள் பேணான் பொய்த்தான் மலை." (கலி. 41)

சூளைப் பொய்த்தானென்பதே கூறவேண்டும் பொருள். அதன் புறத்தே இங்ஙனம் பொய்த்தான்மலையகத்து நீர்திகழ்வானென்னென இறைச்சிப்பொருள் தோன்றியவாறு காண்க. பிறவுமன்ன.

(வி – ரை) நேயம் - விளங்கச் சொல்லுதற்குரிய சொற்களால் கூறாமை. குறித்தோன் கூற்றம் தெரித்து மொழிக்கிளவி என்னும் நூற்பாவில் சேனாவரையரும் தெரித்து மொழியாமையை வட நூலார் நேயம் என்ப எனக்கூறுவர்.

சூள் - நின்னில் பிரியேன் பிரியின் தரியேன் எனத்தலைவன் கூறிய உறுதிமொழி. இளம்பூரணர் தாம்கொண்ட பாடத்திற் கேற்ப இறைச்சிப் பொருளென்பது உரிப்பொருளின் புறத்தாகித் தோன்றும் பொருள் எனப் பொருள் கூறி அஃதாவது கருப் பொருளாகிய நாட்டிற்கும் ஊர்க்கும் துறைக்கும் அடையாகி வருவது என விளக்கங் காண்பர். (35)

---

1. இறைச்சிதானே உரிப்புறத்ததுவே எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

இதுவும் அது

230. இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே
திறத்தியல் மருங்கில் தெரியு மோர்க்கே.

இஃது, எய்தியது இகந்துபடாமற் காத்தது.

(இ – ள்.) இறைச்சியிற் பிறக்கும் பொருளுமார் உளவே - கருப்பொருள் பிறிதோர் பொருட்கு உபகாரப்படும் பொருட்டாதலே யன்றி அக்கருப்பொருள்தன்னுள்ளே தோன்றும் பொருளும் உள: திறத்து இயல் மருங்கில் - அஃது உள்ளுறையுவமத்தின் கூற்றிலே அடங்குமாறுபோல நடக்குமிடத்து; தெரியுமோர்க்கு - அவ் வுள்ளுறையுவமமன்று இஃது இறைச்சி யென்று ஆராய்த்துணரும் நல்லறிவுடையோர்க்கு (எ - று).

''கன்றுதன் பயமுலை மாந்த முன்றில்
தினைபிடி உண்ணும் பெருங்கல் நாட
கெட்டிடத் துவந்த உதவி கட்டில்
வீறுபெற்று மறந்த மன்னன் போல
நன்றி மறந்தமையா யாயின் மென்சீர்க்
கலிமயிற் கலாவத் தன்னஇவள்
ஒலிமென் கூந்தல் உரியவாம் நினக்கே.''

(குறுந். 225)

இதனுள் ''தான் கெட்டவிடத்து உதவின உதவியை அரச வுரிமையெய்திய மன்னன் மறந்தாற்போல நீ இரந்து துயருற்ற காலத்து யான் தலைவியை நின்னோடு கூட்டிய செய்ந்நன்றியை மறவாது இன்று நீ வரைந்துகொள்வையாயின் இவள் கூந்தல் நினக்குரிய'' வென்றவழி உவமையும் பொருளும் ஒத்து முடிந்த மையின் முன்னின்ற நாடவென்பது உள்ளுறையுவமமன்றாய் இறைச்சியாம். என்னை? தன் கன்றிற்குப் பயன்பட்டுப் பிறர்க்கு உயிரைக்கொடுக்கின்ற தினையைத் தான் உண்டு அழிவுசெய் கின்றாற்போல, நீநின் கருமஞ் சிதையாமற் பார்த்து எமக்குயிராகிய இவளைத் துயருறுத்தி எம்மை இறந்துபடுவித்தல் ஆகாதென்று உவமையெய்திற்றேனும், பின்னர் நின்ற பொருளோடியையாது இவ்வுவமம் உள்ளுறையுற்றுப் பொருள்பயவாது இறைச்சியாகிய

நாடனென்பதனுள்ளே வேறோர் பொருள் தோற்றுவித்து நின்றதே யாமாதலின். முலைமாந்த என்றது தன் கருமஞ் சிதையாமற் பார்த்தென்னுந் துணையன்றி உள்ளுறையுவமப் பொருளை முற்ற உணர்த்தாமை யுணர்க.

"வேங்கை தொலைத்த வெறிபொறி வாரணத்து
ஏந்து மருப்பின் இனவண்டு இமிர்பூதும்
சாந்த மரத்தின் இயன்ற உலக்கையால்
ஐவன வெண்ணெல் அறையுரலுள் பெய்திருவாம்
ஐயனை ஏத்துவாம் போல அணிபெற்ற
மைபடு சென்னிப் பயமலை நாடனைத்
தையலாய் பாடுவாம் நாம்." (கலி. 43)

இதனுட் புலவுநாறியும் பூநாறியுந் தீதும் நன்றுமாகிய இறைச்சியாகிய உலக்கைகளால் தலைவனைப் பாடும் பாட்டோடே கலந்து கூறத்தகாத தெய்வத்தையும் பாடுவாமென்னும் பொருள் பயப்பச் செய்த இறைச்சியிற்பொருளே பயந்தவாறும் இரண்டுலக்கையானும் பயன்கொண்டாற்போல் அவை அன்பே பாடுதலாற் பயன்கொள்ளாமையின் உள்ளுறையுவமமன்மையுங் காண்க. உள்ளுறையுவம மாயின்,

"தன்பார்ப்புத் தின்னும் அன்பின் முதலையொடு
வெண்பூம் பொய்கைத்து அவனூர் என்ப.
(ஐங்குறு. 41)

என்றாற்போலத் தலைவன்கொடுமையுந் தலைவி பேதைமையும் உடனுவமங் கொள்ளநிற்கும். இதுபற்றித் 'தெரியு மோர்க்கே' யென்றார். உம்மை இறந்ததுதழீஇயிற்று.

(வி - ரை) பயமுலை - பாலுள்ளமடி, மாந்த - உண்ணுதற் பொருட்டு. நன்றிமறந்து அமையாயின் - நன்றி மறத்தலைப் பொருந்தாயாயின்: நன்றியறிதலையுடையையாயின். கலாவம் - பீலி.

வெறிபொறி வாரணம் - மதவெறியும் புகர் நிறமும் உடைய யானை, அறை உரல் - பறையாகிய உரல்.

இறைச்சி என்பது கூறப்படும் பொருளுக்குப் புறம்பேயன்றி அதனுள்ளும் தோன்றலின் உம்மை இறந்தது தழீயிற்று என்றார்.
(36)

தோழி தலைவியை வற்புறுத்துமாறு

231. [1]அன்புறு தகுந இறைச்சியுட் சுட்டலும்
வன்புறை யாகும் வருந்திய பொழுதே.

இஃது, இறைச்சி முற்கூறியவற்றின் வேறுபட வருமென்கின்றது.

(இ – ள்.) வருந்திய பொழுதே - பிரிவாற்றாத காலத்து; இறைச்சியுள் அன்புறு தகுந சுட்டலும் - தோழி கருப்பொருள்களுள் தலைவன் அன்பு செய்தற்குத் தகுவனவற்றைக் கருதிக் கூறலும்; வன்புறை ஆகும்-வன்புறுத்தலாகும் (எ – று).

''நசைபெரிது உடையர் நல்கலும் நல்குவர்
பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் பொளிக்கும்
அன்பின தோழியவர் சென்ற ஆறே.'' (குறுந். 37)

இதனுண் முன்பே நெஞ்சகத்தன்புடையார் அதன் மேலே களிறு தன் பிடியின் பெரும்பசி களைதற்கு மென்றோலையுடைய ஆச்சாலைப் பிளந்து அந் நாரைப் பொளித்தூட்டும் அன்பினை யுடைய அவர் சென்ற ஆறதனைக் காண்பர்காண் என்று அன்புறு தகுந கூறிப் பிரிவாற்றாதவளை வற்புறுத்தவாறு காண்க. நம்மேல் இயற்கையாக அன்பிலனென்று ஆற்றாளாவளென்று கருதாது இவளை ஆற்றுவித்தற்பொருட்டு இவ்வாறு கூறலின் வழுவாயமைந்தது.

''அரிதாயவறன்'' (கலி. 11) என்பது தோழி கூற்றன்மை உணர்க.

(வி – ரை) பொளித்து ஊட்டும் - உரித்து ஊட்டும். இதற்கு அரிதாய அறன் எய்தி எனத் தொடங்கும் கலித்தொகைப் பாடலை எடுத்துக் காட்டுவர் இளம்பூரணர். அதனையே தோழி கூற்று

---

1. அன்புறு தகுவன இறைச்சியிற் சுட்டலும் எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

அன்மை உணர்க என இவர் மறுக்கின்றார். நச்சினார்க்கினியருக்கு இப்பாடல் தலைவி கூற்றாம். (37)

தலைவன் தலைவியைப் பாராட்டியவழி வருவதோர் வழுவமைதி

232. செய்பொருள் அச்சமும் வினைவயின் பிரிவும்
மெய்பெற வுணர்த்துங் கிழவிபா ராட்டே.

இது, தலைவன் தலைவியைப் பாராட்டியவழி வருவதோர் வழுவமைக்கின்றது.

(இ - ள்.) கிழவி பாராட்டே - தலைவன் தலைவியைப் பாராட்டிய பாராட்டு; செய்பொருள் அச்சமும் - யாஞ் செய்யக் கருதிய பொருட்கு இவள் இடையூறுவள்கொலென்று தலைவன் அஞ்சிய அச்சத்தையும்; வினைவயின் பிரிவும் - தான் பொருள் செய்தற்குப் பிரிகின்றதனையும்; மெய் பெற உணர்த்தும் - ஒரு தலையாகத் தலைவிக்கு உணர்த்தும் (எ - று).

அப்பாராட்டுக் கிழவியதாகலிற் கிழவி பாராட்டென்றார்.

"நுண்ணெழின் மாமை" (கலி. 5) என்பதனுட் கழி பெரு நல்கலால் தலைவன் செய்பொருட்கஞ்சியவாறும் அவன் பிரியக் கருதியதூஉந் தலைவியுணர்ந்தாள் அப்பாராட்டினாலென்றுணர்க.

அன்பானன்றிப் பொருள் காரணத்தாற் பாராட்டினமை யானும் அதனைச் செவ்வனங்கொள்ளாது பிறழக் கோடலானும் இருவர்க்கும் வழுவாமென்றமைத்தார்.

செய்பொருள் அச்சமும் - தலைமகன் பொருள்வயிற் பிரியும் இடத்து ஆறு இன்னாமையான் உளதாகிய அச்சமும் என உரை காண்பர் இளம்பூரணர். அது அத்துணைச் சிறப்புடைத்தன்றாம். (38)

தலைவியிடத்துத் தோன்றும் ஊடல்

233. கற்புவழிப் பட்டவள் [1]பரத்தை ஏத்தினும்
உள்ளத் தூட லுண்டென மொழிப.

இது, தலைவிக்கட் டோன்றியதோர் வழுவமைக்கின்றது.

---

1. பரத்தையை எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

(இ - ள்.) கற்புவழிப் பட்டவள்-கற்பின் வழிநின்ற தலைவி; பரத்தை ஏத்தினும் - பரத்தையைப் புகழ்ந்து கூறினாளாயினும்; உள்ளத்து ஊடல் உண்டென மொழிப - உள்ளத்துள்ளே ஊடின தன்மை உண்டென்று கூறுவர் புலவர் (எ - று).

பரத்தையை ஏத்தவே தலைவன்கட் காதலின்மைகாட்டி வழுவாயிற்றேனும் உள்ளத்தூடலுண்மையின் அமைக்கவென்றார்.

> ''நாணி நின்றோள் நிலைகண் டியானும்
> பேணினென் அல்லனோ மகிழ்ந வானத்து
> அணங்கரும் கடவுள் அன் னோள்நின்
> மகன்தாய் ஆதல் புரைவதாங்கு எனவே.'' (அகம். 16)

என வரும்.

'ஏத்தினும்' என்ற உம்மையால் ஏத்தாமற் கூறும்பொழு தெல்லாம் மாறுபடக் கூறலுளதென்பது பெற்றாம்.

> ''என்னொடு புரையுநள் அல்லள்
> தன்னொடு புரையுநர்த் தானறி யுநளே.''
> (பதிற்றுப்.)

என வரும்.

(வி - ரை) தலைவி பரத்தையை ஏத்துவது தலைவனின் உள்ளக் குறிப்பை அறிதற்கேயன்றி தலைவனிடத்துள்ள அன்பின் மையைக் காட்டுவதன்று. இதனை அடுத்த நூற்பாவாலும் நன்கறியலாம்.

நாணி நின்றோள் - நாணி நின்றவளாகிய பரத்தை. அணங் கரும் கடவுள் - வருத்தும் அரிய தெய்வம்.

புரையுநள் - ஒத்தவள்.

யாவதும் போற்றா ஒழுக்கம் புரிந்தீர் எனக் கோவலன்பால் கண்ணகி கூறும்பொழுதும் அப்பெருமாட்டிக்கு உள்ளத்து ஊடலுண்மை தெரியவருகிறது. (39)

### தலைவன் குறிப்பைத் தலைவி அறியுமாறு

234. கிழவோள் பிறள்குணம் இவையெனக் கூறிக்
கிழவோன் குறிப்பினை யுணர்தற்கும் உரியள்.

இஃது, எய்தியது ஒருமருங்கு மறுக்கின்றது; உள்ளத்தூட லின்றியும் பிறளொருத்தியைத் தலைவி புகழுமென்றலின்.

(இ - ள்.) கிழவோள் பிறள் குணம் இவையெனக் கூறி - தலைவி வேறொரு தலைவியுடைய குணங்கள் இத்தன்மையவென்று தலைவற்குக் கூறி; கிழவோன் குறிப்பினை அறிதற்கும் உரியள் - அவள்மாட்டு இவன் எத்தன்மையனாயிருக்கின்றானென்று தலைவன் குறிப்பினை உணர்தற்குமுரியள் (எ - று).

பரத்தை யென்னாது 'பிறள்' என்றதனால் தலைவியேயாயிற்று; அன்றிப் பரத்தையாயின் ஊடலின்மை அறனன்றாகலின் உள்ளத் தூடல் நிகழ்பவை வேண்டும். தோழி கூறுங்கால் தலைவியரைக் கூறப்பெறாளென்பதூஉம் பரத்தையரைக் கூறின் அவர்க்கு முதுக் குறைமை கூறிக் கூறுவளென்பதூஉங் கொள்க.

"கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே
ஒள்ளிழை உயர்மணல் வீழ்ந்தென
வெள்ளாங் குருகை வினவு வோளே." (ஐங்குறு. 122)

இது, தலைவன் வரையக் கருதினாளோர் தலைவியை இனைய ளெனக் கூறி அவள்மாட்டு இவன் எத்தன்மையனென்று விதுப் புற்றுக் கூறியது.

இது தலைவன் கூற உணராது தான் வேறென்று கூறி அவன் குறிப்பு அறியக் கருதுதலின் வழுவாயமைந்தது. இது கைக்கிளைப் பொருட்கண் வழுவமைக்கின்றது.

(வி - ரை) முதுக்குறைமை - இளமையிலேயே உள்ள பேரறிவு.

கண்டிகும் அல்லமோ - கண்டேம் அல்லமோ.

விதுப்புற்று - வேட்கை மிகுதியால் விரைவுற்று, தன் அணிகலன் மணலின்கண் வீழ்ந்ததாக வெள்ளாங்குருகை வினவுதலின்அவள் காமம் சாலா இளையள் என்பது போதரும். அவளை நின்கேள் என்றலின் இது கைக்கிளைப் பொருண்மை ஆயிற்று. (40)

தலைவி தலைவன் முன் கழற்றுரை கூறும் இடம்

235. தம்முறு விழுமம் பரத்தையர் கூறினும்
மெய்ம்மை யாக அவர்வயி [1]னுணர்ந்து
தலைத்தாட் கழறல்தம் எதிர்ப்பொழு தின்றே
மலிதலும் ஊடலும் அவையலங் கடையே.

இது, பரத்தையர்க்குந் தலைவிக்குந் தலைவற்கும் படுவதோர் வழுவமைக்கின்றது.

(இ - ள்.) தம்முறு விழுமம் பரத்தையர் கூறினும் - தலைவனால் தாம் உற்ற வருத்தத்தைத் தலைவிக்குப் பரத்தையர் கூறினும் ஏனைத் தலைவியர் கூறினும்; அவர்வயின் மெய்ம்மையாக உணர்ந்து— அவர் கூறியவாற்றானே அவ்வருத்தத்தை அவரிடத்து உண்மை யாக உணர்ந்து; தலைத்தாட் கழறல் - தலைவன் முன் நின்று கழறுங் கழற்றுரை; தம் எதிர்ப்பொழுது இன்று - தம்மைப் பரத்தையர் எதிர்ப்பட்ட பொழுதின்கண் இல்லை; மலிதலும் — அவர் துயருறநின்றுழிக் கவலாது நீங்கினனென மகிழ்தலும்; ஊடலும் - அவன் பிரிவிற்கு இவர் இரங்கினரென்ற காரணத்தான் ஊடுதலும்; அவை அலங்கடை - அவ்விரண்டும் நிகழாவிடத்து (எ - று).

என்பது வெறுத்த உள்ளத்தளாமென்பது கருத்து. எனவே, மலிதலும் ஊடலும் நிகழுமிடத்தாயின் தலைத்தாட் கழறுமென்பது பெறுதும். தலைத்தாள், தகுதிபற்றிய வழக்கு.

"பொன்னெனப் பசந்தகண் போதெழில் நலம்செலத்
தொன்னலம் இழந்தகண் துயில்பெறல் வேண்டேன்மன்
நின்னணங்கு உற்றவர் நீசெய்யும் கொடுமைகள்
என்னுழை வந்துநொந்து உரையாமை பெறுகற்பின்."
(கலி. 77)

இது, பரத்தையர் முன்னரன்மையின் மலிதலும் ஊடலும் நிகழ்ந்து தலைத்தாட்கழறியது.

கழறுது கூறியது வந்துழிக் காண்க.

---

1. உணர்ந்தும் எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

தம்முறுவிழுமத்தைப் பரத்தைத் தலைவிக்குக் கூறுதலாற் பரத்தைக்கும், அவர் கூறத் தான் எளிவந்தமையின் தலைவிக்கும், இவரிங்ஙன மொழுகலின் தலைவற்கும் வழுவமைந்தது. உம்மை இறந்தது தழீஇயிற்று.

(வி – ரை) இத்நூற்பாவிற்கு இளம்பூரணர் கூறும் உரையே பொருத்தம் உடைத்தாம். அதுவருமாறு: பரத்தையர் தாமுற்ற துன்பத்தினைத் தலைமகட்குக் கூறிய வழியும் அவரிடத்துத் துன்பத்தை மெய்ம்மையாக உணர்ந்து வைத்தும் தலைமகன் மாட்டுக் கழறுதல் தலைவன் எதிர்ப்பட்ட பொழுது இல்லை. மகிழ்ச்சியும், புலவியும் அல்லாத காலத்து என்றவாறு. கூறினும் என்ற உம்மை எதிர்மறை. கூருமை பெரும்பான்மை. அதனை ஐயப் படாது துணிதலான் மெய்ம்மையாக என்ருர். அதனைத் தலைமகன் வந்தவழிக் கூறுவாளாயின் தனக்குப் புணர்ச்சியிற் காதல் இல்லையாம். கூருளாயின் அவள் கூறியதனுல் பயன் இல்லையாம். அதனைக் கலவியிறுதியினும் புலவியினும் கூறப் பெறும் என்றவாறு.

நின்னணங்கு உற்றவர் - நின்னுல் வருத்தப் பெற்றவர்; பரத்தையர்.

பரத்தையர் கூறினும் என்றவிடத்துள்ள உம்மை பிறர் கூறினும் என்பதைத் தழுவுகின்றதாதலின் இறந்தது தழீஇயிற்று என்ருர். எனினும் இளம்பூரணர் கூறுமாறுபோல் எதிர்மறை உம்மை ஆக்குதலே சிறப்பாம். (41)

பெருந்திணைக்கு உரியதோர் வழுவமைதி

236. பொழுது தலைவைத்த கையறு காலை
இறந்த போலக் கிளக்குங் கிளவி
மடனே வருத்தம் மருட்கை மிகுதியொடு
அவைநாற் பொருட்கண் நிகழு மென்ப.

இது 'பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே.' (தொல். பொ. 105) என்ற சிறப்புடைப்பெருந்திணையன்றிப் பெருந்திணைக் குறிப்பாய்க் கந்தருவத்துட்பட்டு வழுவிவரும் 'ஏறிய மடற்றிறம்' (தொல். பொ. 51) முதலிய நான்கினுள் ஒன்ருய் முன்னர் நிகழ்ந்த

கந்தருவம் பின்னர் வழீஇவந்த 'தேறுதலொழிந்த காமத்து மிகு திறம்' (தொல். பொ. 51) ஆகிய பெருந்திணை வழுவமைக்கின்றது.

ஓதலுந்தூதும் ஒழிந்த பகைவயிற் பிரிவாகிய வாளாணெதிரும் பிரிவும் முடியுடை வேந்தர்க்கும் அவரேவலிற் பிரியும் அரசர்க்கும் இன்றியமையாமையின், அப்பிரிவிற் பிரிகின்றான் 'வன்புறை குறித்தல் தவிர்ச்சி யாகும்' (தொல். பொரு. 185) என்பதனுற் கற்புப்போல நீ இவ்வாறெழுகி யான் வருந்துணையும் ஆற்றியிருவென ஆற்றுவித்துப் பிரிதல் இலக்கணமன்மையின் வாளாபிரியுமன்றே; அங்ஙனம் பிரிந்துழி அவன் கூறிய கூற்றினையே கொண்டு ஆற்றுவிக்குந் தோழிக்கும் ஆற்றுவித்தலரிதாகலின், அவட்கு அன்பின்றி நீங்கினனென்று ஆற்றாமைமிக்கு ஆண்டுப் பெருந்திணைப்பகுதி நிகழுமென்றுணர்க.

(இ – ள்.) பொழுது - அந்திக்காலத்தே; கையறு காலை - 'புறஞ்செயச் சிதைத்தல்' (தொல். மெய்ப். 18) என்னுஞ் சூத்திரத்தில் அதனினூங்கின்று எனக் கூறிய 'கையறவுரைத்த' லென்னும் மெய்ப்பாடெய்தியகாலத்தே; தலைவைத்த - அந்த ஆற்றாமையின் இகந்தவாக முடிவிலே வைக்கப்பட்ட மெய்ப்பாடுகள்; மிகுதியொடு மடனே வருத்தம் மருட்கை நாட்பொருட்கண் நிகழும் - தன் வனப்புமிகுதியுடனே மடப்பமும் ஆற்றாமையும் வியப்புமாகிய நான்குபொருட்கண்ணே நடக்கும்; அவை இறந்த போலக் கிளக்குங்கிளவி என்ப - அங்ஙனம் அவை நடக்கின்ற நான்குபொருளுங் கூற்றுநிகழுங்கால் தன்னைக் கைகடந்தனபோலக் கூறுங் கூற்றாய் நிகழுமென்று கூறுவர் புலவர் (எ - று).

தலைவைத்த மெய்ப்பாடாவன ஆறுமவதியினும் ஒப்பத் தோன்றுதற்குரிய மெய்ப்பாடுகளாகி மன்றத்திருந்த சான்றோரறியத் தன் துணைவன் பெயரும் பெற்றியும் அவனோடு புணர்ந்தமையுந் தோன்றக் கூறியும் அழுதும் அரற்றியும் பொழுதொடு புலம்பியும் ஞாயிறு முதலியவற்றோடு கூறத்தகாதன கூறலும் பிறவுமாம்.

உ - ம்: "புரிவுண்ட புணர்ச்சியுள் புல்லாரா மாத்திரை
அருகுவித்து ஒருவரை அகற்றலின் தெரிவார்கண்
செயநின்ற பண்ணினுள் செவிசுவை கொள்ளாது

நயநின்ற பொருள்கெடப் புரியறு நரம்பினும்
பயனின்று மன்றம்ம காமம் இவள்மன்னும்
ஒண்ணுதல் ஆயத்தார் ஓராங்குத் திளைப்பினும்
முண்ணுவனை தோன்றாமை முறுவல்கொண்டு அடக்கித்தன்
கண்ணினும் முகத்தினு நகுபவள் பெண்ணின்றி
யாவரும் தண்குரல் கேட்ப நிரைவெண்பல்
மீயுயர் தோன்ற நகாஅ நக்காங்கே
பூவுயிர்த்து அன்ன புகழ்சால் எழில்உண்கண்
ஆயிதழ் மல்க அழும்;
ஓஓ அழிதகப் பாராதே அல்லல் குறுகினம்
காண்பாங் கனங்குழை பண்பு;
என்று, எல்லீரும் என்செய்தீர் என்னை நகுதிரோ
நல்ல நகாஅலிர் மற்கொலோ யான்உற்ற
வல்ல லுறீஇயான் மாய மலர்மார்பு
புல்லிப் புணரப் பெறின்;
எல்லாநீ, உற்றது எவனோமற்று என்றீரேல் எற்சிதை
செய்தான் இவன்என உற்றது இதுவென
எய்த உரைக்கும் உரனகத்து உண்டாயின்
பைதல வாகிப் பசக்குவம் அன்னோஎன்
நெய்தன் மலரன்ன கண்;
கோடுவாய் கூடாப் பிறையைப் பிறிதொன்று
நாடுவேன் கண்டனென் சிற்றிலுள் கண்டாங்கே
ஆடையான் மூஉய் அகப்படுப்பேன் சூடிய
காணான் திரிதரும் கொல்லோ மணிமிடற்று
மாண்மலர்க் கொன்றை அவன்;
தெள்ளியேம் என்றுரைத்துத் தேராது ஒருநிலையே
வள்ளியை யாகென நெஞ்சை வலியுறீஇ
உள்ளி வருகுவர் கொல்லோ உளைந்தியான்
எள்ளி இருக்குவென் மற்கொலோ நல்லிருண்
மாந்தர் கடிகொண்ட கங்குல் கனவினால்
தோன்றினன் ஆகத் தொடுத்தேன்மன் யான்தன்னைப்
பையெனக் காண்கு விழிப்பயான் பற்றிய
கையுளே மாய்ந்தான் கரந்து;
கதிர்பகா ஞாயிறே கல்சேதி ஆயின்

அவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்
தருகுவை யாயின் தவிரும்என் நெஞ்சத்து
உயிர்திரியா மாட்டிய தீ;
மையில் சுடரே மலைசேர்தி நீயாயின்
பௌவநீர்த் தோன்றிப் பகல்செய்யு மாத்திரை
கைவிளக் காகக் கதிர்சில தாராய்என்
தொய்யில் சிதைத்தானைத் தேர்கு;
சிதைத்தானைச் செய்வது எவன்கொலோ எம்மை
நயந்து நலம்சிதைத் தான்;
மன்றப் பனைமேன் மலைமாந் தளிரேநீ
தொன்றிவ் வுலகத்துக் கேட்டும் அறிதியோ
மென்தோள் நெகிழ்த்தான் தகையல்லால் யான்காணேன்
நன்றுதீது என்று பிற;
நோயெறி யாகச் சுடினும் சுழற்றிஎன்
ஆயிதழ் உள்ளே கரப்பன் கரந்தாங்கே
நோயுறு வெந்நீர் தெளிப்பில் தலைக்கொண்டு
வேவது அளித்துஇவ் வுலகு;
மெலியப் பொறுத்தேன் களைந்தீமின் சான்றீர்
நலிதரும் காமமும் கௌவையும் என்றுஇவ்
வலிதில் உயிர்காவாத் தூங்கியாங்கு என்னை
நலியும் விழுமம் இரண்டு;
எனப்பாடி,
இனைந்துதொந்து அழுதனன் நினைந்துநீடு உயிர்த்தனள்
எல்லையும் இரவும் கழிந்தனஎன்று எண்ணி
எல்விரா, நல்கிய கேள்வன் இவன்மன்ற மெல்ல
மணியுள் பரந்தநீர் போலத் துணிபாங்கு,
அலஞ்சிதை இல்லத்துக் காழ்கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போல் தெளிந்து நலம்பெற்றாள்
நல்லெழின் மார்பனைச் சார்ந்து.'' (கலி. 142)

இதனுள் அந்திக்காலத்தே கையற வெய்திப் பின்னர்ச் சான்றோரை நோக்கிக் கூறுகின்றவள் புல்லாரா மாத்திரையென அவனோடு புணர்ச்சி நிகழ்ந்தமையும் யாவருங் கேட்ப நக்கழுது அல்லலுறீஇயாயெனப் பெயரும் பெற்றியுங் கூறிப், புல்லிப்

புணரப்பெறின் ஈதிகழ்ச்சியன்றுமெனக் கூறத்தகாதன கூறலான் மடன் தன்னை இறந்தவாறுந், தெள்ளியே மென்றதனுனும் எள்ளி யிருக்குவ னென்றதனுனும் வருத்தமிறந்தவாறுங், ''கோடுவாய் கூடா'' என்பது முதலாகக் ''கொன்றையவன்'' என்னுந் துணையுந் தான் செய்ததனை வியவாமையின் மருட்கை யிறந்தவாறும், நெய்தன் மலரன்ன கண்ணெனத் தன்வனப்பு மிகுதி கூறலின் மிகுதி யிறந்தவாறுங் காண்க. எல்லிரா நல்கிய கேள்வனிவனெ னவே கந்தருவத்தின் வழுவிப் பெருந்திணை நிகழ்ந்தவாறும் பின்னர் வரைவு நிகழ்ந்தவாறுங் காண்க.

இதற்குப் பொருளுரைக்குங்காற், கேட்பீராக இவள் நக்கு, நக்க அப்பொழுதே யழும், இங்ஙனம் அழுமாறு காமத்தை ஊழானது அகற்றலின் அஃதறுதியாக நரம்பினும் பயனின்று யிருந்தது. ஓஓ, இதனையுற்ற இவள் அல்லற்பண்பைப் பாராதே அழிதக யாங் குறுகினேம், குறுகி யாம் இதனை முடிவு போகக் காண்பேமென்று வந்து எல்லீரும் என்செய்தீர்? என்னை யிகழ்கின் றீரோ? இவ்வருத்தத்தை எனக்குறுத்தினவனது மாயஞ்செய்த மலர்ந்த மார்பை யான் முயங்கிக் கூடினும் இகழ்ச்சியன்றும் என்றற்றொடக்கமாய் வரும்.

(வி – ரை) பிரமம் பிரசாபத்தியம் ஆரிடம் தெய்வம் ஆகிய நால்வகை மணங்களும் தலைவனும் தலைவியும் முன்னர் விரும்புத லின்றிப் பிறரால் செய்விக்கப்படுதலின் சிறப்புடைய பெருந்திணை யாயிற்று. ஏறிய மடல் திறம் முதலிய நான்கும் முன்னர் ஐந் திணையாய்ப் பின்னர்ப் பெருந்திணையாய் மாறுதலின் சிறப்பில்லாத பெருந்திணையாயிற்று. தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் யாவரும் தேற்றத் தேறுதலின்றும் நீங்கிக் காமமிகுதியால் மாவும், புள்ளும் முதலியன கண்டு புலம்புதல்.

ஆறும் அவதி - புறஞ்செயச் சிதைத்தல் முதலிய நான்கும். இதன்கண் உள்ள கையறவுரைத்தற்குமேல் களவொழுக்கத்தில் மெய்ப்பாடு நிகழா என்றும் அதற்கு மேல் வருவன கைக்கிளை பெருந்திணைக்குரியனவென்றும் பேராசிரியர் கூறுவர்.

இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் கூறும் உரையே ஆசிரியர் கருத்தொடுபட்டதாம். அது வருமாறு. யாதானுமொரு பருவத்தைக்

குறித்தவழி அப்பருவம் இருதிங்களை எல்லையாக உடைத்தாயினும் அது தோற்றியவழி, அது கண்டு செயலற்று அக்காலந் தோன்றிய பொழுதே கழிந்ததுபோலக் கூறுதலும் உண்டு என உரை கண்டு அவ்வாறு கூறுதல் அறியாமையானுதல் வருத்தத்தானுதல் மயக்கத்தானுதல். அக்காலத்திற்குரிய பொருள் மிகத் தோன்றுதலானுதல் என இந்நான்கு பொருளானும் நிகழும் எனவும், சிறு பொழுதாயின் யாமங் கழிவதன் முன்னர்க் கூறுதல் எனவும், எனவே இவ்வாறு வரும் செய்யுள் காலம் பிழைத்துக் கூறுகின்றதல்ல எனவும் விளக்கமுங் காண்பர்.

புரிவுண்ட - பின்னிப் பிணைந்த, புல்லாரா மாத்திரை - புல்லுதல் நிறையாத அளவில், மீஉயர் தோன்ற - மிக்கு உயர்ந்து தோன்ற, கோடுவாய் - வளைந்த பகுதி, நல்ல நகாஅலிர் - நன்கு சிரியுங்கள், பைதலவாகி - துன்ப முறுவதாகி, காழ் - தேற்றாங்கொட்டை. (42)

## தலைவனிடத்துத் தோழி கூறுமாற்றான் வருவதோர் வழுவமைதி

237. இரந்து குறையுற்ற கிழவனைத் தோழி
நிரம்ப நீக்கி நிறுத்த லன்றியும்
வாய்மை கூறலும் பொய்தலைப் பெய்தலும்
நல்வகை யுடைய நயத்திற் கூறியும்
பல்வகை யானும் படைக்கவும் பெறுமே.

இது, தோழி தலைவனைக் கூறுவனவற்றுள் வழுவமைவன கூறுகின்றது.

(இ - ள்.) இரந்து குறையுற்ற கிழவனை - இரந்துகொண்டு தன் காரியத்தினைக் கூறுதலுற்ற தலைவனை; தோழி நிரம்ப நீக்கி நிறுத்தலன்றியும் - தோழி அகற்றுற ஏத்துமுறைமையில் தாழ்வின்றாக அகற்றி நிறுத்தலேயன்றியும்; வாய்மை கூறலும் - நுமது கூட்டத்தினை யான் முன்னே அறிவலென மெய்யாகக் கூறலையும்; பொய்தலைப் பெய்தலும் அப் புணர்ச்சியில்லையென்று பொய்த்த துணைத் தலைவன்மேற் பொய்யுரை பெய்துரைத்தலையும் அவன்

வரைந்து கோடற்பொருட்டுச் சில பொய்களைக் கூற வேண்டு மிடங்களிலே பெய்துரைத்தலையும்; நல்வகையுடைய நயத்திற் கூறியும் - நல்ல கூறுபாடுடைய சொற்களை அசதியாடிக் கூறியும்; பல்வகையானும் படைக்கவும் பெறுமே - இக்கூறியவாறன்றி வேறு படப் புனைந்துரைக்கவும் பெறும் (எ – று).

தோழி நீக்கலன்றியுங் கூறலையுந் தலைப்பெய்தலையும் படைக் கவும் பெறும், பல்வகையானும் படைக்கவும் பெறுமென வினை முடிக்க. தோழி தலைவனோடு நயங்கருதுமாற்றால் அவனை நீக்கு தல் ஏனையவற்றோடெண்ணாது அன்றியுமெனப் பகுத்துரைத்தார். ஏனைக்குறை முடித்தற்கு இடையூறின்மை கூறியனவும் வரைவு கடாய்க் கூறியனவுமாம்.

"நெருநலும் முன்னாள் எல்லையு.........
..........................................மகளே."

இது சேட்படுத்தது.

"எமக்கு இவை உரையல் மாதோ நுமக்கியான்
யாரோ கியரோ பெரும ஆருயிர்
ஒருவிர் ஒருவிர்க் காகி முன்னாள்
இருவீர் மன்னும் இசைந்தனிர் அதனால்
அயலேன் ஆகிய யான்
முயலேன் போல்வன்நீ மொழிபொருள் திறத்தே."

இது வாய்மை கூறியது. யாந்தன்னை மறைத்தலிற்போலும் இவள் குறை முடியாளாயதென அவன் கருதக் கூறினாள்.

"அறியேம் அல்லேம் அறிந்தனம் மாதோ
பொறிவரிச் சிறைய வண்டினம் மொய்ப்பச்
சாந்த நாறும் நறியோள்
கூந்தல் நாறுநின் மார்பே தெய்யோ." (ஐங்குறு. 240)

இதுவும் அது.

"நீயே, பொய்வன் மையில் செய்பொருண் மறைத்து
வந்துவழிப் படுகுவை அதனால்
எம்மை எமக்கே வில்வலனே
தகாது சொல்லப் பலவும் பற்றி

ஒருநீ வருதல் நாடொறும் உள்ளுடைந்து
ஈரமா மழைக்கண் கலுழ்க மதனுல்
நல்லோர் கண்ணும் அஃதல்லது
இல்லை போலும்இவ் வுலகத் தானே.''

இது பொய்தலைப் பெய்தது.

''திருந்திழாய் கேளாய்'' (கலி. 65) என்னுங் குறிஞ்சிக் கலியுள் வரைந்து கோடற்குப் பொய்யுரை படைத்தது.

''அன்னையும் அறிந்தனள் அலரும் ஆயின்று
நன்மனை நெடுநகர் புலம்புகொள உறுதரும்
இன்னு வாடையும் மலையும்
நும்மூர்ச் செல்கம் எழுமோ தெய்யோ.''
(ஐங்குறு. 236)

இது, நல்வகையுடைய நயத்திற் கூறியது.

''வீகமழ் சிலம்பின் வேட்டம் போந்து
நீயே கூறினும் அமையுநின் குறையே.''

இதுவும் அது.

அஃதன்றியும் நீயே சென்று கூறென்றலும் அறியாள் போறலுங் குறியாள் கூறலுங் குறிப்புவேறு கூறலும் பிறவும் நயத்திற்கூறும் பகுதியாற் பலவகையாற் படைத்துக் கூறலும் துறைவகையாம்.

இவை நாடகவழக்காகவும் உலகியல் வழக்காகவும் புனைந் துரைத்தமையானுந் தோழி தலைவற்குக் கூறத்தகாதன கூறலானும் வழுவமைந்தது.

(வி – ரை) அசதியாடி - நகையாடி.

இதன்கண் எற்குறை உறுதிராயிற் சொற்குறை எம்பதத் தெளிய ளல்லள் எமக்கோர் கட்காண் கடவுள் அல்லளோ பெரும எனக் கூறுதலின் சேட்படுத்ததாயிற்று.

பொறி - புள்ளி, வரி - அழகு, சாந்தம் - சந்தனம்.

இதன்கண் மூன்று நான்காவது வரிகள் சிதைவுடையன.

உறழ்ந்து கூறல் - மாறுபடக் கூறல். (43)

உறழும் கிளவியும் ஐயக் கிளவியும்

238. [1]உயர்மொழிக் குரிய உறழுங் கிளவி
ஐயக் கிளவி ஆடூஉவிற் குரித்தே.

இது, தோழிக்குந் தலைவிக்குமுரியதோர் வழுவமைக்கின்றது.

(இ - ள்.) உயர்மொழிக்கு உறழுங் கிளவியும் உரிய - இன்பம் உயர்தற்குக் காரணமான கூற்றுநிகழுமிடத்திற்கு எதிர் மொழியாக மாறுபடக்கூறுங் கிளவி நிகழ்தலுமுரிய; ஐயக்கிளவி ஆடூஉவிற்கு உரித்தே - கூறுவேமோ கூறேமோ என்று ஐயமுற்றுக் கூறுஞ் சொல் தலைவற்குரித்து (எ - று).

உறழுங்கிளவியைப் பொதுப்படக் கூறினர், தோழி உயர் மொழி கூறியவழித் தலைவி உறழ்ந்து கூறலுந், தலைவன் உயர் மொழி கூறியவழித் தோழி உறழ்ந்து கூறலுந், தலைவன் உயர் மொழி கூறியவழித் தலைவி உறழ்ந்து கூறலுந், தலைவி உயர் மொழி கூறியவழித் தோழி உறழ்ந்து கூறலுங் கோடற்கு.

"சுணங்கணி வனமுலை" (கலி. 60) என்னுங் குறிஞ்சிக் கலியுள்,

"என்செய்தான் கொல்லோ இஃதொத்தன் தன்கண்
பொருகளிறு அன்ன தகைசாம்பி உள்ளுள்
உருகுவான் போலும் உடைந்து."

எனத் தோழி கூறியவழித்,

"தெருவின்கண், காரணமின்றிக் கலங்குவார்க் கண்டுநீ
வாரண வாசிப் பதம் பெயர்த்தல் ஏதில
நீ நின்மேற் கொள்ப தெவன்."

எனவும்,

1. உயர்மொழிக் கிளவி எனப் பாடங் கொள்வர் இளம்பூரணர்.

"அலர்முலை ஆயிழை நல்லாய் கதுமெனப்
பேரமர் உண்கணின் தோழி உறீஇய
ஆரஞர் எவ்வம் உயிர்வாங்கும்
மற்றுஇந்நோய் தீரு மருந்துஅருளாய் ஒண்டொடீ;
நின்முகம் காணும் மருந்தினேன் என்னுமால்
நின்முகம் தான்பெறின் அல்லது கொன்னே
மருந்து பிறிதியாது மில்லேல் திருந்திழாய்
என்செய்வாங் கொல்இனி நாம்;
பொன்செய்வாம்." (கலி. 60)

எனவுந் தலைவி உறழ்ந்து கூறியவாறு காண்க.

இது தலைவன் வருத்தங்கூற அதனை ஏற்றுக்கொள்ளாது உறழ்தலின் வழுவாய் நாண்மிகுதியாற் கடிதின் உடம்படாமையின் அமைந்தது.

"எல்லாஇஃதொத்தன்" (கலி. 61) என்னுங் குறிஞ்சிக்கலியுள்,

"ஈதல் இரந்தார்க்கொன்று ஆற்றுது வாழ்தலில்
சாதலும் கூடுமா மற்று." (கலி. 61)

எனத் தலைவன் கூறியவழி,

"இவள்தந்தை, காதலின் யார்க்கும் கொடுக்கும் விழுப்பொருள்
யாதுநீ வேண்டியது." (கலி. 61)

எனவும்,

"மண்டமர் அட்ட களிறன்னான் தன்னைஒரு
பெண்டிர் அருளக் கிடந்தது எவன்கொலோ" (கலி. 61)

எனவுந் தோழி யுறழ்ந்து கூறியவாறு காண்க.

இதுவும் அவன் வருத்தத்திற்கு எதிர்கூறத்தகாதன கூறலின் வழுவாய்த் தலைவி கருத்தறிந்து உடம்பட வேண்டுமென்று கருதுதலின் அமைந்தது.

"அணிமுகம் மதிஏய்ப்ப அம்மதியை நனிஏய்க்கும்
மணிமுக மாமழைநின் பின்னொப்ப பின்னின்கண்

விரிநுண்ணூல் சுற்றிய ஈரிதழ் அலரி
அரவுக்கண் அணியுறழ் ஆரன்மீன் தகையொப்ப
அரும்படர் கண்டாரைச் செய்தாங்கு இயலும்
விரிந்தொலி கூந்தலாய் கண்டை எமக்குப்
பெரும்பொன் படுகுவை பண்டு;
ஏஎ! எல்லா,
மொழிவது கண்டை இஃதொத்தன் தொய்யில்
எழுதி இறுத்த பெரும்பொன் படுக
முழுவது உடையமோ யாம்;
உழுதாய்,
சுரும்பிமிர் பூங்கோதை அந்நல்லாய் யான்நின்
திருந்திழை மென்றோள் இழைத்தமற்று இஃதோ
கரும்பெல்லா நின்னுழவு அன்றோ ஒருங்கே
துகளறு வாண்முகம் ஒப்ப மலர்ந்த
குவளையு நின்னுழவு அன்றோ இகலி
முகைமாறு கொள்ளும் எயிற்றாய் இவையல்ல
என்னுழுவாய் நீமற் றினி;
எல்லா,
நற்றோள் இழைத்த கரும்புக்கு நீகூறு
முற்றெழில் நீல மலர்என உற்ற
விரும்பீர் வடியன்ன உண்கட்கும் எல்லாம்
பெரும்பொன் உண்டு என்பா யினி;
நல்லா இகுளை கேள்
ஈங்கே தலைப்படுவன் உண்டான் தலைப்பெயின்
வேந்துகொண் டன்ன பல;
ஆங்காக அத்திறம் அல்லாக்கால் வேங்கைவீ
முற்றெழில் கொண்ட சுணங்கணி பூணாகம்
பொய்த்தொருகால் எம்மை முயங்கினை சென்றீமோ
முத்தேர் முறுவலாய் நீபடும் பொன்னெல்லாம்
முத்தி எறிந்து விடற்கு.'' (கலி. 64)

இது, தலைவன் உயர்மொழிக்குத் தலைவி உறழ்ந்து கூறியது. இது நகையாடிக் கூட்டத்தை விரும்பிக் கூறிய மொழிக்கு உறழ்ந்து கூறலின் வழுவாய் அவளும் நகையாடிக் கூறலின் அமைந்தது.

''மறங்கொ ளிரும்புலி'' (கலி. 42) என்னுங் குறிஞ்சிக்கலியுள்,

''ஆர்வுற்றுர் நெஞ்சம் அழிய விடுவானே
ஓர்வுற்று ஒருதிறம் ஒல்காத நேர்கோல்
அறம்புரி நெஞ்சத்து அவன்'' (கலி. 42)

எனத் தலைவி கூறலும்,

''தண்ணறும் கோங்க மலர்ந்த வரையெல்லாம்
பொன்னணி யானைபோல் தோன்றுமே நம்மருளாக்
கொன்ளுளன் நாட்டு மலை'' (கலி. 42)

எனத் தோழி உறழ்ந்து கூறியவாறு காண்க. இதுவுந் தலைவி கூற்றிற்கு மாருதலின் வழுவாய்ச் சிறைப்புறமாகக் கேட்டு வரைதல் பயனுதலின் அமைந்தது.

''சொல்லின் மருதுஈவாண் மன்னே இவள்'' (கலி. 61)

எனவுங்,

''கூறுவம் கொல்லோ கூறலம் கொல்எனக்
கரந்த காமம் கைந்நிறுக் கல்லாது'' (அகம். 198)

எனவும் ஐயக்கிளவி தலைவற்குரியவாய் வந்தன.

இனி ஐயப்பாடு தலைவிக்குமுரித்தென்ருற் 'சிறந்துழியையம்' (தொல். பொரு. 94) என்பதற்கு மாரும்.

''அவன்மறை தேஎம் நோக்கி மற்றிவன்
மகனே தோழி என்றனள்'' (அகம். 48)

என்பதனை ஐயத்துக்கண் தெய்வமென்று துணிந்தாளெனின் அதனைப் பேராசிரியர் தாமே மறுத்தவாறு காண்க.

(வி – ரை) தகை சாம்பி - தகைமை கெட்டு.

வாரண வாசிப்பதம் - வாரண வாசியிலுள்ளார் பெறும் அருளுடைமையாகிய பதம்.

உயிர் வாங்கும் - உயிரைக் கவரும், பொன்செய்வாம் என்றது நகையாடிக் கூறியதன்றி விடையன்று.

ஆரல் மீன் - கார்த்திகை மீன், பொன் படுகம் - பொலிவு உண்டாகில், நின் உழவு ஒன்றோ - நின் மார்பைத் தழுவியதன் பயனன்றோ, முத்தி எறிந்துவிடல் - ஒரு காலமும் பொருந்தாதபடி கழித்துவிடல்.

ஓர்உற்று - ஒருதலையாக உற்று, நேர்கோல் - துலாக்கோல்.

கொன்னுளன் - பயனின்மையை உடையவன்.

உயர்த்துச் சொல்லுதற்குரிய கிளவி தலைமகனுக்கும், தலைமகளுக்கும் ஒத்த கிளவி. ஐயக்கிளவி தலைமகற்கே உரித்து என்றவாறு. தலைவிமாட்டு ஐயக்கிளவி இன்றென்றவாரும். அதனால் குற்றம் என்னையெனின் தெய்வமென்று ஐயுறுங்கால் அதனை முன்பு கண்டறிவாளாதல்வேண்டும். காணாமையின் ஐயம் இலன் என்க என்பர். (44)

## தோழியின் அறிவுடைமை

239. உறுகண் ஓம்பல் தன்னியல் பாகலின்
உரிய தாகுந் தோழிகண் உரனே.

இது, தோழி அறிவுடையளாகக் கூறலும் அமைகவென்கின்றது.

(இ – ள்.) உறுகண் ஓம்பல் தன் இயல்பு ஆகலின் – தலைவிக்கு வந்த வருத்தத்தைப் பாதுகாத்தல் தனக்குக் கடனாதலின், தோழிகண் உரன் உரியதாகும் - தோழிமாட்டு அறிவுளதாகக் கூறல் உரித்தாகும் (எ – று).

எடுத்துக்காட்டு:-

"பால்மருண் மருப்பின்" (கலி. 21) என்னும் பாலைக்கலியுட்,

"பொருள்தான்
பழவினை மருங்கில் பெயர்பு பெயர்புறையும்
அன்ன பொருள்வயின் பிரிவோய்" (கலி. 21)

எனத் தோழி அறிவுடையாளாகக் கூறியவாறு காண்க.

"பிண்ட நெல்லின் அள்ளூர் அன்னஎன்
ஒண்தொடி நெகிழினும் நெகிழ்க
சென்றீ பெருமநின் தகைக்குநர் யாரோ."

(அகம். 46)

என்பது உறுகண் காத்தற்பொருட்டாகத் தலைவி வருந்தினும் நீ செல்லென்றாள் தலைவன் செல்லாமை அறிதலின்.

ஒன்றெனமுடித்தலான் தலைவி உரனுடையளெனக் கூறலுங் கொள்க.

(வி – ரை) பழவினை மருங்கில் - தாம் செய்த பழவினையினாலே. பெயர்பு பெயர்புஉறையும் - ஓரிடத்து நில்லாது உயர்ந்து பெயர்ந்து தங்கும்.

பிண்ட நெல்லின் - நொறபொலிமிக்க. (45)

உயர்மொழிக் கிளவி தோழிக்கு உரித்து

240. உயர்மொழிக் கிளவியு முரிவால் அவட்கே.

இதுவுந் தோழிக்குரியதோர் வேறுபாடு கூறுகின்றது.

(இ – ள்.) அவட்கு - தோழிக்கு; உயர்மொழிக் கிளவியும் உரிய - தலைவியையுந் தலைவனையும் உயர்த்துக் கூறுங் கூற்றும் உரியவாம் ஒரோவோரிடத்து (எ – று).

"மகிழ்மிகச் சிறப்ப மயங்கினள் கொல்லோ
யாணர் ஊரநின் மாணிழை அரிவை
காவிரி மலிர்நிறை யன்னநின்
மார்புநனி விலக்கல் தொடங்கி யோளே."

(ஐங்குறு. 42)

இதனுட் காவிரிப் பெருக்குப்போலத் தலைவியை நோக்கி வருகின்ற மார்பினைத் தான் விலக்குமாறென்னையெனத் தலைவியை உயர்த்துக் கூறியவாறு காண்க.

"காலைஎழுந்து" (குறுந். 45) என்பதும் அது.

"உலகம் புரப்பான் போல்வதோர் மதுகையும் உடையன்" எனவுந், (கலி. 47)

"தாமரைக் கண்ணியை தண்ணறும் சாந்திளை
நேரிதழ்க் கோதையாள் செய்குறி நீவரின்
மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉம்
அணங்கென அஞ்சுவர் சிறுகுடி யோரே" (கலி. 52)

எனவுந் தலைவனை உயர்த்துக் கூறியவாறு காண்க.

(வி – ரை) காவிரி மலிர் நிறையன்ன – காவிரியாற்றின் வெள்ளம் போன்ற. (46)

வாயில்களிடத்துக் கூறுதற்குரிய மரபு.

241. வாயிற் கிளவி வெளிப்படக் கிளத்தல்
தாவின் றுரிய தத்தங் கூற்றே.

இது, தலைவியுந் தோழியும் வாயிலாகச் சென்ருருடன் கூறு வனவற்றுட் படுவதோர் வழுவமைக்கின்றது.

(இ – ள்). தத்தங் கூற்றே - தோழிக்குந் தலைவிக்குமுரிய கூற்றின்கண் ; வாயிற் கிளவி - வாயிலாய் வந்தார்க்கு மறுத்துத் தலைவனது பழிகளைக் கூறுங் கிளவிகளை; வெளிப்படக் கிளத்தல் - மறையாது வெளியாம்படி கூறுதல்; தாவின்று உரிய - இங்ஙனம் கூறுகின்றேமே என்னும் வருத்தம் மனத்து நிகழ்தலின்றியே உரியவாம் (எ – று).

அவை தலைவிக்குந் தோழிக்குமுரியனவும் தோழிக்கே யுரியனவுந் தலைவிக்கே யுரியனவுமாம். வாயில்களாவார் ஆற்ருமையுந் தோழி முதலியோருமாம்.

"நெஞ்சத்த பிறவாக நிறையிலள் இவள்என
வஞ்சத்தான் வந்தீங்கு வலியலைத்து ஈவாயோ." (கலி.69)

இஃது, ஆற்ருமை வாயிலாகத் தலைவன் வந்துழித் தலைவி வெளிப்படக் கூறியது. இது தோழிக்கும் உரித்து.

"எரியகைந் தன்ன தாமரை இடையிடை
ஆர்ப்பினும் பெரிதே." (அகம். 116)

இதனுள் "நாணிலை மன்ற" எனத்தோழி கூறி அலரா கின்ருலென வெளிப்படக் கிளத்தலின் வழுவாயமைந்தது.

"அகலநீ துறத்தலின் அழுதோவா உண்கண்எம்
புதல்வனை மெய்தீண்டப் பொருந்துதல் இயைபவால்
நினக்கொத்த நல்லாரை நெடுநகர்த் தந்துநின்
தமர்பாடும் துணங்கையுள் அரவம்வந் தெடுப்புமே."
(கலி. 70)

இது தலைவி கூற்று.

'உரிய' வென்றதனால் தோழி வாயிலாகச் சென்றுழித் தலைவி வெளிப்படக் கூறுதலுங் கொள்க. அஃது "இம்மை யுலகு' என்னும் (66) அகப்பாட்டினுட் காண்க.

இவை இங்ஙனம் வெளிப்படக் கிளத்தலின் வழுவாய் அமைந்தன.

(வி – ரை) தாவின்று - வருத்தமின்றி ; 'தாவே வலியும் வருத்தமும் ஆகும்' என்பது தொல்காப்பியம்.

இந்நூற்பாவிற்கு இளம்பூரணர்தரும் விளக்கம் அறியத் தக்கது. அதுவருமாறு :-

தத்தங் கூறுபாட்டினான் வாயில்கள் கூறுங்கிளவி வெளிப்படக் கிளத்தல் கேடின்றி உரிய என்றவாறு.

தத்தங் கூறுவது அவரவர் சொல்லத்தகும் கூறுபாடு. ஆனுருபு தொக்கு நின்றது. எனவே, வாயில்களல்லாத தலைமகளும் நற்றாயும் மறைத்துச் சொல்லப் பெறுவர் என்றவாறு.

வருகின்ற சூத்திரம் மறைத்துச் சொல்லும் உள்ளுறை சொல்லுகின்றாராதலின், அவ்வுள்ளுறை வாயில்களை விலக்கியவாறு. இவர் மறைத்ததனாற் குற்றம் என்னை ? இவர் குற்றேவல் முறைமையர் ஆதலானும் கேட்போர் பெரியோர் ஆதலானும் வெளிப்படக் கூறுங்கால் பொருள் விளங்காமையானும் அவ்வாறு கூறினால் இவர் கூற்றிற்குப் பயனின்மையானும் வெளிப்படவே கூறும் என்க. (47)

### உள்ளுறையின் வகை

242. உடனுறை யுவமஞ் சுட்டுநகை சிறப்பெனக்
கெடலரு மரபின் உள்ளுறை யைந்தே.

இது, மேல் வெளிப்படக் கிளப்பன கூறிப் பின் வெளிப்படாமற் கிளக்கும் உள்ளுறை இனைத்தென்கின்றது.

(இ – ள்.) உடனுறை - நான்கு நிலத்தும் உளவாய் அந்நிலத்துடனுறையுங் கருப்பொருளாற் பிறிதொன்று பயப்ப மறைத்துக் கூறும் இறைச்சியும்; உவமம் - அக் கருவாற்கொள்ளும் உள்ளுறை யுவமமும் ஏனையுவமமும்; சுட்டு - உடனுறை யுவமமும் அன்றி நகையுஞ் சிறப்பும் பற்ருது வாளாது ஒன்று நினைந்து ஒன்று சொல்வனவும் அன்புறு தகுந இறைச்சியுட் சுட்டிவருவனவும்; நகை - நகையாடி ஒன்று நினைத்து ஒன்று கூறுதலும்; சிறப்பென - ஏனையுவமம் நின்று உள்ளுறை யுவமத்தைத் தத்தங் கருப் பொருட்குச் சிறப்புக் கொடுத்து நிற்றலும் என்று ; கெடலரும் மரபின் உள்ளுறை ஐந்தே - கெடுதலரிதாகிய முறைமையினை யுடைய உள்ளுறை ஐந்து வகைப்படும் (எ – று).

ஒன்றனை உள்ளுறுத்து அதனை வெளிப்படாமற் கூறலின் அவற்றை உள்ளுறையாமென்ருர்.

''இறைச்சி தானே'' (தொல். பொ. 229) 'இறைச்சியிற் பிறக்கும்' (தொல். பொ. 230) என்பனவற்றுள் இறைச்சிக்கு உதாரணங் காட்டினும். உவமம் உவமவியலுட் காட்டுதும்.

''பெருங்கடல் முகந்த பல்கிளைக் கொண்மூ
இருண்டுயர் விசும்பின் வலன்நேர்பு வளைஇப்
போர்ப்புறு முரசின் இரங்கி முறைபுரிந்து
அறநெறி பிழையாத் திறன்அறி மன்னர்
அருஞ்சமத்து எதிர்ந்த பெருஞ்செய் ஆடவர்
கழித்தெறி வாளின் நளிப்பன விளங்கும்
மின்னுடைக் கருவியை ஆகி நாளும்
கொன்னே செய்தியோ அரவம் பொன்னென
மலர்ந்த வேங்கை மலிதொடர் அடைச்சிப்

பொலிந்த ஆயமொடு காண்டக இயலித்
தழலை வாங்கியும் தட்டை ஓப்பியும்
அழலேர் செயலை யம்தளிர் ததையும்
குறமகள் காக்கும் எனல்
புறமும் தருதியோ வாழிய மழையே.'' (அகம். 188)

இதனுட் கொன்னே செய்தியோ அரவமென்பதனுற் பயனின்றி அலர் விளைத்தியோவெனவுங் கூறி ஏனற்புறமுந் தருதியோ என்பதனுல் வரைந்து கொள்வையோ வெனவுங் கூறித் தலைவனை மழைமேல் வைத்துக் கூறலிற் சுட்டாயிற்று. கொன்னே செய் தியோ என்றதனுல் வழுவாயினும் வரைதல் வேட்கையாற் கூறினமையின் அமைந்தது.

'அன்புறு தகுந' (தொல். பொரு. 231) என்பதனுள் ஏனை யதற்கு உதாரணம் காட்டினும்.

'' விளையாடு ஆயமொடு ...... பிறவுமார் உளவே.'' (நற். 172)

இதனுட் புன்னையை அன்னை நுவ்வையாகுமென்றதனுன் இவளெதிர் நும்மை நகையாடுத லஞ்சுதுமென நகையாடிப் பகற் குறி யெதிரே கொள்ளாமைக் குறிப்பினுன் மறைத்துக் கூறி மறுத்தவாறு காண்க. இதனைச் செவ்வனங் கூருமையின் அமைத்தார்.

'உள்ளுறை யுவம மேனை யுவமம்' (தொல்.பொ. 46) என்னுஞ் சூத்திரத்து ''விரிகதிர் மண்டிலம்'' (கலி. 71) என்னும் மருதக்கலி யுட் சிறப்புக் கொடுத்து நின்றது காட்டினும்.

அறத்தொடு நிலையும் பொழுதும் ஆறும் முதலியனவுஞ் செவ் வனங் கூறப்படுதலின் இவை கரந்தே கூறப்படுதலிற் 'கெடலரு மரபின்' என்ருர். இவை தோழிக்குந் தலைவிக்கும் உரியவாறு செய்யுட்களை நோக்கி யுணர்க.

(வி - ரை) கொண்மூ - மேகமே, கழித்தெறி வாளின் - உறை கழித்து வெட்டுகின்ற வாளைப்போல, நளிப்பன – செறிவன, கருவி – தொகுதி, அடைச்சி – அணிந்து, தழலை – கவண், தட்டை -

மூங்கிலை நறுக்கிப் பிளந்து ஒன்றிலே கட்டுவது, புறமும் கருதியோ – காத்தலையும் செய்தியோ.

நுவ்வை – நின் தங்கை.

சுட்டு நகை சிறப்பு என்பவற்றிற்கு இளம்பூரணர் தரும் உரை வேறும். அது வருமாறு.

சுட்டு என்பது ஒரு பொருளைச் சுட்டிப் பிறிதோர் பொருட் படுதல்.

தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி
அஃதாண்டு அவள்செய் தது. (குறள் 1279)

இதனுள் இம்பூப் பறிப்பே மாயின் வளை கழன்று தோள்மெலிய நடத்தல் வல்லையாக வேணடும் என ஒரு பொருள் சுட்டித் தந்தமை காண்க. பரிமேலழகர் முதலிய உரையாசிரியர்கள் பிறவாறு உரைப்பர்.

நகையாவது – நகையினற் பிறிதொரு பொருளுணர நிற்றல்

"அசையியற்கு உண்டாண்டோர் ஏஎர்யான் நோக்கப்
பசையினள் பைய நகும்." (குறள் 1098)

இதனுள் நகையினல் பிறிதோர் குறிப்புத் தோன்றியவாறு காண்க. சிறப்பு என்பது, இதற்குச் சிறந்தது இஃது எனக் கூறுவதனனே பிறிதோர் பொருள் கொளக் கிடப்பது. (48)

உள்ளுறை பற்றி வரும் இன்பம்.

243. அந்தமில் சிறப்பின் [1]ஆக்கிய இன்பந்
தன்வயின் வருதலும் வகுத்த பண்பே.

இது, முற்கூறிய உள்ளுறைபற்றித் தலைவற்கு வருவதோர் வழுவமைக்கின்றது.

(இ - ள்.) ஆக்கிய அந்தமில் சிறப்பின் இன்பமும் – முற் கூறிய உள்ளுறை ஐந்தானும் அவர்களுண்டாக்கிய முடிவில்லாத

---

1 ஆகிய இன்பம் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

சிறப்பினையுடைய இன்பம்; தன்வயின் வருதலும் வகுத்த பண்பு - தலைவன் கண்ணும் நிகழ்ந்து இன்பஞ் செய்தலுங் காமத்துக்கு முதலாசிரியன் வகுத்த இலக்கணம் (எ - று).

தலைவன் தன்மை என்ப தொன்றின்றி நந்தன்மை யெனக் கருதுதலின் யாம் ஒன்றை நினைந்து ஒன்று கூறினும் அவன் முனியாது இன்பமெனக் கொள்வனெனக் கூறியவற்றை அவன் இவை இன்பந் தருமென்றே கோடலின் வழுவமையப்பட்டன. உதாரணம் முற்காட்டியவற்றுட் காண்க.

(வி - ரை) தலைவி முதலானோர் உள்ளுறை வகையால் தலைவ னிடத்துக் கூறும் கருத்துக்குத் தாம் மகிழ்தல் போலத் தலைவனும் அவற்றைக் கேட்டு மகிழ்வன் என்பது நச்சினார்க்கினியர் கூறும் கருத்தாகும்.

இளம்பூரணர் இத்தகைய உள்ளுறைப் பொருண்மை துன்பத் திடத்தேயன்றி இன்பத்திடத்தும் வரும் எனப் பொருள் காண்பர். (49)

தலைவனைப்பற்றி வரும் வழுவமைதி

244. மங்கல மொழியும் [1]வைஇய மொழியும்
மாறில் ஆண்மையிற் சொல்லிய மொழியுங்
[2]கூறியன் மருங்கிற் கொள்ளு மென்ப.

இது, மேன் மூன்று பொருளும் வழுவாயமைக என்றலின் எய்தாத தெய்துவித்தது.

(இ - ள்.) மங்கலமொழியும் - தலைவற்குத் தீங்கு வருமென் றுட்கொண்டு தோழியுந் தலைவியும் அதற்கஞ்சி அவனை வழுத்து தலும்; வைஇய மொழியும் - தலைவன் தம்மை வஞ்சித்தானாகத் தலைவியுந் தோழியுங் கூறலும்; வைஇய மொழி: தீங்கைவைத்த மொழியுமாம், மாறில் ஆண்மையிற் சொல்லிய மொழியும் - மாறுபாடில்லாத ஆளுந்தன்மையிடத்தே பழிபடக் கூறிய மொழி யும்; கூறியன் மருங்கிற் கொள்ளும் என்ப - வழுவமைதியாகக் கூறிய இலக்கணத்திடத்தே கொள்ளுமொழி யென்று கூறுவர் ஆசிரியர் (எ - று).

---

1. அவையல் மொழியும், 2. கூறிய எனப்பாடங் கொள்வர் இளம்பூரணர்.

"நோயிலராக நங்காதலர்" (அகம். 114) எனவுங் "காந்தளுஞ் செய்வினை முடிக்கத் தோழி" எனவுங் கூறுவன நம்மை அறனன்றித் துறத்தலின் தீங்குவருமென்றஞ்சி வாழ்த்தியது. நம்பொருட்டுத் தீங்கு வருமென நினைத்தலின் வழுவாயமைந்தது.

"வையினர் நலனுண்டார் வாராமை நினைத்தலின்"
(கலி. 134)

என்பது வஞ்சித்தமை கூறிற்று.

"இதுவுமோர்...ஊராண்மைக்கு ஒத்த படிறுஉடைத்து"
(கலி. 89)

என்பது ஆண்மையிலே பழியுண்டு என்றது. இதுவும் வழீஇ அமைந்தன.

(வி-ரை) இளம்பூரணர் இந்நூற்பாவிற்குத் தரும் உரை வேறாகும். அது வருமாறு:-

மங்கல மொழியாவது - மங்கலத்தாற் கூறும்சொல்: அது செத்தாரைத் துஞ்சினார் என்றல். அவையல் மொழியாவது - இடக்கரடக்கிக் கூறுதல்: அது கண்கழீஇ வருதும் என்றல். மாறிலாண்மையிற் சொல்லிய மொழியாவது - ஒருவனைச் சிங்கம் வந்ததென்றாற் போல் கூறுவது.

அவையெல்லாஞ் சொல்லாற் பொருள் படாமையின் உள்ளுறைப் பாற்படும். இன்னும் இவ்வாற்றாற் பொருள் கொள்ளுமாறு 'ஒல்லுவ தொல்லும்' என்னும் புறப்பாட்டினுள் (புறம் 196) 'நோயில ராக நின் புதல்வர்' எனவும், 'சிறக்க நின்னாளே' எனவும் வரும் மங்கலச் சொல் கெடுக என்னும் பொருள் பட்டவாறு காண்க. (50)

குணம் பற்றி வருவதோர் வழுவமைதி.

245. சினனே பேதைமை நிம்பிரி நல்குரவு
அனைநால் வகையுஞ் சிறப்பொடு வருமே.

இது, மெய்ப்பாட்டியலுள் ஆகாதென்பவற்றுட் சில அமைக வென வழுவமைக்கின்றது. இது பொதுவாகக் கூறலின் தலைவிக்குந் தோழிக்குங் கொள்க.

(இ - ள்.) சினனே - கோபம் நீடித்தலும்; பேதைமை - ஏழைமையும்; நிம்பிரி - பொறாமைதோன்றுங் குறிப்பும்; நல்குரவு - செல்வமின்மையும்; அனை நால்வகையும் - என்ற அத்தன்மையன வாகிய நாற்கூறும்; சிறப்பொடு வருமே - ஒரு பொருளைச் சிறப்பித்துக் கூறுதல் காரணத்தான் வரும் (எ - று).

சினத்தை ஆண்டுக் கொடுமையினடக்கினர்.

"நாணு நிறையும் நயப்பில் பிறப்பிலி" (கலி. 60)

எனவும்,

"தொடிய எமக்குநீ யாரை" (கலி. 88)

எனவுஞ் சினம்பற்றிவரினும் அவை தன்காதலைச் சிறப்பித்தலின் அமைந்தன.

"செவ்விய தீவிய சொல்லி அவற்றொடு
பைய முயங்கிய அஞ்ஞான்று அவையெல்லாம்
பொய்யாதல் யான்யாங்கு அறிகோமற்று ஐய
அகனகர் கொள்ளா அலர்தலைத் தந்து
பகன்முனி வெஞ்சுரம் உள்ளல் அறிந்தேன்
மகனல்லை மன்ற இனி" (கலி. 19)

எனக் கழிபெருங்காதலான் நின்னை உள்ளவாறறிந்திலேனெனத் தன் பேதைமையைக் காதலாற் சிறப்பித்தலின் அமைந்தது.

"உறலியாம் ஒளிவாட உயர்ந்தவன் விழவினுள்
விறலிழை அவரொடு விளையாடு வான்மன்னோ
பெறலரும் பொழுதொடு பிறங்கிணர்த் துருத்திசூழ்ந்து
அறல்வாரும் வையைஎன்று அறையுநர் உளராயின்
(கலி. 30)

இது நிம்பிரி; அவரோடும் விளையாடுவானெனப் பொறாமை கூறியும் அவன் ஈண்டையானாகவேண்டுமெனக் காதலைச் சிறப்பித்தலின் அமைந்தது.

"பிரசம் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்திப்
புடைப்பில் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்

உண்ணென்று ஓக்குப் புடைப்பத் தெண்ணீர்
முத்தரிப் பொற்சிலம்பு ஒலிப்பத் தத்துற்று
அரிநரைக் கூந்தல் செம்முது செவிலியர்
பரீஇமெலிந்து ஒழியப் பந்தர் ஓடி
ஏவன் மறுக்கும் சிறுவிளை யாட்டி
அறிவும் ஒழுக்கமும் யாண்டுணர்ந் தனள்கொல்
கொண்ட கொழுநன் குடிஅறன் உற்றெனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்
ஒழுகுநீர் அணங்கறல் போலப்
பொழுதுமறுத்து உண்ணும் சிறுமது கையளே''
(நற்றிணை. 110)

இது, குடிவறனுற்றென நல்குரவு கூறியுங் காதலைச் சிறப்பித் தலின் அமைந்தது.

இது மெய்பாட்டியலுள் *விலக்காமையின் அதனைச் சார ஈற்றிலே வைத்தார்.

(வி - ரை) பகல் முனிவெஞ்சுரம் - ஞாயிறு முனிந்த வெய்தா கிய காடு.

உறலியாம் - தலைவனொடு பொருந்துதற்குரியயாம், விறலிழை யவரொடு - பரத்தையரொடு, துருத்தி - ஆற்றிடைக்குறை.

பிரசம் - தேன், பரீஇ மெலிந்து ஒழிய - (தலைவியைப் பற்ற முடியாமையால் செவிலியர்) வருந்தி மெலிந்து ஒழியுமாறு, பொழுது மறுத்து உண்ணும் - முப்பொழுதும் இன்றி ஓரொரு பொழுதில் உண்டு.

இந்நூற்பாவினுள் வரைந்து கூறுமையின் தலைவியும் தலைவனும் தோழியும் செவிலியும் கூறப்பெறுவர் என்பர் இளம் பூரணர். (51)

முறைப்பெயர் பற்றியதோர் மரபு

246. அன்னை என்ஐ என்றலும் உளவே
தொன்னெறி முறைமை சொல்லினு மெழுத்தினுந்
தோன்று மரபின என்மனார் புலவர்.

*விலக்குகின்றமையின் என்றிருப்பின் நன்று.

இது, முறைப்பெயர்பற்றி வருவதோர் வழுவமைக்கின்றது.

(இ - ள்) சொல்லினும் எழுத்தினுந் தோன்ரு மரபின - சொல் லோத்தினும் எழுத்தோத்தினுஞ் சொல்லப்படாத இலக்கணத்தன வாய; தொல் நெறி முறைமை - புலனெறி வழக்கிற்குப் பொருந்திய பழைய நெறிமுறைமையானே; அன்னை என்ஐ என்றலும் உள என்மனுர் புலவர் - தோழி தலைவியை அன்னையென்றலும் தலைவி தோழியை அன்னையென்றலும் இருவருந் தலைவனை என் ஐ யென் றலும் உளவென்று கூறுவர் புலவர் (எ - று).

"அன்னுய் இவனோர் இளமா ணுக்கன்" (குறுந். 33)

"புல்லின் மாய்வது எவன்கொல் அன்னுய்" (குறுந். 150)

இவை தோழியைத் தலைவி அன்னுயென்றன.

"அன்னுய் வாழிவேண்டு அன்னை நம்மூர்ப்
பார்ப்பனக் குறுமகப் போலத் தாமும்
குடுமித் தலைய மன்ற
நெடுமலை நாடன் ஊர்ந்த மாவே" (ஐங்குறு. 202)

"அன்னுய் வாழிவேண்டு அன்னை உவக்காண்
மாரிக் குன்றத்துக் காப்பான் அன்ன
தூவலின் நனைந்த தொடலை ஒள்வாள்
பாசி சூழ்ந்த பெருங்கழல்
தண்பனி வைகிய வரிக்கச் சினனே". (ஐங்குறு. 206)

இவை தோழி தலைவியை அன்னை யென்றன.

"எனக்கும் ஆகாது என் ஐக்கும் உதவாது" (குறுந். 27)

"ஒரீஇயினன் ஒழுகும் என்ஐக்குப்
பரியல்என் மன்யான் பண்டொரு காலே." (குறுந். 203)

இவை தலைவி தலைவனை என்ஐ யென்றன.

தோழி கூறியது வந்துழிக் காண்க. தலைவன் தலைவியை அன்னையெனக் கூறலும் உளதென்பாருமுளர். எழுத்தினுஞ் சொல்லினுமென்னுத முறையன்றிக் கூற்றுனே புறத்திற்கும் இவை கொள்க.

"என்னை மார்பில் புண்ணுக்கு"

"என்னைக் கூரிஃது அன்மை யானும்
என்னைக்கு நாடிஃது அன்மை யானும்" (புறம். 85)

"என்ஐமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்ஐ
முன்னின்று கன்னின்று அவர்" (குறள். 771)

"என்ஐ மார்பில் புண்ணும் வெய்ய', (புறம். 280)

என்பன கொள்க.

ஏனைய வந்துழிக் காண்க.

இனி, உம்மையாற் பிறவுமுளவென்பது பெறுதலின்,

"எந்தைதன் உள்ளம் குறைபடா வாறு" (கலி. 61)

என்றாற்போல் வருவன பிறவுங் கொள்க.

(வி – ரை) காப்பு ஆள் அன்ன - காவல் புரிகின்ற ஆளைப்போல, தொடலை ஒள் வாள் - தொடுக்கப் பெற்ற சிறந்தவாள்

தலைவனை என்னை என்பதன்றி எந்தையென்றலும் உண்டு என்பதற்கு இது (எந்தைதன்) காட்டாம். (52)

காட்டலாகாப் பொருளன

247. ஒப்பும் உருவும் வெறுப்பும் என்றா
கற்பும் ஏரும் எழிலும் என்றா
சாயலும் நாணும் மடனும் என்றா
நோயும் வேட்கையும் நுகர்வும் என்றாங்கு
ஆவயின் வரூஉங் கிளவி யெல்லாம்
[1]நாட்டிய மரபின் நெஞ்சுகொளின் அல்லது
காட்ட லாகாப் பொருள என்ப.

இது, கட்புலனாகக் காணப்படாத பொருண்மேலும் கட்புலனாகக் காணப்பட்டாற்போலப் பொருள் கோடல் வழுவமைக்கின்றது.

(இ – ள்.) 1. ஒப்பாவது: ஒத்த கிழவனுங் கிழத்தியு மென்றவழி அவரொப்புமை மெய்வேறுபாடுபற்றி மனனுணர்

---

1. நாட்டியல் எனப் பாடங்கொள்வர் இளம்பூரணர்.

வானுணர்வதன்றிப் பொறியானுணரலாகாதென்றது ; தந்தைய ரொப்பர் மக்களென்பதும் அது.

2. உருவாவது: உட்கு; அதுவும் பொறிநுதல் வியர்த்தல் போல்வனவற்றானன்றிப் பிழம்புபற்றி உணரலாகாது ;

3. வெறுப்பாவது: செறிவு; அதுவும் மக்கட்குணமாய் இசையாததோர் மன நிகழ்ச்சியாதலிற் பொறியான் உணரலாகாது ;

4. கற்பாவது : தன் கணவனைத் தெய்வமென்று உணர்வ தோர் மேற்கோள் :

5. ஏராவது : எழுச்சி ; அது எழுகின்ற நிலைமையென நிகழ் காலமே குறித்து நிற்கும்.

6. எழிலாவது: அங்ஙனம் வளர்ந்தமைந்த பருவத்தும் இது வளர்ந்து மாறியதன்றி இன்னும் வளருமென்பது போன்று காட்டுதல் ;

7. சாயலாவது: ஐம்பொறியால் நுகரும் மென்மை;

8. நாணாவது : செயத்தகாதனவற்றின்கண் உள்ள மொடுங் குதல் ;

9. மடனாவது : கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை;

10. நோயாவது : நோதல் ;

11. வேட்கையாவது : பொருள்கண்மேல் தோன்றும் பற்றுள்ளம் ; 'செய்யுண் மருங்கின் வேட்கை; (தொல் · எழுத்- உயிர்மயங். 86) என்புழி அவாவிற்கு வேறுபாடு கூறினும் ;

12. நுகர்வாவது : இன்பதுன்பங்களை நுகருநுகர்ச்சி; 'என்ற' வென்பன எண்ணிடைச்சொல் ;

என்று வருங்கிளவி - ஒப்பு முதல் நுகர்வு ஈருகப் பன்னிரண் டென்று அகப்பொருட்கண் வருங் கிளவிகளும் ;

ஆவயின்வருங் கிளவி – அப்பன்னிரண்டின் கண்ணே புறப் பொருட் குரியவாய் அவ்வாசகத்தான் வருங் கிளவிகளும் ;

ஆங்கு - ஈண்டு உவமவுருபு, அவை போல்வன கிளவி என்பதாம் ;

எல்லாம் நாட்டிய மரபின் நெஞ்சுகொளின் அல்லது - ஏனைய வும் நாடகவழக்கத்தாற் புலனெறி வழக்கஞ்செய்த முறைமையானே நெஞ்சு உணர்ந்துகொள்ளினன்றி ;

காட்டலாகாப் பொருள என்ப - உலகியல் வழக்கான் ஒருவர்க் கொருவர் கட்புலனாகக் காட்டப்படாத பொருளைப் பொருளாக வுடைய என்று கூறுவர் புலவர் (எ - று).

இவை மேல் வரும் மெய்ப்பாடுபற்றி உணர்தலிற் கட்புலனாகா வோவெனின், மெய்ப்பாடாவது மனக்குறிப்பாதலின் அதன் குறிப் பிற்குப் பற்றுக்கோடாகிய பொருளினவையென்றுணர்க.

இனி, இவை புறப்பொருட்கண் வருமாறு :

"வரைபுரையு மழகளிற் றின்மிசை" (புறம். 38) எனவும், "உருகெழு முரசம்" (புறம். 50) எனவும், "வெறுத்த கேள்வி விளங்குபுகழ் கபிலன்" (புறம். 53) எனவும், "நிலைகிளர் கூடனீளெரி யூட்டிய, பலர்புகழ் பத்தினி" (சிலப்பதிகாரம்-பதிகம் 35-36) எனவும் வரும். இவ்வாறே ஏனையவற்றிற்கும் ஒட்டிக் கொள்க.

இனி எல்லாமாவன, ஒளியும், அளியுங் காய்தலும் அன்பும் அழுக்காறும் பொறையும் நிறையும் அறிவும் முதலியனவும் பிறவுமாம்.

**1.** ஒளியாவது : வெள்ளைமையின்மை;

**2.** அளியாவது : அன்புகாரணத்தால் தோன்றும் அருள்;

**3.** காய்தலாவது : வெகுளி;

**4.** அன்பாவது: மனைவியர்கண்ணுந் தாய்தந்தை புதல்வர் முதலிய சுற்றத்தின்கண்ணும் மனமகிழ்ச்சி நிகழ்த்திப் பிணிப்பித்து நிற்கும் நேயம்;

**5.** அழுக்காறுவது : பிறர் செல்வ முதலியவற்றைப் பொறாமை ;

**6.** பொறையாவது : பிறர் செய்த தீங்கைப் பொறுத்தல்.

**7.** நிறையாவது : மறைபிறரறியாமல் ஒழுகுதல்;

**8.** அறிவாவது : நல்லதனலனுந் தீயதன்தீமையும் உள்ள வாறுணர்தல். இவை கண்டிலமென்று கடியப்படா கொள்ளும்

பொருளென்றார். இவை ஆசிரியனுணையன்றென்பது மேற் சூத்திரத்தாற் கூறுகின்றான்.

(வி - ரை) இவை முறையே ஒப்பு, உரு, வெறுப்பு, கற்பு ஆகியவற்றிற்கு எடுத்துக்காட்டாம்.

மேல் பொருட் பாகுபாடு முதல் கரு உரிப்பொருள் என உணர்த்தி அவற்றின் பாகுபாடு இத்துணையும் ஓதினர். அவற்றுள் பாகுபடுத்திக் காட்டலாகாதன சில பொருள் கண்டு அவற்றை இந்நூற்பாவால் தொகுத்து உணர்த்துகின்றார் எனக் கருத்துரை கூறுவர் இளம்பூரணர். இங்குக் காட்டப்பட்ட சில சொற்களுக்கு அவர் கூறும் உரை நுட்பமும் சுவையும் உடையன.

வெறுப்பு என்பது - செறிவு. அது அடக்கங்குறித்து நின்றது. கற்பு என்பது - மகளிர்க்கு மாந்தர் மாட்டு நிகழும் மன நிகழ்ச்சி. ஏர் என்பது - தளரின்கண் தோன்றுவதோர் பொலிவுபோல எல்லா வுறுப்பினும் ஒப்பக்கிடந்து கண்டார்க்கு இன்பத்தைத் தருவதோர் நிறவேறுபாடு. அது எல்லா வண்ணத்திற்கும் பொதுவாகலின் வண்ணம் அன்றாயிற்று. இது வண்ணம் பற்றி வரும்.

எழில் என்பது - அழகு. அது மிக்குங் குறைந்தும் நீடியும் குறுகியும் நேர்ந்தும் மெலிதாகியும் வலிதாகியும் உள்ள உறுப்புக்கள் அவ்வளவிற் குறையாமல் அமைந்த வழி வருவதோர் அழகு. இதுவும், 'அழகியன்' என்றவழி அழகினைப் பிரித்துக்காட்டல் ஆகாமையின் ஈண்டோதப்பட்டது.

சாயல் என்பது - மென்மை. அது நாயும் பன்றியும் போலாது மயிலும் குயிலும் போல்வதோர் தன்மை. அதுவும் காட்டலாகாமையின் ஈண்டோதப்பட்டது.

மடம் என்பது - பெண்டிற்குள்ளதோர் இயல்பு. அது உய்த்துணர்ந்து நோக்காது கேட்டவாற்றானுணரும் உணர்ச்சி. (53)

மேற்கூறிய பொருள்பற்றி வருவதோர் மரபு

248. இமையோர் தேஎத்தும் எறிகடல் வரைப்பினும்
அவையில் காலம் இன்மை யான.

இஃது, இவையுங் காட்டலாகாப் பொருள்கள் ஆசிரியனுணை யாற் கொண்டன அல்லவற்றைப் பொருளெனக் கொள்க என் கின்றது.

(இ - ள்) இமையோர் தேஎத்தும் எறிகடல் வரைப்பினும் - தேவருலகத்தின்கண்ணும், திரையெறியுங் கடல்சூழ்ந்த நிலத்தின் கண்ணும்; அவைஇல் காலம் இன்மையான - அறம் பொருளின் பங்களின் நுகர்வு இல்லாததோர் காலம் இன்ருகையால் அவற்றைப் பொருளென்றே கொள்க (எ - று).

தமிழ்நடக்கும் எல்லை கூருது தேவருலகையும் மண்ணுலகையுங் கூறினமையின் இவை யாண்டும் ஒப்ப முடிந்தனவெனவும் அவை உள்ள அளவும் இவை நிகழ்வனவெனவுங் கூறவின் வழுவமைதி யாயிற்று. இமையாக் கண்ணராகலின் இமையோர் என்ருன். இடையூறில்லா இன்பச் சிறப்பான் இமையோரை முற்கூறினுன்.

(வி-ரை) அறம் பொருள் இன்பம் ஆகிய மூன்றும் காட்டலாகாப் பொருளனவே எனினும் இவற்றை ஆசிரியர் மேற்கூறிய நூற்பா வில் கூறவில்லை. அவ்வாறு அவராணையால் கொண்டன அல்ல வெனினும் இவற்றையும் அவற்ருேடு ஒப்ப எண்ணவேண்டும் என்பது நச்சினுர்க்கினியர் கருத்தாகும். இளம்பூரணர் மேலை நூற்பாவில் கூறப்பட்ட பொருள்கள் கண்ணுல் காண்டற்குரியன அல்ல எனினும் அவையின்றி இவ்வீருலகும் இல்லையாதலின் அவற்றை உள்பொருளென்றே கருதவேண்டும் எனப் பொருள் காண்பர். எனவே கண்ணுல் காணமுடியவில்லை என்பதால் அவை இல்பொருள் என்று கருதற்க என்பது கருத்து.

---

# நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை

எண் : நூற்பா எண்.